ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப்ரபந்நஜந கூடஸ்தரான
நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவிருத்தம்.

பெருமாள்கோயில்
பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய
திவ்யார்த்த தீபிகையுடன்,

சென்னை
M. R. கோவிந்தஸாமி நாயுடுவால்,
மாடல் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு
வெளியிடப்பட்டது.

சுக்லஹு.
1930.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# பொதுத் தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

[ஸ்ரீஸைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 + 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 + 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯𑌚𑌰𑌣𑍌𑌶𑌰𑌣𑌂𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌃 + 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂𑌸𑌰𑌶𑍍𑌚 + 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவிருத்தம்.



இத்திவ்யப்பிரபந்தம்—மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுள் தலைவரும் ப்ரபந்நஜந கூடஸ்தருமான நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு திவ்யப்ரபந்தங்களுள் முதற்பிரபந்தம். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களும் நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்திகளாம். இந்நான்கும் முறையே நான்கு வேதங்களின் ஸாரமாம். நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமாகிய இயற்பாவில் இது ஐந்தாவதாகும். ருக்வேதஸாரமுமாம்.

இப்பிரபந்தத்திற்குத் திருவிருத்தமென்று திருநாமமாயிற்று என்னென்னில்; இந்நூலில் ஆழ்வார் தமது அன்பு மிகுதி முதலிய செய்திகளை எம்பெருமான் முன்னிலையில் விண்ணப்பஞ்செய்கையால் இதற்கு இத்திருநாமமாயிற்று. வடமொழியிலுள்ள 'வ்ருத்தம்' (வ்ருத்தம்) என்னுஞ்சொல்—"அவற்றுள், ஏழாமுயிரிய்புமிருவும்" என்ற ‡ நன்னூல் விதியின்படி விருத்தமெனத்திரிந்தது. பல பொருள்களையுடைய இச்சொல் இங்கே 'செய்தி' என்னும் பொருள் கொண்டது. ஆழ்வார் தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி 'தேவரீரை அநுபவிக்கைக்கு விரோதியான தேஹஸம்பந்தத்தைப் போக்கியருளவேணும்' என்று ஸம்ஸாரஸம்பந்த நிவ்ருத்தியை அபேக்ஷிக்கும் முகத்தால் இவ்விருள்தருமா ஞாலத்தில் இருப்பு தமக்கு மிகவும் அஸஹ்யமாயிருக்கிற செய்தியையும் எம்பெருமானுடைய நித்யாநுபவத்திலேயே தமக்குக் காதல்கிளர்ந்த செய்தியையும் சொல்லுகிறதாயிற்று இப்பிரபந்தம். 'திரு' என்னுஞ்சொல் வடமொழியிலே 'ஸ்ரீ' என்பதுபோல, தமிழிலே, மேன்மையையுடைய எப்பொருள்கட்

‡ பதவியல்—20.

கும் விசேஷணபதமாகி அவற்றிற்கு முன்னே மகிமைப்பொருளைக் காட்டிவரும். விருத்தமென்னுஞ்சொல் செய்தியைச் சொல்லுவ தாயினும், காரியவாகுபெயராய், செய்தியைக்கூறும் நூலை உணர்த்துகின்றதிங்கு.

இப்பிரபந்தம் கட்டளைக் கலித்துறையி லமைந்ததாதலால், சைவசமயத்தில் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்திருமுறை, பட்டணத்துப்பிள்ளையார் பாடல் திருமுறை என்பவற்றில் கட்டளைக்கலித்துறையைத் திருவிருத்தமென வழங்கும் மரபு உள்ள தாதலால் அங்ஙனமே இதற்கும் திருநாமமாயிற்றென்று இக்காலத் துச் சிலரது கொள்கை. வடமொழியில் செய்யுளைக்குறிக்கிற வ்ருத்தமென்கிற பொதுமொழி, இங்கே சிறப்பாய்க் கட்டளைக் கலித்துறையென்னும் ஒருவகைச் செய்யுளையுணர்த்தி நூலுக்குக் கருவியாகு பெயராயிற்றென்பது இக்கொள்கையின் தேர்ந்த கருத்து. தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவின் இனம் மூன்றனுள் ஒன்றான துறையின் பாற்படுங் கட்டளைக்கலித்துறை யாகிய நூலை விருத்தமென்பது பொருந்துமோ? என்று சங்கை உண்டாகக்கூடியது. ஆனால், இங்கே விருத்தமென்னுஞ் சொல் அவ்வினமொன்றை உணர்த்துவதன்றிச் செய்யுட் பொதுப்பெய ராகக் கொள்ளப்படுதலால் கட்டளைக்கலித்துறையாகிய இந்நூலை விருத்தமென்னலாம் என்று உபபத்தி சொல்லிவிடக்கூடுமாயினும் முதற்சொன்ன பொருளே மிகச்சிறக்கும். "இந்நின்ற நீர்மை யினியாமுறாமை—அடியேன் செய்யும் விண்ணப்பம்—மெய்ந்நின்று கேட்டருளாய்" என்று தம்முடைய செய்தியைக் கூறுவதாகவே தொடங்கும் ஸ்வாரஸ்யத்தை நோக்கியே நம் பூருவாசாரியர்கள் இதற்குத் **திருவிருத்த**மென்று திருநாமஞ் சாற்றினரெனக.

அன்றியும், இப்பிரபந்தத்திற் பெரும்பாலும் ஆழ்வார் தம் மைப் பிராட்டியாகவைத்துத் தமது வ்ருத்தத்தை [=செய்தியை]க் கூறுகின்றாராதலால் திருவிருத்தமென்பதற்கு- திருமகளின் நிகழ்ச் சியைக்கூறும் நூல் என்று பொருளாகலாமென்றும் சிலர் கருதுவர்.

அந்தாதித்தொடையாக அமைந்த நூறு பாசுரங்களையுடைய தான இப்பிரபந்தம் முதற்பாசுரமும் கடைப்பாசுரமும் நீங்கலாக மற்றைய தொண்ணூற்றெட்டுப் பாசுரங்களிலும் அகப்பொரு

விலக்கணத் துறைவகைகள் அமையப்பெற்றுள்ளது. வெளிப்படைப்பொருளென்னும் அந்யாபதேசமும், உள்ளுறைபொருளென்னும் ஸ்வாபதேசமும் ஆகிய இருவகைப்பொருளுமுள்ளது. சொற்செறிவு, பொருட்பொலிவு, ஆழ்ந்த கருத்து, தொனிப்பொருள், கற்பனையலங்காரம் முதலிய சிறப்புக்களால் ஒப்புயர்வின்றி விளங்குவது. தன்னைக்கற்பார்க்குப் பிறவித்துயராறுத்து அந்தமில்பேரின்பமளிக்கவல்லது. எம்பெருமானை அகப்பொருள் நெறியால் அநுபவிக்குந் திறத்திற்கு வழிகாட்டியாயுள்ளது.

[சைவசமயத்து மாணிக்கவாசகர் இயற்றிய திருச்சிற்றம்பலக் கோவையாரென்னுந் திருக்கோவையாரும் இத்திருவிருத்தமும் ஒரு சாயையாயிருக்கும்.]

ஆழ்வார்களோ பக்திரஸத்தையே மேற்கொண்டவர்கள். இவர்களது திவ்யப்ரபந்தங்களோ ஞானநூல்கள். ச்ருங்காரரஸத்தையே ப்ரதானமாகக்கொண்ட களவித்துறைகளை ஞானநூலாகிய இதனிற்கூறுவது எதுக்கு? என்று சிலர் சங்கிப்பர்; மருந்துண்ண மாட்டாதவர்களை மருந்தை வெல்லக்கட்டியினுள் பூசி உண்பிப்பதுபோல, சிற்றின்பம் கூறும்வகையால் பேரின்பத்தைக் காட்டி காட்டுகின்றாராழ்வார் என்று கற்றுணர்ந்த பெரியோர் கூறுவர். 1. "ஸூக்தம் தவ ப்ரியதமம் பவதீவ கோதே! பக்திம் நிஜாம் ப்ரணயபாவனயா க்ருணந்த:। உச்சாவசைர்விரஹஸங்கமஜைருதந்தை: ச்ருங்காரயந்தி ஹ்ருதயம் குரவோ மதீயா:" என்றும், 2. "பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி" என்றும் ஸ்ரீமத் வேதாந்ததேசிகனருளிச்செய்தவை இங்கு அநுஸந்தேயம். ஆழ்வார்களுக்கு பக்திரஸமே ச்ருங்காரரஸமாகப் பரிணமிக்கின்றதென்றவாறு.

ச்ருங்காரரஸத்தின் பரிமாற்றம் ஆண்பெண்களுக்கன்றோ உண்டாகக்கூடியது; சேஷத்வகாஷ்டையில் நிற்கின்ற ஆழ்வார் புருஷோத்தமனை நோக்கிக்கூறும் ப்ரபந்தத்தில் ச்ருங்காரரஸம் வந்து புகும்வழி எங்ஙனே? என்னில்; கேண்மின்;—

1. கோதாஸ்துதி—7.
2. த்ராமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளீ.

பக்தியினால் எம்பெருமானை யநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும். அவனுடைய திருநாமங்களைச்சொல்லி யநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்ய தேசங்களின் வளங்களைப்பேசி யநுபவித்தல், அங்கே அபிமாநமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப்பேசி யநுபவித்தல்— என்றிப்படி பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரமவிலக்ஷணமான மற்றொருவகையுமுண்டு ; அதாவது— ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசி யநுபவித்தல். இப்பிரபந்தத்தில் இத்தகைய அநுபவம் பெரும்பான்மையாயிருக்கும். இவ்வகையாலே ச்ருங்காரரஸத்தின் பரிமாற்றம் வந்து புகுந்ததென்க.

இப்படி யநுபவிக்குந்திறத்தில், தாய் பாசுரம், தோழி பாசுரம், தலைவி பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வார்க்குப் **பராங்குசர்** என்ற ஆண்மைப்பெயர் நீங்கி, '**பராங்குச நாயகி**' என்று பெண்மைப்பெயர் வழங்கப்பட்டுவரும். தாய் சொல்வது போலவும் தோழி சொல்வது போலவும் மகள் சொல்வது போலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும், பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். "நல்லார் நவில் குருகூர் நகரான்........மாறன் விண்ணப்புஞ்செய்த சொல்லார்தொடையல் இந்நூறும்" என்று தலைக்கட்டுதல் காண்க. ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகும்போது பல சிறு பெயர்களிருந்தாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே, மேற்சொன்ன மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் ஆழ்வார்பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக்கொள்ளுதல் எதுக்காக? அப்படி ஏறிட்டுக்கொள்ளுதல் தான் கூடுமோ ; எனின் ; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக்கொள்ளுகிறாரல்லர் ; அந்த அவஸ்தைதானே பரவசமாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமடங்கப் பெண்தன்மையதா யிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கை

யாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம். தண்டகாரண்ய வாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொருபிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுண்டு. ஆழ்வார்கள் அப்படியன்றியே அப்போதே பெண்மையையடைந்து புருஷோத்தமனை யநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ஆண் பெண் என்ற வியவஹாரங்கள் சிற்றின்ப நுகர்ச்சிக்கன்றோ ஏற்பட்டவை; பேரின்ப வநுபவத்திலே ஊன்றின ஆழ்வார்கள் பெண்மை யெய்துவதாகவும் கொங்கை முதலிய சொற்களை யிட்டுப் பாசுரங்கூறுவதாகவும் நிகழ்கிற விது என்னோ? எனின்; விஷயாந்தர காமம் என்றும் பகவத்விஷய காமம் என்றும் காமம் இருவகைப்படும்; வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பக்தியே ஆழ்வார்களுக்கு ச்ருங்காரமுறைமையில் உருவெடுத்து நிற்கும். சிற்றின்பவநுபவத்திற்குக் கொங்கை முதலியன ஸாதனமாயிருப்பதுபோல, பகவத் விஷயாநுபவத்திற்குப் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் இன்றியமையாதனவா யிருப்பதால் அவையே கொங்கை முதலிய சொற்களால் அருளிச்செயல்களிற் கூறப்படுகின்றனவென்று கொள்க.

ச்ருங்கார ரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்த பக்தி ரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும் ச்ருங்கார ரஸத்தையுங் கலந்து பாசுரங்கள் பேசுவதற்குக் காரணம் கீழே சொல்லப்பட்டது. (ஆரோக்யத்திற்குக் காரணமாகிய வேப்பிலை யுருண்டையை உட்கொள்ள இசையக்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக் கொடுத்துத் தின்பிப்பது போல.)

இப்பிரபந்தம் அந்தாதித் தொடையாற் பாடப்பட்ட நூலாதலால், சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலை என்னும் இருவகையுள் சொல்தொடர் நிலையாம். இதன் பாசுரங்கள், பொருளில் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்றல் தோன்றப் பூருவாசாரியர்கள் அவதாரிகையிட்டு வியாக்கியானமருளி யிருக்கின்றமையால் இது பொருட்டொடர் நிலையுமாம். "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை" என்னும் தண்டியலங்காரச் சூத்திரத்தின்

உரையில் "இரண்டென்றது வகையென்ற மிகையான் மூன்றாவது-பொருளினுஞ் சொல்லினுந் தொடர்தலுமுண்டெனக் கொள்க" என்றதுகாண்க. ஆகவே இப்பிரபந்தம் சொற்பொருட்டொடர் நிலை. இதில் தொடக்கப் பாசுரத்தில் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை யினியா முறாமை..........அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்று பிரகிருதி ஸம்பந்த நிவ்ருத்தியைப் பிரார்த்தித்து, (முடிவில்) நிகமநப் பாசுரத்திலும் "மாறன் விண்ணப்பஞ்செய்த சொல்லார் தொடையலிந்நூறும் வல்லாரழுந்தார் பிறப்பாம் பொல்லா அருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே" என்று பிரகிருதி ஸம்பந்த நிவ்ருத்தியையே இப்பிரபந்தம் கற்றார்க்குப் பலனாக அருளிச் செய்து தலைக்கட்டி யிருப்பதனால், இப்பிரபந்தம் முமுக்ஷுத்வத்தையும் முக்தியையும் உண்டாக்குவதற்கு ஏற்றதாம்.

---

ஸ்ரீ:.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# தனியன் உரை.

## (கிடாம்பியாச்சா னருளிச்செய்த தனியன்.)

(கட்டளைக் கலித்துறை.)

கருவிருத்தக் குழிநீத்தபின் காமக் கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத்தம் புக்குழலுறுவீர் !, உயிரின் பொருள்கட்
கோருவிருத்தம் புகுதாமல் குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத் தோரடிகற்றிரீர் திருநாட்டகத்தே.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| கரு | கர்ப்பமாகிற | நீத்தபின் | விட்டபின்பு [கர்ப்பத்தில் நின்றும் வெளிப் பட்டுப் பிறந்த பின்பு] |
| விருத்தம் குழி | வட்டமான குழியை | | |

| | |
|---|---|
| காமம் கடு குழி வீழ்ந்து | சிற்றின்பவநுபவமாகிய கொடிய குழியிலே விழுந்து |
| ஒரு விருத்தம் புக்கு | ஒப்பற்ற [மிக்க] கிழத்தனத்தை யடைந்து |
| உழலுறவீர் | அலைந்து கொண்டிருக்கும் ஜனங்களே!, |
| உயிரின் பொருள்கட்கு | (உங்களுடைய) உயிர் அடைதற்குரிய பயன்களுக்கு |
| ஒரு விருத்தம் புகுதாமல் | இடையூறுசிறிதும் நேரிடாதபடி |
| குருகையர் கோன் உரைத்த திரு விருத்தத்து ஓர் அடி கற்று | திருக்குருகூரிலுள்ளார்க்குத் தலைவரான நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தமென்னும் நூலில் ஒரு பாதத்தை அப்யஸித்து உணர்ந்து |
| திரு நாடு அகத்தே இரீர் | பரமபதத்தில் வாழ்ந்திருப்பீராக. |

* * *—மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து இறந்து ஸம்ஸார ஸாகரத்தில் அலைகின்ற ஜனங்களை நோக்கி 'இனி உங்களை அந்தத் துக்கம் தொடராமல் நீங்கள் மோக்ஷஸாம்ராஜ்யம் பெற்று நித்யாநந்தம் அநுபவிக்க விரும்புகிறீர்களாகில் நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திருவிருத்தமென்னுந் திவ்யப்ரபந்தத்தில் ஓரடியையாவது கற்றுக் கொள்ளுங்கள்' என்று கிடாம்பியாச்சானென்னு மாசிரியர் உபதேசிக்கிறார். (சிலர் சீராமப்பிள்ளை யென்பர்; சிலர் ஆளவந்தார் என்பர்.)

ஸ்ரீவைகுண்டம் எல்லா நாடுகளினுஞ் சிறந்ததாதலால் திருநாடு என்று சிறப்பித்துக் கூறப்படும். 'உயிரின் பொருள்கட்கு புகுதாமல் கற்று' என்று அந்வயிப்பது. 'புகு ஒருவிருத்தம் தாமல் குருகையர் கோனுரைத்த' என்று மந்வயிக்கலாம். கர்ப்ப ஜந்ம பால்ய யௌவந ஜரா மரண நரகங்களாகிற ஏழு அவஸ்தைகளையும் "கருவிருத்தக் குழி நீத்தபின் காமக் கடுங்குழி வீழ்ந்தொரு விருத்தம் புக்குழலுறுவீர்" என்றதனாற் குறித்தவாறு.

ப்ரூண மென்னும் வடசொல் கரு எனச் சிதைந்தது. விருத்த மென்ற வடமொழித்திரிபு—அடிதோறும் தமிழில் எழுத்தொப்புமை யுடையதாயினும் முதலடியிலும் ஈற்றடியிலும் 'வ்ருத்தம்' என்றது திரிந்ததாகவும், இரண்டாமடியில் 'வ்ருஜம்' என்றது திரிந்ததாகவும், மூன்றாமடியில் 'விராஜம்' என்றது திரிந்ததாக

வும் விவேகித்துணர்க. முதலடியில் வ்ருத்த மென்றது வ்ருத்தாகாரத்தை [உருண்டை வடிவை]ச் சொன்னபடி. இரண்டாமடியில் வ்ருத்த மென்றது கிழத்தனத்தைச் சொன்னபடி. மூன்றாமடியில் விருத்த மென்றது ஸ்வரூபத்திற்குத் தகாததைச் சொன்னபடி. இனி, முதலடியில் 'கரு விருத்தக் குழி, எனக்கொண்டு கர்ப்பமாகிய தகாத குழியென்றும், 'கரு இருந்து அக்குழி' என எடுத்து கர்ப்பத்தில் இருக்கச் செய்தலாகிய அந்தக் குழியென்றும், இரண்டாமடியில் 'ஒரு வ்ருத்தம் புக்கு' எனக்கொண்டு, வெறுக்கத்தக்க பொல்லா வொழுக்கத்திலே புகுந்து என்றும், மூன்றாமடியிலும் 'ஒரு வ்ருத்தம் புகுதாமல்' எனக்கொண்டு (தீங்காகிய) செயலொன்றும் நிகழாதபடி யென்றும் உரைத்தலும் பொருந்தும். எதுகையையடுத்து 'விருத்தம்' என்ற ஒரு சொல் வெவ்வேறு பொருளில் வந்தது கிரிபின்பாற்படும். (யமகம்.)

'புகுதாமல்' என்றதில், து—சாரியை. 'க்ருத்கா' என்னும் வடசொல் குருகையென ஐயீறாயிற்று. இரீர்—ஏவற்பன்மை. இரண்டாமடியில் 'உயிரின் பொருளுக்கு' என்பது பாடபேதம். *

## தனியன் உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.



நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவிருத்தம்.

[பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

---

**பொய்ந்நின்ற** ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும்*
**இந்நின்ற நீர்மை** யினியா முருமை * உயிரளிப்பான்
**எந்நின்ற யோனியுமாய்ப்** பிறந்தாய்! இமையோர் தலைவா!
**மெய்ந்நின்று** கேட்டருளாய் * அடியேன்செய்யும் விண்ணப்பமே.

| | | | |
|---|---|---|---|
| **உயிர்** | எல்லாப் பிராணிகளையும் | பிறந்தாய் | திருவவதரித்தவனே!, |
| **அளிப்பான்** | ரக்ஷித்தருள்வதற்காக | இமையோர் தலைவா! | தேவர்களுக்குத் தலைவனே!, |
| **எந்நின்ற யோனியும் ஆய்** | பலவகைப் பட்ட பிறப்புக்களையுமுடையனாய் | பொய் நின்ற ஞானமும் | பொய்ம்மை நிலை பெற்ற அறிவும் |

| | |
|---|---|
| பொல்லா ஒழுக்கும் | தீயநடத்தையும் |
| அழுக்கு உடம்பும் | அசுத்தங்களோடு கூடின சரீரமும் |
| (ஆகிய இவற்றோடு கூடி) | |
| இ நின்ற நீர்மை | இவ்வண்ணமான இயல்வை [—பிறப்புத் துன்பத்தை] |

| | |
|---|---|
| இனி யாம் உறாமை | இனிமேல் நாங்கள் அடையாதபடி. |
| அடியேன் செய்யும் மெய் விண்ணப்பம் | (உனது) அடியவனாகிய யான் சொல்லும் உண்மையான விஜ்ஞாபநத்தை |
| நின்று கேட்டருளாய் | நின்று நீ கேட்டருளவேணும். |

* * *—ஆழ்வார் தம்முடைய ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி 'ஸ்வாமிந்!, அடியேனுடைய ஸம்ஸார பந்தம் தொடர்ந்துவராமல் இவ்வளவோடு அற்றுப்போகுமாறு தேவரீர் அருள்செய்யவேணுமென்று அடியேன் வணக்கத்துடன் சொல்லிக்கொள்ளும் வார்த்தையைத் திருச்செவி சார்த்தியருள வேணும்' என்று பிரார்த்திக்கிறார் இதில்.

இதில் "இனியாமுறாமை" என்றவிடத்து, யாம் என்று பன்மையாகவும் முடிவில் '**அடியேன்**' என்று ஒருமையாகவும் பிரயோகித்திருப்பதன் உட்கருத்தைக் கண்டுணரவேண்டும்: இப்போது தேவரீர்முன்னிலையில் நின்று விண்ணப்பம் செய்பவன் அடியேன் ஒருவனேயாகிலும், என்னொருவனுடைய அநர்த்தத்தைப் பரிஹரித்துக் கொள்வதற்காகமாத்திரம் அடியேன் விண்ணப்பம் பண்ணுகிறேனல்லேன்; அடியேனுடன்கூட இவ்விருள்தருமா ஞாலத்தில் துவள்கின்ற மற்றும் பல ஸம்ஸாரிகளின் அநர்த்தமும் நீங்கவேணுமென்று அனைவர்க்கும் பிரதிநிதியாய் அடியேன் விண்ணப்பஞ்செய்கிறேன் என்பது உட்கருத்து. "பராநர்த்தம் நெஞ்சிலே படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார்" என்பர் பெரியவாச்சான் பிள்ளை. '**யாம்**' என்றது இயல்பு பற்றிய தனித் தன்மைப்பன்மை என்றும் கொள்ளலாமாயினும் அது ஆழ்வார் திருவுள்ளத்திற்குப் பொருந்தினதன்று.

இந்த ஸம்ஸாரநிலத்தில் ஸம்பவிக்கக்கூடிய மூன்று விஷயங்களை முதலடியிலருளிச்செய்கிறார். பொய்ந்நின்ற ஞானமாவது—தத்வஜ்ஞானத்திற்கு எதிர்த்தடையான விபரீதஞானம். புண்ய பாபங்களுண்டு, பரலோகமுண்டு, ஈச்வரனுண்டு என்று உணர்வது

தத்துவஞானம்; இவையொன்றுமில்லையென மாறுகக்கொள்வது விபரீதஞானம். அதுவே இங்குப் பொய்ந்நின்றஞான மெனப்படு கின்றது. திருக்குறளில் மெய்யுணர்தலென்னும் அதிகாரத்தில் "பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும், மருளானாம் மாணாப்பிறப்பு" "இருள்நீங்கி யின்பம்பயக்கும் மருள்நீங்கி, மாசறுகாட்சியவர்க்கு" "ஐயத்தின் நீங்கித்தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணியதுடைத்து" என்றபடி அளவிலின்பத்ததான முத்தியைப்பெறுதற்கு நிமித்தகாரணமான தத்துவஞானத்திற்கு மாறான விபரீதஞானம் ஸம்ஸாரத்துக்கு மூலகாரணமாதலால் இது முதலிற் கூறப்பட்டது. "ஜ்ஞாநாந்மோக்ஷ:, அஜ்ஞாநாத்ஸம்ஸார:" என்பர் வேதாந்திகளும். 'பொய்ந்நின்ற' என்றதை பொய்யிலே நின்ற என்றும், பொய்யாய் நின்ற என்றும் விரிக்கலாம்.

**பொல்லாவொழுக்கு**—"யானேநீ யென்னுடைமையும் நீயே" என்கிற அநுஸந்தானத்திற்கு மாறாக அஹங்கார மமகாரங்கள் கொண்டு அவற்றுக்கு ஏற்றபடி நடக்கும் நடத்தைகள் பொல்லா வொழுக்காம். விபரீதஞானத்திற்கும் பொல்லாத ஒழுக்கத்திற்கும் காரணம் அசுத்தமான தேஹத்தின் ஸம்பந்தமேயாதலால் காரியங் களை முற்கூறிக் காரணத்தைப் பிற்கூறிற்று.

**இந்நின்ற நீர்மை**—இராமபிரான் தண்டகாரணியத்திற்கெழுந் தருளினபோது அங்கு அஸுரராக்ஷஸர்களால் நலியப்பட்டிருந்த மஹரிஷிகள் வந்து '[ஏஹி பச்ய சரீராணி] இது ஒரு வெட்டு, இது ஒரு குத்து, இதைப்பார், இதைப்பார்' என்று தாங்கள் பட்ட ஹிம்ஸைகளைக் காட்டினதுபோல் ஆழ்வார் காட்டுகிறாரென்க. ("ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகள் பெருமாளுக்கு ராக்ஷஸர் தின்ற உடம்பைக்காட்டினாற்போலே ப்ரக்ருதிதின்ற ஆத்மாவைக் காட்டுகிறார் என்று ஆளவந்தார் அருளிச்செய்வராம்.)

"இந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்றது—பிறப்புநீங்கி மோக்ஷம் பெறும்படியாக என்றவாறு. மீளாவுலகமாகிய பரம பதத்தையடைந்த உயிர்க்கு மீண்டு மற்றொரு பிறப்பையெடுத்தல் இல்லையென்பது 'இனி உறாமை' என்பதில் விளங்கும். **உறாமை** என்னும் இவ்வெதிர்மறை வினையெச்சம் 'அடியேன் செய்யும்' என்பதிலாவது 'கேட்டருளாய்' என்பதிலாவது அந்வயிக்கும்.

மீன் ஆமை பன்றி முதலிய பலவடிவங்களாக எம்பெருமான் திருவவதரித்ததுபற்றி '**எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!**' என விளித்தார். 'எந்நின்ற யோனியிற்பிறந்தாய்' என்னாது 'எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' என்கையாலே அந்தந்தப் பிறப்பிற் பிறந்தபோது சிறிதும் வேறுபாடு தோன்றாதபடி அதனதன் தன்மையாகவே இருந்தமை விளங்கும். பகவத்கீதையில் கண்ணபிரான் தான் இந்நிலத்தில் வந்து அவதரிப்பதற்குக் காரணங்களைக் கூறுமிடத்து "பரித்ராணாய ஸாதூநாம் = நல்லவர்களைப் பாதுகாப்பதன் பொருட்டு வந்து பிறக்கிறேன்" என்று சிஷ்டஜந ஸம்ரக்ஷணத்தை முதற் காரணமாகக் கூறியுள்ளதனால் "**உயிரளிப்பான்**.......பிறந்தாய்" என்றார். எம்பெருமானது திருவவதாரம் நம்முடைய பிறப்புக்கள்போலக் கருமஸம்பந்தத்தால் ஆவதன்றி ஸங்கல்பமாத்ரத்தால் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலநம் செய்தற்பொருட்டு உளதாகிற தன்மையை "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்பதனால் வெளியிட்டார். அவன் பிறக்கிறபிறவி நம்பிறவியை அறுக்கைக்காகவன்றோ? **அளிப்பான்**—அளிப்பதற்காகவே; வேறொரு பயனைக்கருதியன்று. (பான்விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சம்.)

எம்பெருமானுடைய அவதாரத்திற்கு மூன்று பிரயோஜனங்கள் சொல்லப்பட்டுள்ளன; சிஷ்டர்களைப் பரிபாலனஞ்செய்தல், துஷ்டர்களைத்தொலைத்தல், தர்மங்களை நிலைநிறுத்தல். இம்மூன்றனுள் முதலிற் சொன்ன சிஷ்டபரிபாலநமே முக்கியம்; பரிபாலநமாவது அநிஷ்டங்களைத் தவிர்த்து இஷ்டங்களைப் பூர்த்திசெய்வித்தலாதலால், துஷ்டர்களை யொழித்தலும் தர்மஸம்ஸ்தாபநமுமாகிற மற்றை யிரண்டு பிரயோஜனங்களும் சிஷ்டபரிபாலனத்திலேயே அடங்கிவிடும். ஆனால் இதற்காக எம்பெருமான் நேரேவந்து பிறக்கவேணுமோ? ஸங்கல்பமாத்ரத்தால் அனைத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தி உண்டே; அதைக்கொண்டே காரியம் நடத்தலாமே; வீணாக வந்து பிறப்பானேன்? என்றால், அன்பர்களுடைய ஒரு ஆசையைமாத்திரம் ஸங்கல்பத்தால் நிறைவேற்றவே முடியாது; "கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய், ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" என்றும் "சாயல் சாமத்திரு

மேனி.......ஒருநாள் காணவாராயே" என்றும் அன்பர் பிரார்த்தித்தால் இவ்வேண்டுகோளை ஸங்கல்பத்தால் தலைக்கட்டவொண்ணாதே; நேரே வந்தருளிக் காட்சிதந்தே தீரவேணுமிறே. ஆனதுபற்றியே 'உயிரளிப்பான்' என்றார்.

எம்பெருமானுக்குள்ள ஸௌலப்யம் பரத்வம் என்ற இரண்டு தன்மைகளையும் தாம் அநுபவித்துப் பேசுவதாம் மூன்றாமடி.

**இமையோர் தலைவா**—'இமையோர்' என்ற சொல் ஸ்வர்க்கத்திலுள்ள இந்திராதி **தேவர்களையும்** திருநாட்டிலுள்ள நித்யமுக்தர்களையும் குறிக்கும். **கண்ணிமைக்கொட்டுதலில்லாதவர்கள்** என்ற காரணத்தால் **தேவர்களைக்கூறும்;** அகநோக்காகிய ஞானக்கண் குவியாதவர் என்ற காரணத்தால் நித்யமுக்தர்களைக்கூறும். இங்கு, அயர்வறு மமரர்களதிபதியே! என்றவாறு. தென்னத்தியூரரான பேரருளாளப் பெருமாளுக்கு **தேவாதிராஜன்** என்று திருநாமமாதலால் அவ்வெம்பெருமானை உளப்படுத்தி சரமப்ரபந்தமாகிய திருவாய்மொழியின் முதற்பாசுரத்தில் 'அயர்வறு மமரர்களதிபதி' என்று அருளிச்செய்ததுபோல, ப்ரதம ப்ரபந்தமாகிய இப்பிரபந்தத்தின் முதற்பாசுரத்திலும் அப்பெருமானையே உளப்படுத்தி '**இமையோர் தலைவா!**' என விளிக்கிறாரென்று பெரியோர் பணிக்கும்படி. திருநாட்டிலே நித்யமுக்தர்களை அடிமைகொண்டு எழுந்தருளியிருக்குமிருப்பிலே அடியோங்களையும் அடிமைகொண்டருளவேணுமென்னும் விருப்பம் உள்ளுறை.

"**மெய்ந்நின்று கேட்டருளாய்**" என்றவிடத்துள்ள 'மெய்' என்பதை மேலே விண்ணப்பத்திற்கு விசேஷணமாக்கி 'மெய் விண்ணப்பம் நின்று கேட்டருளாய்' என உரைக்கப்பட்டது. இனி, உள்ளபடியே அந்வயித்து உரைத்தலுமாம்; மெய்நின்று—திருமேனியைக்காட்டி உண்மையாக நேர்நின்று என்கை. அங்கு மிங்கும் பதறி ஓடிப்போய்விடப் பாராமல் நிலைத்து நின்று என் விண்ணப்பத்தை முடியக்கேட்டருள் என்கிறார். பெருமாள் திருவீதிப்புறப்பாடுகளில் வேதபாராயணம் கேட்க நிற்பதில்லை; அருளிச்செயல் இயல் கேட்க நிற்பதுண்டு; ஆழ்வார் இங்ஙனே 'நின்று கேட்டருளாய்' என்று பிரார்த்தித்ததனாலன்றோ இது—என்று அழகியமணவாளச்சீயர் ஸ்வாமியின் ரஸோக்தி.

'அடியேன் செய்யும் விண்ணப்பத்தைக் கேட்டருளிக் கோரிக்கையைப் பூர்த்திசெய்ய வேணும்' என்னாமல் விண்ணப்பத்தைச் செவிதாழ்த்துக் கேட்டருள்வதையே வேண்டினர்; எம்பெருமான் திருவுள்ளத்தில் பட்டால் போதுமானது; காரியஸித்தி தன்னடையே ஆகும் என்பது கருத்து. 'கேட்டு அருளாய்' என்று பிரித்து, இவ்விண்ணப்பத்தைக் கேட்டுக்கொண்டிருந்து பின்பு அருள்செய்யவேணும் என்று பொருளல்ல; கேட்கையாகிற அருளைச்செய்யவேணு மென்கை. 'வந்தருள்' 'அமுதுசெய்தருள்' என்னுமிடங்களிற்போல.

ஸ்ரீமத்வேதாந்ததேசிகன் தம்முடைய ரஹஸ்ய க்ரந்தங்களுள் ஒன்றான உபகாரஸங்க்ரஹமென்னும் ரஹஸ்யத்தில் நிர்ணயாதிகாரத்தில் இம்முதற்பாசுரத்திற்கு மாத்திரம் வியாக்கியானமருளியிருப்பது உணரத்தக்கது. .... .... .... (க)

**செழுநீர்த் தடத்துக் கயல்மிளிர்ந்தா லொப்பச் * சேயரிக்கண்**
**அழுநீர் துளும்ப வலமருகின்றன * வாழியரோ**
**முழுநீர் முகில்வண்ணன் கண்ணன் விண்ணாட்டவர் மூதுவராம்**
**தொழுநீ ரிணையடிக்கே * அன்புசூட்டிய சூழ்குழற்கே. (உ)**

| | |
|---|---|
| முழு நீர் | நிறைந்த நீரையுடைய |
| முகில் | காளமேகம்போன்ற |
| வண்ணன் | நிறத்தையுடையவனான |
| கண்ணன் | எம்பெருமானுடைய |
| மூதுவர் ஆம் விண் நாட்டவர் தொழு நீர் இணை அடிக்கே | (யாவர்க்கும் முற்பட்டவரான பரமபதத்து நித்யஸூரிகள் வணங்குந் தன்மையையுடைய திருவடியிணைகளிலே |
| அன்பு சூட்டிய | தனது அன்பைச் செலுத்தின |
| சூழ் குழற்கு | அடர்ந்த கூந்தலையுடைய இப் பெண்மகளுக்கு,- |

| | |
|---|---|
| செழு நீர் தடத்து | மிக்க நீரையுடைய ஒரு தடாகத்தில் |
| கயல் | கயல்மீன் |
| மிளிர்ந்தால் ஒப்ப | பிறழ்ந்தாற்போல |
| சே அரி கண் | சிவந்தரேகைகளையுடைய கண்கள் |
| அழு நீர் துளும்ப | (நாயகனுடைய பிரிவை ஆற்றாமையால்) புலம்பின நீர் ததும்ப |
| அலமருகின்றன | தடுமாறுகின்றன; |
| வாழி | இந்த அன்புநிலை என்றைக்கும் நிலைத்திருக்க வேணும், |

(அரோ—அசை.)

* * *—கீழ்ப்பாசுரம் ஆழ்வார் தாமான தன்மையிலருளிச் செய்தது. அத்தன்மைநீங்கிப் பெண்நிலைமை யெய்திப் பேசும் பாசுரம் இது. நாயிகாவஸ்தையையடைந்து பேசும் பேச்சுக்களில், தாய் பாசுரம் தலைவி பாசுரம் தோழி பாசுரம் என மூன்றுவகைகள் உண்டு. இப்பாட்டு தோழி பாசுரமாய்ச்செல்லுகிறது. தலைவி வேறுபாடுகண்ட தோழி வியந்துரைத்தல். நாயகிக்கு உண்டான வைலக்ஷண்யத்தைத் தோழியானவள் கண்டு ஆச்சரியப்பட்டுப் பேசுகிருள்.

முதற்பாட்டில் 'இமையோர் தலைவா!' என்று எம்பெருமானுடைய உத்தம புருஷத்தன்மையை அநுஸந்திக்கையாலே அப்பொழுதே அவனைக் கிட்டவேண்டும்படியான ஆசைகிளர்ந்து, அங்ஙனம் அவனைக் கிட்டப்பெருமையாலே ஆழ்வார் ஆற்ருமை அதிகரித்துத் தளர்ந்தார்; அத்தளர்ச்சியாலே தாமான தன்மை யழிந்து ஆண் பெண்ணும்படியான நிலைமைதோன்றி ஒரு பிராட்டி நிலையையடைந்தார். ஆழ்வார் என்னுந் திருநாமத்தையிழந்து 'பராங்குச நாயகி' என்ற பெயர் பெறலாயிற்று. தமக்குண்டான அன்புநிலைமையைத் தம்வாயாற் சொல்லிக்கொள்வதிற்காட்டிலும் வேற்றவர்வாயாலே விளக்குதல் அழகியதாகத் தோற்றினமையால் தோழி சொல்லுமாபோலே சொல்லிக்கொள்ளுகிருர்.

எம்பெருமானுகிய நாயகனைப்புணர்ந்து, புணர்ச்சிக்கு அடுத்தபடியாகப் பிரிவு உண்டாவது இயல்வாதலால் அப்படியே பிரிந்து, அப்பிரிவை ஆற்ருதவளான நாயகியினுடைய நிலைமை வேறுபட்டிருப்பதைக்கண்டு வியப்புற்ற தோழியின் வார்த்தைபோல் இப்பாசுரம் வெளிப்பட்டிருந்தாலும், எம்பெருமான் திருவடிகளில் ஆழ்வார்க்கு உண்டான அன்புமிகுதியாலாகிய கண்கலக்கத்தைக் கண்டு 'பகவத்விஷயத்தில் இப்படியும் ஒரு அபிநிவேசம் உண்டாவதே!' என்று வியப்புற்ற நண்பர்களின் வார்த்தையாக இது கொள்ளத்தக்கது. ஆழ்வாரது ஞானக்கண்ணுக்கு எம்பெருமான் ஒருகால் இலக்கானபொழுது அவனை உடனே சேரவிரும்பிய இவரை அப்பெருமான் அப்போதே சேர்த்துக்கொள்ளாது மறைய, அதனாலுண்டான துயரமே ஆழ்வார்க்குப் பிரிவாற்ருமையாவது.

பின்னடிகளை முந்துற அந்வயித்துக்கொண்டு பிறகு முன்னடி

களை அந்வயித்துக்கொள்வது. கழுத்தளவும் கடல் நீரை முகந்து கொண்டு கிளர்ந்த காளமேகத்தோடொத்த திருநிறத்தையுடையவனை எம்பெருமானுடைய நித்யஸூரி ஸேவ்யமான பாதாரவிந்தங்களிலே அன்பு மிகுந்துள்ள இப்பராங்குச நாயகிக்கு நாயகனைப் பிரிந்த வருத்தத்தினால் கண்கள் நீர்ததும்பநிற்கும் நிலைமையைக் கண்டால், பெரிய கடல்போலே யிருப்பதொரு தடாகத்திலே அதன் பரப்பெல்லாம் விம்மும்படி மிளிர்ந்ததொரு கயலானது அத்தடாகம் முழுதும் குழம்பும்படி இடம் வலங்கொள்ளுமா போலே யிருக்கின்றதென்கை. கண்களுக்குக் கயலும், கண்ணீர்ப் பெருக்குக்குச் செழுநீர்த்தடமும் உவமை.

வாழியரோ—'வாழி அரோ' என்று பிரித்து 'அரோ' என்பதை அசைச்சொல்லாகக் கொள்க. வாழிய என்னும் வியங்கோள் ஈற்றுயிர்மெய்கெட்டு வாழி என நின்றது. இனி, 'வாழியர் ஓ' என்று பிரித்து, வாழியர் என்பதை ரகரமெய்யீற்று வியங்கோள் எனக் கொண்டு ஓகாரத்தை அசையென்றலுமாம். 'அழுகைநிலைமையைச் சொல்லுகிற இவ்விடத்தில் வாழ்த்துக்கூற அவகாசமேதென்னில், பகவத்விஷயத்தில் அன்புமிகுதியினால் கண்ணுங்கண்ணீருமாயிருக்கும் நிலைமை அன்பர்கட்குச் சிறந்த கண்காட்சியாதலால் "இந்த நிலைமை பரமபோக்யமா யிருக்கின்றது!, இது மாறாமல் என்றும் நிலைத்திருக்கவேணும்" என்று பல்லாண்டு பாடுவது ஏற்கும். "வண்பொன்னிப் பேராறுபோல் வருங் கண்ணநீர்கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறுசெய் தொண்டர்சேவடிச் செழுஞ்சேறு என் சென்னிக் கணிவனே" என்றும் "கண்டிடக்கூடுமேல் அதுகாணுங் கண்பயனாவதே" என்றுமுள்ள குலசேகரப் பெருமாள் ஸ்ரீஸூக்திகள் காண்க. வாழி—இந்த விரஹவருத்தம் நீங்கி வாழவேணுமென்றுரைக்கவுமாம்.

'விண்ணாட்டவர் மூதுவராம்' என்றது—மூதுவராம் விண்ணாட்டவர் எனமாறி அந்வயிப்பதால், மொழிமாற்றுப் பொருள்கோள். கீழ்ப்பாட்டில் 'இமையோர்' என்றதுபோலவே இப்பாட்டிலும் 'விண்ணாட்டவர்' என்பது சுவர்க்கத்திலுள்ள தேவர்களைக் குறியாது எல்லாவுலகங்களினும் மேலான பரமபதத்திலுள்ளாரைக் குறித்தது. 'மூதுவராம்' என்ற அடைமொழியினால், இவ்வுலகத்தி

விருந்து பரமபதஞ்சேர்ந்த முக்தரன்றிப் பரமபதத்திலேயே என்றும் நிலைத்துள்ள அநந்த கருட விஷ்வக்ஸேநர் முதலிய நித்யஸூரிகள் கூறப்பட்டாராவர்.

'தொழுநீர்' என்பதில் 'நீர்மை' என்னும் பண்பு ஈறுபோயிற்று. நீர்மையாவது ஸ்வபாவம். நித்யஸூரிகளால் தொழப்படுவதையே ஸ்வபாவமாகவுடைய திருவடிகளென்றவாறு. "இணையடிக்கே அன்புவைத்த" என்னாது "அன்புசூட்டிய" என்கையாலே ஆழ்வாரது அன்பு எம்பெருமானது திருவடிகளுக்கு அலங்காரமென்று தோற்றும். 1. "ஆர்வமேன்பதோர் பூ" என்றார் பெரியாழ்வாரும். "ஸ்ரீவத்ஸாங்கஸ்ய நீலஶ்ரீநாதிவாஸஸ் தஜ்ஞாநஸாரோ ரவஸ்தஜ்ஞநஜ்ஞஸாவ்ய। ஸுஸ்ரூஷ்வயைநாராதத்ஸ்வஸூத்ரதாரா ஹவொஹம் ஸ்ரீரஜாராஜவரணா ஸஜ்ஜ" (அதிமாநுஷஸ்தவம்—3.) என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியின் உட்கருத்தும் இங்கு உணரத்தக்கது. "இணையடிக்கே அன்பு சூட்டிய சூழ்குழற்கே" என்ற சொற்போக்கால்—எம்பெருமான் திருவடிகள் ஆழ்வார் திருமுடிக்கு அலங்காரமென்னுமிடமும் தோற்றும். "கோலமாமென் சென்னிக்கு உன்கமலமன்ன குரைகழலே" என்றார் திருவாய்மொழியில்.

'சூழ்குழல்' என்பது சூழ்ந்த கூந்தலையுடையவள் என்று பொருள்படுதலால், வினைத்தொகையன்மொழி.

நித்யஸூரிகள் சிரஸாவஹிக்கும் திருவடியிணையைத் தமது திருமுடியால் தாங்கியிருக்கின்ற இவ்வாழ்வார் எம்பெருமானைப் பிரிந்து வருந்திக் கண்ணநீர் கைகளாலிறைப்பதிற்கு மிந்நிலைமை பரமபோக்யமாயிருக்கின்றது என்று அன்பர் வெளியிடும்பாவனையாக ஆழ்வார் தமது பிரிவாற்றாமையை வெளியிட்டாராயிற்று. (உ)

குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளுந் திருவும் *
நிழற்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல்? * தண்ணந்துழாய்
அழற்போலடுஞ் சக்கரத்தண்ணல் விண்ணோர் தொழக்கடவும்
தழற்போற்சினத்த * அப்புள்ளின்பின் போன தனிநெஞ்சமே. (ந)

1. பெரியாழ்வார் திருமொழி 4—5—3.

| | |
|---|---|
| தண் | குளிர்ந்த |
| அம் | அழகிய |
| துழாய் | திருத்துழாயை யுடையனும் |
| அழல் போல் அடும் சக்கரத்து | (அஸுரராக்ஷஸர்களை) நெருப்புப் போல் அழிக்கிற திருவாழியை யுடையனுமான |
| அண்ணல் | எம்பெருமான் |
| விண்ணோர் தொழ கடவும் | மேலுலகத்தவர் வணங்கும்படி ஏறிநடத்துகிற |
| தழல் போல் சினத்த அ புள்ளின் பின் | (பகைவர்திறத்தில்) நெருப்புப் போன்ற கடுங்கோபத்தை யுடைய அக் கருடாழ்வானது பின்னே |
| போன | சென்ற |
| தனி நெஞ்சம் | (எனது) தனிப்பட்ட மனமானது |
| குழல் கோவலர் | புல்லாங்குழலை யுடையரான இடையரது |
| மடம் பாவையும் | குணவதியான மகளாகிய நப்பின்னைப் பிராட்டியும் |
| மண் மகளும் | பூமிப்பிராட்டியும் |
| திருவும் | பெரியபிராட்டியும் |
| நிழல் போல்வனர் | (எம்பெருமானுக்கு) நிழல்போலே யிருக்க அவர்களை |
| கண்டு | பார்த்துக்கொண்டு |
| நிற்கும் கொல் | (அவ்விடத்தை விடாதே நிற்குமோ?, |
| மீளும் கொல் | திரும்பிவருமோ?. |

* * *—நாயகனுடைய பிரிவுக்கு ஆற்றாத நாயகி நெஞ்சழிந்து உரைக்கும் பாசுரம்இது. இப்பாட்டில், தன்னுடைய வேறுபாடான நிலைமையைக்கண்டு வியந்துரைத்த தோழியை நோக்கி 'அவன் பக்கல்போன என்னெஞ்சு மீண்டுவருமோ? வாராதேபோய் விடுமோ?' என்கிறாளென்க.

எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸேவை ஸாதிக்கும்பொருட்டுக் கருடன்மேலேறி வந்து ஸேவைஸாதித்துவிட்டுத் திரும்பியெழுந் தருளினன்; 'இக்கருடனுடைய பாக்கியமேபாக்கியம்; எம்பெருமானுடையகாட்சி நமக்குக் கனவிலுங் கிடைப்பது அரிதாயிருக்கின்றது; இக்கருடன் இரவுபகலென்னுமெப்போதும் இப்பெருமானைச் சுமந்துதிரிகிறானே! இப்பரமபாகவதனுடைய பாக்கியம் விலக்ஷணமானது!' என்று ஆழ்வார் கருதினர்; உடனே இவருடைய திருவுள்ளம் அக்கருடன் பின்னேபோயிற்று. அவன் புகுந்த பரமபதத்தளவும் நெஞ்சும்போயிற்று; போனவிடத்திலே,

பெரிய பிராட்டியார் பூமிப்பிராட்டியார் நப்பின்னைப் பிராட்டியார் என்னும் தேவிமார் மூவரும் எம்பெருமானுக்கு நிழல்போலே இருக்கும்படியைக் கண்டால் அச்சேர்த்தியழகை அநுபவிப்பதை விட்டிட்டு மீண்டுவரத்தோன்றுமோ? தோன்றுவது அருமை; அச்சேர்த்தியழகைக் கண்டுகொண்டு அவ்விடத்திலேயே நின்றுவிடுமோ, அன்றி, 'நம்முதலாளியினிடம் நாம்போய்ச் சேர்ந்துவிடுவோம்' என்று கொண்டு திரும்பிவந்திடுமோ? என்று ஸம்சயிக்கிறபடி.

ஆழ்வார் தம்மை நெஞ்சுபிரிந்து போய்விட்டதென்பது அஸம்பாவிதமன்றோ: நெஞ்சு போய்விட்டதென்றால் வார்த்தையே சொல்லமுடியாதே; நெஞ்சு நினைத்ததையன்றோ வாய் சொல்லும்; **'அப்புள்ளின் பின்போன தனி நெஞ்சம்'** என்று இப்போது சொல்லுகிற ஆழ்வார் நெஞ்சை இழந்தவரென்று எப்படி கொள்ளமுடியும்? நெஞ்சோடு கூடியிருந்துதானே இந்த வார்த்தை சொல்லியிருக்க வேண்டும்; அப்படியிருக்க "போன தனிநெஞ்சம்.......கண்டுநிற்குங்கொல் மீளுங்கொல்" என்றருளிச் செய்வது எங்ஙனேபொருந்தும்? என்று சங்கிக்கவேண்டா; தம்மிற்காட்டில் நெஞ்சைவேறுபடுத்திச் சொல்லுதல் ஒருசமத்காரமான கவிமரபு. 'எம்பெருமானைப் பெரிய திருவடியின்மேல் ஸேவிக்கவும் பிராட்டிமார் மூவருமான சேர்த்தியிலே ஸேவிக்கவும் எனக்கு ஆசை அதிகரித்திருக்கின்றது; இந்த ஆசை இப்படியே வளர்ந்து செல்லுமோ? அன்றி இவ்விருள் தருமாஞாலத்தின் ஸ்வபாவத்தினால் இவ்வாசை மாறி * உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்தாருடைய ஆசையே நமக்கும் வந்துவிடுமோ? தைவாதீனமாய் பகவத்விஷயத்திலுண்டான ஆசையே நமக்கு நிலைநிற்கவேணும் என்னுங்கருத்தையே இப்பாசுரம் வெளியிடுமென்றுணர்க.

இராமபிரான் வநவாஸத்திற்குப் புறப்பட்டெழுந்தருளினவுடனே "ராமம் மேநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே। ந த்வா பஶ்யாமி கௌஸல்யே!—ராமம் மேநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே—ந த்வா பச்யாமி கௌஸல்யே!" என்று கௌஸல்யையை நோக்கித் தசரதசக்ரவர்த்தி கூறுகின்றான்; 'எனது கண் ராமபிரானையே பின் தொடர்ந்து போயிற்று, இன்னமும் மீண்டுவர

வில்லை; கண்ணிழந்தேனுதலால், தேவி! அருகிலிருக்கின்ற உன்னை யும் காணப் பெறுகின்றிலேன்' என்கிறுன். இதனுல், கண்கள் ஆச்ரயத்தைவிட்டுப் பெயர்ந்துபோயினவென்றதாகுமோ? 'இராம னொருவனைத் தவிர மற்று எப்பெருளையும் என் கண் பார்க்கவிரும்ப வில்லை' என்பதே அவ்விடத்திற் கருத்தாவது போல, இவ்விடத் தும், குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவுமான சேர்த்தியையும் பெரியதிருவடியின் மேலிருப்பையுமே ஸேவிக்க விருப்பங்கொண்டிருக்குமதே கருத்தாகும்.

'**அப்புள்ளின் பின்போன தனிநெஞ்சம்**' என்றவிதனை ஆழ்ந்து நோக்குங்கால் ஒரு சிறிய உள்ளுறைபொருள் தோற்றும்; "**ஸுபர்ணோஸி கருத்மாந்**" என்று தொடங்கியுள்ள வேதவாக்கியத் தின்படியும் "**வேதாத்மா விஹகேச்வர:**" என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியின்படியும் கருடன் வேதஸ்வரூபியாதலால், சிறந்த பிர மாணமாகிய வேதத்தைத் தமது திருவுள்ளம் அநுஸரிக்கின்றது என்பது தெரிவிக்கப்பட்டதாம். '**தழல்போல் சினத்த அப்புள்**' என்று பகைவரை அழிக்கவல்ல பராக்ரமங்கூறுதலால் அவ்வேத ப்ரமாணம் புறமதங்களை யழிக்கவல்லதென்பது கூறிற்றும். '**சக் கரத்தண்ணல் கடவும்புள்**' என்றதனுல் அப்பிரமாணம் ஸர்வேச் வராதீநமென்பது விளங்கும். '**விண்ணோர் தொழக் கடவும்புள்**' என்றதனுல் அந்தப் பிரமாணபலத்தாலே தேவர்கள் யாவரும் எம்பெருமானுக்கு அடிமைப்படுவரென்பது பெறப்படும்.

**குழற்கோவலர் மடப்பாவை**=நப்பின்னைப்பிராட்டியானவள் கும்பரென்னும் ஒரு இடையரது மகளாதல் அறிக. புல்லாங்குழ லொலியால் அறிவில்லாத பசுக்களையும் வசப்படுத்தவல்ல இடையர் குலத்திற் பிறந்ததனுலே தன் மொழியழகால் ஸர்வஜ்ஞனை எம்பெருமானை வசப்படுத்த வல்லளென்று விசேஷார்த்தங்கூறுவர். '**குழல்**' என்பதற்குப் புல்லாங்குழலென்று பொருள்கொண்டால் கோவலர்க்கு விசேஷணம். கூந்தல் என்று பொருள் கொண்டால் கோவலர்மடப்பாவைக்கு விசேஷணம். சிறந்த கூந்தலையுடைய நப் பின்னை யென்கை. கோபாலரென்னும் வடசொல் கோவலரெனத் திரிந்தது. **மடப்பாவை** யென்றது—பெண்டிர்க்கு உரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னுங் குணங்களெல்லாவற்றாலும் நிறைந்

தவளென்றவாறு. அறிந்தும் அறியாதுபோலிருக்குந்தன்மை மடமெனப்படும். பாவை—சித்திரப்பதுமை. அதுபோல அழகியவளென்று பொருள்படுதலால் உவமையாகுபெயர். இந்த நப்பின்னைப் பிராட்டி கிருஷ்ணாவதாரத்தில் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மிக உகப்பாக இருந்தனள்: எவராலும் அடக்கமுடியாதவையாய் அசுரத்தன்மை பூண்டவையாய் மிக்க வலிவுள்ளவையான ஏழெருதுகளைக் கண்ணபிரான் தன்வலியால் அடக்கி வென்று அழித்து அவ்வெற்றியையே இவள் தந்தையின் கொள்கைப்படி கந்யாசுல்கமாக்கி இவளை மணஞ்செய்து கொண்டனன் என்பது கதை. இவள் ‡ நீளாதேவியின் அம்சமாதலால் இங்கு ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியென்னும் தேவிமார் மூவரையுங் கூறியவாறும். இத்தேவிமார்கள் எம்பெருமானை விடாது தொடர்ந்து நிற்பதுபற்றியும், அவனது குளிர்ச்சிக்குக் காரணமாயிருப்பதுபற்றியும் அவனுக்குப் பரதந்திரைகளா யிருப்பதுபற்றியும் 'நிழல்போல்வனர்' எனப்பட்டது. 'எம்பெருமானுக்கு நிழல்போன்றிருப்பவர்கள்' என்று பொருள் கொள்வதன்றியே, இவர்கள் தம்மில் ஒருவர்க்கொருவர் (சக்களத்தி முறைமைபாராட்டிச் சீறுபாறென்னாமல்) நிழல்போல் ஒத்து விளங்கும்படியைக் கூறுவதாகவும் பொருள்கொள்ளலாம். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம் சாயாமிவாத்மநி நிவேசிதநீளதேவ்யா:" என்றும், ஸ்ரீகுணரத்நகோசத்தில் "தேவி க்ஷாந்த்யா நீளயா ஸஹ ஸ்ரீ தேவ்யஸ்ஸஹஸ்ரம் ததா யாபிஸ்த்வம் ஸ்தநவாஹ்யத்ருஷ்டிபிரிவ ஸ்தாபிஸ் ஸ்ரியம் ச்ராவணே" என்றும் அருளிச்செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன. அடியார்க்கு நிழல்போன்றிருப்பார்கள் என்றுமுரைக்கலாம்.

கண்டு நிற்குங்கோல் மீளுங்கோல்—'கோல்' இரண்டும் ஸந்தேஹத்தில் வந்தவை. இத்தேவிமார்கள் எம்பெருமானை விட்டு நீங்காதிருப்பதுபோல நமக்கும் நித்யயோகம் கிடைக்குமோ? அன்றி,

---

‡ "நீளாகாந்தௌ நவஸத்ருசீ கிஞ்ச்ரிணீவ" என்று ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ஆழ்வான். "நீளாதுங்கஸ்தநகிரிதடீ" என்று பட்டர்.

இன்னமும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கும்படியாகவே நேருமோ? என்று ஆழ்வார் கவல்கின்றனரென்க.

" **தண்ணந்துழா யழல்போலடுஞ் சக்கரத்தண்ணல்** " என்பதற்கு—தண்ணந்துழாயையும் அழல்போலடுஞ் சக்கரத்தையும் உடைய ஸ்வாமி என்று பொருளுரைக்கப்பட்டது. வேறுவகையாகவுமுரைக்கலாம்: தண்ணந்துழாயினுடைய அழல்போலே தபிக்கின்ற சக்கரத்தையுடைய பெருமான் என்னலாம்; குளிர்ந்த திருத்துழாய் தபிக்குமோ வென்னில்; 1. " மேவுதண்மதியம் வெம்மதியமாலோ மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ " என்னுமாபோலே எம்பெருமானைப் பிரிந்திருக்கும் நிலைமையில் தபிக்கும். விரஹிகளுக்கு இது அநுபவஸித்தமாகும். ஆழ்வார் இப்போது பிரிவாற்றாமையிலிருப்பதனால் இங்ஙனே சொல்வதுகூடும். **அண்ணல்**—ஆண்பாற் சிறப்புப்பெயர்.

**தனிநெஞ்சம்**—என்னையும் விட்டு அங்கும் முகம்பெறாமல் தனிப்பட்ட நெஞ்சு.

ஆழ்வார், தமது திருவுள்ளம் வேதங்களிலே பிரவேசித்து அந்தப் பிரமாணமூலமாகத் திருமாலை யநுபவிக்கத் தொடங்கிற்று என்றும், இவ்வநுபவம் மாறிப்போய்விடுமோ அன்றி மாறாது நித்யமாயிருக்குமோ என்று தமக்கு ஸந்தேஹமுள்ளது என்றும் இப்பாட்டாலருளிச்செய்தாராயிற்று. .... .... (௩)

**தனிநெஞ்சம் முன்னவர் புள்ளே கவர்ந்தது * தண்ணந்துழாய்க்**
**கினிநெஞ்ச மிங்குக்கவர்வது யாமிலம் * நீநடுவே**
**முனிவஞ்சப் பேய்ச்சி முலைசுவைத்தான் முடிசூடுதுழாய்ப்**
**பனிநஞ்ச மாருதமே ! * எம்மதாவி பனிப்பியல்வே ?. (௪)**

| | |
|---|---|
| தனி நெஞ்சம் | (என்னோடு) உறவற்று நீங்கிய (என்) மனம் முழுவதையும் |
| முன் | முன்னமே |
| அவர் புள்ளே | அப்பெருமானுடைய கருடப் பறவையே |
| கவர்ந்தது | (பிறர்க்கு மிச்சமில்லாதபடி) கவர்ந்து கொண்டு போயிற்று; |

1. திருவாய்மொழி 9—9—4.

(ஆதலால்,)

தண் அம் துழாய்க்கு — (அப்பெருமானுடைய) குளிர்ந்த அழகிய திருத்துழாய்க்கு
கவர்வது — கவர்ந்து கொண்டு போவதற்கு உரியதான
நெஞ்சம் — வேறொரு நெஞ்சை
இனி இங்கு யாம் இலம் — இனி இவ்விடத்தில் யாம் உடையோமல்லோம்;

(அப்படியிருக்க,)

முனி — கோபிக்குந் தன்மையுள்ள
வஞ்சம் பேய்ச்சி — வஞ்சனையையுடைய பேய் மகளான பூதனையினுடைய
முலை — (விஷந்தடவின) முலையை
சுவைத்தான் — (பகையற) உருசி பார்த்து உண்ட கண்ணபிரானுடைய
முடி சூடு துழாய் — திருமுடியில் சூடப்பட்ட திருத்துழாயினது
பனி நஞ்சம் மாருதமே — குளிர்ச்சியையுடைய விஷம்போன்ற காற்றே!
நீ நடுவே — நீ இடையிலே (புகுந்து)
எம்மது ஆவி பனிப்பு — (ஏற்கனவே நோவுபட்டிருக்கிற) எம்முடைய உயிரை மேலும் நடுங்கச் செய்வது
இயல்வே — (உனக்குத் தக்க) இயற்கையோ? [தகாது.]

* * *—நாயகனைப்பிரிந்து ஆற்றாத நாயகி வாடைக்கு வருந்திக்கூறும் பாசுரமிது. பிரிந்துபோன நாயகன்பின்னே தன் மனம் போய்விட, அதனையிழந்த நாயகி, அந்த நாயகனுடைய திருத்துழாய் மாலையில் தனக்கு உண்டான ஈடுபாட்டால் தளர்ந்து நிற்கும்பொழுது அத்திருத்துழாயின் ஸம்பந்தத்தையுடைய காற்று வந்து வீசி வருத்தப்படுத்த, அதனை ஸஹித்திருக்கமாட்டாமல் 'நெஞ்சையிழந்து வருந்துகிற எம்மை நீயும் வந்து பகைவர்போல வருத்துதல் தகாது' என்று அக்காற்றைக்குறித்துக் கூறுகின்றாள்.

கீழ்ப்பாட்டில் "அப்புள்ளின் பின்போன தனி நெஞ்சமே" என்று பிரமாண பூர்வமாக எம்பெருமான் பக்கலிலே தம் மனம் சென்றமையை அருளிச்செய்தார். அப்படி அப்பெருமான் பின்னே சென்ற தமது மனத்திற்கு இவ்வுலகத்திலுள்ள போக்ய பதார்த்தங்களொன்றும் ப்ரியமாகவல்லாமல் ஹிம்ஸையாகவே யிருக்கும்படியை இதனால் தெரிவிக்கிறாரென்றுணர்க.

**தனிநெஞ்சம் முன்னவர்புள்ளே கவர்ந்தது**=“அப்புள்ளின் பின்போன தனி நெஞ்சமே” என்று கீழ்ப்பாட்டிற் சொன்ன விஷயம் திடம் என்பது தோன்ற அவ்விஷயமே மீண்டும் அநுவதிக் கப்படுகின்றது. எம்பெருமானை யறிவதற்குச் சிறந்த பிரமாண மாகிய வேதத்தின் வழியிலேயே என்மனம் ஊன்றி நின்றுவிட்டது என்கை. **தண்ணந்துழாய்க்கு இனி நெஞ்சமிங்குக் கவர்வது யாமி லம்**=திருத்துழாய் எப்படி பசுகுபசுகென்று மனத்தைக் கவர்வதா யிருக்கின்றதோ அப்படி மனத்தைக் கவரவல்ல மாயையென்னும் பிரகிருதியே இங்குத் ‘தண்ணந்துழாய்’ என்ற சொல்லால் குறிக் கப்பட்டதாகும். வேதப்ரமாண மூலமாக எம்பெருமானிடத்துச் சென்ற என்மனத்தை இனிப் பிரகிருதி ஆக்கிரமித்துக்கொள்ள இயலாது என்றபடி.

ஆழ்வார் எம்பெருமானைப்பிரிந்து வருந்தியிருக்கும் பொழுது எம்பெருமானுடைய ஸம்பந்தமுள்ள வஸ்துக்களெல்லாம் உத்தீ பகமா யிருக்குமாதலால் ‘அந்தோ! ஏற்கனவே புண்பட்டிருக்கிற என்னைத் திருத்துழாயும் புண்படுத்தவேணுமோ? திருத்துழாய்க் காற்று இப்போது ஏதுக்கு வீசுகின்றது!; அவனும் நானும் கூடி யிருக்கும்போதன்றோ இது போக்யமாவது; இப்போது வருத்தத் திற்கே ஹேதுவாகின்றதே!’ என்று திருத்துழாயைக் குறித்தே சொல்லுகிறாராகவுமாம். ஸம்ச்லேஷ காலத்தில் இன்பந்தரும் பொருள்யாவும் விச்லேஷகாலத்தில் துன்பந்தருதலால் திருத் துழாய்க்கும் அதனோடு ஸம்பந்தப்பட்ட காற்றுக்கும் அஞ்சுவது பொருந்தும்.

கவர்வது+யாம், கவர்வதியாம்; “யவ்வரினிய்யாம்” என்பது நன்னூல்.

**பேய்ச்சி முலை சுவைத்த** வரலாறு:—ஸ்ரீகிருஷ்ணனைப்பெற்ற தாயான தேவகியினது உடன்பிறந்தவனும் அக்கண்ணபிரானுக்கு மாமனுகிய கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகிபுத்திரன் ஒளித்து வளர்தலையறிந்து, அக்குழந்தையை நாடிப்புணர்ந்து கொல்லும் பொருட்டுப் பல அசுரர்களை யேவ, அவர்களில் ஒருத்தி யான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்

டிருந்த க்ருஷ்ணசிசுவை யெடுத்துத் தனது நஞ்சுதீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானுன குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனை யிலே அவளுயிரையும் உறிஞ்சி, அவள் பேரிரைச்சலிட்டுக்கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்பதாம்.

இவ்வரலாற்றை இவ்விடத்தில் அநுசந்தித்து அப்படிப்பட்ட வன் **முடிசூடு துழாய்ப்பனிநஞ்ச மாருதமே!** என்று விளிப்பதன் கருத்துயாதெனில்; வஞ்சகம் செய்யவந்தவர்களின் உயிரைமாய்ப் பதே திருத்துழாய்மார்பனுடைய காரியம்; நீ அப்படியல்லாமல் அன்புபூண்டவர்களின் உயிரையும் மாய்க்கின்றாயே! இது தகுமோ? என்றவாறு.

**எம்மதாவி பனிப்பியல்வே!**—நெஞ்சு எம்மைவிட்டு அவர் பக்க லிலே போனப்போலே உயிரும் போய்விடலாம்; அவ்வளவுக்குத் துணிவில்லாதது இந்தப்பாழும் உயிர்—என்பது தோன்ற '**எம்மது ஆவி**' என்கிறார் போலும். **பனிப்பு இயல்வே?**—எல்லாருடைய தாபத்தையும் தணிப்பதற்கு உரிய நீயோ நெஞ்சிழந்தாரை இப் படுகொலை செய்வதற்கு ஏற்பட்டாய்? இது உனக்குத்தகாது என்ற வாறு. **பனிப்பு**—பு விகுதிபெற்ற தொழிற் பெயர். ஈற்று ஏகாரம் எதிர்மறை. இயல்வு அன்று என்றவாறு.

இப்பாட்டில், எம்பெருமானை யுத்தேசித்து முதலடியில் 'அவர்' என்று பன்மையாகக்கூறி மூன்றுமடியில் 'முலை சுவைத்தான்' என்று ஒருமையாகக்கூறினது வழுவாகாதோ? எனின்; ஆகாது. வழுவமைதியாம்: ஒருமைப் பன்மை மயக்கம். எம்பெருமான்பிரிந்து போனபடியைக் கருதிக் கோபம் தோற்றுமாறு முதலில் 'அவர்' என்று உயர்த்திக் கூறினள்; அப்பெருமான் முன்புசெய்த [பூதநா நிரஸநமாகிற] உபகாரத்தைக் கருதிக் கோபம் தணிந்து மூன்று மடியில் 'சுவைத்தான்' என இயல்பாக ஒருமையாற் கூறினள் என்க.

**பனிப்பியல்வாக வுடைய தண்வாடை * இக்கால மிவ்வூர்ப்**
**பனிப்பியல் வெல்லாந்தவிர்ந் தெரிவீசும் * அந்தண்ணந்துழாய்ப்**
**பனிப்புயல்சோருந் தடங்கண்ணி மாமைத்திறத்துக் கொலாம்?**
**பனிப்புயல்வண்ணன் * செங்கோலொருநான்று தடாவியதே.** (ரு)

| | |
|---|---|
| பனிப்பு இயல்வு ஆக உடைய | குளிரச் செய்வதையே இயற்கைத் தொழிலாக வுடைய |
| தண் வாடை | குளிர்ந்த காற்றானது |
| இ காலம் | இப்போது மாத்திரம் |
| இ ஊர் | இவ்விடத்தில் மாத்திரம் |
| பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து | குளிரச்செய்வதாகிய (தன்னுடைய) இயற்கையை முழுதும் விட்டு |
| எரி வீசும் | வெப்பத்தை வீசுகின்றது; |
| | (இவ்விதமாக,) |
| பனி புயல் வண்ணன் | குளிர்ந்த காளமேகம் போன்ற தன்மையையுடைய எம்பெருமானது |
| செங்கோல் | (என்றும் மாறாத) கட்டளை |
| ஒரு நான்று தடாவியது | இவ்வொருகாலத்தில் கோணலாய்ப் போனது, |
| அம் தண்ணம் துழாய் | அழகிய குளிர்ந்த (அவனது) திருத்துழாயின் விஷயமாக (ஆசைப்பட்டு) |
| பனி புயல் சோரும் | மழைதுளித்தலையுடைய மேகம் போல நீர் சொரிகிற |
| தட கண்ணி | பெரிய கண்களையுடைய இவளது |
| மாமை திறத்து கொல் ஆம் | மேனி நிறத்தை யழிப்பதற்கோ போலும்!. |

* * *—வாடைக்கு வருந்தி மாமையிழந்த நாயகியின் நிலைமையைக் கண்டு தோழி இரங்கிக்கூறும் பாசுரம் இது. எல்லாருடையவும் எவ்வகையான தாபங்களையும் தணிப்பதையே இயற்கையாகவுடைய மந்தமாருதமானது இப்பொழுது இவ்வூரில் இவளை எரிக்கின்றது; எரிப்பது நெருப்பின் தன்மையேயன்றிக் காற்றின் தன்மையன்று; குளிரப்பண்ணுவதையே இயற்கையாகவுடைய காற்றுக்கு இப்படி நிலைமைமாறுபட்டதற்கு என்ன காரணமிருக்கும்!, இவளது நிறத்தை அழிக்கவேணுமென்று கருதிய எம்பெருமான் தனது செங்கோன்மையை மாறுபடுத்தி வாடையை வேறுபடுத்தி அனுப்பியிருக்கிறான் போலும்!; இன்ன இன்ன வஸ்துக்கள் இன்ன இன்ன தன்மையை யுடையனவா யிருக்கவேண்டும் என்று ஆதியிலே எம்பெருமான் ஒருவரம்பு கட்டிவைத்திருக்கிறான்; அதன்படியே குளிர்ச்சியைத் தன்மையாயுடைத்தா யிருக்கக் கடவதான காற்று இப்போது எரித்தலைத் தன்மையாகக் கொண்டதென்னில், எம்பெருமான் தான் செய்திருந்த வ்யவஸ்தையைத் தானே

மாறுபடுத்தி யிருக்கவேண்டும்; 'மந்தமாருதம் பராங்குச நாயகிக்குத் தாபத்தை உண்டாக்கக்கடவது' என்று ஸங்கல்பித்தனன் போலும்! என்று தோழி இரங்குகின்றாள்.

எம்பெருமானைச் சேர்வதற்குக் காலவிளம்பம் பொறாமல் விரைகின்ற ஆழ்வார் தமக்கு இவ்வுலகப் பொருள்யாவும் வெறுப்பு விளைக்கின்றன என்று ஸ்ரீமதுரகவிபோல்வார் சொல்லும் பாவனையாக ஆழ்வார் தமது நிலைமையை வெளியிட்டுக் கொள்கிறாரென்பது இதற்கு உள்ளுறைபொருளாக உணரத்தக்கது. இவ்வுலகத்தவரான பிராகிருதர்கட்கு இன்பந்தரும் பொருள்கள் ஆழ்வார்க்குத் துன்பந் தருவனவாகத் தோற்றுதல் முன்னிரண்டடிகளிற் குறிப்பிடப் பட்டது. இங்குள்ள எல்லாரையும் ஸுகப்படுத்துகின்ற சப்தாதி விஷயங்கள் திருக்குருகூரில் இவ்வாழ்வார்க்கு மாத்திரம் வெறுப்புக்கு இலக்காயிருக்கின்றன என்றவாறு.

'தண்வாடை' என்றாவது, 'பனிப்பியல்வாக வுடையவாடை' என்றாவது சொன்னால் போதுமே, இரண்டுவிசேஷணங்களு மிட்டது ஏன்? எனில்; தொழிற்பண்பையும் குணப்பண்பையுங் கருதி யென்க. பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய காற்று மற்றொன்றாகிய அக்நியின் தன்மையை அடைந்த இந்த அநீதி மற்று எப்போதுமில்லை, மற்று எவ்விடத்துமில்லை; அவனைப் பிரிந்திருக்கிற இக்காலத்திலே, பிரிந்துதனியிருக்கிற இவ்வூரிலே—என்பது தோன்ற '**இக்காலமிவ்வூர்**' என்றது. அவ்வாடை முன்பு இவளுக்கே இனியதாயிருந்த தென்பது தெரிய '**இக்காலம்**' எனப்பட்டது. இப்பராங்குச நாயகியின் ஆற்றாமையைக் கண்ட ஊராரையும் வாடைதபித்தலால் '**இவ்வூர்**' எனப்பட்டது. கருடாழ்வானைக் கொண்டு நெஞ்சைக் கவர்ந்து போனான், வாடையையனுப்பி மேனிநிறத்தைக் கவர்ந்து போகக்கருதி வாடையைக் கொடியதாகுமாறு சங்கற்பித்து ஏவியிருக்கக்கூடும் என்பது தோன்ற '**மாமைத்திறத்துக் கோலாம்**' என்றது.

**புயல்வண்ணன்** = மேகம்போற் கரியவடிவத்தையும், அதுபோலத் தாபந்தீர்த்து ப்ரத்யுபகார மெதிர்பாராமல் உதவுகிற தன்மைக் குணத்தையும் உடையவனென்று பேர்பெற்றிருக்கும் பெருமான் இப்பொழுது விருத்தஸங்கல்பஞ் செய்துகொண்டு

வருத்தத் தொடங்கினனே ! என்று சொல்லவேண்டி 'இப்போது வருத்துகின்ற இப்பெருமானுடைய இயற்கை இன்னது' என்று குறித்தாள். புயல்வண்ணனு யிருந்துவைத்து இப்படி இவன் வருத்துகின்றானே !; காற்றின் ஸ்வபாவத்தை மாத்திரம் மாற்றினு னல்லன் ; தன் ஸ்வபாவத்தையும் மாற்றிக்கொண்டானே ! என்கை.

"நெடுங்கடல் நிற்பதும் ஞாயிறு காய்வதும் நிற்றலும் **கால், ஒடுங்கிநடப்பதும்** தண்கார் பொழிவதும் ஊழிதனில், சுடுங்கனல் பற்றிச் சுடாதே யிருப்பதும் தும்பைபுனைந்து, அடுங்கனலாழி **அரங்கேசர் தந்திருவாணையினே**" [திருவரங்கத்துமாலை–15.] என்றபடி உலகத்தில் ஸ்ருஷ்டிப் பொருள்கள்யாவும் புடைபெயர்தல் எம்பெருமானது கட்டளைப்படியே யாதலால், இங்கு வாடையின் குணம் மாறினதை எம்பெருமானது ஆஜ்ஞை கோணுதலினுலாகிய தெனக் குறித்தாள். '**ஒரு நான்று தடாவியதே**'=எம்பெருமானுடைய செங்கோன்மை ஒருநாளும் நிலைகுலைவதன்று ; அப்படிப் பட்டது இவள் நிறத்தையழிப்பதற்காக இவ்வொருபொழுது நிலைகுலைந்தது !.

இதனைத் தோழிபாசுரமாகக் கொள்வதன்றியே தாய் பாசுரமாகக் கொள்வதுமுண்டு.

'**தண்ணம்**' என்பதில், **அம்**—பண்புப் பெயர்விகுதியுமாம், சாரியையுமாம். **தடாவியது**—கோணிற்று ; தொல்காப்பியம் சொல்லதிகாரம் உரியியலில் (23) "**தட**வென்கிளவி § கோட்டமுஞ் செய்யும்" என்றதனல் 'தட' என்னும் உரிச்சொல் வளைவையும் உணர்த்துவதாதலால் அதனடியாகவே 'தடாவியது' என்ற சொல் பிறந்த தென்னலாம். .... .... .... (ரு)

**தடாவியவம்பும் முரிந்தசிலைகளும் போகவிட்டு ***
**கடாயினகோண்டொல்கும் வல்லியிதேனும் * அசுரர் மங்கக்**
**கடாவியவேகப் பறவையின்பாகன் மதனசெங்கோல்**
**நடாவிய கூற்றங்கண்டீர் * உயிர்காமின்கள் ஞாலத்துள்ளே.**

---

§ கோட்டமும் செய்யும்—கோணல் என்னும் பொருளையும் **உணர்த்தும்** என்றபடி.

| | |
|---|---|
| இத | இவ்வழகானது |
| தடாவிய | வளைந்த |
| அம்பும் | பாணங்களையும் |
| முரிந்த | ஒடிந்த |
| சிலைகளும் | வில்லினையும் |
| போக விட்டு | கொள்ளாமல் ஒழித்து |
| கடாயின கொண்டு | உபயோகிக்கத் தக்க அம்புகளையும் வில்லினையும் ஏந்தி |
| ஒல்கும் | அசைந்து நடக்கிற |
| வல்லி எனும் | ஒரு பூங்கொடி போன்ற பெண் வடிவமாயிருந்தாலும், |
| அசுரர் மங்க | அசுரர்கள் அழியும்படி |
| கடாவிய | ஏறி நடத்தப்படுகிற |
| வேகம் | விரைவையுடைய |
| பறவை | பக்ஷிராஜனாகிய கருடனுக்கு |
| இன்பாகன் | இனிய பாகனாகிய எம்பெருமானது (சம்பந்தம் பெற்ற) |
| மதனன் | மன்மதனுடைய |
| செங்கோல் | ஆஜ்ஞையை |
| நடாவிய | நடத்துகிற |
| கூற்றம் | யமனாயிருக்கும்; |
| ஞாலத் தன்னே | இந்த உலகத்திலே |
| கண்டீர் | (இவ்வழகிய வடிவத்தைப்) பார்த்தவர்களே! |
| உயிர் காமின்கள் | (உங்களது) உயிரைக் காத்துக் கொள்ளுங்கள். |

* * *—ஜ்ஞாநவ்ருத்தங்களால் சிறந்து அமைதியோடிருக்கிற ஆழ்வாருடைய ப்ரபாவத்தைக்கண்ட அன்பரான பாகவதர் திருவுள்ளமுகந்து உலகத்தாரை நோக்கி 'இவ்வாழ்வார் தம்மையடுக்கிற ஸம்ஸாரிகளை இவ்விருள்தருமாஞாலப் பிறப்பு நீக்கி முக்தராகச் செய்யவல்லவர்; நீங்கள் ஸம்ஸாரத்திலேயே நிலைத்திருக்க விரும்புவீராயின், ஊரும் நாடு முலகமும் தம்மைப்போலே ஆக்கவல்ல இவர்க்கு வசப்படாமல் தப்பிப்பிழையுங்கள்' என்று ஆழ்வார் தமது மஹிமையை வியந்துகூறும் பாகவதர் பாசுரமாக உள்ளுறை பொருளமைந்த இப்பாட்டு—ஒரு நாயகியின் அழகிய வடிவத்தைக் கண்டு அதனிடத்து மிக ஈடுபட்ட நாயகன் உலகத்தாரை நோக்கி 'இவ்வடிவம் மேலெழப்பார்ப்பதற்கு ஒரு மெல்லியல் வடிவமாகத் தோன்றினாலும் உண்மையில் மன்மதனுடைய ஆஜ்ஞையைமுழுவதும் தவறாமல் செலுத்துகிற ஒரு ம்ருத்யுவாகும்; இந்த உலகத்திலே ப்ரஸித்தனான ம்ருத்யுவைத் தப்பினாலும் தப்பலாம், இந்த ம்ருத்யுவைத் தப்புதல் அரிது; இது கண்டவர்களுயிரைத் தன்வச

மாக்கிக்கொள்ளுந் தன்மையுடையதாதலால் உங்களுயிரை இதன் பக்கல் இழக்காமல் நீங்கள் குறிக்கொண்டு காத்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லும் பாசுரமாக அமைக்கப்பட்டது. முற்கூறிய ஸ்வாபதேசார்த்தத்தில், தலைமகள்—ஆழ்வார்; தலைமகன்—பாகவதர்.

கீழ் எம்பெருமானைத் தலைமகனாகக் கூறிவந்தவர் இங்கு ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமகனாகக் கொள்ளவேண்டும்படி பாசுரமருளிச்செய்யாலாமோ? எனின்; களவித்தலைமகன் என்றும் பாட்டுடைத்தலைமகன் என்றும் இரண்டு தலைமகன் அமைவதுண்டு; (இது இறையனாரகப்பொருளுரையாலும் விளங்கும்.) ஆழ்வார் எம்பெருமான் பக்கலிற்போல அவனது ஸம்பந்தம் பெற்ற அடியார்களிடத்திலும் மிக்க பக்திகொண்டு அவர்களையும் தமக்குத் தலைவராகக்கொள்ளுந் தகுதியுடையவரென்பது 1. "மாயப்பிரானடியார்கள் குழாங்களை—உடன்கூடுவதென்று கொலோ" இத்யாதி ஸ்ரீஸூக்திகளில் விளங்குதலால் ஸ்ரீவைஷ்ணவர்களைக் களவித்தலைமகனாகக்கொள்ளலாம். எம்பெருமான் எப்போதும் பாட்டுடைத்தலைமகன்.

"தடாவியவம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டுக் கடாயின கொண்டு ஒல்கும் வல்லி இதேனும்"—வல்லி என்றது பெண்மகளைச்சொன்னபடி. இங்கு, பராங்குசநாயகியைச் சொன்னவாறு. கொள்கொம்பை ஆதாரமாகப் பற்றியல்லது தானே நிலைத்திருக்க மாட்டாத கொடிபோல ஆழ்வார் எம்பெருமானைப்பற்றியல்லது தரியாது பரவசப்பட்டிருப்பரென்பது இதனால் வெளியாகும். உபயோகமற்ற அம்புகளையும் சிலைகளையும் நீக்கி நல்ல அம்புகளையும் சிலைகளையும் கொண்டதாகச் சொல்லுகிறவிதற்கு உட்கருத்து யாதெனில்; பிராகிருதர்களுடைய மாறுபடும் இயல்புடைத்தான அறிவென்ன உபாயங்களென்ன இவற்றிற்காட்டிலும் ஆழ்வாருடைய நிலைத்த ஞானசாதனங்களுக்கு உள்ள மேன்மை கூறியவாறு. இதுவே பின்னடிகளில் விவரிக்கப்படுகிறது: [அசுரர்மங்க இத்யாதி.] கொடுந்தன்மையையுடைய மதாந்தரஸ்தர்களை அசுரர் என்கிறது. அவர்கள் நிலை கெடும்படி உபயோகிக்கப்படுகிற சிறந்த

1. திருவாய்மொழி 2—3—10.

பிரமாணமான வேதத்துக்குத் தலைவனான எம்பெருமான் திறத்தில் மிகுந்த காதலையுண்டாக்கி முக்தியெய்துவித்து அதனால் ஊழ்வினைத் தொடர்ச்சிக்கு ஒரு யமனாகவுள்ளவர் ஆழ்வார் என்கை.

**கண்டீர்! உயிர்காமின்கள் ஞாலத்துள்ளே**—உலகத்தில் ஆழ்வாரை ஸேவிக்கப்பெற்றவர்களில் எவரும் ஸ்வதந்த்ரராயிருக்க முடியாது; எல்லாரும் அநந்யார்ஹ சேஷத்வமாகிற ஸ்வரூபத்தைப் பெற்றவர்களாவர்; அப்படியாக்குவதற்காகவே இவரது திருவவதாரம்; அப்படி ஸ்வரூபம் பெறாமல் நித்யஸம்ஸாரிகளாகவே உழல வேண்டி உங்களுயிரை உங்களுக்கு உரியதாகவே வைத்துக்கொள்ளக்கருதுவீர்களாயின் இவருடைய கடாக்ஷத்துக்கு இலக்காகாதபடி ஒழிந்து போங்கள் என்றவாறு. ஸ்வாபதேசத்தில் ஞானமென்று கொள்ளப்படுகிற கண்ணுக்கு, குறிதவறாது எய்யும் அம்பை உவமை கூறியதனால், இவரது ஞானம் பரம்பொருளைத் தவறாது பற்றுந்தன்மையது எனக்குறித்தபடியாம். வில்லானது அம்பைச்செலுத்துங் கருவியாதலால் ஸ்வாபதேசத்தில் அது ஞானசாதனங்களைக்குறிக்கும். ஞானமாகிய அம்புக்கு வளைவாவது விஷயாந்தரங்களிற் செல்லுதல். ஞானசாதனங்களாகிய விற்களுக்கு ஒடிவாவது ஒருகால் தவறிப்போதல். இங்ஙனங் கெடுதலில்லாது நிலைபெற்ற ஞானசாதனங்களை யுடையரென்பதுதோன்ற '**கடாயின கொண்டு**' என்றது. '**கண்டீ ருயிர்காமின்கள் ஞாலத்துள்ளே**' என்றது—ஆழ்வாரை ஸேவிக்கவே ஸம்ஸாரம் அடியற்றுப் போம் என்றவாறு.

இனி அந்யாபதேசப்பொருளில் சில விவரணங்கள் செய்வோம்;—இந்த நாயகியானவள் மன்மதனுடைய ஆணையை உலகத்தில் தவறாது நடத்தும்பொருட்டு நல்ல அம்புகளையும் சிலைகளையுங் கொண்டாள்; மற்ற ஸ்திரீகளின் கண்புருவங்களினது அழகிற் காட்டிலும் இவளுடைய கண்புருவங்களின் அழகு சிறந்தது: மன்மதனது அம்பும் சிலையும் வளைந்தொழியக்கூடியன என்று கருதி அவற்றையொழித்துத் தன் கண்புருவங்களையே தக்க அம்பு சிலைகளாகக்கொண்டு உலாவுபவள் இவள். (மன்மதனது ஐந்து புஷ்பபாணங்களினும் ஒரு கருப்புவில்லினும் இவளது இரு கண்பார்வை

யும் இருபுருவங்களும் வேட்கையை விளைவிப்பதில் சிறப்புடையன என்பது தொனிக்க இங்ஙனே கூறப்பட்டது.)

கண்ணபிரானது மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான ருக்மிணிப்பிராட்டியிடம் மன்மதன் ப்ரத்யும்நனென்னுங் குமாரனைத் தோன்றினானென்பதுபற்றி மன்மதன் திருமாலின் மகனாதலால் 'பறவையின் பாகன் மதனன்' எனப்பட்டது. (தொக்கிநின்ற ஆறும் வேற்றுமை யுருபின்பொருள்—பித்ருபுத்ரபாவரூப ஸம்பந்தமாம்.) உலகத்துப் பொருள்களெல்லாவற்றையும் எம்பெருமானோடு ஒருவகையான ஸம்பந்தமுடையன வென்றல்லது சொல்லவறியாத அன்பு மிகுதியால், வேட்கைவிளைத்து வருத்துபவனை மன்மதனையும் அவனது ஸம்பந்தந்தோன்றக் கூறுகிறபடி. மன்மதனுக்குச் சேனையெனப்படுகிற மாதர்களுள் சிறந்தவளான இவள் அவனது சேனைத்தலைவியாய் ஆங்காங்குச்சென்று மரணபரியந்தமான காமவேதனையை உயிர்களுக்கு உண்டாக்கி இங்ஙனம் மன்மதனாணையைச் செலுத்துபவளென்பது தோன்ற '**மதன செங்கோல் நடாவிய கூற்றம்**' என்றது. "மீன்சேர் குழாமனைய மேகலையும் வெம்முலையும் கூற்றங் கூற்றம், ஊன்சேருயிருய்யக் கொண்டோடிப் போமின்களுரைத்தேம்" என்றும், "இக்கொடியையீன்றாள் போலும், கொள்வானுலகுக்கோர் கூற்றீன்றாளம்மவோ கொடியவாறே" என்றுமுள்ள சீவகசிந்தாமணிச் செய்யுள்கள் இங்கு நினைவுக்கு வரும்.

'கடாவின' என்பது 'கடாயின' என்று விகாரப்பட்டது: இது பெயரெச்சமன்று, பெயர். மதனன் + செங்கோல், மதன செங்கோல். **நடாவிய**='நடவிய' என்பதன் விகாரம்; **வு**—பிறவினை விகுதி.

இப்பாட்டால்—ஆழ்வார், நான் ஸம்ஸாரிகளை வாரிப் பிடியாகப் பிடித்துக் கொண்டுபோக வந்திருக்கிறேன்; இக்காரியத்திற்காக எம்பெருமானும் சில அவதாரங்கள் செய்தானெனினும் அவனுடைய ஸாதனங்கள் தவறிப்போயின; என்னுடைய ஸாதனங்கள் அங்ஙனம் தவறிப்போகமாட்டா; எனது நோக்குக்குத் தப்பிப் பிழைக்க விருப்பமுடையீர்! தப்புங்கள்; மற்றையோரைத் தவறாது திருத்திப்பணிகொள்வேன்—என்றாராயிற்று. .... .... (கூ)

ஞாலம் பனிப்பச் செறித்து * நன்னீரிட்டுக் கால்சிதைந்து
நீலவல்லேறு போராநின்ற வானமிது * திருமால்
கோலஞ்சுமந்து பிரிந்தார்கொடுமை குழறுதண்பூங்
காலங்கொலோ வறியேன் *வினையாட்டியேன் காண்கின்றவே.

| | |
|---|---|
| ஞாலம் பனிப்ப | உலகம் நடுங்கும்படி |
| செறித்து | தம்மில்தாம்நெருங்கி |
| நல் நீர் இட்டு | (தம் உடம்பின்) நீரை நன்றாக வெளிச்சிந்தி |
| கால் சிதைந்து | கால்களால் தரையைக் கீறிக்கொண்டு |
| நீலம் வல் ஏறு | கரியவலியஎருதுகள் |
| பொராநின்ற | போர் செய்யப் பெற்ற |
| வானம் இது | ஆகாசமாகும் இது ; |
| திரு மால் | எம்பெருமானுடைய |
| கோலம் சுமந்து | வடிவத்தை யுடையதாய் |
| பிரிந்தார் கொடுமை குழறு | பிரிந்துபோன நாயகனது கொடுந்தன்மையைக் கூறுகிற |
| தண் பூ காலம் கொல் ஓ | குளிர்ந்த அழகிய கார்காலந்தானோ ? |
| வினையாட்டியேன் | தீவினையுடைய நான் |
| காண்கின்ற | காண்கின்றவற்றை |
| அறியேன் | இன்னதென்று அறிகிறேனில்லை. |

* * *—"காலமயக்கு" என்னுந்துறையில் அமைந்ததாம் இப்பாசுரம். இத்துறைதானே திருக்கோவையாரில் 'காலமறைத்துரைத்தல்' என வழங்கப் பெற்றுள்ளது. நாயகியோடு கூடியிருந்த நாயகன் ஒரு காரியப்பாடாகத் தேசாந்தரஞ்செல்லவேண்டி 'மாதே! நான் இப்போது புறப்பட்டுப்போய்க் கார்காலத்திலே திரும்பிவருகின்றேன்' என்று சொல்லிக் காலங்குறித்துப் பிரிந்து சென்று அக்கார்காலம் வந்தவளவிலும் தான் வாராதிருக்க, 'அந்தோ! நாயகன் குறிப்பிட்ட காலம் வந்துவிட்டதே!, இவ்வளவிலும் அவன் வந்திலனே!' என்று கார்காலவரவையும் காதலன் வாராமையையும் நோக்கி வருந்துகின்ற தலைவியைத் தோழியானவள் 'நங்காய்! நீ ஏன் வீணே வருந்துகின்றாய்? மெய்யே கார்காலம் வந்தாலன்றோ காதலன் வந்திடுவான்; அவன் சொல்லிப் போன கார்காலம் வரவில்லை; கார்காலமன்றாகில் இதோ மழைபெய்கின்றதே; இஃது என்? என்று கேட்பாய்; வானத்தில் நெருங்கி நீர் சொரிபவை மேகங்களல்ல; ஒன்றோடொன்று போர்செய்கிற

கறுத்த எருதுகளைக்கண்டு மேகமாக மயங்குகின்றாயத்தனை; அவை கரிய காளைகளேயன்றி மேகங்களல்ல; பெய்கின்றது மழைநீரன்று; அக்காளைகளின் வியர்வை நீரும் சிறுநீரும் பெருகுவதைக் கண்டு மழைநீராக மயங்குகின்றாயத்தனை;' என்று தலைவியை ஒருவாறு ஆற்றவேண்டிக் காலத்தை மயக்கிக் கூறுகின்றாள் தோழி.

இப்படி பொய்யுரை கூறுவது பாவமாகாதோ வெனில்; ஆகாது; "பொய்ம்மையும் வாய்மையிடத்த, புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்பது திருக்குறள்; பெருந்தீங்கையாயினும் மரணத்தையாயினும் அடைய நின்றதோர் உயிர் ஒருபொய்யுரையால் அத்துன்பத்தினின்று நீங்கி இன்பமடைவதாயிருந்தால் அது பொய்ம்மைக்குற்றத்தின்பாற் படாதென்க. இங்குப் பிரிவாற்றாமையால் தலைமகளுக்கு உண்டாகும் அபாயத்தைப் புனைந்துரையால் ஒழித்தவாறுகாண்க. இங்ஙனம் தோழி பொய் சொல்லிவிட்டாலும் தலைமகளுக்கு உண்மைதெரியாதோ? 'எப்படியாவது நம்மை ஆற்றுதற்காகக் கற்பனைவகையால் முழுப்பொய் கூறுகின்றாள்' என்று நினைத்துக்கொள்ள மாட்டாளோ? என்னில்; அவ்விதமாக அவள் நினைத்துக் கொள்ளாமைக்காகவே, உடனே '**தண்பூங்காலங் கோலோவறியேன்**' [மெய்யே இது கார்காலந்தானோ என்னவோ அறியேன்] என்று தானும் ஐயப்படுவதாகச் சொல்லி முடிக்கிறாள்.

'இது கார்காலமன்று' என்று நிஸ்ஸந்தேஹமாகச் சொன்னால் தானே தலைவிக்கு ஆறுதல் உண்டாகும்; முதலில் காலத்தை மயக்கிச் சொல்லி, உடனே 'அக் கார்காலந்தானோ இது!' என்றும் சொல்லிவைத்தால் தலைவிக்கு வருத்தமேயன்றோ மிகும்; ஆறுதல் உண்டாகாதேயெனின்; 'நமது தோழி இரண்டுவகையாகவுஞ் சொல்லுகிறாள்; அவள் பொய்சொல்லுகிறவளாகில் 'இது கார் காலமன்று' என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிடலாம்; அப்படி சொல்லாமல் ஸந்தேஹமாகச் சொல்லியிருப்பதால் அவளும் நிச்சயிக்கமுடியாதபடி யிருக்கிறதுபோலும்; இதை நாமே ஆராய்ந்து பார்த்து நிச்சயிப்போம்' என்று தலைவி நினைத்து 'இது நீலவல்லேறு பொராநின்ற வானமா? தண்பூங்காலமா?' என்று ஆராயத் தொடங்குவள்; இந்த ஆராய்ச்சியில் சிறிது பொழுது ஆறியிருந்திடுவள், என்பது தோழியின் கருத்தாகலாம்.

திருமால்கோலஞ்சுமந்திருப்பதும் பிரிந்தார்கொடுமையைக் குழறுவதுமாகிய தண்பூங்காலங்கொலோ! அறியேன் என்கிறாள். கார்காலத்து மேகமானது—விளங்குகின்ற மின்னலாலும் கறுத்த நிறத்தாலும் திருமகளை மார்பிற்கொண்ட கரிய திருநிறமுடைய ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் போலுதலால் '**திருமால் கோலஞ்சுமந்து**' எனப்பட்டது. மேகம் கர்ஜிப்பதானது—பிரிந்துபோய் இக்காலத்திலும் வாராத தலைவருடைய கொடுமையை ஞாபகமூட்டி வருத்துதலால் '**பிரிந்தார் கொடுமைகுழறு**' எனப்பட்டது. 'இம்மாரிகாலத்திலும் வந்து அணையாதே தனிக்கிடை கிடக்கின்ற தலைவர் மிக்க கொடியவர்!' என்று கோஷம்போடுவதுபோலிருக்கின்றதாம் மேகம் முழங்குவது. தலைவருடைய கொடுமையாவது—சொன்னபடிவாராத குற்றம். '**தண் பூங்காலம்**' என்று அடைமொழிகள் கொடுத்துக் கூறினது 'அக்காலம் கலவிக்கு உரியது' என்பதைக் காட்டவாம். 'தண்பூங்காலமன்று' என்னமல் 'தண்பூங்காலங் **கோலோ!**' என்றது—'தலைவர் இருக்குமூரிலும் இக்கார்காலமேயாகுமாதலால் உன்னைப்போலே அவரும் பிரிவில் ஆறியிருக்கமாட்டாதவராய் விரைந்து வந்திடுவர், வருந்தாதே' என்று ஆற்றுகிறபடியுமாம்.

தோழியானவள் தன்னை '**வினையாட்டியேன்**' என்று சொல்லிக்கொள்ளுகிறாள்; நீ இப்படி வருத்தப்படாநிற்க உன்னைக் கண்டுகொண்டிருக்கும்படியான பாவத்தைப் பண்ணினேனே நான்! என்று தன்னை நிந்தித்துக் கொள்ளுகிறாள். 'அவன் வாராமல் நீ வருந்துதற்குக் காரணம் அவனுடைய கொடுமையுமன்று, உனது ஆற்றாமையுமன்று, காலமுமன்று, காண்கிற என்னுடைய பாவமே காண்' என்கிறாள்போலும். ["ஜதாவஜெவாகூ நிதிதூரீவஸீஜ—மத்பாப மேவாத்ர நிமித்தமாஸீத்."] 'இராமபிரான் காட்டுக்கெழுந்தருளினதற்குக் காரணம் மந்தரையின் சூழ்ச்சியுமன்று, கைகேயியின் சூழ்வினையுமன்று, தசரதசக்ரவர்த்தியின் அநுமதியுமன்று, அப்பிரானது பணிவுமன்று, கைகேயின் வயிற்றில் நான் ஒரு பிள்ளையாகப் பிறந்த எனது பாவமே காரணம்' என்று பரதாழ்வான் கூறினதுபோல. **வினையாட்டியேன்**=வினையையாள்பவள்; வினையையுடையவளென்றபடி. வினையென்பது நல்வினை தீவினைகட்குப் பொதுவான சொல்லாயினும் ஸந்தர்ப்பத்தால் தீவினையைக் குறிக்கும்.

'ஞாலம் பனிப்ப' என்பதை 'செறித்து' என்பதோடு அந்வயித்தால், 'உலகத்தவர்கண்டு நடுக்கமடையும்படி பரஸ்பரம் நெருங்கி' என்று பொருளாம்; 'நன்னீரிட்டு' என்பதோடு அந்வயித்தால், ஞாலம்—பூமிமுழுவதும், பனிப்ப—நனையும்படியாக, நன்றாக நீரைச்சொரிந்து என்று பொருளாம். நீர்—வியர்வைநீரும் மூத்திரநீரும். எருதுகள் கோபத்தோடு போர்செய்யும்போது கால் சிதைத்தல் இயல்பு. பொராநின்ற வானமிது=பூமியில் இடம் போதாமல் ஆகாயத்திலே பிணங்குகின்றன காண் என்கிறாள். 'இப்படியும் ஸம்பவிக்குமோ!' என்று சிறிது ஆலோசிக்கட்டும்; அதில் சிறிதுபோது ஆறுதலாக இருக்கட்டும் என்று கருத்துப் போலும்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப்பொருள் பலவகையாகக் கூறுவர்கள். ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் "அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி। பகவந் பவதுர்த்திநே=அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்ததது:க்க வர்ஷிணி—பகவந் பவதுர்த்திநே" என்றருளிச் செய்கிறார். ஸம்ஸாரத்தைக் கார்காலத்து நாளாக நிரூபிக்கிறார். அது எப்படியிருக்குமென்றால், மேகங்களால் மூடப்பட்டு இருள்நிறைந்து திசைகள் தோன்றப் பெறாமலிருக்கும்; ஸம்ஸாரமும் அஜ்ஞாநமாகிற மேகத்திரளாலே இருள்மூடி நல்வழி தீவழி தெரியப்பெறாம லிருக்கும். இன்னமும் இடைவிடாது நீர்ப்பெருக்கையுடையதா யிருக்கும் மழைநாள்; ஸம்ஸாரமும் 1. "நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க, எண்ணாராத் துயர்விளைக்கு மிவையென்ன வுலகியற்கை" என்றபடி பலவகைப்பட்ட துக்கங்களாகிற நீர்த்தாரைகளை வர்ஷியாநிற்கும். ஆக இவ்வகைகளாலே மழைநாளென்று சொல்லத்தக்க ஸம்ஸாரத்தைக் கண்டு ஆழ்வார் வருந்தினர்; துன்பம் அதிகப்பட்டவுடனே இன்பம் உண்டாகுமென்று சாஸ்திரமுள்ளதனாலும், 'ஸம்ஸாரம் மேலிட்டு நலியுமளவில் நான் அவசியம் வந்து முகங்காட்டுவேன்' என்று எம்பெருமான்றானும் வாயோலை செய்துகொடுத்திருப்பதனாலும் இப்படிப்பட்ட நிலைமையிலும் எம்

1. திருவாய்மொழி 4—9—1.

பெருமான் வந்து உதவியருளவில்லையே!' என்று வருந்தினர் ஆழ்வார். அவ்வருத்தத்தை ஏதோ சில வியாஜோக்திகளினால் அன்பர் அகற்ற நினைக்கின்றனர் என்பதை வெளியிடுவதாம் இப்பாசுரம். இனி இக்கருத்துக்கிணங்க, ப்ரத்யேகம் பதப்பொருள்களை ஊகித்துக் கொள்க.

முதலடியில் 'செறுக்கு' என்றும் பாடமுண்டு. பொராநின்ற வானம்=பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது. போர் செய்வதற்கிடமான வானமென்கை. குழறுதல்—அவ்யக்தமாகக் கூறுதல். (எ)

**காண்கின்றனகளுங் கேட்கின்றனகளுங் காணில் * இந்நாள்**
**பாண்குன்றநாடர் பயில்கின்றன * இதெல்லாமறிந்தோம்**
**மாண்குன்றமேந்தி தண்மாமலை வேங்கடத் தும்பர்நம்பும்**
**சேண்குன்றஞ்சென்று * பொருள்படைப்பான்கற்ற திண்ணனவே.**

| | |
|---|---|
| குன்றம் நாடர் | மலைகளை யுடைத்தான நாட்டுக்குத் தலைவரான நாயகர் |
| இ நாள் | இன்றையதினத்தில் |
| பயில்கின்றன | பலவாறாக நடத்துகின்றவையான |
| காண்கின்றனகளும் | காணப்படுகிற செய்கைகளும் |
| கேட்கின்றனகளும் | கேட்கப்படுகிற சொற்களும் |
| காணில் | ஆராய்ந்து பார்க்குமிடத்து |
| பாண் | வெளியுபசார மாத்திரமாம்; |
| இது எல்லாம் | இந்த மிக்க உபசாரமெல்லாம்,— |
| மாண் குன்றம் ஏந்தி | மாட்சிமை தங்கிய கோவர்த்தன கிரியை இளைப்பின்றி யெடுத்த கண்ணபிரானது |
| தண் மா மலை வேங்கடத்து | குளிர்ந்த சிறந்த திருவேங்கட மலையின் |
| உம்பர் நம்பும் சேண் குன்றம் | மேலுலகத்தாரால் விரும்பப்படுகிற உயர்ந்த சிகரத்தை |
| சென்று | போய் அடைந்து |
| பொருள் படைப்பான் | (அங்குப்) பொருளீட்டும்பொருட்டு |
| கற்ற | (புதிதாக) அப்யஸித்த |
| திண்ணனவு | வலிமையின் செயல் (என்று) |
| அறிந்தோம் | தெரிந்து கொண்டோம். |

* * *—தலைவன் பொருள்வயிற் பிரிதலைக் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்குக் கூறல் இது. தேசாந்தரஞ் சென்று பொருள் சம்பாதிப்பதற்காக நாயகியைப் பிரிந்து செல்லுதல் பொருள்வயிற் பிரிவாம். (பொருள்வயின்—பொருள் நிமித்தமான என்றபடி.)

இங்கே ஒரு சங்கை பிறப்பதுண்டு;—எல்லாவற்றாலும் பரிபூரணனை ஒரு உத்தமபுருஷனையே தலைவனாக நாட்டி நூலுரைப்பர் கவிகள்; அத்தலைவன் பொருள்சம்பாதிக்கும் பொருட்டு நாயகியைப் பிரிந்து தேசாந்தரம் செல்லப்பார்க்கிறானெனில், அவன் ஏழை என்று ஏற்படுமே; அன்னவன் தலைவனாயிருக்கத்தகாதே என்று சங்கிக்க இடமுண்டு. இதற்குக் கேண்மின்: பொருளில்லாதவனாய்ப் பொருளீட்டுதற்காகப் பிரிகிறானென்பதில்லை; தனது முதுகுரவரால் படைக்கப்பட்ட பலவகைப்பொருள்கள் நிரம்பப் பெற்றுள்ளவனே; அப்பொருள்கொண்டு துய்ப்பது ஆண்மைத் தன்மையன்று என்றுகருதித் தனது ஸ்வயார்ஜிதமாய்ப் படைத்தபொருள் கொண்டு வழங்கி வாழ்வதற்குப் பிரியும்பிரிவு இது—என்றுணர்க. தேவகாரியமும் பித்ருகாரியமும் ஸ்வயார்ஜிதமான பொருள்கொண்டு செய்தாலன்றிப் பயன்படா; தாயப் பொருளாற் செய்யுமது தேவர்களையும் பித்ருக்களையும் இன்புறுத்தாதாம். ஆதலால் அவர்களையும் இன்புறுத்தவேண்டிப் பிரிவது ஏழைமையைக் காட்டாதென்க.

செல்வம்நிறைந்த தலைமகன் பொருள்வயிற்பிரிதற்குக் காரணங் கூறுகின்ற திருக்கோவையாருரைகாரர்—'பொருள் வயிற்பிரிதலென்பது—குரவர்களால் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ் செய்தால் அதனால் வரும்பயன் அவர்க்கு ஆம் அத்துணையல்லது தமக்கு ஆகாமையால் தமது பொருள்கொண்டு இல்லறஞ் செய்தற்குப் பொருள்தேடப் பிரியாநிற்றல்' என்றதுங்காண்க.

நாயகன் நாயகியைப்பிரிந்து செல்ல நினைக்கும்போது அந்த நினைவை வாய்விட்டுச் சொல்லாமல் மறுபடியும் தான் திரும்பி வருமளவும் அவள் நினைத்து ஆறியிருக்கும் பொருட்டு அவளிடத்தில் சில பணிவான செய்கைகளைச்செய்வதும் சில பணிவான சொற்களைச் சொல்லுவதும் வழக்கம். அதாவது—அடுத்தடுத்து அணைத்துக்கொள்ளுதல், ஓயாது முத்தமிடுதல், காலைப்பிடித்தல், கையைப்பிடித்தல், கும்பிடுதல், அஞ்ஜலிசெய்தல், 'உன்னைவிட்டு

ஒரு நொடிப்பொழுதும் பிரியேன், பிரிந்தாலும் தரிக்கமாட்டேன்' என்று சொல்லுதல் முதலியனவாம். இவ்விதமாகவே, பொரு ளீட்டுதற்பொருட்டுத் தலைமகளைப் பிரியக்கருதிய தலைமகன் தலை மகளிடத்திலே விலக்ஷணமான சில, செய்கைகளைச்செய்தலும் சில வார்த்தைகளைச் சொல்லுதலும் செய்ய, அது நோக்கித் தலைமகள் 'இதற்கு முன்பு இவர் இப்படிப்பட்ட செய்கைகள் செய்ததில்லை, இப்படிப்பட்ட வார்த்தைகளும் சொன்னதில்லை; இப்பொழுது புதிதாகவே இவை நேர்கின்றன: இவற்றை ஆராய்ந்து பார்க்கில் இவை புறப்பூச்சாகத் தோன்றுகின்றன. இங்ஙனம் வரம்புகடந்த விதமாக இவர் செய்வதற்கும் சொல்வதற்கும் ஒரு கருத்து இருக்க வேண்டும்; அது எதுவாக இருக்கக்கூடுமென்றால், பொருள் சம்பா திக்கும்பொருட்டு நம்மைப் பிரிந்துபோக நினைத்ததாயிருக்கவேண் டும்; பிரிந்துபோக நினைத்திலராகில் இப்படிப்பட்ட புதிய செய்கை களைச்செய்யவும் புதியவார்த்தைகளைச்சொல்லவும் நேரமாட்டாது' என்று நிச்சயித்து அந்த நிச்சயத்தை நாயகி வாய்விட்டுச்சொல்லும் பாசுரமாமிது.

இப்படிப்பட்ட வெறும் உபசாரச்செயல்களை இன்று செய்யக் காண்கையாலே இவர் அரியபெரிய ஒரு மலைக்குச்சென்று பொருள் தேடலுற்ற ஊக்கத்தைக் காட்டினவராயினர்; பிரிவுக்கு அறிகுறி யாகவே இவை செய்கின்றனர் என்றாளாயிற்று. பொருளின் பொருட்டுப் பிரியக்கருதிய இம்மனக்கொடுமை இவர்க்கு இயற்கைக் குணமன்று, எவ்விடத்தோ புதிதாகக்கற்றுவந்த செயற்கைக்குண மென்பதைக்காட்ட '**கற்ற திண்ணனவு**' என்றது. முன்பெல்லாம் நாயகன் தன்னை நோக்கி 'என் செல்வச்சிறுமியே! எனக்கு நீயே பொருள், உன்னை விட்டுப்பெறவேண்டும் பேறு எனக்கு வேறுண் டோ?' என்று உபசாரமாகக் கூறினவை இப்பொழுது பொருள் சம்பாதிக்கச்செல்ல நினைத்ததனால் பொய்யாகிற தன்மையை '**பொருள்படைப்பான் கற்றதிண்ணனவே**' என்றதனால் கூறிப் பரிஹஸித்தபடி.

'**இந்நாள்**' என்றதனால்—முன்பு இப்படி வரம்புகடந்த செயல்க ளில்லாமை விளங்கும். '**பயில்கின்றன**' என்றதனால்—ஒருகால் செய்ததையே மீண்டும் பலகால் செய்வதும், ஒருகால் சொன்

னதையே மீண்டும் பலகால் சொல்லுவதும் தோன்றும். **'பாண் குன்ற நாடர்'** என்ற விடத்து, 'பாண்' என்பதைத் தனிமுற்றாக நிறுத்தியுரைப்பதும் குன்றத்திற்கு அடைமொழியாக்கியுரைப்பதும் உண்டு; முதற்பக்ஷத்தில், **பாண்**—பாணருடைய தொழில் என்றபடி. சங்கீதம்பாடிப் புகழ்வோர்க்குப் பாணரென்று பெயர்; 'குடுகுடுபாண்டிகள்' என்று வருகிற பாட்டுக்காரரைக் கொள்ளலாம். அவர்கள் உடுக்கையைக் குலுக்கிக்கொண்டு 'தொப்பை தள்ளுது தொப்பை தள்ளுது' என்றிவை முதலாக மனப்பூர்வமாகவன்றி வெளிக்குச்சொல்லும் புகழுரைபோல, இங்கு, பொய்யாகச் செய்யும் உபசாரத்தைக் குறித்ததாம். இப்போது தலைவர் செய்யும் செய்கைகளும் சொல்லும் வார்த்தைகளும் வேஷங்கட்டியாடுகிறாப் போலுள்ளனவேயன்றி உண்மையான அன்பு தூண்டச் செய்பவையல்ல என்றவாறு. இனி, இரண்டாம் பக்ஷத்தில், **'பாண்குன்றம்'**—(வண்டுகளின்) இசைப்பாட்டையுடைய மலை என்றாம். மலைகள் நிரம்பிய நாட்டுக்குத் தலைவனாயிருப்பது நாயகனுக்குச் சிறப்பாதலால் **'குன்றநாடர்'** எனப்பட்டது. ஸ்வாபதேசத்தில் தலைமகனை எம்பெருமானும் திருவத்திமாமலை திருவேங்கடமலை திருமாலிருஞ்சோலைமலை திருமெய்யமலை முதலிய திருமலைகள் விளங்கப்பெற்ற நாட்டுக்குத் தலைவனென்பது உணரத்தக்கது. கல்நெஞ்சர் என்ன வேண்டிக் குன்றநாடரென்றாள்போலும்.

**'மாண்குன்றமேந்தி தண்மாமலை வேங்கடத்து'** என்றதனால்—ஒருமலையை மேலெடுத்தும் ஒரு மலையின்மேல் நின்றும் ஸமயோசிதமாக உயிர்களைக் காத்தருள்வன் எம்பெருமான் என்றதாம். திருவாய்ப்பாடியில் இடையர்களெல்லாருங்கூடி மழையின்பொருட்டாக இந்திரனை ஆராதிப்பதற்கென்று சமைத்தசோற்றைக் கண்ணபிரான் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றையெல்லாம் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் பசிக்கோபத்தாலே பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையையெடுத்துக்

குடையாகப்பிடித்து மழையைத்தடுத்து எல்லாவுயிர்களேயும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளினனென்பது பற்றிக் **குன்றமேந்தி** யென்று எம்பெருமானுக்குத் திருநாமமாயிற்று. எண்ணிறந்த பசுக்களும் கன்றுகளும் ஆயர்களும் எத்தனைநாள் வேண்டுமென்ருலும் இனிது தங்குதற்கிடமான மலேயென்பது தோன்ற **மாண் குன்ற** மென்றது. இனி, **மாண்** என்று வாமநனுக்கும் பெயராதலால், 'வாமநாவதாரம் செய்தவனும் குன்றமேந்தினவனுமான எம்பெருமானுடைய' என்றும் பொருள்கொள்ளலாம். ஆழ்வார்கள் வாமநாவதாரத்தையும் க்ருஷ்ணுவதாரத்தையும் சேர்த்து அநுபவிக்கிற, அநுபவமும் ஒன்றுண்டிறே. திருவாய்மொழியில் வேறோர் அவதார சரித்திரம் ஊடுகலசாமல் க்ருஷ்ணுவதார சரித்திரங்களேயே பேசி யநுபவிக்கப்பிறந்த 'குரவையாய்ச்சியரோடு கோத்ததும்' (6—4.) என்னுந் திருப்பதிகத்தில் ஆரும்பாட்டில் 'அகல்கொள் வையமளந்த மாயனென்னப்பன்றன் மாயங்களே, பகலிராப்பாரவப்பெற்றேன்' என்று வாமநாவதார சரித்திரத்தை விடாது கூட்டிக்கொண்டு அநுபவித்தமை உணர்க.

'குன்றமேந்தி' என்பதில் '**ஏந்தி**' என்றது வினேயெச்சமன்று; '**இ**' என்னும் கருத்தாப்பொருள் விகுதிபெற்ற பெயர்ச்சொல்; ஆனதுபற்றியே 'ஏந்தித்தண்' என இரட்டிக்கவில்லே. உயர்திணைப் பெயரின்முன் வலி இயல்பு.

**உம்பர்நம்பும் வேங்கடத்துச் சேண்குன்றம்**=எல்லாவுலகங்களுக்கும் மேற்பட்டதான பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளும் விரும்பி விரைந்து வந்து தொழுவதற்கு ஸமீபமாம்படி உயர்ந்ததும் சிறந்ததுமாயுள்ள திருமலேச்சிகரம் என்றபடி. பரமபதத்தில் தாங்கள் அநுபவிக்கிற பரத்வகுணத்திற்காட்டிலும் திருமலேயில் எம்பெருமான் அநுபவிப்பிக்கிற ஸௌலப்ய ஸௌசீல்யகுணம் சிறந்ததென்று அங்குள்ளார் இவ்விடத்தை விரும்புவரென்க. ("**நம்பும்** மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம்.) 'மலேயேறி எளிபிடிக்கவேண்டி என்னேப் பிரிந்துபோகக் கருதுகின்றீரோ?' என்ற பரிஹாஸமும் இதில் தொனிக்கும். இப்பாசுரம் தோழியை நோக்கிக் கூறியதாகவுமாம், தலேவனேநோக்கியே

முன்னிலைப்படர்க்கையாகக் கூறியதாகவுமாம்; தலைமகன் பொருள் வயிற்பிரிவறிந்த தோழி தலைவனை நோக்கிக் கூறியதாகவுமாம்.

ஆழ்வார் எம்பெருமானுடைய பிரிவை ஆற்றாது வருந்தியிருந்த நிலையிலே தம்மை ஆற்றுவித்த அன்புடைய பாகவதர்கள் பின்பு பரம்பொருளைத்தேடிப் பெறும்பொருட்டுத் திவ்யதேச யாத்ரையில் அபேக்ஷையுடையராய்த் திருவேங்கடத்துக்குச் செல்லத்தொடங்கியதை அறிந்த ஆழ்வார் அவர்களின் பிரிவை ஆற்றாமையால் அருளிச்செய்த வார்த்தை இது என்னலாம் ஸ்வாபதேசத்தில். ஆழ்வாரைப் பிரிந்து போகலுற்ற பாகவதர் இவரநுமதி பெற்று விடைகொள்ளவேண்டி இவர்பக்கலிலே பலவாறு பணிந்து வணக்கத்தோடு சில வார்த்தை விண்ணப்பஞ்செய்ய, 'இது இவர்கள் பிரிவுக்கு அடியாம்' என்று அறிந்து, பொறுத்தருளாமல் 'இவர்கள் பணிவுகளெல்லாம் பாணர்செயல்போல வெளிக்காட்டாகவுள்ளன; இதன் அபிப்ராயம் அறிந்தோம்' என்பது முன்னடிகளில் உறையும். இப்பாகவதர் 1. "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" என்கிறபடியே திருமலையை இடமாகக்கொண்டு வாழ நினைத்தவர்களாதலால் இவர்களைக் குன்றநாடரென்கிறது. * குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன் சென்றுசேர் திருவேங்கடமாமலையிலே நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் உயர்ந்த சிகரத்தைச் சென்று சேர்ந்து அங்கு வைத்தமாநிதியாம் மதுசூதனனைப் பெறுதற்குத் துணிந்ததுணிவே இது என்பன பின்னடிகள்.

பாகவதரோடு கூடியிருக்கும் இருப்பொழிய வேறு எம்பெருமானுகந்தருளின திவ்யதேசத்துக்குப் போகநினைப்பதும் தவறு என்று பாகவத ஸஹவாஸத்தின் சிறப்பு இப்பாட்டால் வெளியிடப்பட்டதென்றறிக. .... .... .... (அ)

திண்பூஞ் சுடர்நுதி நேமியஞ்செல்வர் * விண்ணுடனைய
வண்பூ மணிவல்லி யாரேபிரிபவர்தாம் * இவையோ
கண்பூங் கமலங் கருஞ்சுடராடி வெண்முத்தரும்பி
வண்பூங்குவளை * மடமான் விழிக்கின்ற மாயிதழே. (கூ)

---

1. நாச்சியார் திருமொழி. 8—9.

திண் — வலிய
பூ — அழகிய
சுடர் — ஒளியுள்ள
நுதி — கூர்மையை யுடைத்தான
நேமி — திருவாழியை யுடைய
அம் செல்வர் — அழகிய எல்லா ஐசுவரியங்களையு முடைய எம்பெருமானது
விண் நாடு அனைய — பரமபதத்தை யொத்த
வண் மணி பூ வல்லி — அழகிய சிறந்த பூங்கொடி போன்றவளை
யாரோ பிரிபவர் தாம் — எவர்தாம் பிரிய வல்லவர்?

[எவரும் பிரிய வல்லரல்லர்;]

(ஏனெனில்;)

இவையோ கண் — இவளது கண்கள் கண்களாக மாத்திரமிருக் கின்றனவோ?
பூ கமலம் — தாமரை மலர்களாய்
வண் பூ குவளை — அழகிய செங்கழுநீர் மலர்களுமாய்
மா இதழ் — பெரிய இதழ்களை யுடையவையாய்
கரு சுடர் ஆடி — கரிய (அஞ்சனத் தின்) ஒளியை அணிந்து
வெண் முத்து அரும்பி — (நம்மைப் பிரிதலாற் றாமையாலுண் டான கண்ணீரா கிற) வெளுத்த முத்துக்கள் தோன்றப்பெற்று
மட மான் விழிக்கின்ற — மடப்பத்தை யுடைய மான் போல நோக்கு கின்றன.

* * *—நாயகன் நாயகியை விட்டுப் பிரியவொண்ணாமையைக் கூறும் பாசுரம் இது. கீழ்ப்பாட்டிற் சொன்னபடி, நாயகன் பிரியப் போகிறானென்பதைக் குறிப்பாலறிந்த நாயகி கூடியிருக்குமந் நிலைமையிலும் இனி நேரும் பிரிவை நோக்கி ஆற்றமாட்டாமல், பிரிந்த பின்பு உண்டாகவேண்டிய வருத்தத்தை அப்போதே அடைந்திட, அவ்வெழிலையும் வேறுபாட்டையுங்கண்டு பிரியமாட்டாத நாயகனுடைய உட்கோளான வார்த்தையென்க.

கையுந் திருவாழியுஞ்சேர்ந்த சேர்த்தியாலுண்டாகும் அழகை யுடைய எம்பெருமானுடைய பரமபதம்போலச் சேர்ந்தவர்மீள வொண்ணாதபடி எல்லையிலாத ஆனந்தத்தைத் தரவல்லவளாய்க் கொடிபோன்ற இந்த நாயகியை யார்தாம் பிரிந்துபோகக்கூடும்; மனிதர்க்கு உரிய விவேகமுடையார் பிரியமாட்டார். ஏனென்னில்; இவளுடைய கண்ணழகைக் கண்டால் இதைவிட்டுப் பிரிந்துபோக

யார்க்கேனும் மனம்வருமோ? இவனது கண்கள் மற்றையோருடைய கண்கள்போல ஸாமாந்யமாக இருக்கின்றனவோ? செவ்வரி சிதறு தலில் செந்தாமரைப் பூவையொத்தும், கடைச்சிவப்பில் செங்கழு நீர்மலரையொத்தும், (அல்லது, கருநிறத்தில் கருநெய்தல் மலரை யொத்தும்) நான் பிரிந்துபோக முடியாதபடி அழகியதாக நோக்கி என்னைக் கவருந்தன்மையில் மடமான் விழியையொத்தும் மேல் இமை கீழ்இமைகளில் பெரிய இதழ்களை யொத்தும் விளங்குகின்ற கண்கள் எனது பிரிவை நினைத்தமாத்திரத்திலும் முத்தரும்பினாற் போலே கண்ணீர் பெருகப் பெறுகின்றனவே!; இப்படிப்பட்ட நிலைமையை இடைவிடாது கண்டுகொண்டிருப்பதேயன்றோ கண் படைத்ததற்குப் பலன்; அப்பலனைப் பெறாது பிரிந்துபோக அறி வுடையார் நினைப்பரோ? என்றதாயிற்று.

திருவாழியாழ்வான் ஆயுதகோடியில் அந்வயித்துப் பகைவர்க் குக் கொடுமைபுரிதல் பற்றித் '**திண்**' என்னும் அடைமொழியும், ஆபரணகோடியில் அந்வயித்து அன்பர்க்கு இன்பம்விளைத்தல்பற்றி 'பூ' என்னும் அடைமொழியும் அவனுக்கு இடப்பட்டன. '**வண் பூமணிவல்லி**' என்கிறது ஆழ்வார் தம்மை. ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில்—"வித்யை தாயாகப் பெற்று" இத்யாதி சூர்ணிகையில் "மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று" என்றருளிச் செய்தது காண்க.

'**மாயிதழே**' என்று சிறந்த அதரத்தின் தன்மையை வியந்த தாகவும் உரைக்கலாம். அன்றி, 'சிறந்த அதரத்தையுடையாய்!' என விளியாகக்கொண்டு முரைக்கலாம். அப்போது, **வல்லி** என்றது முன்னிலைப் படர்க்கையாம்.

கீழ்ப்பாட்டில் பிரியநினைத்த பாகவதர்களை நீங்கமாட்டாமல் வருந்திய ஆழ்வாரது தன்மையையும் ஞானமிகுதியையுங்கண்டு பிரிய மாட்டாமல் அப்பாகவதர் கூறும் வார்த்தை இதற்கு ஸ்வாப தேசார்த்தமாகும். ஆழியஞ்செல்வனை எம்பெருமானுடைய பரம பதம்போல அந்தமில் பேரின்பம் தருகின்றவராய், "கோல்தேடி யோடுங் கொழுந்ததேபோன்றதே மால்தேடியோடும் மனம்" என் கிறபடியே ஒரு கொள்கொம்பையே அவாவிநிற்குங் கொடிபோலப் பாரதந்திரியமே வடிவாயிருப்பவரான இவ்வாழ்வாரை ஞானிகள்

விட்டுப் பிரியநினைப்பார்களோ? என்கிறது முன்னடிகளால். [இவையோ கண்?] இவருடைய ஞானம் மற்ற உலகத்தாருடைய ஞானம்போல்வதோ? அன்று; இது பரமவிலக்ஷணம்.

[பூங்கமலங் கருஞ்சுடராடி.] இவருடைய ஞானம் செந்தாமரை நிறத்தவளான பெரியபிராட்டியையும் அஞ்சனவண்ணனான எம்பெருமானையும் லக்ஷியமாகக் கொண்டு தந்மயமாயுள்ளது என்கை. [வெண்முத்தரும்பி.] இவருடைய ஞானம் சுத்தஸத்வகுணமயமானது. எம்பெருமானை யநுபவிப்பதால் ஆனந்தக்கண்ணீர் பெருகப் பெற்றது என்றுமாம்.

'யாரே' என்றதில், 'யார்' என்ற வினா எதிர்மறை குறித்தது; ஏகாரம் வாக்கியாலங்காரம். முத்து—முத்துப்போன்ற கண்ணீரைச் சொல்லுதலால் உவமையாகுபெயர். 'மான்விழிக்கின்ற' என்றது—மான்போல் விழிக்கின்ற என்று பொருள்படுதலால் உவமைத்தொகை. விழிக்கின்ற—அன்சாரியை பெறாத பலவின்பால் முற்று; விழிக்கின்றன என்றபடி. 'மாயிதழ்' என்பதில் மா என்பது உரிச்சொல்லாதலால் அதன்முன் யகரந்தோன்றிற்று. "இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்" (நன்னூல்) என்ற புணரியல்களுக்குப் புறனடைச் சூத்திரம் காண்க. .... .... (௯)

மாயோன் வடதிருவேங்கடநாட * வல்லிக்கொடிகாள்
நோயோ வுரைக்கிலுங் கேட்கின்றிலீ ருரையீர் * நுமது
வாயோ வதுவன்றி வல்வினையேனுங் கிளியுமெள்கும்
ஆயோ வடுந்தொண்டையோ * அறையோ விதறிவரிதே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| மாயோன் | ஆச்சரியமான குண சேஷ்டிதங்களை யுடையனான எம்பெருமானது | நோய் ஓ உரைக்கிலும் கேட்கின்றிலீர் | (என்னுடைய) காதல் நோயையோ (நீங்கள் தாமாக அறியாவிட்டாலும்) நான் சொன்னாலும் கேட்கிறீரில்லை; |
| வட திருவேங்கடம் நாட | வட திருவேங்கட மலையை இடமாக வுடைய | | |
| வல்லி கொடிகாள் | பூங்கொடிபோன்ற இளம் பெண்களே!, | நுமது | உங்களுடைய |
| | | வாயோ | வாயின் அழகோ? |

| | | | |
|---|---|---|---|
| அது அன்றி | அதுவல்லாமல் | அடும் | (என்னை) உயிர்க் கொலை செய்யா நிற்கும்; |
| வல் வினையேனும் கிளியும் என்கும் | கொடிய தீவினையையுடைய நானும் கிளியும் தளரும்படியான | இது அறிவு அரிது | இவற்றில் இன்னது என்னை வருத்துமென்பது அறிய அரிதாயிருக்கின்றது; |
| ஆயோ | (உங்களது) 'ஆயோ' என்கிற சொல்லோ? | உரையீர் | நீங்கள் சொல்லுங்கள்; |
| தொண்டையோ | கோவைக்கனிபோற் சிவந்த உங்களது அதரமோ? | | |

[அறையோ—இது முறையிட்டுக் கூறும் வார்த்தை.]

* * *—கிளவித்துறையில் இப்பாசுரம்—'மதியுடம்படுத்தலுற்ற தலைவன் குறையுறவுரைத்தல்' எனப்படும். நாயகன் நாயகியோடே ஏதோ வொருவிதமாகக் கூடிப் பிரிந்தான்; பிரிந்தபின் மறுபடியும் அவளைக்கூடவேண்டி அவளது தோழியினிடஞ்சென்று தனது குறையையறிவித்தும் நிறைவேறப் பெறாதவனாய் இனி என்ன செய்வதென்று ஆலோசித்திருந்தான்; இருக்கையில், நாயகியும் தோழியும் ஒன்றுகூடிப் புனங்காத்திருக்கிற ஸமயம் நேர்ப்பட்டதனால் அவரருகிற் சென்று நின்று புதியவன்போலச் சில வார்த்தைகளைக்கூறித் தன்குறையையறிவித்துத் தோழியை மதியுடம்படுத்துகிறான். மதியுடம்படுத்தல் என்பதும். மதியுடன்படுத்தல் என்பதும் ஒன்றே. அஃதாவது என்னெனில்; நாயகி வேறுபட்டிருப்பதையும் நாயகனாகிய தனது செய்கையையும் தோழியானவள் நோக்கி இவற்றுக்குக் காரணமென்னேவென்று கவலைப்பட்டிருக்கையில், நாயகன் தன்னுடைய கருத்தை அறிவிப்பதனாலே இவற்றின் உண்மைக்காரணம் இன்னதென்று தோழிதெரிந்து கொள்ளும்படி செய்வதேயாம். (மதியை உடன்படுத்தல்—மதியுடம்படுத்தல். மதியாவது கருத்து. தோழியின் கருத்தைத் தனதுகருத்தோடு ஒருவழிப்படச் செய்தல் என்றபடி.)

முதலடியில் '**வல்லிக்கொடிகாள்!**' எனப் பன்மையாக விளித்ததனால் தோழியும் தலைவியும் கூடியிருக்குமிருப்பிலே சொல்லும் பாசுரம் இது என்பதுவிளங்கும். மேலே "வல்வினையேனும் கிளியுமெள்கும் **ஆயோ**" என்றதனால், புனங்காத்திருக்கு மிருப்பிலே

சொல்லும் பாசுரம் இது என்பது விளங்கும். ['ஆயோ.'] கிளி முதலிய பறவைகள்வந்து தானியக்கதிர்களைக் கவராதபடி அவற்றை வெருட்டுவதாக ஆயமிடுகிற சொல் 'ஆயோ' என்பது; அதுவோ? என்று வினவுகிறபடி.

இங்கே ஒரு சிறிய சங்கை உதிக்கக்கூடும்;--புனங்காத்திருப்பதாவது—தினை கம்பு சோளம் முதலிய தானியங்கள் விளைகிற க்ஷேத்ரங்களைக் காவல் செய்திருப்பதாம். இப்படிப்பட்ட தொழிலில் நாயகி அமர்ந்திருக்கிறாளென்றால் இஃது அவளுடைய மேன்மைக்குக் குறையன்றோ? பல தோழிமார் புடைசூழ்ந்து குற்றேவல் செய்ய வீற்றிருக்குமிருப்பாகக் கூறிச் சிறப்பித்துச் சொல்லவேண்டியிருக்க, அங்ஙனங் கூறாது தினைப்புனங்காத்திருக்கிறாளெனக் கூறுதல் தாழ்வன்றோ? அன்றியும், பற்பல்நூறாயிரம் கூர்வேலிளைஞர் புடைசூழத் தேரேறி வேட்டையாடுமியல்வினனை நாயகன் இப்படித் தனியனாய்வந்து குறையிரந்தானென்பதும் அவனுக்குத் தாழ்வன்றோ? என்று.—இது தாழ்வு ஆகாது; நாயகிக்குச் சொல்லப்படுகிற புனங்காத்தல் ஜீவனத்தொழிலன்று; பற்பல விளையாட்டினுள் இதுவுமோர் விளையாட்டாகும்; நாயகனைக் குறியிடத்தில் தனித்துக்கூடவேண்டுமென்னுங் கருத்தினாலும் புனங்காத்தல் கூடும். நாயகன் நாயகியோடு கூடுதற்குத் தனியனாய் வருதலும், வேட்கை மீதூரப்பெற்றுத் தோழியாற் கூடவேணுமென்னுங் கருத்தினால் குறையிரப்பதும் நாயகனுக்குத் தாழ்வு ஆகாது. இவ்விஷயம் தஞ்சைவாணன்கோவை யுரையில் விரியக் காணத்தகும். "எளியளாய்ப் புனங்காத்தாளுமல்லள்; எளியனாய்க் குறையுற்றிரந்தானுமல்லன்."

வல்லியென்பதும் கொடியென்பதும் ஒரு பொருட் சொல்லாயிருக்க, **வல்லிக் கொடிகாள்!** என்பது கூறியது கூறலாகாதோ? எனின், ஆகாது; கொடியென்றது பெயர்மாத்திரமாய்ப் பெண்டிரை உணர்த்தும்; வல்லியென்பது உவமைச் சொல். தோழியையும் **கொடி**யென்று ஒப்பச்சொல்லி விளிக்கலாமோ? எனின்; நாயகியைக் கூடுவதற்குத் துணையாய் நின்று உதவுந்தன்மையைக் கருதி அங்ஙன் விளித்ததென்க. 'திருவேங்கட நாடவல்லிக் கொடிகாள்!' என்றாலே போதுமே; '**வட**' என்னும் விசேஷணம் எதுக்கு?

தென் திருவேங்கடமொன் றிருந்தாலன்றோ வாசி தோற்ற வடதிரு வேங்கடமென்ன வேணும் என்னில்; இது இனம் விலக்கவந்த அடைமொழியன்று, இயற்கைவிளக்கவந்த அடைமொழி யென்க. வேங்கடம் எவ்விடத்துள்ள தென்றால் வடக்கிலுள்ளதெனவேண்டு மிறே. தமிழ்நாட்டுக்கு வடக்கெல்லையாதல் தோன்றக் கூறியது மாம். ஆக, முதலடியால் திருமலையில் புனங்காக்கின்ற நாயகியையும் தோழியையும் நாயகன் விளித்தானாயிற்று.

விளித்து, மேற்சொல்லுகிற வார்த்தை ஏதென்னில்; காதல் நோயில் தான் அகப்பட்டு வருந்துவதைக் குறிப்பிடும் வார்த்தை யாம். எனது பிரிவால் நீங்கள் நோவுபடுகிறீரில்லை; நோவுபடுகிற வன் நானாயிருக்கிறேன், நோவுபடுவேனை நீங்கள் வினவுவதேனு முண்டோ? இல்லை; நான் படும் நோயை நானே சொல்லிக்கொண் டாலும் அந்தோ! காது கொடுத்துக் கேட்கின்றீரில்லையே!. எனது நோயை நீங்கள் பரிஹரிக்க வேண்டா; காதுகொடுத்துக் கேட்பதே போதுமே என்கிறது இரண்டாமடியால்.

'கேட்கின்றிலீர்' என்றதனால், கேட்பது மாத்திரத்தையும் தான் பயனாகக் கருதினமை தோன்றும். [கேட்கின்றிலீர் உரை யீர்.] "கேளாதவர்களைச் சொல்லீர் என்கிறது ஆசையின் மிகுதி யிருந்தபடி" என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி. தினைப்புனங் காப்பவர் கிளி முதலிய பறவைகளை வெருட் டும் பொருட்டு வாய்திறந்து ஆயவிடுகிற குரலொலியைக் கேட்டும் அவர் வாயினழகைக் கண்டும் தான் ஈடுபட்டதைப் பின்னடிகளில் வெளியிடுகிறபடி:

**கிளியும் எள்கும் ஆயோ?**—இவர்கள் கூறும் ஆயோவென்கிற சொல்லைக் கேட்டுக் கிளிகள் அஞ்சிப் பின் செல்கின்றன வென்க. கிளிகள் தாம் கொஞ்சிக் கூறுஞ் சொல்லும் இவர்களது குர லொலிக்கு ஈடாகாதென்று அவை தாம் நாணுதலும் தோன்றும். "கிளியும் வெள்கும்" என்ற பாடமு முண்டு. இவர்களுடைய சொல்லுக்குத் தோற்றிருப்பது தனக்கும் கிளிக்கும் பொதுத் தன்மையாதல் பற்றி 'வல்வினையேனுங் கிளியும் எள்கும்' என்று சேர்த்துச் சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட காதல்நோயில் தான் அகப்பட்டு வருந்துவதை 'வல்வினையேன்' என்ற சொல்

லால் காட்டுகிறபடி. நான் வருத்தப்படுவது எனக்குத் தெரிகிறதேயன்றி இன்ன காரணத்தால் வருத்தப்படுகிறேனென்பது எனக்குத் தெரியவில்லை. காரியம் தெரிகிறதேயொழியக் காரணம் தெரியவில்லை. இன்னது காரணமென்பதை நீங்கள் சொல்லுங்கள் என்கை. 'இச் செல்வச் சிறுமியைப் பிரிந்ததனால் வருந்துகிறாய்' என்று தோழியின் வாக்கினால் வெளி வரவேணுமென்று எதிர்பார்ப்பவனாதலால் அக் காரணத்தைத் தான் வெளியிட்டிலன். இது ஒருவகைச் சமத்கார வாக்கு. '**நுமது**' என்றதை **ஆயோ, தோண்டையோ** என்றவற்றோடுங் கூட்டுக. மாயன் என்பது மாயோன் என னகரவீற்று அயல் அகரம் ஓவாயிற்று. **நாட** = நாடு என்பதன் மேற்பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

'**அறையோ**' என்றது முறையிடுதலைக் குறிப்பிடுஞ் சொல்; இவர்களது வார்த்தையைக் கேட்கையில் விருப்பத்தால் முறையிட்ட சொல் என்றாவது, நோயின் காரணமறிய வொண்ணாமையால் முறையிட்டுக் கூறும் வார்த்தை யென்றாவது கொள்ளலாம்.

ஸ்வாபதேசத்தில்—ஆழ்வாரைப் பிரியமாட்டாத அன்பான பாகவதர் அவரது அவயவவிளக்கத்திலும் அருளிச்செய்யும் வாய்மொழிகளிலும் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தை இது என்று கொள்க. [மாயோன் வட திருவேங்கட நாட வல்லிக்கொடிகாள்!.] அற்புதனான எம்பெருமான் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகப் பரமபதத்தை விட்டுத் திருமலையில் வந்து நிற்கிற நீர்மையை நாடுகின்றவரும் கொடிபோல் பாரதந்திரிய ஸ்வரூபத்தையுடையவருமான ஆழ்வாரே! என்று ஆழ்வாரை விளித்தவாறு. பஹுவசநம் கௌரவந்தோற்ற. [நோயா வுரைக்கினும் கேட்கின்றிலீர்.] உம்மிடத்து அன்பு மிகுதியால் நாங்கள் படும்பாட்டை விண்ணப்பஞ் செய்தாலும் (உமது பரவசத்தால்) கேட்கின்றீரில்லை. [நுமது வாயோ இத்யாதி.] உம்முடைய திருமுக மண்டல மலர்ச்சியோ? அதுவல்லாமல், உம்மைப் பிரிந்துபோக முடியாதபடி கட்டுகிற வலிய பாசபந்தத்தையுடைய யாமும் பைங்கிளிவண்ணனான எம்பெருமானும் ஈடுபடும்படியான உமது சொற்போக்கோ? அப்படிப்பட்ட சொற்களைக் கூறும் வாயிதழ்களோ? (அல்லது குரலோசையோ?) எம்மை நெகிழச் செய்யும். இவை தனித்தனியே வருந்தச்செய்யுங்

தன்மையனவாதலால் இவற்றில் எம்மை வருத்துவது இன்னதென்று பகுத்தறிதல் அரிது; நீர்தாமே இதனை நிச்சயித்துச் சொல்லீர் என்றதாயிற்று. .... .... .... (௧௦)

அரியன யாமின்று காண்கின்றன * கண்ணன் விண்ணனையாய்!
பெரியன காதம் பொருட்கோ பிரிவென * ஞாலமெய்தற்
குரியன வொண்முத்தும் பைம்பொன்னுமேந்தி யோரோகுடங்கைப்
பெரியன கெண்டைக்குலம் * இவையோ வந்து போகின்றவே.

| | |
|---|---|
| யாம் இன்று காண்கின்றன | நாம் இப்பொழுது பார்க்கின்றவை |
| அரியன | (உலகத்தில் வேறு எங்கும் பார்ப்பதற்கு) அருமையானவை; |
| கண்ணன் விண் அனையாய் | 'எம்பெருமானுடைய பரமபதம்போல அளவற்ற இன்பம் தருபவளே! |
| பெரியன காதம் பிரிவு | அநேகதூரங்களான பலகாதங்களில் (அவரவர்கள்) பிரிந்து போவதானது |
| பொருட்கோ | பொருள்சம்பாதிப்பதற்காகவோ?' |
| என | என்று யான் (பொதுப்படையாக உலக நிகழ்ச்சியைப் பற்றிக்) கேட்க,— (அவ்வளவிலே) |
| ஞாலம் எய்தற்கு உரியன | எல்லாவுலகங்களையும் தம் வசப்படுத்திக் கொள்ளக் கூடியவையாயும் |
| ஓரோ குடங்கை பெரியன | தனித்தனி ஒரு அகங்கையளவு பெரியவையாயுமுள்ள |
| கெண்டை குலம் இவை | கெண்டைமீன்களின் இனமான இக்கண்கள் |
| ஒள் முத்தும் பை பொன்னும் ஏந்தி | (பிரிவாற்றாமையால் வந்த கண்ணீர்த் துளிகளாகிய) அழகிய முத்துக்களையும் (பசலைநிறமாகிய) பசும் பொன்னையுங் கொண்டு |
| வந்து போகின்ற | (என்முன்னே) வந்து உலாவுகின்றன; |
| ஓ | இது என்ன வியப்பு! |

* * *—காதலன் நம்மைப் பிரிந்துபோகப் போகிறானென்றுணர்ந்த காதலி அப்பிரிவுக்கு ஆற்றாது வேறுபாடடைய, அதனைக்கண்ட காதலன் உரைக்கும் பாசுரமிது. கீழ் எட்டாம்பாட்டில், நாயகன் பொருள் சம்பாதிப்பதற்காகத் தேசாந்தரம் செல்ல

நினைத்திருந்தபடியை நாயகியானவள் குறிப்பாலறிந்து கூறியிருக்கிறாள். அது நிற்க. பொருள்படைப்பதற்காக நாயகியைப் பிரிந்து போகவேணுமென்றெண்ணிய நாயகன், அவளோடு சொல்லாமல் சடக்கெனப்பிரிந்தாலும், அல்லது 'தேசாந்தரம் போகப்போகிறேன்' என்று சடக்கெனப் பிரிவைத்தெரிவித்தாலும் அவள் மரண பர்யந்தமான கஷ்டத்தை யடைந்திடுவளெனக்கருதி, அவள் ஆற்றுமாறு கொஞ்சங்கொஞ்சமாகப் பிரிவைத் தெரிவிக்கத்தொடங்கி, லோகாபிராமமாகப் பல பிரஸ்தாவங்கள் பண்ணுமடைவிலே 'உலகத்திலே பொருள் சம்பாதிப்பதற்காகப் பிரிந்து தேசாந்தரம் போகிறதென்கிற ஒரு விஷயம் உண்டு' எனப் பொதுப்படையான ஒரு ப்ரஸ்தாவம் எடுத்துக்கூற, அவள் அது கேட்டவுடன் 'இப்போது இவர் இவ்விஷயம் பிரஸ்தாவித்தது வெறுமனல்ல; இது லோகாபிராம வார்த்தைகளிற் சேர்ந்ததல்ல; நம்மைப்பிரிந்து போவதற்காகவே இது அவதாரிகையாகக் கூறின கூற்றாயிருக்க வேண்டும்' என நினைத்து, பிரிவு உண்டாய்விட்டதாகவே நினைத்து வருந்திப் பிரிவாற்றாமையாலுண்டாகும் பசப்பென்கிற நிறவேறுபாட்டையடைந்து கண்ணுங் கண்ணீருமாயிருக்க, அதைக்கண்ட நாயகன், நாம் பிரிந்துபோவதாகச் சொல்லாதிருக்கவும் வெறும் வார்த்தையிலே நமது உட்கருத்தைத் தெரிந்துகொண்ட இவளுடைய நிலைமை இப்படியாயிற்றே! என்று ஆச்சரியப்பட்டுத் தோழியைநோக்கிக் கூறியது என்றாவது நெஞ்சை நோக்கிக் கூறியது என்றாவது கொள்க.

இதுவரையில் நான் உலகத்தில் எத்தனையோ ஆச்சரியங்கள் கண்டிருக்கிறேன்; ஆனால் இன்று காணும் ஆச்சரியம் என்றைக்குங் காணமுடியாதது, எங்குங்காணமுடியாதது என்ற அடங்கா வியப்புத்தோற்ற, பாசுரந் தொடங்கும்போதே '**அரியன யாமின்று காண்கின்றன**' என்கிறான் தலைமகன். மேல்முழுதும் அவ்வாச்சரியமே விவரிக்கப்படுகின்றது. ஸாமாந்யமாக உலகநிகழ்ச்சியை நான் பிரஸ்தாவித்த மாத்திரத்திலும் இவள், தன்னைப் பிரிவதற்காகவே நான் இவ்வார்த்தை சொல்லுகிறதாகவும் அதற்குமேல் பிரிவும் நேர்ந்துவிட்டதாகவும் நினைத்து விலக்ஷணமான விகாரத்தை அடைந்திட்டாளே, இதனின் மிக்க ஆச்சரியமுண்டோ என்கை.

'உன்னை நான் பிரிந்துபோக ஒருகாலும் முடியாது' என்பது விளங்க 'கண்ணன் விண்ணனையாய்!' என்று நாயகியை நான் விளித்துச் சொல்லியிருக்கவும் இவள் பிரிவைச் சங்கித்தாளே! என்று உள்குழைகின்றமையறிக. எம்பெருமானுடைய பரம பதத்தையடைந்தவர்கள் அதனைவிட்டுப் பிரியவொண்ணாததுபோல இவளை யடைந்தவர் பிரியவொண்ணாமை சொன்னபடி.

பெரியனகாதம் பொருட்கோ பிரிவு என='பொருட்கோ' என்றவிடத்து 'ஓ' என்பதை வினாவாகவுங் கொள்ளலாம், தெரி நிலையாகவுங் கொள்ளலாம். 'உலகத்தில் காதலர் காதலிகளை விட்டுப் பிரிந்து த்வீபாந்தரங்கட்குச் செல்லுகின்றனரே, இது பொருள் சம்பாதிப்பதற்காகப்போகிற போக்கோ?' என்று தான் நாயகியைக் கேள்விகேட்டதாகவுங் கொள்ளலாம்; பொருள் படைப் பதற்காகத்தான் அவரவர்கள் த்வீபாந்தரங்களுக்குச் செல்லுகின் றனர் என்று உலக நிகழ்ச்சியை எடுத்துக் கூறினதாகவுங் கொள்ள லாம்.

ஞாலமெய்தற்குரியன=உலகமுழுவதையும் விலையாகப் பெறு தற்கு உரியவை என்று முரைக்கலாம்; உலகமெல்லாம் ஆசைப் படுவதற்கு உரியவை என்றுமாம். ஒண்முத்தும் பைம்பொன்னு மேந்தி=கண்ணீர்ப்பெருக்கு முத்தாகவும், பசலைநிறம் பொன்னாக வும் கூறப்பட்டனவென்க. எனவே, ஆகுபெயர். பசலைநிறம் பொன்னிறமா யிருக்குமென்ப. 1. "பொன்குலாம் பயலை பூத்தன மென்தோள்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமுங்காண்க. பசலைநிறத்தைப்பற்றிக் குறுந்தொகையில் ஒரு செய்யுளுண்டு; அதாவது—"ஊருண் கேணி யுண்டுறைத்தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்த லானே" (399) என்பதாம்; இதன் பொருள்:—ஊரிலுள்ள ஜனங்க ளாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்துகிடக்கும் பாசிபோன்றது பசலைநிறம்; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்ட விடங்களில் பாசிநீங்கும்; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவ னுடைய கைபடுமிடங்களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்த கை

1. பெரிய திருமொழி 2—7—9.

நெகிழ்த்தவாறே அப்பசலை நிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித்தொடுவுழி—தொட்டவிடங்கள் தோறும். விடுவுழி விடுவுழி—விட்டவிடங்கள்தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினாலே.)

'கெண்டைக்குலம்போன்ற **கண்கள்**' என்னவேண்டுமிடத்து உபமேயத்தைச் சொல்லாமலே உபமானத்தைமாத்திரம் சொன்னது முற்றுவமை. குளிர்ச்சியாலும் மிளிர்ச்சியாலும் ஓடுதலாலும் மதமதப்பாலும் கண்கள் கெண்டை மீன்போலும். கெண்டைக் குலமென்றதைக் குலக்கெண்டையென மாற்றியியைத்து, உயர்ந்த சாதிக் கெண்டைமீன் எனவுமாம். **இவையோ**=ஓ—வியப்பிடைச் சொல். பொருளீட்டுதற்காகப் பிரிந்துபோவதைக் கூறத்தொடங்கின என்முன், பரந்த கண்கள் உலகை விலைபெறத்தக்கவையாய்ச் சிறந்த முத்தையும் பொன்னையும் ஏந்திவந்து எதிர்நின்று 'நீ பொருட்காகப் பிரிந்துபோகவேண்டா; முத்தும் பொன்னுமாகிய இப்பொருள்கள் உனக்கு உரியவையே காண்' என்று கூறுகின்றன போன்றன என்பதுந் தோன்றும். பிரிவை நினைத்தமாத்திரத்தில் கண்ணீரும் நிறவேறுபாடுமாயிருந்த இருப்பும் புதியதாக ஒரு முத்தணியையும் பொன்னணியையும் அணிந்தாற்போலத் தனக்கு ஒரு அழகு விளைத்ததென்பது தோன்ற '**ஒண்முத்தும் பைம்பொன்னு மேந்தி**' என்றுனென்னவுமாம்.

**குடங்கை**='தட' என்பது போலக் 'குட' வென்பதும் வளைவை உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலால் 'வளைந்த கை' எனப்பொருள்பட்டுச் சேரங்கையைக்குறிக்கும். குடக்கையென வலிமிகாது குடங்கையென மெலிமிக்கதற்குக் காரணம் உரிச்சொற்புணர்ச்சியாதலே. "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" (நன்னூல்) இத்யாதி. கண்ணுக்குக் குடங்கை உவமையாதல் ஆக்ருதியில் என்க. **ஓரோ**=ஓ—அசை. **பேர்கின்ற**—வினைமுற்று; அன்சாரியை பெறவில்லை.

ஸ்வாபதேசம்:—ஆழ்வாரைப் பிரிந்து திவ்யதேச யாத்திரை போகக்கருதிய பாகவதர் தமது பிரிவைப் பொறுக்கமாட்டாதபடியான அவருடைய ஞானவிசேஷத்தைக்கண்டு கூறுதலாம். [அரியனயாமின்று காண்கின்றன] இவருடைய ஞானவிசேஷம் வேறு

எவ்விடத்திலும் காணமுடியாதது. [கண்ணன் விண்ணனையாய்!] எம்பெருமானுடைய பரமபதம்போல அளவிறந்த மஹிமையையும் அந்தமில் பேரின்பமளித்தலையும் பிரகிருதிஸம்பந்த மில்லாமையை யும் என்றும் வேறுபாடில்லாத இயல்பையும் உடையவரே! என்று ஆழ்வாரை விளித்தபடி. [பெரியன காதம் பொருட்கோ பிரிவென] பரம்பொருளாகிய எம்பெருமானை ஸேவிக்கும்பொருட்டு நெடுந்தூரம் திவ்யதேச யாத்திரை செல்லுதலுண்டு என்று யாம் ப்ரஸ்தாவம் செய்தவளவிலே. [ஞாலம் எய்தற்குரியன.] எல்லா வுலகங்களையும் வேண்டிய வேண்டியவாறு பெறுதற்கு உரியவையும். (அல்லது) உலகத்தாரையெல்லாம் வசப்படுத்த வல்லவையும். "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே", என்பவாதலால் விசேஷஞானமுடைய வைஷ்ணவர்களெல்லோரும் அநுபவிக்கத் தக்கவை என்னவுமாம். [ஒண்முத்தும் பைம்பொன்னு மேந்தி] சுத்தஸத்வகுணத்தையும் ஒளிமயமான எம்பெருமான் வடிவத்தை யும் தன்னுட் கொண்டவையும். [ஒரோ குடங்கைப்பெரியன] கைகளால் மொண்டெடுத்து அநுபவிக்கும்படி அன்பர்க்கு எளியவை யும். (அல்லது கைவசப்பட்டவையும்.) [கெண்டைக்குலம்] எம் பெருமானது மத்ஸ்யாவதாரத்திலே இறங்கி ஈடுபட்டுத் தந்மய மானவையும் ஆகிய, [இவை] ஆழ்வாரது ஞானத்தின் வகைகள், [வந்து பேர்கின்ற] பரவிவந்து (பிரிய வொண்ணாதபடி) ஆசையை மூட்டுகின்றன.—ஓ—இது இன்ன வியப்பு. பிரிவென்று ஒன்று உலகத்தில் உண்டென்னுமளவில் ஸ்ரீவைஷ்ணவர்களின் பிரிவு தமக்கு ஒருகால் நேர்ந்திடுமோவென்று வெருவும்படி ஆழ்வார்க்கு அவர்கள் விஷயத்திலுள்ள பிரிவாற்றாமை இப்பாட்டால் விளங்கிற் றும். .... .... .... .... .... (கக)

பேர்கின்றது மணிமாமை பிறங்கியள்ளற்பயலை *
ஊர்கின்றது கங்கு லூழிகளே * இதெல்லா மினவே
ஈர்கின்ற சக்கரத்தெம்பெருமான் கண்ணன் தண்ணந்துழாய்
சார்கின்ற நன்னெஞ்சினர் * தந்துபோன தனிவளமே. (கஉ)

மணி மாமை { (எனது) அழகிய நிறமானது | பேர்கின்றது { விகாரப்படா நின்றது;

| | |
|---|---|
| பிறங்கி அள்ளல் பயலை | விளங்கி அடர்தலை யுடைய பயலை நிறமானது |
| ஊர்கின்றது | மேன்மேல் பரவாநின்றது; |
| கங்குல் | இராப்போது |
| ஊழிகளே | அனேக கற்பங்களாகா நின்றது; |
| இது எல்லாம் இனவே | இத்தன்மையுள்ள இவையெல்லாம், |
| ஈர்கின்ற சக்கரத்து | (கொடியாரை) அறுத்திடுகிற திருவாழியை யுடைய |
| எம்பெருமான் கண்ணன் | எனது தலைவனான கண்ணபிரானது |
| தண் அம் துழாய் | குளிர்ந்த அழகிய திருத்துழாயிலே |
| சார்கின்ற | ஆசைப்பட்டுச் செல்கிற |
| நல் நெஞ்சினார் | (எனது) நல்லமனம், |
| தந்து போன | (தான் செல்கிற போது எனக்குக்) கொடுத்துவிட்டுச் சென்ற |
| தனி வளமே | ஒப்பற்ற செல்வங்களாம். |

* * *—நாயகன் பிரியப்பெற்ற நாயகி தன் ஆற்றாமைகூறி நெஞ்சொடு கலாய்த்தல். அன்றியே, பாங்கியை நோக்கித் தலைமகள் தன் ஆற்றாமையைச் சொல்லுகிறாளாகவுமாம். மாதர்க்கு இளமைப் பருவத்திலுள்ள ஒளிபெற்ற நிறம் **மாமை** எனப்படும். தனதுமேனி நிறத்தைத் தானே '**மணி**மாமை' என்று புகழ்ந்து கூறுதல் தற்புகழ்ச்சியாகாதோவெனின், ஆகாது; தன் நிறத்தை அவன் புகழும் விதத்தாலே சொல்லுவதென்க. நாயகனைப் பிரிந்ததனாலே என்னுடைய மேனி நிறம் மாறிப்போயிற்றென்றவாறு.

**பிறங்கி அள்ளல் பயலை ஊர்கின்றது**=பசலைநிறமானது அடர்ந்துகொண்டு மேன்மேலும் பரவத்தொடங்கிற்று என்கை. (பசலைநிறத்தைப் பற்றிக் கீழ்ப்பாட்டினுரையிற் காண்க.) 'அள்ளல் பயலை' என்று பசலை வண்டலிடுந் தன்மையைக் குறிக்குமென்றுங் கூறுவர். **கங்குல் ஊழிகளே**=நாயகனோடு கூடியிருக்குங்காலத்தில் ஒரு நொடிப் பொழுதாகக் கழிகிற இரவு பிரிவுகாலத்தில் கல்பகோடிகாலமாக நீள்கின்றபடியைக் கூறியவாறு. '**இதெல்லாமினவே**' என்றதனால், அன்றில் தென்றல் திங்கள் கடல் குயில் முதலியவை வருத்துவனவாதலுங் கொள்ளப்படும்.

**ஈர்கின்றசக்கரத் தெம்பெருமான்**=ஆச்ரித விரோதிகளான அஸுரராக்ஷஸர்களை அறுத்திடுகிற திருவாழியையுடைய பெருமான் என்றும், கையுந் திருவாழியுஞ் சேர்ந்த சேர்த்தியினாலாகிய

**அழகைக்காட்டி** என்னை வருத்துகின்ற பெருமான் என்றும் **உரைக்கலாம்.** "பிரதிகூலரை ஆண்மையாலே கொல்லும்; **அநுகூலரை அழகாலே** கொல்லும்" என்ற பெரியவாச்சான் பிள்ளை **வியாக்கியான வாக்கியத்தின்** சுவை காண்க.

**கண்ணன் துழாய் சார்கின்ற நெஞ்சு**='அவனுடைய **ஸம்பந்தம்** பெற்ற திருத்துழாயோடேயாவது நமக்கு ஸம்பந்தம் கிடைத்ததே!' என்று! இதனை ஒருபெரும்பேறாகக் கருதி ஈடுபட்ட நெஞ்சு என்க. '**சார்கின்ற**' என்றதனால்—கிடைக்கும் கிடையாது என்று ஆராயாது பதறிவிழுந்தமை தோன்றும். **நல்நெஞ்சு**=உடையவளாகிய தன்னை வருந்தவிட்டு நாயகனிடஞ் சென்ற மிக்கவேட்கையையுடைய நெஞ்சு என்றவாறு. அஃறிணைப் பொருளாகவும் ஒருமைப் பாலாகவும்முள்ள நெஞ்சை '**நெஞ்சினர்**' என்று உயர்திணையாகவும் பன்மைப்பாலாகவும் கூறியது கோபத்தினாலென்க: திணைபால் வழுவமைதி; மகிழ்ச்சியினால் சிறப்பித்துச் சொல்லுகிறாளென்னவுமாம்.

**தந்துபோன தனிவளமே**=மாமையிழந்தது முதலியவற்றை 'வளம்' என்றது விபரீதலக்ஷணை. ஒரு ஏழையை நோக்கி 'அவர் பெரிய பணக்காரர்' என்றால் அஃது எதிர்மறையிலக்கணையால் வறுமையைக் காட்டுதல்போல. மேனிநிறம் மாறப்பெற்றும் பசலைநிறம் படரப்பெற்றும் இரவு நீட்டிக்கப் பெற்றும் வருந்திக்கிடப்பதே நான்பெற்ற பாக்கியம் என்று உலகவழக்கு நடையில் உரைக்கிறபடி. இப்படிப்பட்ட செல்வம் எனக்கன்றி வேறுயார்க்கும் கிடைப்பரிது என்பது தோன்றத் '**தனிவளம்**' எனப்பட்டது.

ஆழ்வார்தாம் தமது அகக்கண்ணால் எம்பெருமானைக் கண்டு வைத்தும் சேரப்பெறாது நெஞ்சிழந்து தனித்து வருந்துபவராய்த் தமது ஆற்றாமையைக் கூறுதல் இதற்கு உள்ளுறை பொருளாம். எம்பெருமான் கையுந் திருவாழியுமாய்த் தோளுந் தோள்மாலையுமாய் ஸேவைஸாதிக்கிற நிலைமையிலே ஸேவிக்கப் பெறவேணுமென்று ஆசைப்பட்டு அது கிடையாமையாலே '**ஒருபகலாயிரமூழியாலோ**' என்று வருந்தவும், 'சங்குவில்வாள்தண்டு சக்கரக்கையற்கு..........கொங்கலர் தண்ணந்துழாய் முடியானுக்கு, என்**மங்கையிழந்தது மாமைநிறமே**' என்று கிலேசிக்கவும் நேர்ந்தது **என்றாயிற்று.**

தனிவளர் செங்கோல் நடாவு * தழல்வா யரசவியப்
பனிவளர் செங்கோ லிருள்வீற் றிருந்தது * பார்முழுதும்
துனிவளர் காதல் துழாயைத் துழாவுதண் வாடைதடிந்
தினிவளை காப்பவ ரார்? * எனை யூழிக ளீர்வனவே. (௩௫)

| | | | |
|---|---|---|---|
| தனி வளர் | ஒப்பில்லாமல் வளருந் தன்மையுள்ள | துழாயை | (தலைவனது) திருத்துழாய் மாலையை |
| செங்கோல் | (தனது ஒளியாகிய) அரசாட்சியை | துழாவு | அளைந்துவருகிற |
| | | தண் வாடை | குளிர்ந்த காற்றை |
| நடாவு | (எங்குந் தடையின்றிச்) செலுத்துகிற | தடிந்து | தண்டித்து [அழித்து] |
| தழல் வாய் அரசு | வெப்பம் வாய்ந்த ஸூர்யனாகிய அரசன் | வளை | (பிரிவாற்றாமையால் மெலிந்த எனது கைகளினின்று கழன்று விழத் தொடங்கின) வளைகளை |
| அவிய | ஒழிய | | |
| பனி வளர் செங்கோல் இருள் | (ஜனங்களுக்கு) நடுக்கத்தைச் செய்கிற ஆட்சியையுடைய இருளாகிய சிற்றரசு | காப்பவர் | கழலவொட்டாது தடுத்துப் பாதுகாப்பவர் |
| பார் முழுதும் | பூமிமுழுவதும் | ஆர் | யாருளர்? [எவருமில்லை.] |
| வீற்றிருந்தது | அரசுவீற்றிருந்தது; | ஊழிகள் | கற்பவடிவங் கொண்ட இராத்திரிகள் |
| இனி | இனிமேல், | | |
| துனி வளர் காதல் | துன்பத்தை அதிகப்படுத்துகிற என் ஆசைக்கு இலக்கான | எனை | என்னை |
| | | ஈர்வன | பிளக்குந்தன்மையுடையன. |

* * *—நாயகனைப் பிரிந்து ஆற்றமாட்டாத நாயகி இருளுக்கும் வாடைக்கும் கஷ்டப்பட்டுக் கூறும் பாசுரம் இது. செவிவாய் கண் முதலிய இந்திரியங்களானவை பகலில் பலபல வேறுவகைப் பட்ட பொருள்களை நாடியிருக்கக் கூடுமாதலால் நாயகனுடைய பிரிவை ஒருவிதமாக ஆற்றி நிற்கலாம்; இரவில் அப்படியல்லாமல் எல்லாப்பொருளும் அடங்க, இந்திரியங்களோடு மனம் நாயகனாகிற ஒரு பொருளையே நாடுதலாலும் கலவிக்கு உரியகாலமாதலாலும்

அவ்விராப்பொழுதில் ஆற்றமாட்டாது வருந்துதல் இயல்வு. இப் பராங்குசநாயகியும் அங்ஙனே வருந்துகிறுளென்க.

உலகில், பேரரசன் செங்கோல் செலுத்தாநிற்குமளவில் சிற்றரசர்கள் தலையெடுக்கமாட்டார்கள்; பேரரசன் தலைசாய்ந்தால் உடனே சிற்றரசர்கள் தலைவிரித்தாடத் தொடங்குவர்கள்; அதுபோல, தன் ஒளியிலே சந்திரன் நக்ஷத்திரம் விளக்கு முதலிய எல்லாவொளிகளும் இருந்தவிடந் தெரியாதபடி மறைந்திடுமாறு தனிச் செங்கோல் செலுத்துமவனான ஸூரியனாகிய பேரரசன் தலைசாய்ந்தவாறே இருளாகிய சிற்றரசு தான் தலைவிரித்தாடத் தொடங்கிற்று என்கிறுள் முன்னடிகளால். ஸூர்யனுடைய உஷ்ணகிரணமும் அரசனுடைய பிரதாபமும் ஆகிய இரண்டும் 'தழல்வாய்' என்றதனுல் பெறப்படும். ஸூர்யாஸ்தமநத்தைச் சொல்லவேண்டில் 'சூரியன் மறைய' என்னலாமே; அங்ஙனஞ் சொல்லாது 'அவிய' என்றது—மீண்டும் ஸூர்யோதயம் ஆகக்காணுமல் இராப்பொழுதே நெடுகுவதாகத் தோன்றுதலால் ஸூர்யன் அழிந்தான் போலும் எனக்கருதி.

எல்லாரையும் மகிழ்வித்து அரசாட்சி புரிவதைச் செங்கோல் செலுத்தலாகச் சொல்வதுண்டு; வருத்தத்தை வளர்க்கிற நிலைமையையுடைய இருளின் ஆட்சியைச் செங்கோல் என்னலாமோ? எனின்; விபரீதலக்ஷணையாகச் சொல்லுகிறதென்க. பிரிந்தாரை வருத்தப்படுத்துவதாகிற கொலைத்தொழிலே இருளின் செங்கோல் என்கிறது. பார்முழுதும் வீற்றிருந்தது=உலகமுழுவதையும் தனக்குள்ளேயாக்கிக்கொண்டு, தன்னை யெதிர்ப்பாரில்லாமையால் தன் பெருமை தோற்றும்படியிருக்கின்றதென்கை. 'ஸூர்யன் அரசாண்ட இடம்முழுவதும் இருளுக்கு வீற்றிருப்பதற்கு மாத்திரமே இடமாயிற்று' என்று விசேஷார்த்தம் கூறுதலுமுண்டு. ஆதித்யன் எப்போது அஸ்தமிக்கப் போகிறுனென்று எதிர்பார்த்திருந்த இருள் அவன் அஸ்தமித்தவாறே நாடெங்கும் பரவி விரஹிகளை நலியத் தொடங்கிற்று என்றதாயிற்று.

இப்படி இருள் ஒருபுறம் கொலை செய்யாநிற்க, மற்றொருபுறத்திலே திருத்துழாய்க்காற்று வந்துவீசிக் கொலைசெய்யா நின்றதே!, இதனைத் தண்டித்து நம்மை நோக்கிக்கொள்வது எங்ஙனேயோ? என்று வருந்துகிறுள் பின்னடிகளில்

முன்பு கூடியிருந்தகாலத்து இத்திருத்துழாய்க்காற்று குளிர்ச்சியாக வீசி இன்பஞ்செய்த நிலையைக் கருதித் 'தண்வாடை' என்றது. அன்றி, விபரீதலக்ஷணையால் வெவ்வாடையைத் தண்வாடையெனக்கூறி வெறுக்கின்றாளென்றுமாம். வடதிசையிலிருந்து வந்து வீசுங் காற்றுக்கு வாடையென்று பெயர் தானிருந்தாலும், சிறப்புப் பெயர் பொதுப்பொருளை யுணர்த்தும் முறைமையில் இங்கு வாடையென்னுஞ்சொல் காற்றுமாத்திரத்தை உணர்த்துவதாயிற்று. **தடிந்து**—வெட்டி; காற்றைவெட்டுதல் கூடுமோ? உருவமில்லாத பொருளன்றோ காற்று எனின்; அது செய்யுந்துயர் பொறுக்க வொண்ணாமையால் கோபந்தோற்றச் சொல்லுகிற வார்த்தையென்க. **இனி**=காப்பவனான நாயகனும் பிரிந்துபோய், ஹிம்ஸிப்பதான இராப்பொழுதும் வந்த பின்பு என்றபடி. **வளைகாப்பவரார்?**=விரஹத்தாலே ஈர்க்குப்போல மெலிந்துபோன உடம்பைப் பழையபடியே புஷ்டியாகச் செய்யவல்லாரார்? என்கை. உடல் இளைத்துப்போனால் கைவளைகள் கழன்றொழியும்; உடல் இளைப்பதற்குக் காரணம் நாயகனுடைய பிரிவு. அப்பிரிவு நீங்கிப் புணர்ச்சியுண்டானால் உடம்பு நிலைநின்று வளைகளும் தங்கும்: ஆகவே 'வளைகாப்பவரார்?' என்றது—புணர்ச்சியை யுண்டாக்கித் தருவாரார்? என்றபடி.

**எனையூழிகளீர்வன**=' என்னை ' என்பது ' எனை ' எனத் தொக்கியிருப்பதாகக்கொண்டு உரைக்கப்பட்டது. அன்றியே, 'எத்தனை' என்பதன் மரூஉவாகக்கொண்டு எத்தனை கற்பங்கள் வருத்துவன? என்பதாகவுங் கொள்ளலாம். ஓரிரவையே பல கற்பங்களாகக் குறித்தவாறு. ஈற்றடியில் '**எனவளைகாப்பவரார்?**' என்றும் பாடமுண்டாம். அப்போது, **என**—என்னுடைய என்றபடி.

ஸர்வேச்வரனுடைய பிரிவுக்கு ஆற்றமாட்டாமல் அறிவு குலைந்து மோஹம் தலையெடுத்துத் தளர்ச்சிபிறந்து தஞ்சம் தேடும்படியான தமது நிலைமையை ஆழ்வார் அருளிச்செய்தல் இதற்கு ஸ்வாபதேசப் பொருளாம். [**தனிவளர்செங்கோல்நடாவு தழல்வாயரசு அவிய**] இருளையொழிப்பதும் வெவ்வியதும் தடையற்றதும் ஒப்பில்லாததுமான கதிரவனொளிபோல, மதாந்தரங்களை யொழிக்கவல்லதும் அதனால் பிரதாபம் மிக்கதும் எம்பெருமான் கட்டளையை

எங்கும் தடையற நடத்துவதும் அதனால் ஒப்பில்லாததுமான விவேகமும் குலையும்படியாக. [பனிவளர்செங்கோலிருள் வீற்றிருந்தது.] வருத்தத்தை வளரச்செய்கிற பெருமையையுடைய மோஹாந்தகாரமானது பரவிவிட்டது. இனிமேல், [துனிவளர் காதல் துழாயைத் துழாவுதண்வாடை தடிந்து] பிரிந்தநிலையில் துன்பமாய் முடிவதான எனது அன்புமிகுதிக்கு விஷயமான எம்பெருமானுடைய போக்யதையை நினைப்பூட்டி விரைவையுண்டாக்கிக் கொண்டு நடக்கிற இவ்வுலகத்துப்பொருளை விலக்கி. [வளைகாப்பவர் ஆர்?] மறந்தும் புறந்தொழாதபடி எனக்குள்ள அடிமைக் குணத்தை நீங்காமற் பாதுகாப்பவர் ஆர்? வளையென்பது, வாழ்கிற பெண்களுக்கு மங்கலவாழ்க்கைக்கு உரிய அறிகுறியாதலால் அது ஸ்வாபதேசத்தில் எம்பெருமானது ஸம்பந்தத்துக்கு அறிகுறியான அடிமையை உணர்த்தும். [ஏனையூழிகளீர்வனவே.] 'கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ?' என்று விரைகின்ற எனக்கு இக்காலவிளம்பம் அஸஹ்யமாயிருக்கின்றதென்றவாறு. .... (௧௩)

ஈர்வனவேலு மஞ்சேலும் * உயிர்மேல் மிளிர்ந்திவையோ
பேர்வனவோ வல்ல தெய்வநல் வேட்கணை * பேரொளியே
சோர்வன நீலச்சுடர்விடு மேனியம்மான் விசும்பூர்
தேர்வன * தெய்வமன்னீர கண்ணோ விச்செழுங்கயலே. (௧௪)

| | | | |
|---|---|---|---|
| ஈர்வன வேலும் | (பகையைப்) பிளப்பனவான, வேல்கள் போலவும் | தெய்வம் | தெய்வத்தன்மையையுடைய |
| அம் சேலும் | அழகிய சேல் மீன்கள் போலவும் உள்ளனவான | நல் | அழகிய |
| இவை | இவை | வேள் | மன்மதனுடைய |
| உயிர் மேல் மிளிர்ந்து | (எனது) உயிரை வசப்படுத்தும் பொருட்டு அதன் மேற்பாய்ந்து | கணை | அம்புகளினுடைய |
| பேர்வனவோ அல்ல | (அதைவிட்டு) நீங்குவன அல்ல; | பேர் ஒளியே | சிறந்த ஒளியையே |
| | | சோர்வன | தாம் வெளியிடுவன; |
| | | நீலம் | நீலமணியினுடைய |
| | | சுடர் | ஒளியை |
| | | விடு | வீசுகின்ற |
| | | மேனி | திருமேனியையுடையனை |

| | | | |
|---|---|---|---|
| அம்மான் | எம்பெருமானது | இ செழு கயல் | கொழுத்த கயல் மீன்களென்று சொல்லத்தக்க இவை |
| ஊர் விசும்பு | திருநாடாகிய பரமபதத்தை | தெய்வம் அன்னிர | (மோஹினி யென்னும்) பெண் தெய்வத்தை யொத்த உமது |
| தேர்வன | (தனக்குஒப்பாகத்) தேடுந் தன்மை யுடையன ; | கண்ணே | கண்களோ ? |

* * *—நாயகன் நாயகியினது நன்மையைக் கொண்டாடிக் கூறுதலாகிற 'நலம்பாராட்டு' என்பது இப்பாட்டுக்குத் துறை யென்றறிக. நாயகனானவன் நாயகியோடே புணர்ந்து பிரிகிற ஸமயத்திலே மூன்றுகாரணங்களினால் நாயகியின் அழகைக் கொண்டாடுவது வழக்கம் ; உண்மையில் அவளழகில் தான் ஈடுபட்டிருப்பது முதற்காரணம் ; பிரிந்தகாலத்தில் இக்கொண்டாட்டம் தன்னுடைய தரிப்புக்கு உறுப்பாயிருக்குமென்பது இரண்டாங்காரணம்; 'இவர் நம்மைப் பிரிந்து நெடும்போது உயிர்தரிக்கமாட்டார் ; கடுக வந்திடுவர்' என்று நாயகி தெரிந்துகொண்டு ஆறியிருக்க வேணுமென்பது மூன்றுங்காரணம்.

நாயகியின் கண்ணழகி லீடுபட்டுப் பேசும் பாசுரமிது. கூர்மையான நுனியாலே எதிரிகளை யழிக்கும் வேல்போலக் கூர்மையான நோக்கத்தால் என்னை வருத்துகின்றன இக்கண்கள் என்பது தோன்ற 'ஈர்வனவேலும்' எனப்பட்டது. மீன்போலே மடப்பமும் பிறழ்ச்சியுங்கொண்டுள்ளன என்பது தோன்ற 'அம் சேலும்' எனப்பட்டது. 'வேல்போலவும்' என்னவேண்டிய உவமவுருபு தொக்கியிருக்கின்றதென்க. இலக்குத்தப்பாது மர்மத்திலே பட்டுவிடாமல் தைத்து உயிரைக்கவரும் அம்புபோல இவையும் உயிர்நிலையிலே பட்டு அதனைக்கவராமல் விடுவதில்லை யென்பது தோன்ற '**உயிர் மேல்மிளிர்ந்து இவையோ பேர்வனவோவல்ல**' எனப்பட்டது. அநித்தியமாய் நாசமடையுந் தன்மையதான உடம்பை அழியச்செய்வதுமாத்திரமே யல்லாமல் நித்யமாய் அழியாத்தன்மையதான உயிரையும் அழியச்செய்யத் தொடங்கினமையும் தோன்றும். **பேர்வனவோ அல்ல**—பறிக்கக்கூடியனவாக இல்லை என்றபடி. மன்மதனுடைய பஞ்சபாணங்கள் செய்யுந் தொழில்களையெல்லாம் இவ்

விரண்டுந் தாமே செய்வனவென்பது 'தெய்வநல் வேட்கணைப் பேரொளியே சோர்வன' என்றதன் கருத்து. ஓயாத சிந்தையை விளைத்தல், நிறத்தை வேறுபடுத்தல் முதலியன மன்மதபாணங் களின் தொழில்கள்; இவற்றையே நாயகியின் கண்களும் செய்கின் றனவென்க.

நீலச்சுடர்விடு மேனியம்மான் விசும்பூர்தேர்வன = தம்மை ஒருகால் அநுபவித்தவர்கள் மறுபடியும் திரும்பமுடியாமையில் ஸ்ரீவைகுண்டத்தை ஒத்திருக்கின்றனவாம் கண்கள். இந்த லீலா விபூதியை வசப்படுத்திக்கொண்டளவில் திருப்திபெறுமல் நித்ய விபூதியாகிய பரமபதத்தையும் வசப்படுத்திக்கொள்ளத் தேடு கின்றவை என்றும் பொருள்கொள்ளலாம். 'விசும்பூர் தேர்வன' என்பதற்குப் 'பரமபதத்தைத் தேடுகின்றவை' என்று பொரு ளாவதுபோல, 'பரமபதத்திஞல் தேடப்படுகின்றவை' என்றும் பொருளாகுமாதலால், 'பரமபதத்தில் அளவுகடந்த இன்ப மநுப விக்கும் நித்யமுக்தராலும் ஆசைப்பட்டு நாடுதற்குத் தகுந்தவை' என்றுமாம்.

தெய்வ மன்னீர கண்ணே? = நம்பிள்ளை வியாக்கியானத்தை நோக்குங்கால் இவ்விடத்தில், ஒலிவடிவில் வேறுபடாது எழுத்து வடிவில் மாத்திரம் வேறுபடும் இருவகைப்பாடபேதங்கள் கொள்ள வேணும். நம்பிள்ளையீடு:—"தைவங்களினுடைய ஸ்வபாவத்தை யுடையனவாயுள்ளன என்னுதல்; அன்றிக்கே, தெய்வமன்ன ரென்று இவர்கள் தங்களுக்குப்பேராக்கி அப்ராக்ருதஸ்வபாவைக ளான உங்களுடைய என்னவாயிருந்தன." என்று. இங்குச் சொன்ன இரண்டு பொருள்களுள் முதற்பொருளுக்கு 'அந்நீர' என்று தந்நகரப்) பாடம் ஆகும்; இரண்டாவது பொருளுக்கு 'அன்னீர' என்று (றன்னகரப்) பாடமாகும். தெய்வமந்நீர = திவ்யமென்று சொல்லத்தக்க அப்படிப்பட்ட நீர்மை [தன்மை]யை யுடையனவென்க. அன்னீர = 'அன்' என்னும் உவமவிடைச் சொல்லடியாப்பிறந்த 'அன்னீர்' என்னும் முன்னிலைப் பன்மைக் குறிப்பு வினையாலணையும் பெயரின் ஆறும் வேற்றுமை விரி. அ— ஆறனுருபு. அசையென்றும் கொள்ளலாம்.

ஆழ்வாருடைய ஞானவிளக்கத்தைக்கண்டு கொண்டாடுகிற பாகவதர் வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். இப்பாட்டுக்கு ஸ்வாபதேசத்தில் தலைமகள்—ஸ்ரீவைஷ்ணவர்கள். [ஈர்வனவேலும் அஞ்சேலும்] இவரது ஞானத்தின் கூர்மையும் நீர்மையும் புறசமயிகளைத் தோற்கடித்து ஸ்வகீயர்களை உகப்பிக்குந்தன்மையுஞ் சொன்னபடி. [உயிர்மேல் மிளிர்ந்து இவையோ பேர்வனவோவல்ல] இவருடைய ஞானம் சேதநர் யாவரிடத்தும் பூர்ணமான அருளைத் தவறாமல் கொண்டுள்ளமையைச் சொன்னபடி. [தேய்வநல் வேட்கணைப் பேரொளியே சோர்வன] மன்மதபாணங்களாகிய புஷ்பங்கள் எப்படி ஸுகுமாரமாயிருக்கின்றனவோ அப்படி இவருடைய ஞானமும் ஸுகுமாரமாயிருக்கின்றதென்கை. முரட்டு ஞானமன்றென்கை. [நீலச்சுடர்விடு மேனியம்மான் விசும்பூர் தேர்வன] 'இருள் தருமாஞாலத்துள் இனிப்பிறவி யான்வேண்டேன்' என்று இவ்விபூதியை வெறுத்து நித்யவிபூதியில் வாழ்ச்சியைத் தேடுவதே இவரது ஞானத்துக்குத் தொழிலென்கை. [இச்செழுங்கயலே] எம்பெருமானுடைய மத்ஸ்யாவதாரம் முதலியவற்றில் ஆழ்ந்து தந்மயமாயிற்று இவருடைய ஞானமென்க. 'தெய்வமன்னீ (ங்கீ)ர கண்ணே' என்றது—தேவரீர் லோகவிலக்ஷணரா யிருப்பது போலவே தேவரீருடைய ஞானமும் லோகவிலக்ஷணமா யிருக்கின்றதென்றவாறு. இங்ஙனே இவருடைய ஞானவைபவத்தைக் கண்ட அன்பருடைய பாசுரமாயிருக்கிறது இது. .... (௧௪)

கயலோ நுமகண்களென்று களிறுவினவி நிற்றீர் *
அயலோரறியிலு மீதென்ன வார்த்தை! * கடல்கவர்ந்த
புயலோடுலாங் கொண்டல்வண்ணன் புனவேங்கடத் தெம்மோடும்
பயலோவிலீர் * கொல்லைகாக்கின்ற நாளும் பலபலவே. (௧௫)

களிறு வினவி { யானை (இங்குவரக் கண்டதுண்டோ? என்று) கேட்கத் தொடங்கி

கயலோ நும கண்கள் என்று நிற்றீர் { 'உங்கள் கண்கள் கயல் மீன்கள் தாமோ?' என்று (எங்கள் கண்களைக் கொண்டாடிக்) கால் போராமல் நின்றீர்;

| | |
|---|---|
| அயலோர் அறியிலும் | அயலார் அறிந்தாலும் |
| ஈது என்ன வார்த்தை | இதுஎன்ன பொருந்தாத வார்த்தை; |
| கடல் கவர்ந்த | கடல்நீரை முழுதுங் கொள்ளை கொண்டதும் |
| புயலோடு உலாம் | மழையோடு மந்தமாகச் சஞ்சரிப்பதுமான |
| கொண்டல் | காளமேகம் போன்ற |
| வண்ணன் | (குளிர்ந்த) திருநிறத்தையுடையனான எம்பெருமானது |
| புனம் வேங்கடத்து | (பல) கொல்லைகளையுடைய திருவேங்கட மலையிலே |
| கொல்லை காக்கின்ற நாளும் பல பல | (நாங்கள்) கொல்லை காத்துவருகிற மிகப்பல நாள்களிலொன்றிலும் |
| எம்மொடும் பயலோ இலீர் | எங்களோடு (நீர்) பாகமுடையீரல்லீர். |

* * *— புனத்திடைக் களிறு வினவவந்து கண்ணழகைக் கொண்டாடின நாயகனைக் குறித்துத் தோழி கருத்தறிந்து உரைத்த பாசுரமிது. இங்குப் பரம போக்யமான பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் சில அறியத்தக்கன;— "இயற்கையிலே கலந்து பிரிந்த தலைமகன் இரண்டாங் கூட்டத்துக்காகப் புனத்திலே வந்து கிட்டக்கடவதாகக் குறிவாவிட்டுப்போய்க் காலாதிக்ரமம் பிறந்து பின்பு அங்கே சென்று கிட்டினவன் இவர்களைக்கண்டு கலங்கி அஸங்கத பாஷணம் பண்ண, அவர்களும் அத்தைக்கொண்டு, இவர் வருவதாகப் போனபடிக்கும் வந்தபடிக்கும் இப்போது ஆற்றாமை தோற்றப் பேசுகிற பேச்சுக்கும் ஒரு சேர்த்தி கண்டிலோமென்று சிரித்துக் கொண்டாடுகிறார்கள். இவன் தான் விரஹவ்யதையாலே, என்றும் ஆனை வேட்டைக்குப் போம் பழக்கத்தாலே ஆனை வேட்டையை வினவிக்கொண்டு செல்லக்கடவதாக நினைக்கிறான். பிடியை யிழந்ததொரு களிறு தன் ஆற்றாமையாலே அமணானைப்பட்டுத் திரியுமாபோலே இவர்களை யிழந்து தான் ஆற்றாமையோடே திரிகிறபடியை அந்யாபதேசத்தாலே ஆவிஷ்கரிக்கிறான்." என்று.

காந்தர்வ விவாஹ முறைமையில் நாயகியோடு புணர்ந்து, தெய்வம் பிரிக்கப் பிரிந்தநாயகன் முன் ஸங்கேதத்தின்படி நாயகியுர்

தோழியும் தினைப்புனங்காக்கிற வியாஜத்தாலே தன் வரவை எதிர் பார்த்திருக்கும் கொல்லைப்புறத்தே கால தாமதமாகச் சென்று நின்று, 'நாம் தாமதித்து வந்தோமே, இவர்களது மனம் சினங் கொண்டு வேறுபட்டிருக்கக் கூடுங்கொல்!, இப்போது இவர்க ளுடைய அன்பு எவ்வாறிருக்கின்ற தென்பதை நாம் தெரிந்து கொள்ளாமல் பழைய அன்பு வார்த்தைகளைச் சொல்லுதல் தகாது, ஆகவே அப்ரஸ்துதமான ஸாதாரண வார்த்தைகளைப் பிரஸ்தாவித்து அவற்றுக்கு இவர்கள் கூறும் மறுமொழிகளால் இவர்களது அன்பு நிலைமையை அறிந்துகொண்டு பின்னர் நாம் அன்பு வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கலாம்' என்றெண்ணிக் களிறுவினவத் தொடங் கினான்; அதாவது என்னென்னில்; திருக்கோவையாரில் இது **வேழம் வினா**தலென்று வரையப்பட்டுள்ளது. "வேழம் வினாத லென்பது—குறைகூறத் துணியாநின்ற தலைமகன் என் குறையின்ன தென்று இவளுக்கு வெளிப்படக் கூறுவேனாயின் இவள் மறுக்கவுங் கூடுமென உட்கொண்டு என்குறை இன்னதென்று இவள்தானே உணருமளவும் கரந்த மொழியாற் சில சொல்லிப் பின் குறையுறு வதே காரியமென, வேட்டை கருதிச் சென்றானாக, அவ்விருவரு மைச் சென்று நின்று தன்காதல் தோன்ற 'இவ்விடத்தொரு மத யானை வரக்கண்டீரோ?' என வேழம் வினவாநிற்றல்' என்பது திருக்கோவையாருரை வாக்கியம்.

நாயகியையும் தோழியையுங்கண்ட நாயகன் யானை வேட்டை நடத்து மியல்பினனான மஹாவீரனாகையாலே ஏதோ வேட்டைக் காகத் தான் காட்டிடத்தே வந்ததாகவும், அங்கு ஒரு யானை தன் பிடியைத் துறந்து ஓடிச் சென்றதாகவும், அதனைத் தேடிக்கொண்டு தான் வருவதாகவும் பாவனைகாட்டி 'இங்ஙனே ஒரு மதயானை வரக் கண்டதுண்டோ?' என்று அப்புனங்காப்பவரை நோக்கிக் கேட்பதே களிறுவினாதல் என்றும் வேழம்வினாதல் என்றுங் கூறப் படும். (இங்ஙனே கலைமான் வினாதல் வழிவினாதல் பதிவினாதல் பெயர்வினாதல் முதலிய வினாக்களுமுண்டு. காதலியோடு பேசக் கருதும் காதலன் 'தீர்த்தம் கிடைக்குமோ?, சுண்ணாம்பு சிறிது அகப்படுமோ?' என்று சில அபேக்ஷைகளை வியாஜமாகக் கொண்டு புகுந்து வார்த்தை சொல்லவும் கருத்தறிந்து கொள்ளவும் இடம் பெறுதல் உலகவியற்கையிலுங் காணத்தக்கது.)

நாயகன் தான் பேசுதற்கு வியாஜமாகச் சிலவற்றை வினவத் தொடங்கினுலும் நாயகியின் கண்ணழகில் ஏற்கனவே ஈடுபட்டவனுகையாலும், இப்போதும் அக்கண்ணழகு பரவசமாக்குகிறபடியாலும் அதனைக் கொண்டாடுகிற முகத்தால் தன் ஆற்றாமையைத் தெரிவிக்கும் வார்த்தைகளும் இவன் வாயில் ஊடே வெளிவந்துவிட்டன; 'இவை கண்களோ? கயல்களோ?' என்றாற்போலச் சில வார்த்தைகளையுஞ் சொல்லிவிட்டான்; இவற்றால் அவனது கருத்தைக் குறிப்பாலறிந்த தோழி அவனது ஆசையை மறுப்பதாகப் பிறர் நினைக்கும்படியாகப் பேசித் தலைவியின் ஆற்றாமையைக் குறிப்பா லுணர்த்துகிறாள் இப்பாட்டில். அன்புமிகுதி தோற்றும் விதமாகவும் அன்பை மறுத்துரைக்கும் விதமாகவும் இப்பாசுரத்திற் சொற்போக்கு அமைந்திருக்கு மழகு அறியத்தக்கது.

[கயலோநும கண்களென்று களிறு வினவி நிற்றீர்] இதை இரண்டுபடியாக யோஜிக்கவேணும்; 'களிறுவினவிக் கயலோநும கண்களென்று நிற்றீர்'— நீர் யானையைப்பற்றிக் கேட்க வந்தவராயின் அந்தக் கேள்வியோடு நில்லாமல் எமது கண்ணழகைப் பற்றியும் பேசுகின்றீரே, [அயலோ ரறியிலுமீ தென்னவார்த்தை] அஸங்கதமான இவ்வார்த்தை அக்கம்பக்கத்தி லுள்ளாருடைய செவியில் பட்டால் என்ன நினைப்பார்கள்? 'இவர்களுக்கு ஏதோ ஸம்பந்தமுண்டு போலும்' என்று நினைத்துக் குடியைக் கெடுத்திடுவார்களே!; இப்படிப்பட்ட அஸங்கதமான பேச்சை நிறுத்தும் என்பதாக மேலெழுந்த அபிப்பிராயம். இனி, அன்பு தோற்றச் சொல்லு மபிப்பிராயத்திற்கிணங்க இரண்டாவது யோஜனைகாண்மின்;— [கயலோநும கண்களென்று களிறுவினவி நிற்றீர், அயலோரறியிலும் ஈதென்ன வார்த்தை!] 'நுமகண்கள் கயலோ?' என்று எங்கள் கண்ணழகிலீடுபட்டுப் பேசினீர்; உமது உகப்புக்குப் பரம ஸந்தோஷ மடைந்தோம்; அதற்கு மேலே யானையைப் பற்றியும் கேட்டீரே, அது எதுக்கு? நம் கண்ணழகில் ஈடுபட்டே வந்திருக்கிறீர் என்று நாங்கள் எண்ணி மகிழ வொண்ணாமலும், 'வேறு வேட்டைக்காரியமாக வந்திருக்கிறார் போலும்' என்றெண்ணி வருந்தும்படியாகவும் களிறுவினவி நிற்பது தகுமோ? நமது அன்பை அயலோர் அறியிலும் அறிக; அதனால் நம் குடி

என்ன கெட்டுப்போகும்? [ஈதென்ன வார்த்தை] வந்த காரியத்தை விட்டுக் களிறுவினவுதல் ஒரு வார்த்தையோ? என்பது உட்கருத்து. இங்கு 'அயலோர்' என்றதனால்—'நாங்கள் உமக்கு உரியோம், நீங்கள் எமக்கு உரியீர்' என்கிற கருத்து வெளியிடப்பட்டதாகும். நாங்கள் உமக்கு அயலார் அல்லோம், அயலார் வேறு உளர் என்றவாறு.

[புனவேங்கடத்து எம்மோடும் பயலோவிலீர்] $ பயல் என்று பாகமாய் எங்களோடு உமக்குக் கூட்டுப்பயிரில்லையே என்றபடி;

ஆதலால் புதியராய்வந்த நீர் கூட்டுப்பயிர் பார்ப்பவர் போல இங்கு எம்முடன் நெடும்பொழுது வீண் பேச்சுப்பேசி நிற்பது தகாது. [கொல்லை காக்கின்ற நாளும் பல பலவே] நாங்கள் புனங் காப்பது நேற்று இன்று அல்ல; பல வருஷகாலமாகத் தினந்தோறும் புனங்காத்து வருகிறோம்; இப் புதுமையை ஒரு நாளுங் கண்டதில்லை; நெடுநாள் கூட்டுப்பழக்கமுடையவர்போல நீர் இங்குப் பேசி நிற்பதுதகாது, நடக்கச் செல்லும்—என்பதாக மேலெழுந்த அபிப்பிராயம். உமது வருகையை எதிர்பார்த்து நாங்கள் கொல்லை காத்தலென்று ஒரு வியாஜம்வைத்து நெடுநாளாகக் காத்திருக்க நீர் இன்றளவும் வந்திலீரே; எம்மோடு கூட்டுறவு கொள்வதில் ஆசை வைத்திலீரே என்பதாக உட்கருத்துக் காண்க. [பயலோ இலீர்] நெடுநாள் பழகினாலும் கண்டறியாதனபோல என்றும் புதியனவாயுள்ளன உமது அழகுடைமை மூதலியன என்றவாறுமாம். தோழியானவள் இங்ஙனங்கூறித் தலைமகளின் காதலைத் தலைமகனுக்குக் குறிப்பித்தபடி. .... .... (கரு)

பலபல வூழிகளாயிடும் * அன்றியோர் நாழிகையைப்
பலபலகூறிட்ட கூறாயிடும் * கண்ணன் விண்ணனையாய்!
பலபலநா ளன்பர்கூடிலும் நீங்கிலும் யாமெலிதும்
பலபல சூழலுடைத்து * அம்ம! வாழியிப் பாயிருளே. (கசு)

---

$ "பாதியும் சிற்றூணும் பன்னரும் பயலெனல்" என்ற பிங்கலந்தை நிகண்டினால் பயலென்பதற்குப் பாகமென்னும் பொருளுண்மை யறிக. 'பயிலோ இலீர்' என்றும் சிலர் ஓதுவர்; அப்பாடத்துக்கு—பழக்க முடையீரல்லீர்' என்று பொருள்; பயில்—முதனிலைத் தொழிற்பெயர்: புதியரான நீர் பழகினார்போல இங்கு நிற்பது தகுதியன்று என்றவாறு.

கண்ணன் விண் அனையாய் — எம்பெருமானுடைய பரமபதம் போல மிகப் பிரியமானவனே!,

பல பல ஊழிகள் ஆயிடும் — (நாயகரைப் பிரிந்த நிலையில் இருட்பொழுது) மிகப் பல கற்பங்களாகாநிற்கும்;

அன்றி — அதுவல்லாமல்

(நாயகரோடு கூடியிருக்கும் நிலையில் இந்தப் பொழுதுதானே)

ஓர் நாழிகையை பல பல கூறு இட்ட கூறு ஆயிடும் — ஒரு நாழிகையைப் பல பல பகுப்புக்களாக்கிய கூறுகளில் ஒரு கூறாக ஆகாநிற்கும்;

அன்பர் — நாயகர்

பல பல நாள் கூடிலும் — பலபலநாள் கூடிநின்றாலும்

(காலம் மிகச் சுருங்குதலால்)

யாம் மெலிதும் — யாம் வருந்துகிறோம்;

(அன்பர் பல பல நாள்) நீங்கிலும் — (நாயகர் பலபல நாள்) நீங்கிநின்றாலும்

(காலம் மிக வளர்தலால்)

யாம்மெலிதும் — யாம் மிக வருந்துகிறோம்;

(ஆதலால்)

இ பாய் இருள் — இந்தப் பரந்த இருட்பொழுது

பல பல சூழல் உடைத்து — சிறுமைக்கும் பல உபாயமுடைய தாய்ப் பெருமைக்கும் பல உபாய முடையதாயிராநின்றது:

அம்ம வாழி — (எந்த நிலையிலும் வருத்துகிற இவ்விருட்பொழுது) அந்தோ! வாழ்க.

* * *—நாயகனோடு கூடியிருந்து பிறகு விதிவசத்தாற் பிரிந்த நாயகி அப்பிரிவை ஆற்றமாட்டாதாளாய், நாயகனில்லாமல் இராப்பொழுதைக்கழிக்க முடியாதிருக்கிறபடியைத் தோழிக்குச்சொல்லுகிறாள். ஒருநாளும் விச்லேஷமில்லாத ஸம்ச்லேஷத்திலே தனக்கு ஆவலுள்ளமையை இதனால் வெளியிடுகிறபடி. இங்ஙனன்றியே, ஸம்ச்லேஷம் நடந்தபின்பு நாயகியை நோக்கித் தோழியானவள் அக் கலவிநிகழ்ச்சியின் தன்மையைப்பற்றிக் கேட்க, 'பிரிந்திருக்கும்போது காலம் நெடுகுவதுபோல, கூடியிருக்கும்போது காலம் குறுகும்படி என்னே!' என்று கலவிநிலையிற் காலங்கழிவது தெரியாது கழிந்த இன்பச் சிறப்பைக் கூறினாள் நாயகி—என்றுங் கொள்ளலாம்.

'நீங்கில் ஊழியாயிடும்; கூடில் நாழிகைக் கூறாயிடும்' என்று மாறிச் சென்று அந்வயிப்பதால், எதிர்நிரனிறைப் பொருள்கோள்;

மொழிமாற்று நிரனிறை, மயக்கநிரனிறை யென்பதும் இது. நாயக நாயகிகள் பரஸ்பரம் கூடியிருக்கும்போது நீண்ட காலங்களெல்லாம் ஒரு நொடிப்பொழுதுபோல் விரைவிற் கழிந்திடுதலும், பிரிந்திருக்கும்போது அற்பகாலமும் நெடுகித் தோற்றுதலும் ஒவ்வொருவருடைய அநுபவத்திலும் காணத்தக்கதாம்.

**அன்பர் நீங்கில் பலபல வூழிகளாயிடும்** = நாயகரைப் பிரிந்து நிற்குங்காலம் பல அவாந்தர கல்பத்தையுடைத்தான பல மஹா கல்பங்கள்போலே நீண்டு தோற்றுகின்றது என்கை. ('ஊரெல்லாந்துஞ்சி' என்னுந் திருவாய்மொழியை இங்கே நினைப்பது.) **அன்பர் கூடில் ஓர் நாழிகையைப் பலபல கூறிட்ட கூறாயிடும்** = நாயகரோடு கூடியிருக்குங் காலம் மிகச்சிறிய பொழுதாகக் கழிந்துவிடுகின்றது; ஒரு நாழிகையைப் பலபல கூறுகளாகப் பகுத்துக்கொண்டே வந்தால் கலை காஷ்டை நிமிஷம் முதலியவற்றால் இனிக் கூறிட வொண்ணாதென்னும்படி ஓர் சிறிய கால அளவு தேறுமே; அந்த க்ஷணம்போல் கழிந்துவிடுகின்றதாம் ஸம்ச்லேஷகாலம்.

ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் எம்பெருமான் பிராட்டியோடு புணர்ந்து அவளை உகப்பிக்கும் பரிசு சொல்லுகிறவளவில், "வஹந்நாரவஸஹாவநிவேஶர்வஷ்யா ஶ்ரீவிஹ்ருதீஷயா। க்ஷணாணுவத்க்ஷிப்தபராதிகாலயா ப்ரஹர்ஷயந் ஶ்ரீவிஹ்ருதீம் ஶ்ரியா ஸஹ" (44) என்ற ச்லோகத்தில், "க்ஷணாணுவத் க்ஷிப்த பராதி காலயா" என்ற விசேஷணம் இங்கு நோக்கத்தகும்; பிரமனுடைய ஆயுட் பிரமாண காலத்திற்குப் பரம் என்று பெயர்; அதில் பாதியளவான காலத்திற்குப் 'பரார்த்தம்' என்று பெயர்; இப்படிப்பட்ட மிகப் பெரிய பெரிய காலங்களெல்லாம் சிறிய நொடிப்பொழுதுபோல் கழிகின்றனவாம் பகவத் க்ரீடையில். "அவிதித கதயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத்—அவிதித கதயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத்" என்று உத்தரராம சரித நாடகத்திற் சொன்னதையும் ஒருபோலியாக இங்கு ஸ்மரிப்பது. ஆச்சரியமாக லீலாரஸங்களை யநுபவிக்கத் தொடங்கிவிட்டால் பல்கோடி நூறாயிரம் ஸம்வத்ஸரங்களும் அவலீலையாகக் கழிந்துபோமிறே. "கோழிகூவென்னுமால் தோழி நான் என் செய்கேன், ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று, கோழிகூவென்னுமால்" என்ற கலியன் பாசுரமும் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது.

**அன்பர் கூடிலும் நீங்கிலும் யாம் மெலிதும்**= கூடியிருக்குங் காலம் ஒரு க்ஷணமாய்க்கழிந்து போகிறதே யென்று வருத்தம்; பிரிந்திருக்குங் காலம் பலபல காளராத்ரியாய் நெடுகுகின்றதே யென்று வருத்தம். ஸம்ச்லேஷமானது விச்லேஷத்தை அடுத்துடைத்தன்றி யிராதாதலாலும் அந்த ஸம்ச்லேஷ காலந்தான் அதிஸ்வல்பமாகக் கழிதலாலும் அந்தோ! ஸம்ச்லேஷத்தையும் விரும்ப யோக்யதை யில்லையாயிற்றே! என்று வருந்துகிறபடி. **மெலிதும்**= 'தும்' விகுதி கால மூணர்த்தாது தன்மை.புணர்த்திற்று.

**இப்பாயிருள் பலபல சூழலுடைத்து**= இராப்பொழுதின் ஸாமர்த்தியத்தை என் சொல்லுவேன்!, கலவியில் குறுகக்கற்றது, பிரிவில் நெடுகக்கற்றது. **சூழல்**— சூழ்ச்சி; விரகு. **அம்ம**— இடைச்சொல் (அவ்யயம்); வியப்பும் வருத்தமுந் தோன்றும். **வாழி**— மிக்க வெறுப்பினால் நிந்திக்க வேண்டுமிடத்தில் விபரீத லக்ஷணையாக 'வாழி' யென்கிறது.

இதற்கு உள்ளுறை பொருளாவது:— பாகவதரைக் கூடிய நிலையில் அதிஸ்வல்பமும் அவர்களைப்பிரிந்த நிலையில் அதி மஹத்துமாகிற காலத்தினால் இருவகையிலும் தாம் படுகிற தளர்ச்சியை ஆழ்வார் தமது அன்பர்க்குக் கூறுவதாம். 'இப்பாயிருள்' என்றது—மோஹாந்தகாரத்தைச் செய்வதான காலம் என்றபடி. **கண்ணன் விண்ணனையாய்**= காலபரிணாம மில்லாத பரமபதம்போலுள்ளீர் நீங்கள் எனக்கொண்டாடியபடி. 'அம்மவாழி' என்றது— தான் நினைத்த வடிவு கொள்ளவல்ல காலத்தின் தன்மையை வியந்து நொந்தபடி. .... .... .... .... (கசு.)

இருள்விரிந்தாலன்ன மாநீர்த் திரைகொண்டு வாழியரோ *
இருள்பிரிந்தாரன்பர் தேர்வழி தூரல் * அரவணைமேல்
இருள்விரிநீலக்·கருநாயிறு சுடர்கால்வதுபோல்
இருள்விரிசோதி * பெருமா னுறையு மெறிகடலே! (கஎ)

| | | | |
|---|---|---|---|
| **இருள் விரி** | இருளை வெளிப் படுமிழ்கிற | **நீலம்** | நீலரத்னம் போன்ற |

1. பெரிய திருமொழி 10—10—6.

| | | | |
|---|---|---|---|
| கரு | கருமை நிறமுடைய | எறி கடலே | அலைவீசுகிற கடலே! |
| ஞாயிறு | ஸூர்ய மண்டலமொன்று | வாழி | வாழ்வாயாக; |
| சுடர் கால்வது போல் | ஒளி வீசுவது போல, | இருள் விரிந்தால் அன்ன | இருள்பரம்பினாற் போன்ற |
| இருள் விரி சோதி பெருமான் | கருமை நிறம் மிக்க ஒளியையுடைய திருமால் | மா நீர் திரை கொண்டு | கறுத்த நீரையுடைய அலைகளால் |
| அரவு அணை மேல் | சேஷ சயனத்தின் மேல் | இருள் பிரிந்தார் அன்பர் தேர் வழி தூரல் | இருளிலே என்னை விட்டுப் பிரிந்து சென்ற நாயகருடைய தேர் போனவழியை அழியா தொழிவையாக. |
| உறையும் | நித்யவாஸம்செய்யப் பெற்ற | | |

* * *— தலைவி கடலைநோக்கித் தேர்வழி தூரல் என்னுந் துறை இது. இத்துறை திருக்கோவையாரில் 'தேர்வழி நோக்கிக் கடலொடுகூறல்' என்று கூறப்பட்டது. "உள்ளுமுருகி உரோமஞ்சிலிர்ப்ப வுடையவனாட், கொள்ளுமவரிலொர் கூட்டந்தந்தான் குனிக்கும் புலியூர், விள்ளும் பரிசு சென்றார் வியன் தேர்வழிதூரல் கண்டாய், புள்ளுந்திரையும் பொரச் சங்கமார்க்கும் பொருகடலே!" (185) என்ற திருக்கோவையாரைக் காண்க. களவுமுறையால் நாயகியைப் புணர்ந்துநின்ற நாயகன் அதனால் ஊரெங்கும் பழி பரவுதலையறிந்து அப்பழிதூற்றல் அடங்குமாறு அவளைச் சில நாள் பிரிந்திருக்கக் கருதி அதனை நாயகிக்குக் கூறாமல் தான் பிரிவதை அவளறிந்தால் வருந்துவளென்று அவளறியாத படியும் ஊரார் அறியாதபடியும் அவள் முகங்காண்கின்றபொழுது தான் போகமாட்டாமையாலும் இருளிலே பிரிந்து செல்ல, பின்பு அப் பிரிவையறிந்து ஆற்றாது வருந்துகின்ற நாயகி அவனது தேர்ச்சக்கரம் சென்ற அடையாளத்தை நோக்கி, அவன் திரும்பி வருமளவும் அதனையே தனது உயிர்க்குப் பற்றுக்கோடாகப் பாவித்துப் பார்த்துக்கொண் டிருக்கையில், அங்ஙனம் பிரிந்திருந்து இரங்குமிடம் கடற்கரையாகிய நெய்தல் நிலமாதலாலே அத்தேர்க்கா லடையாளத்தைக் கடலின் அலை வீசிவந்து அழிக்கப்புக, அழித்திடாதேயென்று அதனை வணங்கி வேண்டிக் கொள்வதாமிது.

முன்பு ஸ்ரீராமபிரான் வநவாஸயாத்திரை புறப்பட்டபொழுது உடன்சென்ற அயோத்தி நகரத்துச் சனங்கள் அறியவொண்ணாதபடி இரவிலே தேரேறிச்சென்றாற்போலச் சென்றனனும் இந்த நாயகனும். தேர்க்கால்வழியையும் மறைத்துச்சென்றான் இராமபிரான்; அங்ஙனம் மறைத்துப் போகாமல் தெரியும்படி போனதே இவ்விடத்திற்கு வாசி. கடலே! இருளிற் பிரிந்தவரான அன்பருடைய தேர்வழியை இருள் விரிந்தாற்போன்ற மாநீர்த் திரைகளைக்கொண்டு, [தூரல்] மறைத்திடாதே யென்று கைகூப்பி யாசிக்கின்றாள். தேர்வழி தூராமல் தனக்கு உதவும்பொருட்டு 'வாழியரோ' என வாழ்த்துகின்றாள். கடலே! உனது தலைவனான பெருமான் எப்பொழுதும் உன்னைவிட்டுப் பிரியாது உன்னிடத்தே வாஸம் பண்ணுதலால் பிரிவுத் துயரறியாது களித்துக் கிளர்ந்துள்ளாய் நீ என்ற கருத்துப்படப் பின்னடிகள் அமைந்தன.

கடலினுறையும் எம்பெருமானை ஒன்றரையடிகளால் வருணிக்கிறது. உலகத்திலுள்ள பொருள்களுள் ஒன்றும் பெருமானுக்கு ஒப்பாகாதென்பது தோன்ற மூன்றாமடியில் அபூதோபமை [இல்பொருளுவமை] கூறப்படுகின்றது. எம்பெருமானது திருமேனியின் மிக்க ஒளியும் கரிய திருநிறமும்பற்றி வந்ததாம் இவ்வுவமை. நீலரத்னம்போன்ற கரியநிறமுடைய ஸூர்ய மண்டலமொன்று ஒளி வீசுவதுபோல் கருமைநிறம்மிக்க ஒளியையுடைய திருமால் என்கிறாள். 1. "ஓர் கருநாயிறு, அந்தமில்லாக் கதிர்பரப்பி அலர்ந்ததொக்குமம்மான்" என்பர் திருவாய்மொழியிலும். இருள்விரி, நீலம், கரு என்ற மூன்றையும் ஒருபொருட் பன்மொழியாகக் கொள்ளலுமாம்; மிகவுங் கரிய ஸூர்யன் என்றபடி.

'திரைகொண்டு தேர்வழிதூரல் வாழியரோ' என்னுது வாக்கியத்தினிடையில் 'வாழியரோ' என்றது—திரைக் கடலாகையாலே காரியஞ் சொல்லுமளவுங் கேளாதே அலைக்கைகளால் தேர்வழியை அழிக்கும்படியைக்கண்டு நடுவிலே சரணம் புக்கவாறு.

அன்பர் பகலில் பிரிந்து சென்றாராகில் அவர் ஆற்றாமையால் தளர்ந்து செல்லும் நிலையைக் கண்டு கொண்டிருந்து அதனைச்

1. திருவாய்மொழி 8—5—7.

சிந்தித்தாயினும் உயிர் தரிக்கலாம்; அங்ஙனமில்லாதபடி இருளிற் செல்லுகையால் இத்தேர்க்காலடையாளத்தையன்றி வேறு தஞ்சமுடையேனல்லேன் என்பது தோன்ற 'இருள் பிரிந்தாரன்பர்' என்றாள். சேர்தற்கு உரிய காலத்திலே பிரிந்து போனார் அந்தோ! என்றுசொன்னவுமாம்.

இங்கே பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் காண்மின் :— "பகலில் பிரிந்து போனாராகில் ஆற்றாமையாலே நடக்கமாட்டா தொழிகிறபடியையும் அவர் முகத்திலுண்டான குளிர்த்தியையும் ஸ்மிதத்தையுங்கண்டு தரித்திருக்கலாய்த்து; அவர்தாமும் பகலில் போகில் இவளைக் கண்டுவைத்துக் கால்நடை தாராதென்று இருளிலே போனார்: எங்கனும் போனாரும் மீண்டுவந்து சேருங்காலத்திலே போனார்; பதார்த்த தர்சநங்களாலே ஆறியிருக்கவொண்ணாத காலத்திலே போனார்; ஸம்போக காலத்திலே போனார்;"

தேர்வழி= தேர்ச்சக்கரம் போன அடையாளமுள்ள வழி. தூரல்= தூராதே; எதிர்மறை யேவலொருமை.

இதற்கு ஸ்வாபதேசப்பொருள் :— அன்பரான பாகவதரைப் பிரிந்து வருந்துகிற நிலையில் அவர்கள் பக்கல் தமது மநோரதத்தை இடைவிடாது செலுத்தி அதனாலேனும் ஒருவாறு ஆறியிருக்கிற ஆழ்வார் அம் மநோரதப்போக்கை இடையிற் குலையாதொழிய வேணுமென்று ஸம்ஸாரமாகிற கடலை நோக்கிப் பிரார்த்தித்துக் கூறுவதாம். ஸம்ஸாரத்தை அலைவீசுங் கடலென்றது—பல துன்பங்களை மேன்மேல்தந்து அகப்பட்டவ ராழ்ந்திடும்படி பாவுந் தன்மையதாதலாலும் அளத்தற்கரிய பரப்புடைமையாலு மென்க. ஸம்ஸாரம் எம்பெருமானுடைய லீலாவிபூதி யென்பதைக் குறிக்கும் பின்னிரண்டடி. எம்பெருமா னடியார்கள் பக்கல் ஈடுபட்ட தமக்குத் தீங்கு செய்திடாமைப் பொருட்டு, ஸம்ஸாரத்துக்கு உள்ள பகவத்ஸம்பந்தத்தை யெடுத்துக்காட்டி உறவு கொண்டாடியபடி. இருள் விரிந்தாலன்ன மாநீர்த்திரைகொண்டு= மோஹாந்தகாரப் பெருக்கை உண்டுபண்ணுகிற பல ஸம்ஸாரக் கவலைகளாகிற அலைகளால், இருள் பிரிந்தாரன்பர் தேர்வழிதூரல்= இருள் தருமா

ஞாலமான இவ்வுலகத்திலே எம்மைவிட்டுப் பிரிந்து சென்ற ஆப்த பந்துக்களான பாகவதர் விஷயத்தில் யான் செலுத்துகிற மனோரத நெறியைக் குலைத்திடாதே என்று வேண்டியபடி. தமக்கு இத்தீங்கு செய்யாமல் உதவும் பொருட்டு வாழி யென்றார்.

வாழி, அரோ = அசை. வாழிய என்னும் வியங்கோள் ஈற்றுயிர் மெய்கெட்டு வாழி என நின்றது. வாழியரோ என்பதில் வாழியர் என்பதை ரகரமெய்யீற்று வியங்கோ ளெனக்கொண்டு ஓகாரத்தை அசை யென்னவுமாம். .... .... .... (கள.)

**கடல்கொண்டெழுந்தது வானம் * அவ்வானத்தை யன்றிச்சென்று**
**கடல்கொண்டொழிந்த வதனாலிது * கண்ணன் மண்ணும் [விண்ணும்**
**கடல்கொண்டெழுந்த வக்காலங்கொலோ? புயற் காலங்கொலோ?**
**கடல்கொண்ட கண்ணீர் * அருவி செய்யாநிற்குங் காரிகையே. ***

| | |
|---|---|
| கடல்கொண்ட | கடலளவினதான |
| கண் நீர் அருவி | கண்ணீர் வெள்ளத்தை |
| செய்யா நிற்கும் | சொரிந்து நிற்கிற |
| காரிகையே | அழகிய நங்காய்!, |
| வானம் | ஆகாயமானது |
| கடல் கொண்டு எழுந்தது | கடலைக் கவர்ந்து கொண்டு கிளம்பியது; |
| கடல் | அக்கடல்தான் |
| அன்றி | (அங்ஙனம் தன்னைக் கொள்ளை கொண்ட ஆகாசத்தின் மீது) கோபித்து |
| அ வானத்தை சென்று கொண்டு ஒழிந்த அதனால் | ஆகாயத்தைப் போய்க் கவர்ந்து கொண்டு விட்டதனால் |
| இது | இந்த நிலை, உண்டாயிற்று; |
| கண்ணன் மண்ணும் விண்ணும் | எம்பெருமானுடைய உடைமையான மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் |
| கடல் கொண்டு எழுந்த அ காலம் கொல் ஓ | பிரளய சமுத்திரம் தன்னுள் ஆக்கிக் கொண்டு மேற்கிளர்ந்த அந்தக் கற்பாந்த காலந்தானோ? |
| (அன்றி) | |
| புயல் காலம் கொல் ஓ | மழைக்காலந்தானோ? (அறியேன்.) |

* * *— இப்பாட்டின் துறைவகையில் பூருவர்களுள் அபிப்ராய பேதமுண்டு; கீழ் ஏழாம்பாட்டைப் போல இதனையும் காலமயக்குத் துறை யென்னலாமென்பது நம்பிள்ளை பெரிய வாச்சான்பிள்ளைகளின் திருவுள்ளம். கார்காலங்கண்டழிந்த தலைவியின் ஆற்றாமைகண்டு தோழி இரங்கல் என்பது வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயரது கொள்கை. அதாவது—கார்காலத்திலே மீண்டு வருவேனென்று காலங்குறித்துப் பிரிந்துசென்ற நாயகன் அக்காலம்வந்தும் தான் வாராததால் நாயகியானவள் காலத்தை நோக்கி ஆற்றாதுவருந்த, தோழி அதுகண்டு இரங்கிக் கூறியது என்பதாம்.

“கலந்துபிரிந்த தலைமகன் கார்காலத்தைக் குறித்துப் போனானாய் அக்காலமும் வந்து இவன் வாராதொழிய, அத்தாலே ஆற்றாமை மீதூர்ந்து நோவுபடுகிற பிராட்டியைக்கண்ட தோழியானவள் அவன் வருமளவும் இவளை ஜீவிப்பிக்கைக்காகக் காலத்தை மயக்கி ஆச்வஸிப்பிக்கிறாளா யிருக்கிறது” என்பதுநம்பிள்ளை யீடு. அழகிய மணவாளச் சீயருரையில் ‘இது காலமயக்கமன்று’ என்று மறுத்துக் கூறப்பட்டிருப்பினும் அது ஸ்வதந்த்ரப்படி யென்று மறுக்கத்தக்கது. காலமயக்குத்துறையென்றே கொள்வது பொருந்தும். இதில் ‘புயற்காலங் கோலோ’ என்றுசொல்லி யிருத்தலால், காலங்தெளிந்த பாங்கி இரங்கியுரைத்த பாசுரமென்று கொள்ள வேணுமென்பது சீயர் கருத்து; கீழே காலமயக்காகவந்த ஏழாம் பாட்டிலும “திருமால் கோலஞ் சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு தண் பூங்காலங்கொலோ வறியேன்” என்றிருக்கின்றது; இங்கும் அங்ஙனே யிருப்பது அநுசிதமன்று.

நாயகியோடு கூடியிருந்த நாயகன் ஒரு காரியப்பாடாகத் தேசாந்தரஞ் செல்லவேண்டி ‘மாதே! நான் இப்போது புறப்பட்டுப் போய்க் கார்காலத்திலே திரும்பி வருகின்றேன்’ என்று சொல்லிக் காலங்குறித்துப் பிரிந்து சென்று அக்கார்காலம் வந்தவளவிலும் தான் வாராதிருக்க, ‘அந்தோ! நாயகன் குறிப்பிட்டகாலம் வந்துவிட்டதே!, இவ்வளவிலும் அவன் வந்திலனே!’ என்று கார்கால வரவையும் காதலன் வாராமையையும் நோக்கி வருந்துகின்ற தலைவியைத் தோழியானவள் ‘நங்காய்! நீ ஏன் வீணே வருந்துகின்றாய்? மெய்யே கார்காலம் வந்தாலன்றோ காதலன் வந்திடுவான்;

அவன் சொல்லிப்போன கார்காலம் வரவில்லை; பின்னை இது என்னென்று கேட்கிறாயோ, சொல்லுகேன் கேள்; ஆகாய [மேக] மானது கடலைத் தரையளவாகப் பருகி ஜலஜந்துக்களைத் துடிக்க விட்டுப் போயிற்று; அதனைக் கண்ட கடலானது 'பெரியதொரு தத்துவமாகிய நம்மை மதியாதே நம் பிரஜைகளையும் நோவுபட விட்டுநம்உடைமையை இப்படிபோ கொள்ளைகொண்டுபோவது ஆகாசம்!' என்று சீற்றங் கொண்டு அவ்வானத்தோடே போர் செய்யத் தொடங்கி யிருக்கின்றது! ஆகவே கடலும் வானமும் தம்மிலே கலந்து போர்செய்புங்கால மிதுவன்றி நாயகன் சொல்லிப்போன வர்ஷாகாலம் வந்திலது; என்று தலைவியை ஒருவாறு ஆற்ற வேண்டின தோழி காலத்தை மயக்கிக் கூறி, உடனே, இங்ஙனம் நாம் பொய் சொல்லிவிட்டாலும் தலைமகளுக்கு உண்மை தெரியாமற் போமோ? எப்படியாவது நம்மை ஆற்றுதற்காகக் கற்பனை வகையில் முழுப்பொய் கூறுகின்றாள் என்று நினைத்துக் கொள்வாள் என்றெண்ணி அப்படி அவள் நினைத்துக் கொள்ளாமைக்காகவே தானும் ஐயப்படுவதுபோல் பின்னடிகள் கூறுகின்றாள். எல்லாப் பொருள்களையும் முடிக்கவந்த பிரளய காலமோ? நம்மை முடித்தற்காகவே வந்த கார்காலந்தானோ? தெரிகிறதில்லையீ! என்கிறாள்.

'இது கார்காலமன்று' என்று நிஸ்ஸந்தேஹமாகச் சொன்னால் தானே தலைவிக்கும் ஆறுதல் உண்டாகும்; முதலில் காலத்தை மயக்கிச் சொல்லி, உடனே 'அக் கார்காலந்தானோ இது!' என்றும் சொல்லி வைத்தால் தலைவிக்கு வருத்தமேயன்றோ மிகும்; ஆறுதல் உண்டாகாதே யெனின்; 'நமது தோழி இரண்டு வகையாகவுஞ் சொல்லுகிறாள்; அவள் பொய் சொல்லுகிறவளாகில் 'இதுகார்காலமன்று' என்று துணிந்து சொல்லிவிடலாம்; அங்ஙனே சொல்லாமல் ஸந்தேஹமாகச் சொல்லி யிருப்பதால் அவளும் நிச்சயிக்க முடியாதபடி யிருக்கின்றது போலும்; இதை நாமே ஆராய்ந்து பார்த்து நிச்சயிப்போம்' என்று தலைவி நினைத்து 'இது கடலுக்கும் வானத்துக்கு முண்டான ஸ்பர்த்தையா? புயற்காலமா?' என்று ஆராயத் தொடங்குவள்; இந்த ஆராய்ச்சியில் சிறிதுபொழுது ஆறியிருந்திடுவள், அதற்குள் நாயகனும் வந்திடுவான் என்பது தோழியின் கருத்தாகலாம்.

**காரிகை**— அழகு; அதனை யுடையவளுக்கு ஆகுபெயர்.

எம்பெருமான் தன்னோடு ஸம்பந்த முடையாரை ஒருநாளும் கைவிடான்; உரிய காலத்திலே கைக்கொள்வன்; இது காலமன்று; அவன் திருவுள்ளத்திற் கொண்டிருக்குங் காலம் ப்ராப்தமாமளவும் ஆறியிருக்க வேணுமென்று ஆழ்வாரை அன்பர் ஆற்றுதல் இதற்கு உள்ளுறை பொருள்.

முதலடியில், **அன்றி**—உடன்பாட்டுத் தெரிநிலை வினையெச்சம்; கோபங்கொண்டு என்று பொருள். அன்றுதல்—கோபித்தலாதலை **"அன்றிய வாணனாயிரந் தோளுந்துணிய"** என்னுமிடத்துங் காண்க. .... .... .... (கஅ)

**காரிகையார் நிறைகாப்பவர் யாரென்று * கார்கொண்டின்னே**
**மாரி கையேறி யறையிடுங்காலத்தும் * வாழியரோ**
**சாரிகைப்புள்ள ரந்தண்ணந் துழாயிறை கூயருளார் -**
**சேரி கையேறும் * பழியாய்விளைந்ததென் சின்மொழிக்கே.** (க௯)

காரிகையார் நிறை காப்பவர் யார் என்று — ‘ஸ்திரீகளுள் (எம்முன்) அடக்கத்தை அழியாமற் பாதுகாத்துக் கொள்ள வல்லவர் யாவருள்ளார்?’ என்று கருதிச் செருக்கி

மாரி — மேகங்கள்

கார் கொண்டு — கருமைநிறங்கொண்டு

இன்னே — இவ்வாறு

கை ஏறி — ஒழுங்காக (வானத்தின் மீது) ஏறி நின்று

அறையிடும் காலத்தும் — அறைகூவுகிற காலத்திலும்

சாரிகை புள்ளர் — விரைந்த நடையையுடைய கருடப்பறவையை வாஹநமாக வுடையரான இத்தலைவர்

அம் தண்ணம் துழாய் — அழகிய குளிர்ந்த (தமது) திருத்துழாயை

கூய் இறை அருளார் — (இவளை) அழைத்து (இவளுக்கு)ச் சிறிதும் கொடுத்தருளுகிறாரில்லை;

(ஆகவே)

என் சில் மொழிக்கு — சில பேச்சுக்களையுடைய என் மகளான இவளுக்கு

சேரி கை ஏறும் பழி ஆய் விளைந்தது — (அவர் பக்கல் கொண்ட காதல் தான்) இவ்வூர் முழுவதும் பரவும் பழியாய்ப் பலித்தது;

வாழியரோ — இவள் இத்துன்பம் நீங்கி வாழ்ந்திடுக.

* * *—செவிலித்தாய் பழிக்கு இரங்கல் என்பது துறை. இன்ன காலத்திலே வருகிறேனென்று சொல்லிப் பிரிந்துபோன நாயகன் வாக்குத் தவறினதற்கு ஆற்றாத தலைவிக்கு நிகழும் பழிக்குச் செவிலித்தாய் இரங்குகின்றாளென்க.

அழகிய மணவாளச் சீயருரையில் 'பாங்கி பழிக்கிரங்கின பாசுரம்' என்று இது தோழி பேச்சாகக் கொள்ளப்பட்டிருந்தாலும், நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை முதலானாருடைய வியாக்கியானங்களில் தாய் பாசுரமாகக் கொள்ளப்பட்டிருத்தலாலும், 'என் சின்மொழிக்கு' என்று தனது உடைமையாதல் தோன்றக் கூறியுள்ள ஔசித்யத்தினாலும் இப்பாட்டைத் தாய் வார்த்தையென்றே கொள்ளுதல் பொருந்தும். பெரும்பாலும் தாய்வார்த்தை 'என்மகள்' என்ற வாய்பாடு தோன்றவும் தோழிவார்த்தை அவ்வாய்பாடு தோன்றாமலும் வரும். இது இவ்விருவர் வார்த்தைக்கும் எளிதில் வேறுபாடறியத்தக்க நுட்பங்களுள் ஒன்றாம்.

மேகங்கள் கர்ஜிப்பதை நோக்குங்கால், 'எங்கள் முன்னே ஸ்த்ரீகள் ஆரேனும் தங்கள் அடக்கத்தைக்காத்துக்கொள்ள வல்லாருண்டோ? ஆருமில்லை' என்று வீரவாதம் செய்வதொக்குமென்கிறாள் முன்னடிகளில். கார்காலத்தில் நாண் மட மச்சம் முதலிய பெண்டிர்க்குரிய குணங்களை எவரும் பாதுகாத்துக்கொள்ள முடியாமல் பதறுதல் ஸம்பாவிதமாதலால் மேகமுழக்கத்தை இங்ஙனே உத்ப்ரேக்ஷித்தல் பொருந்துமென்க. நிறையாவது-மனத்தில் அடக்கத் தக்கவற்றை வாய்விடாமல் அடக்குதல்; நாணம் முதலிய பெண்மைக் குண நிறைவுமாம். யார்? என்றவிஞ—எவரும் இலர் என எதிர்மறைப் பொருள் குறிக்கும். கார்கொண்டு என்பதற்கு-கோபங் கொண்டு என்றும் பொருள் கொள்ளலாம். "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள்" என்பது தொல்காப்பியம். கார்—கருமை என்னும் பண்பின் விகாரம்.

'கார் மாரி கொண்டு கையேறி' எனமாற்றி, மேகங்கள் மழையைக் கொண்டு அணிந்து ஏறி என்றுமுரைக்கலாம். கையேறுதல்—படையணி வகுத்தாற் போல வரிசைப் பட்டு நிற்றல். அறையிடுதல்—அறைகூவுதல், பலாத்காரமாகச்சண்டைக்கு அழை

த்தல். சண்டையில் தான் வெற்றிபெற்றதாகக் கோஷித்தலுமாம். மேகத்தின் கர்ஜனையையே அறைகூவுதலாகக் கற்பித்தது.

காற்றுக்கு ஏற்றபடி மிகவும் விரைந்து வருவதான மேகத்தின் வருகைக்கு ஏற்பத் தலைமகன் கடந்துவர வல்லனோவெனின், மிக விரைந்த நடையையுடைய கருடனை வாஹனமாக வுடையராதலால் இவர்க்கு எவ்வளவு தூரத்திலிருந்து வரவேண்டு மென்றாலும் வர முடியாமையில்லை யென்பதுதோன்ற 'சாரிகைப் புள்ளர்' என்றது. சாரிகை—விரைந்த நடையும் வட்டமிட்ட நடையுமாம். துழாய் அருளார்—இவள் ஆநந்திக்குமாறு கலவி தந்திடாராயினும் இவள் ஆறியிருந்து வாழ்தற் பொருட்டுத் தமது ஸம்பந்தம்பெற்ற திருத் துழாய்தன்னையும் தருகிறாரில்லையே யென்றவாறு. உயிர் தரு மூலிகை போலப் போனவுயிரையும் மீட்கவல்லது திருத்துழாய் என்பது தோன்ற அதனைத் தண்ணந் துழாய்—என விசேஷித்துக் கூறினது. கூயருளார்—திருத்துழாய் தாராவிடினும் அன்போடு அழைப்பது தானும் அரிதாயிருந்த தென்கை.

என்சின்மொழிக்குச் சேரி கை யேறும் பழியாய் விளைந்தது— எம்பெருமான் திருத்துழாய் தாராவிடில் இவட்குவரும் பழியாவது என்னெனில்; இந்நிலையிலும் வந்நில னென்றும், இவள் மேல் விழுந்து ஆசைப் படுகிறானென்றும், அவனிடத்து ஈடுபட்ட இவ ளுக்கு இவ்வளவும் வேணுமென்றும், மிக்க இளமையிலே இவள் இங்ஙன மாயினளென்றும், இப்படியும் ஒரு துடிப்பு உண்டோ என்றும் இவை முதலாகப் பல படியாலும் தத்தமக்குத் தோன்றின வாறெல்லாம் பேசுவன.

சின்மொழி—சில மொழிகளை யுடையவள்; (பண்புத்தொகை யன்மொழி.) நாலு வார்த்தைகளைச் சேர்த்துச் சொல்லத் திறமை போராமல் குதலைச் சொற்களை யுடையளாய் இளம்பரு வத்தளானவள் என்றவாறு. செயல் முழுதும் அற்றுச் சில சொல் மாத்திரமே மிச்சமாக வுள்ளவள் என்று முரைப்ப.

பகவதநுபவத்திற்கு உரியகாலத்தை நோக்கி ஈடுபட்ட ஆழ் வார்க்கு அப்பகவான் விரைந்து அருள் செய்யாது விளம்பிக்க,

அதனால் அவர் படும்பாட்டைக் கண்டு அறிவுடையார் கூறுதல் இதற்கு ஸ்வாபதேசம். [காரிகையார் நிறை காப்பவர் யாரென்று] ஸ்திரீ போலப் பாதந்திரரான இவரது ஆறியிருக்கும் நிலையை அழியாது காத்திடுவார் உண்டோ வென்று. [கார்கொண்டு இன்னே மாரி கையேறி அறையிடுங்காலத்தும்] எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் குண மழையையும் நினைப்பூட்டிக்கொண்டு காலம் நேர்ந்து விரைவை யுண்டாக்கவும். [சாரிகைப் புள்ளர் அந்தண்ணந்துழாய் இறை கூயருளார்] அழகிய சிறந்த வாஹனத்தை யுடைய (அல்லது) தவறாத பிரமாண முடைய எம்பெருமான் ஆனைக்கு அருள் செய்தாற் போலே விரைய வந்து கம்பீரமான தனது திருமிடற் றோசையால் இவரை யழைத்து அருளை இவர்க்குச் சிறிதும் செய்தருளுகின்றிலன். [என் சின்மொழிக்கு] சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் சொல்லழகுடையவராய் எங்கள் விருப்பத்திற்கு உரியவரான இவர்க்கு [சேரிகையேறும் பழியாய் விளைந்தது] (தமது அன்பு) உலகத்திலுள்ள ஸாத்விக ஜனங்களெல்லாம் இரங்கிக் கையெடுத்துக் கூப்பிடும்படி பழிப்பாய்ப் பரிணமித்தது என்கை. எம்பெருமான் ரக்ஷகனா யிருக்கையில் எத்தனை வ்யஸநம் வந்தாலும் பொறுத்திராமல் தானே தன் காரியம் தலைக்கட்டிக் கொள்வதாக விரைதல் குற்றத்திற் கிடமாம் என்பது தோன்றும். இவ்விடத்து நம்பிள்ளையீடு:—"இப்போது இவர் பழியென்கிறது பகவத் ப்ராவண்யத்தையிறே. அத்தைப்பழியென்பானென்னென்னில்,- அத்தலையாலேவரக்கண்டிருக்குமத்தனையொழிய இத்தலையாலே பெற ப்ரவர்த்திக்குமது பழியாயிருக்குமிறே. ஆனபின்பு பழியென்னத் தட்டில்லையிறே" என்று. (கக)

சின்மொழி நோயோ கழிபெருந் தெய்வம் - இந் நோயினதென்
றின்மொழி கேட்கு மிளந்தெய்வ மன்றிது - வேல ! நில்நீ
என்மொழி கேண்மினென் னம்மனைமீர் ! உலகேழுமுண்டான்
சொன்மொழி * மாலையந் தண்ணந் துழாய்கொண்டு சூட்டுமினே.

| | | | |
|---|---|---|---|
| **சில் மொழி நோயோ** | சில பேச்சுக்களே பேச வல்ல இவளுடைய நோயோ வென்றால் | **கழி பெரு தெய்வம்** | மிகப் பெரிய தெய்வமான எம்பெருமான் விஷயமாக உண்டானது ; |

இ நோய் இனது என்று இல் மொழி கேட்கும் இள தெய்வம் அன்று இது — இந்தநோய் இப்படிப் பட்டதென்று வரையறுத்து இல்லாத மொழிகளைப் படைத்துச் சொல்லக் கேட்கத்தக்க க்ஷுத்ர தெய்வத்தின் விஷயமாக வந்ததன்று இது;

வேல — வெறியாட்டாளனே!

நீ நில் — நீ விலகி நிற்பாயாக;

என் அம்மனைமீர் — எனது தாய்மார்களே!

என் மொழி கேண்மின் — (இவள் தன்மையை உண்மையாக அறிந்த) எனது வார்த்தையைக் கேளுங்கள்;

ஏழ் உலகும் — எல்லாவுலகங்களையும்

உண்டான் — (பிரளயங்கொள்ளாத படி) திருவயிற்றில் கொண்டு காத்தருளிய பெருமானது

சொல் மொழி கொண்டு — திருநாமத்தைச் சொல்லுதலைச் செய்துகொண்டு

மாலை அம் தண்ணம் துழாய் — (அவனது) மாலையாகவுள்ள அழகிய குளிர்ந்த திருத்துழாயை

சூட்டுமின் — (இவளுக்குச்) சூட்டுங்கள்.

* * *—இப்பாட்டுக்குத் துறை **வெறிவிலக்கு.** ரஹஸ்யமாக நாயகியைப் புணர்ந்த நாயகன் பின்பு அவளைப் பிரகாசமாகவே விவாஹம் செய்துகொள்ளும் பொருட்டுப் பொருள் திரட்டி வருதற்காக அவளைப் பிரிந்து சென்று வரவு குறித்த காலத்தில் வாராது விளம்பிக்க, அந்நிலையிற் பிரிவாற்றாது மிக வருந்திய நாயகியைச் செவிலித்தாய்மார் எதிர்ப்பட்டு அவளது வடிவு வேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னே?' என்று கவலைப்பட்டுக் § கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன் மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்த தொழியப் பிறிதொன்று மில்லை' என்று சொல்ல, அது கேட்ட செவிலித்தாயர் உடனே வெறியாட்டாளனை அழைப்பித்து அவனைக்கொண்டு ஆவேசமாடுவிக்க முயல, அதற்கு நாயகி மிக வருந்தாநிற்க, அச்சமயத்தில் அவளது துன்பத்தின் உண்மைக் காரணமுணர்ந்த தோழி வேலனையும் செவிலியரையும் நோக்கிச் சிலகூறி வெறிவிலக்குவதாமிது.

§ கட்டுவிச்சி—குறி சொல்லும் குறத்தி.

திருவாய் மொழியிலும் "தீர்ப்பாரையாமினி" என்று தொடங்குகிற வெறிவிலக்குப் பதிகத்தில், 1 "திசைக்கின்றதே யிவள் நோய் இது மிக்க பெருந் தெய்வம், இசைப்பின்றி நீரணங்காடு மிளந்தெய்வ மன்றிது, திசைப்பின்றியே சங்கு சக்கர மென்றிவள் கேட்க நீர், இசைக்கிற்றிராகில் நன்றேயிற் பெறுமிது காண்மினே." "இதுகாண்மி னன்னைமீர் இக்கட்டு விச்சி சொற்கொண்டு நீர் எதுவானுஞ் செய்து அங்கோர் கள்ளு மிறைச்சியுந் தூவேல்மின், மதுவார் துழாய்முடி மாயப்பிரான் கழல் வாழ்த்தினல், அதுவே யிவளுற்ற நோய்க்கும் அருமருந்தாகுமே" என்றருளிச்செய்த பாசுரங்கள் இங்கு அறியத்தக்கன.

'இந்த நங்கைக்கு இப்போது நேர்ந்துள்ள நோயானது இவர்கள் நினைக்கிறபடி க்ஷுத்ர தெய்வ மடியாக வந்ததன்று; பரஸ்மாத் பரனை எம்பெருமானிடத்தில் அபிநிவேச மடியாக உண்டான நோய் இது' என்று தோழி தெளிந்து சொல்லச் செய்தேயும் வேலன் வாயில் வந்தபடி பிதற்றிக் கொண்டு ஆடுவது ஓயாதிருக்க, அவனை வுபேக்ஷயாலே நிறுத்தி, தாய்மாரை நோக்கி 'நீங்கள் இங்ஙனே கலங்குவது உசித மன்று; உங்களை விட நான் மிகச்சிறியவளே யாயினும் இப்போது என்பேச்சைச் சிறிது ஆதரியுங்கள்; இந்த விபரீத முயற்சிகளை யொழித்திட்டு உலகமுண்ட பெருவாயனுடைய திருநாமங்களை இவள் செவிப்படுமாறு சொல்லுங்கள்; அவனது திருத்துழாய்ப் பிரசாதத்தைக் கொணர்ந்து கொடுங்கள், இதுவே இவளுடைய நோய்க்குப் பரிஹாரமாகச் செய்யத்தக்கது—என்றாளாயிற்று.

**சின்மொழி**=நிரம்பிய வார்த்தைகளைச் சொல்லவும் மாட்டாத இளமையை யுடையவள், மிதபாஷிணி, மழலைச்சொல் மிழற்றுபவள். குளிர்ந்த மொழிகளை யுடையவ ளென்றுமாம். **நோயோ**=ஓ—இரக்கம், நோயின் முதிர்ச்சிக்கு வருந்தியபடி. பரதேவதையான எம்பெருமானுக்கும் க்ஷுத்ர தேவதைகளுக்குமுள்ள பர்வத பரமாணுவளவான வாசி தோன்ற **'கழி பெருந் தெய்வம்'** என்றும் **'இளந்தெய்வம்.'** என்றும் சொல்லிற்று. "நோய் கழி

1. திருவாய் மொழி 4—6—2.

பெருந்தெய்வம்'' என்றது—இந்தநோய் பரதேவதை விஷயமாக வுண்டானது என்றபடி. ''இளந்தெய்வ மன்றிது'' என்றதும்—க்ஷுத்ர தேவதாந்தர விஷயமாக வுண்டான தன்று என்றபடி.

**இன்மொழி கேட்கு மிளந்தெய்வம்**—அர்த்த மில்லாத ஸ்தோத்ர வாக்கியங்களைக் கேட்டு ஆநந்திக்கிற க்ஷுத்ர தேவதை; தனக்கு இல்லாத பெருமையை இருப்பதாகச் சொல்லிக் கவி பாடுகிறவற்றைக் கேட்டுக்கொண்டிருக்கிற அற்ப தெய்வம். இங்கே பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்தி காண்மின்:— '' அர்த்த ரஹிதமான மொழி கேட்கும் இளந்தெய்வம் அன்று இது; தனக்கு இல்லாததை உண்டாகச் சொல்லப்புக்கால் கேட்டுக் கொண்டாடுந் தெய்வமன்று இது; கைக்கூலி கொடுத்துக் கவி பாடுவித்துக் கொள்ளும் தேவதைகளன்று.'' என்று.

வேலனென்றது வெறியாடுமவனை; அவன் முருகக் கடவுளது வேலைத் தனக்கு அடையாளமாக ஏந்திக்கொண்டுநின்று ஆடுதலால் வேலனெனப்படுவான். 'வேன்மகன்' என்றும் வழங்கும். **வேல நில் நீ**—இந்தத் திருமாளிகை தேவதாந்தரபார் புகும் திருமாளிகையன்று காண், ஓடிப்போ என்று வெருட்டியபடி. ''கூராராழி வெண்சங்கேந்தி'' என்கிறபடியே திருக்கையுந் திருவாழி திருச்சங்குமாக ஸேவை ஸாதிக்க வேண்டிய இத்திரு மாளிகையில் நீ கையும் வேலுமாக வந்து நிற்பதே பாவி! ஒழிந்துபோ என்கிறாள்.

**உலகேழு முண்டான்** என்பது—லோக ஸம்ரக்ஷணத்தில் எம்பெருமானுக்கு உள்ள ஆதரத்தையும் அற்புத சக்தியையுங் குறிக்கும். இவளுடைய நோயைப் பரிஹரிப்பதற்கு, உலகமுழுவதுக்கும் வந்த நோயைப் பரிஹரித்த பெருமானது திருநாமந்தானே தக்கதென்றவாறு. ''ஒருங்காகவே உலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட, பெருந்தேவன் பேர் சொல்லகிற்கில் இவளைப் பெறுதிரே'' என்பர் திருவாய்மொழியிலும். இந்த நோய் தீர்வதற்கு எம்பெருமானது திருநாமம் தக்கமந்திரமும், அவனது ப்ரஸாதமான திருத்துழாய் பசுமருந்துமாம் என்க. சூட்டுமின் என்றதனால் அந்த ஸஞ்ஜீவி மூலிகைதான் உட்கொள்ளக் கடவதன்றியே தலைமேற்கொண்டு நன்கு மதிக்கக் கடவதென்று தோன்றும். நோயாளிகட்கு உட்

செலுத்துவதொரு மருந்தும் மேலிற் பூசுவதொரு மருந்தும் உபயோகிப்பதுபோல எம்பெருமானது திருநாமங்களை அவள் செவி வழியே உள்ளே புகும்படி உச்சரித்து, மேலுக்கு அவன் அணிந்து கொண்ட திருத்துழாய் மாலையைக் கொணர்ந்து சூட்டுங்கோளென்று பரிஹாரம் கூறினளாயிற்று.

வேல! நில் நீ; உலகேழு முண்டான் சொல்மொழி; என் அம்மனைமீர்! என்மொழி கேண்மின்; மாலையந் தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமின் என்றிங்ஙனே அந்வயித்துப் பொருள் கொள்ளவு முரியதே. இவ்வந்வயத்தில், மொழி— ஏவலொருமை வினைமுற்று; உலகேழு முண்டானுடைய சொற்களை [திருநாமங்களை]ச் சொல்லு என்றபடி; உனது வெறியாடலை நிறுத்திப் பகவந்நாம ஸங்கீர்த்தநம் பண்ணு என்று வேலனைக் கட்டளையிடுகிறபடி.

**கழிபெரு**-ஒரு பொருட் பன்மொழி; மிகவும் பெரிய என்கை. கழி— மிகுதியுணர்த்தும் உரிச்சொல். **இனது**— 'இன்னது' என்பதன் தொகுத்தல். இன்மொழி— பண்புத்தொகை, உலகு ஏழ்— ஏழுலகம் மேலேழும்.

பகவத் ஸம்ச்லேஷத்தைப் பெறாமல் வருந்துகிற ஆழ்வாரது துயரத்தைத் தீர்ப்பதற்காக அவர் பக்கலுள்ள பரிவாலுண்டான கலக்கத்தினால், எம்பெருமான் உபாயாந்தரங்களினால் அடையத் தக்கவனல்லன் என்பதை மறந்து தேவதாந்தர பஜநத்தாலாவது ஆற்றாமையைத் தணிப்பிக்கலாமோவென்று பார்த்து அது தொடங்கிய ஞானிகளைக் குறித்து, ஆழ்வாரது தன்மையையறிந்த அன்பர்கள் விலக்கிக்கூறும் வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். [இன்மொழி] இவர் பிறரது நன்மைக்காகப் பேசுவதேயன்றி ஸ்வகார்யார்த்தமாக மிகுப்பேச அறியாதவரென்றபடி. [நோய்] எம்பெருமானை அநுபவிக்கவேண்டு மென்னும் ஆசையாகிய பக்தியின் மிகுதியாலான ஆற்றாமையைச் சொன்னபடி. (௨௦)

**சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி * விண்ணோர்கள் நன்னீராட்டியந்தூபந் தராநிற்கவே யங்கு * ஓர் மாயையினால்**
**ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்திமிலேற்று வன்கூன்**
**கோட்டிடையாடினை கூத்து * அடலாயர்தங் கொம்பினுக்கே.**

| | |
|---|---|
| அங்கு | பரமபதமாகிற அவ் விபூதியில், |
| விண்ணோர்கள் | நித்யஸூரிகள் |
| நல் நீர் ஆட்டி | நன்றாகத் திருமஞ்சனம் ஸமர்ப்பித்து |
| தூயன சூட்டு நல் மாலைகள் ஏந்தி | பரிசுத்தமானவையாய் (உனக்குச்) சூட்டத் தக்க அழகிய மாலைகளைக் கைகளில் ஏந்திக் கொண்டு நின்று |
| அம் தூபம் தாரா நிற்க | அழகிய தூபத்தை ஸமர்ப்பித்துக் கொண்டு நிற்க, |
| (அந்த தூபத்தினால் திருமுக மண்டலம் மறைந்திருக்கும் க்ஷணத்திலே) | |
| ஓர் மாயையினால் | (உனது) ஒப்பற்ற மாயவகையினால் |
| ஈட்டிய வெண்ணெய் தொடுஉண்ண போந்து | (இங்குத் திருவாய்ப்பாடியிலுள்ளார் நாள்தோறும் கடைந்து) சேர்த்த வெண்ணெயை எடுத்து அமுது செய்ய விரும்பிவந்து |
| அடல் ஆயர் தம் கொம்பினுக்கு | வலிமையையுடைய இடையரது குலத்திற்பிறந்த பூங்கொம்பு போன்ற மகளான நப்பின்னையை மணஞ்செய்து கொள்வதற்காக |
| இமில் | முசுப்பையுடைய |
| ஏறு | (ஏழு) எருதுகளினுடைய |
| வல் கூன் கோட்டிடை | வலிய வளைந்த கொம்புகளின் நடுவிலே |
| கூத்து ஆடினை | கூத்தாடியருளினாய். |

* * *— இப் பிரபந்தத்தில் முதற்பாட்டும் கடைப்பாட்டும் தவிர மற்றைத் தொண்ணூற்றெட்டுப் பாசுரங்களும் அகப்பொருள் துறையிலே அமைந்தனவென்று கொள்ளவேணு மென்பது சிலருடைய கொள்கை. ஆழ்வார் தாமான தன்மையிலே அருளிச் செய்வதாக நிர்வஹிக்கக்கூடிய பாசுரங்களுக்குக் கிளவித்துறை கூறவேண்டியது அவசியமன்று என்பது பூருவாசாரியர்களின் திருவுள்ளம். இப்பாட்டு ஆழ்வார் தாமான தன்மையில் கிருஷ்ணாவதார சேஷ்டிதத்தில் ஈடுபட்டு அருளிச் செய்வதா யிருக்கையாலே துறையொன்றும் கூறாதே நம்பிள்ளை முதலான ஆசிரியர்கள் வியாக்கியானித்தருளினர். அவ்வழியே பற்றி உரைப்போமிங்கு.

முன்னிரண்டடிகளில் பரத்வத்தையும் பின்னிரண்டடிகளில் ஸௌலப்யத்தையும் பாராட்டிக் கூறுகின்றார். பரமபதத்திலே நித்ய ஸூரிகள் திருவாராதநம் ஸமர்ப்பிக்க விருக்கும் நிலைமையில் ஸ்நாநாஸநமும் அலங்காராஸநமும் ஸமர்ப்பித்து [அதாவது, திருமஞ்சனம் ஸமர்ப்பித்துத் திருமாலைசாத்தி]த் தூபம் ஸமர்ப்பிக்குமளவில் அப்புகையினால் திருமுக மண்டலம் மறையுமே, அந்த அவ

ஸாத்தில் வெண்ணெயமுதை நினைத்துத் திருவாய்ப் பாடியி லெழுந்தருளி நப்பின்னைப் பிராட்டிக்காக எருதுகளை யடர்த்து அவளை மணந்து கொண்டனை; பிரானே! உன்னுடைய சக்தி விசேஷத்தை என்சொல்ல வல்லோம்! என்று ஈடுபட்டு அருளிச் செய்தாராயிற்று.

புகைநிழலில் ஒளித்து வருவார்போல அங்கு நின்று இங்கு வந்தமை தோன்ற "அந்தூபந்தாா நிற்கவே யங்கு ஓர் மாயை யினாற் போந்து" எனப்பட்டது. **கோட்டிடைக் கூத்தாடினை**= அவ்வெருதுகளின் செருக்கையடக்கும் பொருட்டு மிக்க தைரியத் தோடு அவற்றின் கொம்புகளினிடையிலே புகுந்து விரைந்து தொழில் செய்தமையைச் சொன்னவாறு. கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் **நீளா** என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யா சுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்துகொண்ட வரலாறு அறியத்தக்கது.

திருவாராதனத்தின் உறுப்பான ஸ்நாநாஸநமும் அலங்காரா ஸநமும் நித்ய விபூதியில் நடந்தன வென்றும் போஜ்யாஸநமும் ஶயநாஸநமும் லீலாவிபூதியில் நடந்தன வென்றும் இங்குக் கூறி யதனால் இரண்டும் அவனுக்கு வேறுபாடின்றி ஒரு நிகராக உரி யவை யென்பது விளங்கும். தர்மியின் ஐக்கியம் சொல்லப்பட்ட வாறு.

**ஓர் மாயையினால்**=பகவானுடைய ஸங்கல்பத்தைச் சொன்ன படி. '**மாயா**' என்னும் வடசொல்லுக்கு உள்ள பல பொருள் களில் ஞான மென்பதும் ஒரு பொருளாம்; ஸங்கல்ப ரூபமான ஞானத்தைச்சொன்னபடி. '**ஸம்பவாம்யாத்மமாயயா**' (பகவத்கீதை) என்ற விடத்தும் இப்பொருள்காண்க. அன்றியே, **மாயையினால்**— மாயவகையினால் என்றுமாம். **ஈட்டிய வெண்ணெய்**= திருவாய்ப் பாடியில் மனைகள்தோறும் திரட்டிவைத்த வெண்ணெய். **தோடு உண்ண**= களவினால் உண்ண: "மாயை **தோடு** பட்டிமை வஞ் சனையாகும்" [பிங்கலந்தை— பண்பிற் செயலிற் பகுதிவகை- **135.**] என்றது காண்க. அடலாயர்— பிரபலரான இடையர்

என்றபடி. கொம்பு— உவமையாகு பெயர் ; வஞ்சிக்கொம்புபோல் துவண்ட இடையை யுடையவளென்று மர்தர்க்கு வாசகம். ஆடினை— முன்னிலை யிறந்தகால வினைமுற்று.

சிலருடைய கொள்கைப்படி இப் பாசுரத்திற்கும் அகப் பொருள்துறை கூறவேண்டில் 'ஏறுகோள் கூறி வரைவு கடாதல்' என்னலாம். அதாவது— முல்லைநிலத்துத் தலைமகளைக் களவொழுக் கத்தாற்கூடி நின்ற தலைமகனை நோக்கித் தோழி 'இனி நீ இவள் குலத்துக்கு உரிய மரபின்படி வெளிப்படையாக விரைந்து வந்து ஏறு தழுவி இவளை விவாஹம் செய்துகொள்வாயாக' என்று வற் புறுத்திக் கூறுதல். முன்பு நப்பின்னையை வரைதற்பொருட்டு நீ ஏறு தழுவினையென இது கூறியதனால், தோழி தலைவனை 'இப் பொழுது ஏறுதழுவி இவளை வரைந்து கொள்வாயாக' எனக் குறிப் பால் ஏறுகோள் கூறி வரைவு கடாயினவாறு. [ஏறுகோள் கூறி— எருதுகளின் வலியை அடக்குமாறு சொல்லி, வரைவு கடாதல்— விவாஹம் செய்துகொள்ளச் சொல்லுதல்.] ஆகவே இது தோழி யின் பாசுரமாகக் கொள்ளலாகும். அன்றியே, நாயகியின் பாசுர மாகவுங் கொள்ளலாம். ... .... .... (உக)

**கொம்பார் தழைகை சிறுநாணெறிவிலம்* வேட்டைகொண்டாட்டு**
**அம்பார் களிறு வினவுவ தையர்* புள்ளூருங்கள்வர்**
**தம்பாரகத் தென்றுமாடாதன தம்மிற் கூடாதன**
**வம்பார் வினச்சொல்லவோ * எம்மைவைத்ததிவ் வான்புனத்தே ?**

| | |
|---|---|
| ஐயர் | இப்பெரியவருடைய |
| கை | கையிலுள்ளது |
| கொம்பு ஆர் தழை | மரக்கிளையிற் பொருந்திய தழையாகும்; |
| சிறு நாண் எறிவு இலம் | (இவர் கையில் வில் இல்லாமையால்) சிறிய நாணியை(க் கை விரலால்) தெறித்து ஒலி செய்தலைக் கேட்டிலோம் ; |
| கொண்டாட்டு | (இவர் தமக்கு) ப்ரியமாக வெளிக் காட்டுவது |
| வேட்டை | வேட்டையாம் ; |
| வினவுவது | (இவர் நம்மை நோக் கிக்) கேட்பது |
| அம்பு ஆர் களிறு | (எய்யப்பட்ட) அம் போடுபொருந்திய யானையாம்; |

(இவாது செயல்களும் சொற்களும்)

| | |
|---|---|
| புள் ஊரும் கள்வர் தம் பார் அகத்து என்றும் ஆடாதன | கருடப் பறவையை ஏறி நடத்துகிற மாயவரான திருமாலினது உரிய பொருளாகிய இவ்வுலகத்தில் எக்காலத்திலும் நடவாதனவும் |
| தம்மில் கூடாதன | தமக்குள் ஒன்றோடொன்று பொருத்தமில்லாதனவுமாகவுள்ளன: |
| வம்பு ஆர் வினா சொல்லவோ | புதுமை மிக்க கேள்விகளுக்கு விடை கூறும் பொருட்டோ |
| எம்மை | நம்மை |
| இவான் புனத்தே வைத்தது | இந்தப் பெரிய கொல்லையிலே (நமது முதுகுரவர் காவல்) வைத்தது? |

* * *— காந்தருவ விவாஹ முறைமையினால் நாயகியைப் புணர்ந்து பிரிந்த நாயகன் பின்பு தோழியின் மூலமாக நாயகியைச் சேரவிரும்பி அத்தோழியைத் தனியேகண்டு தன்கருத்தை வெளிப்படையாக விரையக்கூறி வேண்டிக் கொள்ளாமல் குறிப்பாகக் கூறக்கருதி, நாயகியும் தோழியும் தினைப்புனங்காத்து நின்றவிடத்துத் தழையுங் கண்ணியுமாகிய கையுறைகளை ஏந்திக் கொண்டு சென்று அவர்களை நோக்கி வேட்டைக்கு வந்தவன் போல 'எனது அம்போடு ஒரு மதயானை இவ்விடத்து வரக்கண்டதுண்டோ ?' என்று வினவ, அந்த நாயகனது தன்மையைப் பரிஹஸித்துத் தோழி நாயகியோடு கூறியது இது.

இந்தப் பெரியவரோ வென்னில், மரக்கிளையில் நின்றும் பறிக்கப்பட்ட தழையைக் கையிலே கொண்டுவந்து நிற்கின்றார்; ஏதோ வேட்டை நிமித்தமாக இப்புனத்தயலே போந்ததாகச்சொல்லிக் கொள்ளுகிறார்; தாம் ஒரு யானையின்மேல் அம்பு எய்ததாகவும் அவ்வம்புடனே அவ்யானை ஒழிப்போந்ததாகவுஞ் சொல்லி 'அவ்யானை இங்குவரக் கண்டீர்களோ ?' என்கிறார்; இவர் மெய்யே வேட்டைக்கு வந்தவராயின் கையில் வில் இராதோ? நாணியைக் கைவிரலால் தெறித்து ஒலிசெய்ய மாட்டாரோ? அஃதொன்றுமில்லையே; ஆகையாலே இவருடைய வாய்மொழிக்கும் செயலுக்கும் யாதொரு பொருத்தமுங் காணோம்; சேராச் சேர்த்தியான இச்சொற் செயல்கள் இந்த லீலா விபூதியிலில்லை; கையில் தழைக்

கும் வேட்டைக்கும் என்ன ஸம்பந்தம்? இப்படிப்பட்ட வம்பு வினக்களுக்கு மறுமொழி கூறவோ எம்மை எங்கள் பெரியோர் இங்கே புனங்காக்க வைத்திட்டது! என்று பரிஹாஸந் தோற்றக் கூறியவாறு.

இவள் குறிஞ்சி நிலத்து நாயகியாதலாலும், தழையையுங் கண்ணியையுங் கையுறையாகக் கொண்டு கொடுத்துக் காணுதல் இவளது குலமுறைமை யாதலாலும், தான் கொண்டு செல்லுந் தழையை அவர் ஏற்றுக்கொள்வாராயின் அது தன்னை அவர் ஏற்றுக் கொள்வதற்கு அறிகுறியாகு மென்று (நாயகன்) நினைத்திருப்பதனாலும் இவன் கையில் தழையைக்கொண்டு சென்றானென்றுணர்க. அன்றியும், மரக்கொம்பிலிருந்து பறிக்கப்பட்ட தழை வாட்டத்தோடு கூடியிருக்குமாதலால் நாயகியைக் கூடாமையால் தனக்கு உண்டாயிருக்கிற வாட்டத்தைக் குறிப்பிடுதற்கு ஒரு கருவியாகவும் தழை கைக்கொண்டு சென்றானென்னலாம். தோழியானவள் அத்தன்மையில் கருத்தூன்றிக் '**கோம்பார் தழை கை**' என்றதனால்—இத்தழைதான் இவர் கைப்பட்டதனால் தளிர்ச்சி பெற்றது; நாயகிக்கு இத்தன்மை நிகழ்கிறதில்லையே! என்று இரங்கியபடி.

"**சிறுநாணெறிவிலம்**" என்பதற்கு—இப்பொழுது கையில் வில் இல்லாமையேயன்றி முன்பு வில் நாணெறிந்த தழும்புங் கூடக் கண்டிலோ மென்றும், சிறிய நாண் ஏறியப்படுவதான வில்லைக் கண்டிலோம் என்றும் உரைப்பர். இரண்டாம் உரைக்கு, 'சிறுநாணெறிவு' என்பது வில்லுக்குத் தொழிலாகு பெயராம். [**வேட்டை கோண்டாட்டு.**] வேட்டை யென்பது வெளி வியாஜ மாத்திரமே; நாயகியின் பக்கல் வேட்கையின்றியே இவர் வந்தது என்றவாறு. [**அம்பார் களிறு விண்வுவது.**] 1. "பண்ணுற்ற தேன் மொழிப்பாவை நல்லீர்! ஓர் பகழி மூழ்கப், புண்ணுற்றமாவொன்று போந்த துண்டோ நும் புனத்தயலே?", 2. "மண்பட்ட கோடும் மதம்பட்டவாயும் வடிக்கணேதோய், புண்பட்ட மேனியுமாய் வந்ததோ வொரு போர்க்களிறே" என்றார் பிறரும். இங்ஙனம் வினவு

1. இறையனு ரகப்பொருளுரையிற் கண்டது.
2. தஞ்சைவாணன் கோவை—72.

தலால்—'இவள் கண்ணுக்கு இலக்காய் நான் படுகிறபாடு அம்பு தைத்து ஊடுருவுங்களிற்றின் நிலைமை போன்றது காண்' எனக் குறிப்பித்தானும்.

'நீ இங்கேவந்தது எதுக்கு?' என்ன; 'வேட்டைக்காக வந்தேன்' என்றான்; 'ஆயின், வில் எங்கே?' என்ன, தழையைக் காட்டினான்; 'வில் இல்லாவிடினும் அம்பாவது உண்டோ?' என்ன, 'அம்பு ஆனையிலே பட்டுப்போயிற்று' என்றான்; இங்ஙனம் பல புனைந்துரைகளை வேட்கை மிகுதியால் நாணமின்றிக் கூறினவனது பணிவை 'ஐயர்' என்ற உயர் சொல்லாற் குறித்து நகையாடியபடி.

**இலம்**— இல்லோம்; தன்மைப்பன்மை யெதிர்மறைக்குறிப்பு முற்று. **வேட்டை**= வேடு என்னுங் குற்றியலுகரம் தன்னொற்றிரட்டி ஐகாரச் சாரியை பெற்றது. **கோண்டாட்டு**= கொண்டாடுதல்; முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

[புள்ளுருங் கள்வர்தம் பாரகத்து என்றுமாடாதன.] உயிர்களை அவையறியாமல் தானே உரிமைகொள்பவர் என்பது '**கள்வர்**' என்றதற்குப் பொருளாகும். சேராச் சேர்த்தியான இச்சொற்செயல்கள் இந்த மண்ணுலகத்தில் எங்குங் கண்டதில்லை; அந்த விண்ணுலகத்தில் ஒருகால் உண்டோ என்னவோ அறியோம் என்கை. **தம்மில்கூடாதன**=கையில் தழைகொண்டு வருவதற்கும் 'அம்போடே ஓர் யானை வந்ததோ?' என்று தேடுகைக்கும் ஒரு பொருத்தமுமில்லை யென்கை. இப்படி பொய்கலந்தவையா யிருப்பினும் அவன் கேட்குங் கேள்விகள் தமக்குப் புதியனவாய் வியப்பு விளைத்தல் தோன்ற '**வம்பார் வினா**' என்றாள். '**வம்பார்வினாச் சொல்லவோ**' என்பதற்கு—வீண் கேள்விகள் கேட்கப்படுதற்கோ என்றும் பொருள்கொள்ளலாம். **வம்பார்வினா**—இதுவரையிலுங் கேட்டறியாத வார்த்தைகள். '**எம்மைவைத்தது இவ்வான் புனத்தே**' என்றதனால்—நாங்கள் எங்கள் பேரியோர்க்குப் பரதந்திரப்பட்டவர்கள்; ஸ்வதந்த்ரைகளல்லோம்; ஆதலால், அப் பெரியோரையடுத்துப் பலரும் அறிய விவாஹஞ் செய்துகொள்ளுதல் முறைமை என்பது ஸூசிப்பித்தபடியாகும்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப்பொருள்:—எம்பெருமானுக்கு உகப்பாயிருக்கிற இவ்வாழ்வார் பக்கலிலே நம்முடைய சில கேள்விகளைக் கேட்போமென்று வந்த கல்விச் செருக்குடையாரை நோக்கி 'இவர்களது சொற்செயல்கள் ஒன்றோடொன்று ஒற்றுமையின்றிப் பரஸ்பரவிருத்தங்கள்' என்று ஆழ்வாரோடு கூறுதலாம். **கோம்பார் தழைகை**=ஐம்புலவாசையாகிய தளிர்களை இவர்கள் கைவிட்டதில்லை; **சிறுநாணெறிவிலம்**=ப்ரணவமஹாமந்த்ரமாகிய வில்லின் உச்சாரணமாகிய நாணெறியும் இவர்களிடத்து இல்லை. ("ப்ரணவோ தநு: ஶரோ ஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே" என்றது காண்க.) **வேட்டைகோண்டாட்டு**=ஸம்ஸாரமாகிய காட்டிலுள்ள காமக்ரோதாதிகளான கொடிய விலங்குகளைத் தொலைக்கத் தொடங்கிவிட்டோம் நாங்கள் என்கிற கொண்டாட்டம் மாத்திரமே இவர்களுக்கு உள்ளது. **அம்பார் களிறுவினவுவது**=கல்வியறிவாகிய அம்பால் தாம் எய்யாநிற்கையில் தமது இந்திரியமாகிய யானை சப்தாதிவிஷயங்களாகிய காட்டில் விரைந்தோடிற்றென்று அதனைப் பின்தொடர்ந்து துரத்துவதே இவர்கள் செயல். **ஐயர்**=இவர்களது அறிவின் பெருமிதத்தை இகழ்ந்தபடி. [**புள்ளூருங்கள்வரித்யாதி.**] வேதமாகிய பிரபலப் பிரமாணத்தை எங்கும் பரவச் செய்பவனும் யாவருமறியாமல் மறைந்து நின்று எல்லாப் பொருளையும் பாதுகாப்பவனுமான எம்பெருமானுடைய உலகத்தில் ஒரு காலத்திலும் இல்லாதவையும் ஒன்றோடொன்று ஒற்றுமைப் படாதவையுமாகிய புதிய இவர்கள் வீண்கேள்விகளுக்கு உத்தரஞ் சொல்லுதற்கோ எம்பெருமான் அடிமைகளாகிய எங்களை இந்தலீலாவிபூதியில் நியமித்துவைத்தது என்க. தத்துவஞானமும் பிரபத்திமார்க்கமுமில்லாமல் போலிமார்க்கத்தாற் செருக்குடைய கற்றோரைச் சீர்திருத்தும் பொருட்டு இங்ஙனங் கூறியவாறு. .... .... (உஉ)

**புனமோ? புனத்தயலே வழிபோகு மருவினையேன்**
**மனமோ? * மகளிர்! நுங்காவல் சொல்லீர் * புண்டரீகத்தங்கேழ்**
**வனமோ ரனையகண்ணான் கண்ணன் வானாடமருந்தெய்வத்**
**தினமோ ரனையீர்களாய்—இவையோ நும் மியல்வுகளே?** (உங)

| | |
|---|---|
| மகளிர் | பெண்களே !, |
| நும் காவல் | உங்கள் காவலுக்கு உரிய பொருள் |
| புனமோ | இந்தத் தினைப் புனமோ? |
| | (அல்லது) |
| புனத்து அயலே வழி போகும் அருவினையேன் மனமோ | இப்புனத்தினருகிலே வழிச் செல்லுகிற பாவியேனான என்னுடைய நெஞ்சமோ?; |
| சொல்லீர் | சொல்லுங்கள் ; |
| புண்டரீகத்து அம் கேழ் வனம் ஓர் அனைய கண்ணன் | செந்தாமரைமலரின் அழகிய ஒளியையுடைய காட்டை ஒரு புடையொத்திருக்கின்ற திருக்கண்களையுடையவனாகிய |
| கண்ணன் | கண்ணபிரானது |
| வான் நாடு | பரமபதத்திலே |
| அமரும் | வாஸம்பண்ணுகிற |
| தெய்வத்து இனம் | நித்யஸூரி வர்க்கத்தை |
| ஓர் அனையீர்கள் ஆய் | ஒருபுடை ஒத்தவர்களாய் |
| நும் இயல்வுகள் | நீங்கள் கொண்டிருக்கின்ற தன்மைகள் |
| இவையோ | அயலார் மனத்தைக் கொள்ளை கொள்ளுதல் முதலிய இச் செய்கைகளாகத் தகுமோ?. |

* * *—கொல்லையைக் காத்துக்கொண்டிருக்கும் நாயகியையும் தோழியையுங்கண்டு நாயகன் தான் குறை வேண்டுதலைக் கூறிய துறை இது. தன் மனம் இவர்களுக்கு வசப்பட்டதைக் கூறின குறிப்பால், தன் கருத்தைப் புலப்படுத்துகின்றவாறு. நீங்கள் புனத்தைவிட்டு நீங்காதது போல என் மனத்தைவிட்டு நீங்குகிறீரில்லையென்றும், புனம்போலே என்மனமும் உங்கள் பாதுகாப்புக்கு உட்பட்டுக் கிடக்கிறதென்றுங் கருத்துத்தோன்ற 'பெண்காள்! உங்களைப்பெரியோர் இங்கேவைத்தது புனத்தைக்காக்கவோ? அன்றி என்மனத்தையுங் காக்கவோ?; புனக்காவலோடு நில்லாமல் என்மனக்காவலிலும் வியாபரிப்பது உங்கட்குத் தகுதியன்று என்கிறான். அவர்களழகைத் தான் காணும்பொருட்டும் தன் முகத்தை அவர்கள் பார்க்கும்பொருட்டும் இவர்களுள்ள விடத்தின் ஸமீபத்தில் இவன்றான் தடுமாறித் திரிந்தமை தோன்றப் 'புனத்தயலே வழிபோகுமருவினையேன்' என்கிறான். அருவினையேன்=அகப்பட்டால் தப்பமாட்டாது வருந்துதற்குக் காரணமான முற்பிறப்புத்

தீவினையையுடையேன் என்றவாறு. மகளிர்=பெண்களுக்கு உரிய எல்லாநல்லிலக்கணமும் அமைந்தவர்கள்; அண்மைவிளி. 'புனமோ' 'மனமோ' என்றவிடங்களில் ஓகாரங்கள்—வினா.

[புண்டரீகத்தித்யாதி.] திருக்கண்ணின் சிறப்பு முழுவதுக்கும் தாமரை உவமையாதற்குப் போதாத பெருமைவாய்ந்த புண்டரீகாக்ஷனுடையதான திருநாட்டிலுறையும் நித்யஸூரிவர்க்கமும் உங்கள் சிறப்புமுழுவதுக்கும் எல்லாப்படியாலும் உவமையாதற்குப் போதாத பெருமை வாய்ந்துள்ளவர்களான உங்கட்கு அயலார் மனத்தைக் கொள்ளை கொள்ளுதல் முதலிய இச்செய்கைகள் தகுதியுடையனவல்ல என்கை.

பாகவதர் ஆழ்வார்பக்கலிலே தமது நெஞ்சு துவக்குண்டபடியைச் சொல்லுதல் இதற்கு உள்ளுறைபொருள். உமது எல்லைக்கு உட்பட்ட இடமோ? அவ்விடத்தினருகிலே வழிச்செல்லுகிற உம்மிடத்துப் பாசபந்தமுடைய எங்கள்மனமோ? பாதந்திரான உமது பாதுகாப்புக்கு உரியது, சொல்லும்; கண்ணழகுமிக்கவனும் ஸர்வஸுலபனுமான எம்பெருமானது பரமபதத்தில் வஸிக்கிற நித்யஸூரிவர்க்கத்தோடு ஒருபுடை ஒப்புமை சொல்லும்படி "விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்றவாறு அவர்களினுஞ் சிறந்துள்ளவராய் நீர் செய்யுஞ் செயல்கள் உபாயாந்தரபராய் வேறுவழிச் செல்வோரையும் உம்வழிப்படுத்திச் சீர்திருத்தியருளு மிவையோ? என வியந்தவாறு. ஆழ்வாரொருவர் எழுந்தருளியிக்கிற இருப்பு * அயர்வறுமமரர்களெல்லாரும் திரள இருந்தாற்போலே யிருக்குமாதலால் 'தெய்வத்து இனம் ஓரனையீர்களாய்' என்றது. 'அனையீர்களாய்' என்பதன்பின் 'உள்ள' எனவொரு வினையைக் கூட்டிக் கொள்ளுதலும், (அல்லது) 'ஆய்' என்பதை 'ஆய' என்பதன் தொகுத்தலாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

புண்டரீகம்—வடசொல். ... .... (உரு)

இயல்வாயின வஞ்சநோய்கொண் டுலாவும் * ஓரோகுடங்கைக்
கயல்பாய்வன பெருநீர்க்கண்கள் தம்மொடும் * குன்றமொன்றால்
புயல்வாயின நிரைகாத்த புள்ளூர்தி கள்ளூருந்துழாய்க்
கோயல்வாய்மலர்மேல் * மனத்தொடென்னங்கொ லெங்கோல்
[வளைக்கே? (உச)

| | |
|---|---|
| இயல்வு ஆயின | இயற்கையானதும் |
| வஞ்சம் | பிறரறியாதபடி உள்ளதுமான |
| நோய் கொண்டு | காதல் நோயை உடையவையாய் |
| உலாவும் | (ஆற்றாமை மிகுதியால் எங்கும்) பரந்து பார்க்கிற |
| ஓரோ குடங்கை கயல் பாய்வன பெரு நீர் கண்கள் தம்மொடும் | ஒவ்வொன்று ஒவ்வொரு அகங்கையளவாகவுள்ளவையும் கயல் மீன்போலப் பிறழ்வனவுமாகிய மிக்க நீர்ப்பெருக்கை யுடைய கண்களுடனும் |
| புயல் வாய் | (முன்பு) பெருமழை பெய்த காலத்து |
| குன்றம் ஒன்றால் | கோவர்த்தன மலையினால் |
| இனம் நிரை காத்த | பசுக்கூட்டங்களைப் பாதுகாத் தருளினவனும் |
| புள் ஊர்தி | கருடவாஹனனு மான கண்ண பிரானது |
| கள் ஊரும் துழாய் | தேன் பெருகும் திருத்துழாயி னுடைய |
| கொயல் வாய் மலர் மேல் | பறிக்கப்படுதல் பொருந்தின பூவின்மேல் (ஆசைப்பட்டுச் சென்ற) |
| மனத்தொடு | மனத்தோடும் |
| எம் கோல் வளைக்கு | அழகிய வளையல் களையுடைய எமது மக்களுக்கு |
| என் ஆம் கொல் | (இன்னும்) என்ன நிலைமை நேருமோ?. |

* * *—பிரிவாற்றாத தலைமகளின் ஈடுபாட்டைக் கண்ட செவிலித்தாய் இரங்கிக் கூறுதல் இது. எனதுமகள் கண்கலக்க முற்றாள்; நெஞ்சும் அழியப் பெற்றாள்; இவ்வளவுக்கு மேலும் இனி ஏதாய்முடியுமோ வென அஞ்சியுரைக்கின்றாள். இம்மகளது கண்களோ வென்னில், ஸ்வாபாவிகமாயும் பிறர் தெரிந்துகொள்ள வொண்ணாதபடி யிருப்பதாயுமுள்ள காதல்நோயை யுடையவையாய் ஆற்றாமைமிகுதியால் எங்கும் பரந்துபார்க்கின்றவையாய் ஒவ்வொன்றும் ஒவ்வொரு அகங்கையளவாக உள்ளவையாய், கயல்மீன் போலப் பிறழ்வனவாய் மிக்க நீர்ப்பெருக்கை யுடையனவாயிருக் கின்றன; இவளது மனமோவென்னில், * குன்றமேந்திக் குளிர் மழைகாத்தவனும் கருடவாஹநனுமான கண்ணபிரானது தேன் பெருகுந் திருத்துழாய் மலரின் மேல் ஆசைப்பட்டுச் சென்றது; இனிமேலும் என்ன நிலைமை நேருமோ? என்று கவல்கின்றாளா

யிற்று. 'இயல்வாயின வஞ்ச நோய் கொண்டுலாவு மெங்கோல் வளைக்கு' என்று அந்வயித்தலுமாம். உடம்புமெலிதலால் கைவளை கழலும்படியான நிலைமைநேருமோவென்று வளைக்குக் கவலைப்பட்டமை தோன்ற '**கோல்வளைக்கு**' எனப்பட்டது; அழகிய வளையல்களையுடைய இவளுக்கு என்றபடி. 'கோலம்' என்ற சொல் 'கோல்' என விகாரப்பட்டது: 'நீல்' என்பது போல.

1. "வாயிற் பல்லு மெழுந்தில மயிரும் முடி கூடிற்றில.......... மாயன் மாமணிவண்ணன்மே லிவண் மாலுறுகின்றாளே" என்னும்படி இவள் மிக்க இளமை தொடங்கிக் கண்ணபிரானிடம் காதல் கொண்டமை தோன்ற "இயல்வாயின நோய்" என்றாள். இப்பிரபந்தத்தின் அறுபதாம் பாசுரமுங்காண்க. '**வஞ்ச நோய்**' என்பதற்கு—நாயகன் பிரிந்து சென்று வாராது வஞ்சித்ததனாலாகிய வருத்தமென்று முரைக்கலாம். அன்றி, வஞ்ச நோய் கொள்ளுதல்—பிறரைப் பார்வையழகால் வசப்படுத்தி வருத்துந் தன்மையைக் கொள்ளுதலுமாம். கண்களின் பருத்து நீண்ட வடிவத்துக்குக் கயல் உவமை. 'கயல் பெருநீர் பாய்வு அன கண்கள்' என்று அந்வயித்து, கயல் மீன் மிக்க நீர்ப் பெருக்கிலே பாய்தல் போலக் கண்ணீர் வெள்ளத்திற் புரளுகிற கண்கள் என்று உரைத்தலு மொன்று.

**புயல்வாய்**—வாய்— ஏழனுருபு: மழை பெய்த காலத்திலே என்க. **புள்ளூர்தி, கோல்வளை**—பண்புத்தொகை யன்மொழிகள். ஊரப்படுவது ஊர்தி.

**கோயல்**—தொழிற் பெயர்; கொய்தல் என்றபடி. கொய்தல் வாய்ந்த மலர் என்றது—கொய்யப்பட்ட மலர் என்றபடி.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசச் பொருள்:—எம்பெருமானைச் சேரப் பெறாது வருந்துகிற ஆழ்வாரது தன்மையை நோக்கின ஞானிகளின் வார்த்தை இது. இயல்வாயின—செயற்கையாகவன்றி 2. "அறியாக் காலத்துள்ளே அடிமைக்க ணன்பு செய்வித்து அறியா மாமாயத்தடியேனை வைத்தாயால்" என்னும்படி இயற்கையாகவுள்ளதும்; **வஞ்சம்**—தன்னாலன்றிப் பிறராலறியப்படாதது

---

1. பெரியாழ்வார் திருமொழி 3-7-2.

2. திருவாய் மொழி 2—3—3.

மான, **நோய்**—*அற்றாமைத்துயரை விளைக்கிற பக்திமிகுதியை,* **கொண்டு**—*உடையவையாய்,* **உலாவும்**—*ஒரு நிலை நில்லாமல் தடுமாறுகிற,* **ஓரோ குடங்கைக் கயல் பாய்வன பெருநீர்க் கண்கள் தம்மோடும்**—*அகங்கைகளால் மொண்டு எடுத்து அநுபவிக்கும்படி அழகிய நிலைமையையுடையவையாய் ஆற்றாமையாலாகிய கண்ணீர் வெள்ளத்திலே அலைபடுகிற ஞானவகைகளோடும் கண்களோடும்,* **குன்றமொன்றால் × மனத்தோடு**-*சரணாகத ரக்ஷணத்தின்பொருட்டு அருந்தொழில் செய்பவனும் பசுப்ராயமான ப்ராணிகளைப் பாது காப்பவனும் மிக்க விரைவையுடையவனுமான எம்பெருமானது மிக இனிய திருத்துழாய் மாலையழகை அநுபவிப்பதில் ஆழ்ந்த மனத்தோடும் (கூடிய),* **எம்கோல்வளைக்கு**—*எமக்கு மிக இஷ்டரான இவர்க்கு,* **என் ஆம் கோல்**—*இன்னும் யாது நிலைமை நேர்ந்திடுமோ?.* .... .... .... (உச)

**எங்கோல்வளை முதலாக் கண்ணன் மண்ணும்விண்ணும் மளிக்கும்***
**செங்கோல் வளைவு விளைவிக்குமால்* திறல்சேரமரர்**
**தங்கோனுடைய தங்கோன் உம்பரெல்லாயவர்க்குந் தங்கோன்**
**நங்கோனுகக்குந் துழாய் * என் செய்யாதினி நானிலத்தே ?** (உரு)

திறல் சேர் — வலிமை பொருந்திய
அமரர் தம் — தேவர்களெல்லார்க்கும்
கோனுடைய — தலைவனான பிரம தேவனுக்கும்
தம் கோன் — தலைவனா யிருப்பவனும்
உம்பர் எல்லாயவர்க்கும் தம் கோன் — பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளெல்லோர்க்கும் தலைவனா யிருப்பவனும்
நம் கோன் — (இவ்வுலகத்திலுள்ள) நமக்கும் தலைவனுமாகிய எம்பெருமான்
உகக்கும் — விரும்பித்தரித்துள்ள
துழாய் — திருத்துழாயானது
எம் கோல் வளை முதல் ஆ — எமது (கையிலுள்ள) அழகிய வளை நிமித்தமாக
கண்ணன் மண்ணும் விண்ணும் அளிக்கும் செங்கோல் வளைவு விளைவிக்கும் — அப்பெருமானது உபயவிபூதியையும் பாதுகாக்கிற தட்டில்லாத கட்டளையின் நேர்மைக்கும் ஒரு கோடுதலை உண்டாக்கா நின்றது;
இனி — இங்ஙனமான பின்பு,
நானிலத்து — இவ்வுலகத்தில்
என் செய்யாது — (அந்தத் திருத் துழாய்) வேறு எத்தீங்கைத்தான் செய்யமாட்டாது.

* * *—தலைமகனது தாரில் ஈடுபட்ட தலைவி ஆற்றாது கூறல் இது. முன்பு ஸம்ச்லேஷித்திருந்த ஸமயத்தில் தலைமகனுடைய தேஹத்தின் ஸ்பர்சத்தினால் இன்பம் தந்த திருத்துழாயானது, விச்லேஷ நிலைமையில் அவ்வின்பத்தை ஞாபகப்படுத்தி ஆற்றாமையை அதிகரிக்கச் செய்து அதனால் உடம்பு மெலிந்து கைவளைகள் கழன்று விழப்பண்ணிற்று; இதனால், பக்ஷபாதமில்லாமல் எல்லாவுயிர்களையும் பாதுகாத்தருள்கின்ற எம்பெருமானது செங்கோன்மைக்கும் ஒரு குறையை உண்டாக்குகின்றது; (அதாவது-என்னைப் பாதுகாவாமையாகிய குறை.) இன்னும் என்ன பாடு படுத்துமோ? என்று தலைவி இரங்குகின்றாள். இப்பாசுரத்தைத் தாய் வார்த்தையாகக் கொண்டால் 'எங்கோல்வளை முதலா' என்பதற்கு-அழகிய வளையையுடைய எமது மகள் நிமித்தமாக என்று பொருள் கொள்ளவேணும். அதுவும் ஒக்கும். இனி, தலைவனான கண்ணபிரான்தானே (பிரிந்து போய் மீண்டு வாராது உபேக்ஷிப்பதால்) எம் கோல்வளை காரணமாக உபய விபூதி ரக்ஷகமான தன் செங்கோலுக்கு ஒரு வளைவை உண்டாக்கிக் கொள்ளுகிறான்; இதற்கு மேல், அவனது பரிவாரமான திருத்துழாய்தான் என் செய்ய மாட்டாது? என்றும் பொருள் கொள்ளலாம்: அவன் உபேக்ஷித்தமாத்திரத்திலே இது அழிக்குமென்று கருத்து. என்னுடைய வளை நிமித்தமாக இவனே அழிக்கத் தொடங்கினால் வேறு ரக்ஷிப்பார் ஆர்? என்க.

"தோளிணை மேலும் நன் மார்பின் மேலும் சுடர்முடி மேலும், தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழா யுடையம்மான்" என்றபடி திருத்துழாய் எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியமாதலால் 'நங்கோனுகக்குந் துழாய்' எனப்பட்டது.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசார்த்தம்:—எம்பெருமானுடைய போக்யதையிலே யீடுபட்ட ஆழ்வார் அந்த போக்யதாப்ரகர்ஷம் தமக்கு ஆற்றாமையை மிகுவித்து வருத்துவதாதலைக் கூறுவதாம்.

எல்லாயவர் என்பதில், 'எல்லாம்'—பகுதி; மகரம் கெட்டது; ய்—எழுத்துப் பேறு; அ—சாரியை; வ்—சந்தி; அர்—விகுதி: எல்லாரும் என்றபடி. நானிலம்—பண்புத் தொகையன்மொழி; முல்லை

குறிஞ்சி மருதம் நெய்தல் என்கிற நால்வகை நிலங்களையுடைய தெனப் பூமிக்குக் காரணப்பெயர்.

முதலடியில், 'விண்ணுமளிக்கும்' எனச் சந்தியாக வேண்டுமிடத்து 'விண்ணும்மளிக்கும்' என மகரவொற்று மிக்கது விரிந்தல் விகாரம்; தளை தட்டாமைக்காக. .... .... .... (உச)

**நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட ***
**வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்பாலை கடந்தபொன்னே !**
**கானிலந்தோய்ந்து விண்ணோர்தொழுங் கண்ணன்வெஃகாவுதம்பூந்**
**தேனிளஞ்சோலை யப்பாலது* எப்பாலைக்குஞ் சேமத்ததே.** (உரு)

| | |
|---|---|
| நால் நிலம் | (முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும்) நால்வகை நிலங்களையும் |
| வாய் கொண்டு | (தன் கிரணமுகத்தாலே) வாயிற் பெய்துகொண்டு |
| நல் நீர் அற மென்று | ஸாரமான நீர்ப் பசை அறும்படி மென்று |
| கோது கொண்ட | அஸாரமான பாகம் இதுவென்று அறிந்த |
| வேனில் அம் செல்வன் | வெப்பத்தைத் தனக்குச் செல்வமாக வுடைய ஸூர்யன் |
| சுவைத்து உமிழ் | உருசி பார்த்து வெறுத்துக்கழித்த |
| பாலை | பாலைநிலத்தை |
| கடந்த | தாண்டிவந்த |
| பொன்னே | பொன் போன்றவளே!, |

| | |
|---|---|
| விண்ணோர் | மேலுலகத்தோர் யாவரும் |
| கால் நிலம் தோய்ந்து தொழும் | (நிலந்தோய்தலில்லாத தமது) கால்கள் நிலத்தில் படியும்படி இங்கு வந்து நிலைத்து நின்று வணங்கும்படியான |
| கண்ணன் வெஃகா | கண்ணபிரானது திவ்யதேசமான திருவெஃகாவானது |
| உது | அடுத்துள்ளது; |
| அம் பூ தேன் | அழகிய பூவையும் தேனையுமுடைய |
| இள | இளமைமாறாத |
| சோலை | சோலையானது |
| அப்பாலது | அவ்விடத்துள்ளது; |
| எப்பாலைக்கும் சேமத்தது | (அது நமது) எல்லாத் துன்பங்களுக்கும் (மாறாய்) இன்பந்தருவதோரிடமாம். |

***—நகர் காட்டல் என்பது இப்பாட்டுக்குத் துறை. நாயகன் நாயகியை உடன் கொண்டு இடைவழிப் பாலை கடந்து தன் ஊர்க்

குப் போகும்போது அவளுக்கு வழி நடை யிளைப்புத் துன்பம் தோன்றாதிருக்கும் பொருட்டு அவளை நோக்கி 'அதோ தெரிகின்ற அப்பெரிய நகர் காண் நம்முடைய நகராவது' என்று தனது நகரைக் காட்டி ஸாமீப்யம் தோன்றக் கூறுதல் நகர்காட்டலாம். "புணர்ந்து உடன் போன தலைமகன் நடந்து இளைத்த தலைவியைக் குறித்து இடந்தலைப்பெய்தமை சொன்ன பாசுரம்" என்பது அழகிய மணவாள சீயருரைவாக்கியம். நாயகனும் நாயகியும் தாம் ஒருவர்க்கொருவர் துணிநிழலா யிருக்கையாலே இவர்களுக்கு இந்நிலத்தின் கொடுமையாலுண்டாகு மிளைப்பு இல்லையேயாகிலும் பொழுதுபோக்குக்காக நாயகன் நாயகியை நோக்கி இங்ஙனங் கூறினதென்றலுமுண்டு. நாயகி!, நம்முடைய வழி நடையில் தைவாதீனமாய்ப் பாலை நிலம் தாண்டியாயிற்று; அது இனித் தாண்ட வேண்டியதாயிருந்தால் வெகு கஷ்டப்பட வேண்டியதாகும்; நல்ல காலமாய் அதைத் தாண்டிவிட்டோம்; இனி நமது நகர் சமீபத்திலுள்ளதே காண் என்கிறான். ஸூரியனானவன் நால்வகை நிலங்களையும் தன் கிரண முகத்தாலே வாயிற் பெய்து கொண்டு ஸாரமான நீர்ப்பசை அறும்படி நன்றாக மென்று அஸாரத்தை உமிழ்ந்த பாகமே பாலை நிலமாகும்; அதனைத் தாண்டியாயிற்று.

**நானிலம் வாய்க்கொண்டு** = நால்வகை நிலங்களாவன—முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன; காடும் காடு சார்ந்த இடமும் முல்லையாம்; மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியாம்; நாடும் நாடுசார்ந்த இடமும் மருதமாம்; கடலும் கடல்சார்ந்த இடமும் நெய்தலாம். இவை தவிர, பாலை நிலம் என்று தனியே ஒரு நிலமுண்டென்பது சிலரது கொள்கை. அது நீரும் நிழலுமில்லாத கொடு நிலம். கீழ்ச் சொன்ன நால்வகை நிலங்களும் தம் தம் தன்மை கெட்ட விடத்தே பாலையாமென்கிற கொள்கை இங்குக் கொள்ளப்பட்டதாகும் "நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோது கொண்ட வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை" என்றதினால், இயற்கையில் பாலைக்குத் தனியே நிலமில்லாமையும் நால்வகை நிலங்களும் தந்தம் தன்மை திரிந்து பாலையாதலுமாகிய உண்மை விளங்குமன்றோ. சிலப்பதிகாரத்தில் (காடு

காண் காதை 60—66.) "கோத் தொழிலாளரொடு கொற்றவன் கோடி, வேத்தியலிழந்த வியனிலம் போல, வேனிற் கிழவ னொடு வெங்கதிர் வேந்தன், தானலந்திருகத் தன்மையிற் குன்றி, முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்கு துயருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என்றது காண்க. இங்கே நம்பிள்ளை யீடுங்காண்க:— "நிலந்தான் நாலென்பாரும் அஞ்சென்பாருமா யிருக்கும்; ஐந் தென்கிறவர்கள் பாலைநிலத்தையும் தன்னிலே ஒன்றாக்கிச் சொல் லுவர்கள்; நாலென்றவர்கள் இப்பாலை நிலந்தான் மற்றை நாலிலும் உண்டென்கிறார்கள்; அதாகிறது—நீரும் நிழலுமில்லாத விடம் பாலையா மத்தனையிறே." என்று.

பாலை நிலத்திற்கு அஸாதாரண லக்ஷணம் நீரில்லாமையே என் பது 'நன்னீரற மென்று' என்றதனால் விளக்கப்பட்டது. ஸூர்யன் தன் கிரணங்களால் பூமியிலுள்ள நீரைக் கவர்கின்றானென்பது "நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று" என்றதனால் காட் டப்பட்டது. நால்வகை நிலத்துள்ளும் பாலைநிலம் அஸார மென் பதும், இன்பத்திற் கன்றிப் பிரிதல்துன்பத்திற்கு உரியதாகிய இதன் கொடுமை 'கோதுகொண்ட' என்றதனாலும் 'மென்று சுவைத்துமிழ்' என்றதனாலும் குறிக்கப் பட்டதாம். இந் நிலத் துக்கு உரிய காலமாகிய நடுப்பகலும் இளவேனில் முதுவேனில் களும் 'வேனில்' என்றதனால் குறிக்கப்பட்டன. இதற்குத் தெய் வம் ஸூர்யனென்பது 'வேனிலஞ் செல்வன்' என்றதனால் தெரி விக்கப்பட்டது. 'வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை' என்றதனால் உஷ்ண கிரணங்களை இயல்பிலுடைய ஸூரியனும் வெறுக்கும்படியுள்ளது பாலையின் கொடுமை என்பது தோன்றும். "நன்னீரறமென்று கோதுகொண்ட வேனிலஞ் செல்வன்" என்ற பின் மீண்டும் 'சுவைத்து' என்றது—சிறிதும் நீரில்லாதபடி பசை யறப்பருகினமை தோன்றுதற்கு. பாலை—நீரும் நிழலுமில்லாத வறுநிலம். வடமொழியில் மருகாந்தார மெனப்படும்.

**பாலைகடந்த பொன்னே!**— இப்படிப்பட்ட கொடிய அந்நிலத் தைக் காலால் நடந்து கடந்துவந்து மிகவருந்த வேண்டிய நிலையி லும் நாயகனைப் பிரியாது அவனுடன் வருதலையே ஓரின்பமாகக்

கருதி, எரிகிற நெருப்பில் ஓடவைத்த பொன்போல ஒளி விடுகிற தன்மையைக்கூறி விளித்தபடி. **போன்**— உவமையாகு பெயர்; திருமகள் போன்றவளே! என்றதாகவுமாம். [**கால்நிலந் தோய்ந்து விண்ணோர் தோழுங் கண்ணன் வெஃகா உது**] தேவர்கட்கு இந் நிலவுலகத்தில கால்தோயாமை இயல்பு; அதுமாறிக் கால் நிலந் தோய்வரென்று கூறினது அவ்வுலகத்தினும் இத்திவ்ய தேசத்துக் குள்ள மஹிமையைக் காட்ட. நிலத்தில் கால் தோய்பவரான மண்ணுலகத்தோரும் கால் பொருந்துதற்கு அரிய பாலையின் வெப் பத்தைத் தணிக்கவல்லதான திருவெஃகா கால்நிலந் தோயாதவ ரான விண்ணுலகத்தோரும் கால் பொருந்தும்படியானதென நயங் காண்க. அன்பு மிகுதியால் இடம்பாராது கால் தோய்வர்.

திருவெஃகாவில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் * பத் துடையடியவர்க் கெளிமையால் $ கணி கண்ணர் சொற்கேட்ட திரு மழிசைப் பிரான் சொன்னபடி தான் செய்து **'சொன்னவண்ணஞ் செய்த பெருமாள்'** என்றும் **'யதோக்தகாரீ'** என்றும் திருநாமம் பெற்றமை தோன்ற ஸௌலப்யத்தைக் குறிக்கிற **'கண்ணன்'** என்னும் திருநாமத்தாற் குறித்தது. **வெஃகா**—நூற்றெட்டுத் திருப்பதிகளுள் தொண்டைநாட்டில் காஞ்சிபுரமென்கிற பெருமாள் கோவிலிலுள்ளதொரு திவ்யதேசம். இத்தலத் தெம்பெருமான், பிரமன் செய்த வேள்வியை அழிக்கவந்த வேகவதி நதி யைத் தடுக்கும்பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கிற் பள்ளி கொண்டவனாதலால் அப்பிரானுக்கு வடமொழியில் **'வேகாஸேது'** எனத் திருநாமம்; அது தமிழில் வேகவணை யென்று மொழி பெயர்ந்தது; அது பின் (நாகவணை யென்பது நாகணை யென விகாரப்படுதல்போல) 'வேகணை' என விகாரப்பட்டு அது பின்னர் வெஃகணை யெனத் திரிந்து, தானியாகு பெயராய்த் தலத் தைக் குறித்து, அது பின்பு 'வெஃகா' என மருவி வழங்கிற் றென்ப. ஆழ்வார்களுட் சிறந்த இந்த நம்மாழ்வார் தமது முதல் திவ்யப்ரபந்தமாகிய இத்திருவிருத்தத்தில் திருவேங்கடம் திரு வெஃகா திருவரங்கம் என்ற மூன்று திருப்பதிகளை மாத்திரமே

---

$ இவ்வரலாற்றின் விவரணம் திருமழிசையாழ்வார் வைபவத்திற் காணத்தக்கது. **நமது திருச்சந்த விருத்த வுரையின் முகப்பிற்காண்க.**

மங்களாசாஸனஞ் செய்தமை பற்றி அம்மூன்றும் 'கோயில் திருமலை பெருமாள் கோயில்' என்று சிறப்பித்துக் கூறப்படுமென்பர் பெரியோர்.

உது—மிகவும் தூரஸ்தமும் மிகவும் ஸமீபஸ்தமு மல்லாமல் நடுத்தரமாகவுள்ளது. உகரச் சுட்டடியாப் பிறந்த பெயர். **இளஞ் சோலை**—எப்பொழுதும் இளவேனிலாகிய வஸந்த காலமாகவே செழித்துத் தோற்றுகிற சோலை; இது கூறினது தாபந்தணிதற்குத் தக்க இடமென்று காட்ட. நல்ல குறிஞ்சி நிலத்திலே கூடி அரிய பாலைநிலத்தைக் கடந்து இனிய மருத நிலம் புகுகிறோமென்று காட்டியபடி. '**எப் பாலைக்கும்**' என்பதில் பாலை என்பது இலக்கணையாய் துன்பத்தைக் குறித்தது; பான்மை யென்னும் பண்புப் பெயர் மைவிகுதி போய் ஐவிகுதி பெற்றுப் பாலையென நின்றதெனக் கொண்டு 'எந்த [நிலைமைக்கும்' என வுரைத்தலுமாம். 'எப் பாலைக்குஞ் சேமத்ததே' என்றவிடத்து நம்பிள்ளை யீடு;— "எல்லாப் பாலை நிலங்களால் வந்த வெம்மையையும் போக்கி நமக்கு ரக்ஷகமுமான தேசங்காண் அது (வெஃகா); இந்தப் பாலை நிலமேயன்றிக்கே இன்னமுஞ் சில பாலைவனமும் கடக்கலாங்காண் இந்நில முண்டாக."

**அப்பாலது**—அவ்விடத்திலுள்ளது என்றபடி. (பால்-இடம்.) அன்றியே, திருவெஃகாவுக்கு அப்பாலுள்ள [அருகிலுள்ள] **திருத்தண்கா** என்னுந் திருப்பதியைத் திருவுள்ளம் பற்றி 'அம்பூக் தேனிளஞ் சோலை அப்பாலது' என்றருளிச் செய்ததாகவுங் கொள்ளலாம். (திருத்தண்கா—விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதி; வடமொழியில் ஹிமோபவந மெனப்படும்.) பாலைவனத்து நடந்து செல்கிற ஸ்ரீராம லக்ஷ்மணர்க்கு விச்வாமித்ர மஹாமுனிவன் உபதேசித்த பலை அதிபலை என்னும் மந்திர வித்தைகள் போல இத் தலைவன் வார்த்தை தலைவிக்குத் தாபந்தணிக்கு மென்க.

ஆழ்வார் கொடிய ஸம்ஸார மார்க்கத்தைக் கழித்த தன்மையையும் எம்பெருமானுகந்தருளின நிலத்தின் பரம போக்யதையையும் அவர்க்குப் பாகவதர் எடுத்துக் கூறி அவராற்றாமையைத் தவிர்த்தல் இப்பாட்டுக்கு ஸ்வாபதேசமாகும். முன் இரண்டடி ஒளிவடிவனை எம்பெருமான் பலவகை நிலைகளையும் திருவுள்ளத்திற்

கொண்டு ஆராய்ந்து அவற்றில் அஸாரமென்று கழித்ததும் பசையற்றதும் வெப்பம் மிக்கதுமான ஸம்ஸாரத்தைக் கடந்து மிக்க ஒளி பெற்றவரே! என்று ஆழ்வாரைப் பாகவதர் விளித்தபடி. பின் இரண்டடி—மீளாவுலகத்தவரான நித்ய ஸூரிகளும் மீண்டு வந்து வணிக்கும்படியான மஹிமையுள்ள அர்ச்சாவதாரஸ்தலம் அதிஸமீபமாய் மிக இனிமை தருவதாய் எவ்வகைத் துன்பமும் தவிர்ப்பதாய் க்ஷேமங்கரமான புகலிடமாய் உள்ளது என்றபடி.

சேமம்—க்ஷேமமென்ற வட சொல் விகாரம் .... (உகூ)

சேமஞ்செங் கோனருளே—செறுவாரு நட்பாகுவரென்று
ஏமம்பெற வையஞ்சொல்லும் மெய்யே—பண்டெல்லாமறைகூய்
யாமங்கடோ றெரிவீசு நங்கண்ண னந்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய—அவ்வாடை யீதோவந்து தண்ணென்றதே. (உஎ)

செம் கோன் அருளே — (எல்லாப் பொருள்களுக்கும்) தேரில் தலைவனான எம்பெருமானது திருவருளே

சேமம் — நம்மைப் பாது காப்பது (என்று கொள்ள),

செறுவாரும் நட்பு ஆகுவர் என்று — பிரதிகூலரும் அநுகூலராவர் என்று

ஏமம் பெற — உறுதி பொருந்த

வையம் சொல்லும் — உலகத்தோர் கூறுகிற

மெய்யே — உண்மை மொழியின் படியே,—

பண்டு எல்லாம் அறை கூய் யாமங்கள் தோறு எரி வீசும் — முன்பெல்லாம் [பிரிந்திருந்த காலத்துப்] பகைத்து எதிர் வந்து சண்டைக்கு அழைத்து இரவுகள் தோறும் அக்நிஜ்வாலையை (எம்மேல்) வீசுந்தன்மையுள்ள

அ வாடை — அந்தக் காற்றானது,

நம் கண்ணன் அம் தண்ணம் துழாய் தாமம் புனைய — நமது தலைவனான எம்பெருமானது அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையை (யாம் பெற்று)த் தரித்ததனால்

ஈதோ வந்து தண்ணென்றது — இதோவந்து (இப்பொழுது) குளிர்ச்சியாயிருக்கின்றது.

* * *—நாயகனான ஸர்வேச்வரனுடைய திருத்துழாய் மாலையைத் தரிக்கப் பெறுகையாலே இதற்கு முன்பு துன்பஞ் செய்து

கொண்டிருந்த வாடை இப்போது தணிந்த படியை நாயகி உட்கொண்டுரைத்த பாசுரம் இது. பிரிவை ஆற்றமாட்டாமல் மிக வருந்துகின்ற நாயகியை ஒருவாறு தேற்றுவிக்க விரும்பின நாயகன் இரவிடத்து ஸம்ச்லேஷித்ததாகத் தோற்றுவித்தது என்னவுமாம்.

எவ்வளவு துன்பங்கள் அடர்ந்தாலும் அவற்றுக்குச் சலியாமல் 'எம்பெருமானது திருவருளே நம்மைப் பாதுகாப்பது' என்று உறுதி கொண்டிருந்தால் பகைவரும் நண்பராவர் என்று உலகத்திற் பெரியோர் கூறுவதுண்டு; அது இப்போது மெய்யாயிற்று; எங்ஙனே யென்னில்; வாடையானது முன்பெல்லாம் பகைத்து எதிர்வந்து போருக்கு அழைத்து இரவுகள் தோறும் அக்நிஜ்வாலையை எம்மேல் வீசுந்தன்மையுடையதா யிருந்தது; இப்போது நமது நாயகனுடைய அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையை யாம் பெற்றுத் தரித்ததனால் அவ்வாடை தானே இதோ வந்து குளிர்ச்சி செய்யாநின்றது காண்மின் என்று—தலைவி தார் பெற்று மகிழ்ந்தமை சொல்லுகிறது.

இயற்கையாக இனிமை தருமவையான வாடை, சந்திரன் முதலிய பொருள்கள் விரஹ காலத்தில் உத்தீபநங்களாய், ஸம்ச்லேஷ காலத்தில் ஸந்தோஷகரங்களா யிருக்குந்தன்மை இதனால் உணர்த்தப்பட்டதென்க.

ஸர்வேச்வரனுடைய குணவிசேஷங்களை அநுஸந்தித்து அதனால் ஒருவாறு ஆற்றாமைதணிந்த ஆழ்வார், முன்பு அப்பெருமானை ஞாபகப்படுத்திக் கொண்டு இடைவிடாது வருத்திவந்த இவ்வுலகத்துப் பொருள் இப்பொழுது இனியதாகிற தன்மையைக் கூறுதல் இதற்கு உள்ளுறை பொருள். எம்பெருமானுடைய கருணையே ரக்ஷகமானால் அவனுக்கு அடங்கிய அனைவரும் அநுகூலிப்பரென்று நம்புதலுண்டாம்படி உயர்ந்தோர் சொல்லும் ஸத்யவாக்கின்படியே முன்பு பிரிவாற்றாத நிலையில் வலியவந்து எதிர்ப்பட்டு எப்பொழுதும் தாபஹேதுவாய் நின்ற லௌகிகபதார்த்தம்—எம்பெருமானது ப்ரஸாதத்தைப் பெற்றவளவிலே அநுகூலித்து ஆற்றாமை தணிப்பதாயிற்று என்றவிதனால்—பகவத்ஸம்பந்தத்தை யிட்டுப் பார்க்குமளவில் லௌகிகபதார்த்தங்களும் உத்தேச்யமாகு மென்றதாம்.

ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தின் முடிவான சூர்ணிகையில்—"பந்து கழல் பாவை குழமணன் யாழ் தென்றல் மதியமடிகில் சாந்தம் பூணகில் சிற்றில் தூதை முதலாவன" என்று தொடங்கி "மதியமென்னில் விட்டகலவும் ததீயமென்னில் இகழ் வறவும் முனிவது மிக்கால மீதோ வென்னப்படும் பொங்கைம் புலனில் ஹொஹ்யாதிஸமூஹம்" என்றதும் அவ்விடத்து வியாக்கியான வாக்கியங்களும் இங்கு அநுஸந்திக்கத் தக்கன. .... (உஎ)

**தண்ணந்துழாய் வளைகோள்வது யாமிழப்போம்—நடுவே**
**வண்ணந்துழாவி யோர்வாடை யுலாவும்—வள்வாயலகால்**
**புண்ணந்துழாமே பொருநீர்த் திருவரங்கா! வருளாய்**
**எண்ணந் துழாவுமிடத்து—உளவோ பண்டு மின்னன்னவே? (உஅ)**

வள் வாய் அலகால் — கூர்மையான வாயின் நுனியினால்
புள் — பறவைகள்
நந்து உழாமே — (தன்னிடத்துள்ள) சங்கைக்கொத்தாதபடி
பொரு நீர் — அலைமோதுகிற காவிரிநீர் சூழ்ந்த
திரு அரங்கா — ஸ்ரீரங்கமென்னுந் திருப்பதியை யுடையவனே!
தண் அம் துழாய் — குளிர்ந்த அழகிய (உனது) திருத்துழாயானது
வளை கொள்வது — (எமது) கைவளை கவளக் கொள்ளா கொள்ளாகின்றது
யாம் — (உன்பக்கல் ஈடுபட்ட) நாம்
இழப்போம் — வளையை இழக்கிறோம்; (இப்படியிருக்க)
ஓர் வாடை — (எமக்கும் தனக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லாத) ஒரு காற்றானது
நடுவே — இடையிலே பிரவேசித்து
வண்ணம் துழாவி உலாவும் — (எமது) மாமைநிறத்தை(க் கவர்தற் பொருட்டு)த் தடவித் தேடிக்கொண்டு ஸஞ்சரிக்கத் தொடங்குகின்றது;
அருளாய் — (அதற்கு யாம்மாமையிழக்காதபடி) வந்து சேர்ந்தருள வேணும்;
எண்ணம் துழாவும் இடத்து — மனம் தடுமாறுமளவிலும்
பண்டும் இன்னன்ன உளவோ — முன்பும் இப்படிப்பட்ட [எம் நிலைமைகள் போன்ற] நிலைமைகள் (வேறு எங்கேனும்) உள்ளனவோ?

* * *—கீழ்ப்பாசுரத்தில் தோற்றுவித்த ஸம்ச்லேஷம் கன வின் காட்சிபோன்றதாதலால் க்ஷணிகமாயிற்று; பழைய விச்லேஷ வ்யஸநமே தோன்றிற்று. ஆகவே, நாயகனைப் பிரிந்த நாயகி வாடைக்கு வருந்தியிரங்கும் பாசுரத்தாலே ஆழ்வார் தமது க்லேசத்தை வெளியிடுகிறார். ஆற்றாமைமிகுதியால் தலைவனை எதிரில் நிற்கிறாப்போலப் பாவித்து முன்னிலைப்படுத்திக் கூறியது இது. அன்றி, உருவெளிப்பாட்டில் கண்ட தலைவனை நோக்கியுரைத்தது மாம். உன்னோடு நேரில் ஸம்பந்தம் பெற்ற திருத்துழாயானது விச்லேஷகாலத்தில் ஸம்ச்லேஷத்தை நினைப்பூட்டி மிகவும் வருத்தப் படுத்தி உடலிளைக்கச் செய்வதும் அதற்கு ஆற்றாது நாம்மெலிந்து வளையிழப்பதும் யுக்தமாயிருக்கலாம்; அதுவன்றி, "பீஷாஸ்மாத் வாத: பவதே—வாயுவானவன் எம்பெருமானிடத்து அஞ்சிக்கொண்டு (அவனது கட்டளைக்கு உட்படிந்து) வீசுகின்றான்" என்ற உபநிஷத் தின்படியே இயல்பில் உனக்கு அஞ்சிநடக்குந் தன்மையதான காற்று உனது ஸம்பந்தம்பெற்ற நம்மை ஸமயம் பார்த்து வருத்திக் கொள்ளை கொள்ளத் தொடங்குவது தகுதியோ? காற்று என்னை நலிய என்ன ப்ராப்திபுண்டு. அங்ஙனம் ஆகாதபடி எம்மைக் காத் திடவேண்டும்; உன்பக்கல் அன்புவைத்தவர்களில் எம்மைப்போல வருந்தியவரும் உன்னால் உபேக்ஷிக்கப்பட்டவரும் இதுவரையிலும் எங்கும் எவருமில்லையே யென்கிறாள். திருத்துழாயானது என்னை எவ்வளவு வேணுமானாலும் துன்பப்படுத்தட்டும், அதற்கு நான் உடன்பட்டிருக்கக் கடமைப்பட்டிருக்கிறேன் என்றது அதில் நோக்குடையதல்ல; 'காற்று என்னை ஹிம்ஸிப்பதானது ஒருபடியா லும் யுக்தமன்று' என்று வற்புறுத்திக் கூறுவதில் நோக்குடைத்து. ஒருபுறத்தில் திருத்துழாய் நலியவும் மற்றொருபுறத்தில் வாடை வந்து வீசி நலியவும் இப்படி இரண்டு ஹிம்ஸகவஸ்துக்களுக்கு ஈடு கொடுக்க என்னாலாகவில்லையே!, இந்த ஹிம்ஸைக்கு அவகாச மின்றியே ஸம்ச்லேஷத்தைத் தந்தருளாய் என்றவாறு.

விரஹிகளை வருத்துவதில் துணைவேண்டாமல் அஸஹாய சூர மான வாடை யென்பாள் 'ஓர்வாடை' என்கிறாள். 'உலாவும்' என்றதனால் கம்பீரமான செருக்குநடை தோன்றும். "வள்வாயல காற் புள்நந்துழாமே பொருநீர்த் திருவரங்கா!" என்ற விளியால்—

உனது நாட்டுக்கு உறுப்பான தண்ணீரும் தன்னையடைந்த பொருளை எதிரி கவராதபடி. இரைக்கையாற் பொருது காத்திடுகின்றதே; உனக்குமாத்திரம் அது இயல்பாகாதோ? அடுத்தாரை ரக்ஷிக்குந்தன்மை 'அசேதநத்துக்கே இருக்கும்போது பரமசேதநனான உனக்கு அது மிகவும் இருக்கவேண்டாவோ? எனக் குறிப்பித்தபடி. காவிரி நீர் அலைமோதுவது "இயற்கையாயினும், தன்னிடத்து உள்ள நத்தைகளைப் பறவைகள் கூர்மையான வாயலகால் கொத்தாமைக்காக அலைமோதுவதாக வருணித்தது சமத்காரம். **உழாமே**—மே விகுதிபெற்ற எதிர்மறை வினையெச்சம். உழுதல்—கொத்திக் கிளறுதல்.

**அருளாய்**—'செய்யாய்' என்னும் வாய்பாட்டுச்சொல் உடன்பாடு எதிர்மறை இரண்டுக்கும் பொதுவாதலால், 'நீ அருளவேணும்' என்கிற பொருள்போல 'நீ அருளுகிறாயில்லை' என்கிற பொருளும் கொள்ளவுரியதே.

எம்பெருமானைச் சேராதநிலையில் அவனது இனிமையும் இவ்வுலகத்துப் பொருளும் அவனை நினைப்பூட்டுவனவாய்த் தம்மை வருத்தும் நிலைமையை ஆழ்வார் அப்பெருமானை முன்னிலைப் படுத்திக் கூறுதல் இதற்கு உள்ளுறைபொருள். [தண்ணந்துழாய்வளை கொள்வது யாமிழப்போம்] குளிர்ந்த தன்மையையும் அழகிய குணத்தையுமுடைய உனது போக்யதை எமது அநந்யார்ஹசேஷத்வத்தைக் கவர்ந்து கொள்ளட்டும்; அதனை இந்த போக்யதைக்கு நாம் இழப்போமாக. அதுவன்றி, [ஓர்வாடை நடுவே வண்ணந்துழாவி உலாவும்] உன் கட்டளையை அநுஸரித்து நடக்கக்கடவதான லௌகிகபதார்த்தம் எமது உருவத்தை மாற்றலுற்றது; [புள் நந்து வள்வாயலகால் உழாமே பொரும் நீர் திருவரங்கா] வஞ்சனையுள்ள மாயை சுத்தமான ஆத்மாவைக் கொடிய ஊழ்வினைமூலமாக வருத்தாதபடி தடுத்துக்காக்கிற குணத்தையுடைய ஸ்ரீரங்கநாதனே!, [அருளாய்] அதுபோல எம்மிடத்தும் கருணைசெய்வாயாக. [எண்ணம் துழாவுமிடத்து பண்டும் இன்னன்ன உளவோ?] துன்பத்தால் மனந்தடுமாறுகிற நிலையிலும் இப்படி இரங்காதிருக்கும் ஸ்வபாவம் முன்பும் உண்டோ?, இல்லையென்றபடி. ஸ்ரீ ஜானகிப் பிராட்டி, த்ரௌபதி, கஜேந்திராழ்வான், ப்ரஹ்லாதன், விபீஷணன்,

**காகன்** தொடக்கமான அளவற்ற அடியார்களிடத்திலெல்லாம் இப்படிப்பட்ட உபேக்ஷை கண்டதில்லையே; எனக்கே இங்ஙனமாயிற்று என்றாரென்க.

**இன்னன்ன** = இன்ன அன்ன என்பதன் தொகுத்தல்; இவை போல்பவை என்றபடி. 'எண்ணுந்துழாவுமிடத்து' என்பதற்கு— மனத்தினால் ஆராய்ந்து நோக்குமிடத்து என்று பொருள்கொள்ளவுங்கூடும். உனது குணங்களை ஆராய்ந்து பார்த்தால் இப்படிப்பட்ட உபேக்ஷை வேறெவ்விஷயத்திலுங் கண்டதில்லை; பாவியேனுக்கே இங்ஙனமாயிற்று என்கை. .... .... .... (உஅ)

இன்னன்ன தூதெம்மை யாளற்றப்பட்டிரந்தா ளிவளென்று *
அன்னன்ன சொல்லாப் பெடையொடும் போய்வரும் * நீலமுண்ட
மின்னன்ன மேனிப் பெருமானுல கிற்பெண்தூது செல்லா
அன்னன்ன நீர்மைகொலோ? குடிச்சீர்மையி லன்னங்களே. (உகூ)

| | |
|---|---|
| குடி சீர்மை இல் | உயர்குடிப்பிறப்பாகவரும் சிறப்பு இல்லாத |
| அன்னங்கள் | இவ்வன்னப் பறவைகள் |
| (என்ன செய்கின்றனவென்றால்) | |
| இவள் | 'இப்பராங்குச நாயகியானவள் |
| ஆள் அற்றம் பட்டு | (வேறுதனக்கு) ஆளில்லாமையால் |
| இன்னன்ன தூது | இப்படிப்பட்ட தூதாக |
| எம்மை | நம்மை |
| இரந்தாள் என்று | குறைகூறி வணக்கத்தோடு வேண்டிக் கொண்டாள்' என்றெண்ணி |
| அன்னன்ன சொல்லா | அப்படிப்பட்ட தூது மொழிகளை (த்தலைவனிடஞ் சென்று) சொல்லாமல் |
| பெடையொடும் போய் வரும் | (தமக்கு இனிய) பெண்பறவைகளுடனே (மந்தகதியாக மகிழ்ச்சியோடு) உலாவித் திரிகின்றன; |
| (இதற்குக் காரணம்;-) | |
| நீலம் உண்ட | நீலநிறத்தையுட்கொண்ட |
| மின் அன்ன | மின்னல் போன்ற |
| மேனி | திருமேனியையுடைய |
| பெருமான் | எம்பெருமானுடையதான |
| உலகில் | உலகத்தில் |
| பெண் தூது செல்லா | பெண்களுக்காகத் தூது செல்வதில்லாத |
| அன்னன்ன நீர்மை கொலோ | அப்படிப்பட்ட தன்மையையுடைமையோ?, |

* * *—நாயகியானவள் அன்னப்பறவையை வெறுத்துரைக்கும் பாசுரம் இது. தான் தனது நாயகன் விஷயத்திலே தூது செல்லுமாறு அபேக்ஷிக்கச் செய்தேயும் அது செய்யாதே தன் பேடையோடு உல்லாஸமாக உலாவித்திரிகிற அன்னங்களைக் குறித்து வெறுத்துரைக்கின்றாள். இத்துறை திருக்கோவையாரில் 'அன்னமோடழிதல்' எனப்படும். "உலகமெல்லாம் துயிலா நின்ற இந்நிலைமைக்கண்ணும் யான் துயிலாமைக்குக் காரணமாகிய என் வருத்தத்தைச் சென்று அவர்க்குச் சொல்லாது தான் தன் சேவலைப் பொருந்திக் கவற்சியின்றித் துயிலாநின்றது என அன்னத்தோடு அழிந்து கூறா நிற்றல்" என்பது அவ்விடத்து உரை.

ஸாக்ஷாத் புருஷோத்தமனாகிய ஸர்வேச்வரன் விஷயத்திலே தூது செல்வதானது தாழ்ந்த இடத்துக்குத் தூது செல்வது போல் இகழத்தக்கதன்றியே மிகக் கொண்டாடத் தக்கதென்பது தோன்ற '**இன்னன்ன தூது**' என்று சொல்லப்பட்டது. எம்பெருமானிடத்திலே ஸ்வயம் புருஷார்த்தமாகச் செல்ல விரும்ப வேண்டியது ப்ராப்தம்; அஃது இல்லையாயினும் பிறர்க்குத் தூது செல்லும் வியாஜமாகவாவது போக நேர்ந்தால் பரமபாக்கியமென்று கொண்டு போகலாமே; விரைந்து தூது போவதற்கு உரிய சிறகமைதி முதலிய கருவிகளிற் குறையில்லாமை நோக்கியன்றோ இந்த அன்னப்பறவைகளை நான் தூது செல்லப் பிரார்த்திப்பது; எம்மாலாகாதென்று அசக்தி கூறி மறுக்கும்படியான ஜந்துவையோ நான் பிரார்த்திப்பது; நவவியாகரண பண்டிதனான அநுமான் போல்வாரை விடுதற்கு ஏற்ற தூது நமக்குக் கிடைத்ததே! என்றும் இவை நினைக்கின்றனவில்லை; போகாமலும் வாராமலும் இங்கேயே தங்குகின்றனவாயிருந்தாலும் குற்றமில்லை; தம் காரியத்திற்காக இனத்தோடு உல்லாஸமாக அங்குமிங்கும் போய் வருகின்றன; அங்ஙனஞ் செல்லும்பொழுது எம் காரியத்தையுஞ் செய்யலாமே; அதுவுமில்லையே; 'தன் பெண்மையும் பாராது, நாம் பறவையென்பதும் நோக்காது நம்மைப் பிரார்த்திக்கின்றாளே, இவளுக்குச் சிறிது காரியஞ் செய்வோம்' என்றும் இரங்குகின்றனவில்லை; வேறு ஆளைச் சுட்டிக்காட்டிவிட்டு விலகச் சந்தர்ப்பமில்லாதபடி ஆளற்றிருக்கும் நிலைமையையும் நோக்குகின்றனவில்லையே! என வருந்துகின்றாள் பராங்குசநாயகி.

தன்னுடைய ப்ரார்த்தனையிலும் ஒரு குறையில்லை; அன்னப் பறவைகளின் சக்தியிலும் ஒரு குறையில்லை; அப்படி யிருந்தும் இவை தூதுசெல்ல முற்படாமைக்கு என்ன காரணமிருக்கக் கூடும்! என்று ஆராய்ந்து பார்த்தாள்; பண்டை யிதிஹாஸங்களில் அநுமன் தூது, கண்ணன் தூது, நளன் தூது முதலிய வரலாறுகளில் ஆண்கள் பொருட்டாகவே தூது செல்லுதல் மரபாகக் காண்கையாலே பெண் பிறந்தார்க்குத் தூது செல்லத்தகா தென்று கருதினவோ? என்கிருள் பின்னடிகளில். தன் கருத்தின்படி நடவாததால் '**குடிச் சீர்மையி லன்னங்கள்**' எனக் குலத்தையு முட்படப் பழிக்கின்ருள். 1. "நலத்தின் கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்கண் ஐயப்படும்" என்றபடி உயர்குடிப் பிறந்தார்க்கு இயல்பாகிய இன்சொல், இகழாமை, உபகாரம் முதலிய நற்குணங்களில்லாதவளவில் குலக்குறை சொல்லப்படுமாதலால் இவற்றினிடத்து அவையில்லாமை பற்றிக் குடிச்சீர்மை யில்லாத அன்னங்களென்றது. எம்பெருமானது திருமேனியிலுள்ள கருமை நிறத்தையும் திவ்ய வொளியையும் பற்றி '**நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமான்**' என்றது. 'மின் உண்ட நீலமன்ன மேனி' என மாற்றி அந்வயித்து, மின்னற் கொடியை நடுவிலே கொண்ட நீலமேகத்தையொத்த திருமேனியெனக் கூறினல், மின்னல்—திருமார்பிலுள்ள நாச்சியாருக்கும், மேகம்—திருமேனிக்கும் உவமையாம்.

ஸ்வாபதேசத்தில் 'தூது' என்பது ஆசார்ய விஷயத்தை யென்பர். எம்பெருமானைச் சேரப்பெருத ஆழ்வார் தம்முடைய ஆற்ருமையை ஒருவர் முகமாக அவனுக்கு அறிவிக்க நினைத்துத் தாம் வேண்டிய விடத்திலும் ஒருவரும் தகுந்தவர் கேரிடாமல் அவரவர் தம் தம் காரியத்திலே ஊன்றியிருக்க, ஆழ்வார் வெறுத்துக் கூறும் வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். ஹம்ஸமானது வெண்ணிறமுள்ளது; பக்ஷிகளுட் சிறந்தது; பாலையும் நீரையும் பகுத்து நீரையொழித்துப் பாலையுட்கொள்ளுந் தன்மையது; இது போல, ஸத்வகுண பரிபூர்ணனுய் மற்றையோரினும் மேம்பட்டு விலக்ஷணனுய் ஸாரா ஸாரங்களைப் பகுத்துணர்ந்து அஸாரத்தைத்

1. திருக்குறள் குடிமை—8.

தள்ளி ஸாரத்தை க்ரஹிக்கும் இயல்புடையனான நல்லாசிரியன் விவக்ஷிதன்.

இரண்டாமடியில், சொல்லா—சொல்லாமல் என்றபடி; ஈறு கெட்ட எதிர்மறைவினையெச்சம். .... .... (உக)

அன்னஞ்செல்வீரும் வண்டானஞ்செல்வீருந் தொழுதிரந்தேன் *
முன்னஞ் செல்வீர்கள் மறவேன்மினோ * கண்ணன் வைகுந்தனோ
டென்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச் சொல்லியவரிடைநீர்
இன்னஞ்செல்லீரோ? * இதுவோ? தகவென்றிசைமின்களே. (ங௦)

அன்னம் செல்வீரும் — (வானத்திற் பறந்து) செல்லுகிற அன்னப்பறவைகளாகிய உங்களையும்

வண்டானம் செல்வீரும் — (அப்படியே) செல்பவர்களாகிய வண்டானக் குருகுகளாகிய உங்களையும்

தொழுது இரந்தேன் — யான் வணங்கிப் பிரார்த்திக்கின்றேன்;

(என்னவென்று எனில்;)

முன்னம் செல்வீர்கள் மறவேன்மினோ — உங்களுள் முன்னே செல்பவர்கள் (என் வேண்டுகோளை) மறவாதொழிவீராக;

கண்ணன் வைகுந்தனோடு — கிருஷ்ணாவதாரஞ் செய்தருளினவனும் பரமபதத்துக்குத் தலைவனுமாகிய பெருமானுடன்

என் நெஞ்சினாரை கண்டால் — (முன்பு போயிருக்கிற) எனது மனத்தை (அங்கு நீங்கள்) பார்த்தால்

என்னை சொல்லி — (அதற்கு நீங்கள்) என்னைக்குறிப்பிட்டுச் சொல்லி

அவரிடை நீர் இன்னம் செல்லீரோ — 'அவரிடத்து நீர் இன்னமும் போய்ச்சேரா திருக்கிறீரோ?

இது தகவோ — இது தகுதியோ?'

என்று இசைமின்கள் — என்று சொல்லுங்கள்.

* * *—நாயகனைப் பிரிந்த நாயகி அன்னங்களையும் வண்டானங்களையும் தூது வேண்டுகின்றாள். எம்பெருமானிடம் தூது செல்லப் பிரார்த்திப்பதன்று; தன்னை யகன்று நாயகன் பின் சென்ற நெஞ்சின் பக்கல் தூது விடுவதாம். நெஞ்சானது தன்னை விட்டுப் பிரிந்து சென்றதாகவும் அதற்குத் தூது விடுவதாகவுஞ் சொல்லுகிறவிது ஒருவகையான சமத்காரமாகும். தலைவனிடத்திலேயே நெஞ்சு நன்றாகப் பதிந்துவிட்டது என்பது இதனால்

விளங்கும். "நீரிருக்க மடமங்கை மீர்! கிளிகள் தாமிருக்க மதுகர மெலாம் நிறைந்திருக்க மடவன்னமுன்ன நிரையாயிருக்க வுரையா மல் யான், ஆரிருக்கிலு மென்னெஞ்ச மல்லதொரு வஞ்சமற்ற துணையில்லை யென்றுதரத்தினொடு தூது விட்ட பிழை யாரிடத் துரை செய்தாறுவேன், சீரிருக்கு மறை முடிவு தேடரிய திருவரங் கரை வணங்கியே திருத்துழாய்தரில் விரும்பியே கொடு திரும்பியே வருதலின்றியே, வாரிருக்கு முலை மலர் மடந்தையுறை மார்பிலே பெரிய தோளிலே மயங்கியின்புற முயங்கி யென்னையு மறந்து தன்னையு மறந்ததே" என்ற திருவரங்கக் கலம்பகச் செய்யுள் இங்கு ஸ்மரிக்கத் தக்கது.

வண்டானம் என்பது நாரையில் ஒரு சாதி; அன்னப் பறவைகளும் வண்டானங்களும் இயற்கையாக வானத்திற் பறந்து திரிந்து கொண்டிருந்தன; வானத்திற் பறப்பவை யெல்லாம் எம் பெருமானைத் தொழுவதற்கு விண்ணுலகம் நோக்கிச் செல்லுகின் றன என்பது இவ்வாழ்வாரது நினைவு போலும்; அதனால், ஓ பறவைகாள்! உங்களைத் தலையால் வணங்கி வேண்டிக் கொள்கின் றேன்; நீங்கள் மிக விரைந்து செல்லுகின்றீர்கள்; உங்களில் முந் துற முன்னம் விண்ணுலகத்துச் சென்று சேருமவர் எனது வேண்டு கோளை மறந்திடாமல் நிறைவேற்ற வேணும்; அது யாதெனில்; என்னுடைய நெஞ்சினர் ஸ்ரீவைகுண்டநாதனை இங்கே எழுந்தரு ளப் பண்ணிக்கொண்டு வருவதாகவோ அல்லது ஏதேனும் ப்ர ஸாதம் பெற்று வருவதாகவோ நித்யவிபூதிக்குச் சென்றார்; இன் னமும் மீண்டுவரக் காணோம்; நான் இவ்விடத்திலே இவ்வுலகத் தவரால் உபேக்ஷிக்கப்பட்டு அவஸ்துவாகப் புளியம் பொந்தின் கீழே கிடந்தேனாகிலும் அங்குச் சென்ற என்னெஞ்சினர் அங் குள்ளாரால் கௌரவிக்கப் பெற்றுச் சீரிய சிங்காசனத்திலமர்ந்து 'பராக்! ஸ்வாமி பராக்!! அருளப்பாடு நம்மாழ்வார் நெஞ்சி னர்' என்று திருப்பரியட்டமும் சாத்தப்பெற்று மேனணிப்புத் தோற்ற வீற்றிருப்பர்; எம்பெருமானுடைய அந்தரங்க ஸந்நி தானத்திலே யிருப்பர்; கண்டவாறே அவர் இன்னாரென்று நீங் கள் கண்டுணரப் பெறலாம்; கண்டு 'ஐய! நீர் குருகூர்ச் சடகோப னென்னும் பராங்குச நாயகியின் நெஞ்சினரன்றோ?' என்று

அவர்க்கு என்னை ஞாபகமூட்டி, 'உம்மை அவர் இங்கே யனுப்பி எத்தனை நாளாயிற்று; இன்னமும் இவ்விடத்திலேயே இருக்கிறீரே; வந்த காரியத்தை இரண்டத்தொன்று பார்த்துக்கொண்டு மீண்டு செல்லாதே இங்ஙனே தாமதித்திருப்பது தகுதியோ? அந்தரங்கமென்று அவர் உம்மைத் தூதனுப்பினதற்கு இதுவோ தக்க செயல்?' என்று உறைக்கச் சொல்லுங்கோள் என்கிறாள்.

**தொழுது இரந்தேன்**—'தொழுது' என்றதனால் காயிகமான வேண்டுகோளும் 'இரந்தேன்' என்றதனால் வாசிகமான வேண்டுகோளும் கூறிற்றாம்; "**யந்மநஸா த்யாயதி தத்வாசா வததி தத்கர்மணா கரோதி**" "**மநஏவ மநுஷ்யாணாம் காரணம்**" என்று சுருதியாதலால் வாசிக காயிகங்களுக்கு இன்றியமையாத காரணமான மாநஸிகப்ப்ரார்த்தனை தானே பெறப்படும்; ஆகவே, மனம் மொழி மெய் என்னும் த்ரிகரணங்களாலும் பறவைகளைச் சரணமடைந்தமை தோன்றும். இங்ஙனம் சரணம் புகுமவர்களுடைய வேண்டுகோள் மறுக்கத் தக்கதன்றென்றவாறு.

"**மறவேன்மினோ**" என்கையாலே, இதற்கு முன்பு இப்படியே சில பறவைகளிடத்துத் தாம் சொல்லியனுப்பினமையும் அவை மறந்தொழிந்தமையும் தொனிக்கும். "இவள் பிரகிருதியை யறியும் நாயகன் மறந்தான்; அவன் கைப்பின்னே போன நெஞ்சும் மறந்தது; இனி யார்தான் மறவாதார்!" என்பது நம்பிள்ளை யீடு. மறப்பது உங்களுக்கு இயற்கை யல்லாவிடினும் அவ்விடத்துச் சேர்க்கையால் மறக்க நேரும்; அது வேண்டா என்றவாறு. '**கண்ணன்**' என்றது ஸௌலப்ய வாசகம். **வைகுந்தன்** என்றது பரத்வ வாசகம். "கண்ணன் வைகுந்தனோடு என்னெஞ்சினாரைக் கண்டால்" என்றதனால் தனது ஸௌலப்யத்தை முன்னம் காட்டி என் மனதைக் கவர்ந்து கொண்டு தனது பரத்வத்தால் என்னை இன்றளவும் வந்து கலவாது நிற்பவனிடத்து என் மனம் வீணே சென்று சேர்ந்து அலைகிறது என்பதாக விளங்கும். தலைமகனிடத்துத் தனக்கு உள்ள கௌரவத்தினால் அவனைப் பற்றிச் சென்ற மனத்தை 'நெஞ்சினார்' என்று உயர்த்திக் கூறினாள்.

பரமபத நிலயனான எம்பெருமானைக் காணிலுங் காணலாம்; அவனைத் தான் சேர்ந்த பலத்தாற் செருக்கி நிற்பதும் அவனது

அந்தரங்க பரிவாரங்களுள் தானு மொன்றாய்விட்டதுமான நெஞ்சைக் காணுதலரிது என்பது தோன்ற 'வைகுந்தனோடு நெஞ்சினரைக் கண்டால்' என்றாள்.

**என்னைச்சொல்லி**— அந்த நெஞ்சுக்கு உடையவள் நானென்பதையும், எனது உடைமை அது வென்பதையும், எனக்கு அது இன்றியமையாததென்பதையும், யான் தனித்துள்ள தன்மையையும் தோன்றச் சொல்லி; எனவே, இவற்றையெல்லாம் நெஞ்சம் மறந்திருக்கின்றமை தோன்றும். புருஷோத்தமனாகிய சிறந்த நாயகனைத் தான் கூடியதனாலாகிய மேன்மைபற்றித் தன்னைப்பிறர் உயர்த்திச் சொல்லும் வகையால் '**அவர்**' என்றது. [**அவரிடை நீர் இன்னஞ் செல்லீரோ?**] ஓ நெஞ்சினரே! நீர் வருகிற பொழுதே ஆற்றாமை மிக்க அவரிடத்து அவருக்கு அந்தக்கரணமான நீர் அவர் துயரையறிந்து தீர்த்திடாமல் நாயகன் பொருட்டே யன்றி உம்பொருட்டும் அவர் தூதுவிடும்படி இன்னமும் போகாதிருக்கலாமோ வென்று சொல்லுங்கோள்.

பறந்து செல்லும் பறவைகளுள் இன்னது முன்பு செல்லுமென்று அறியாமையால் '**செல்வீர்கள்**' என்றும் '**மறவேன்மினோ**' என்றும் '**இசைமின்கள்**' என்றும் பன்மையாற் கூறினாள். சீவகசிந்தாமணியில் (காந்தருவதத்தையா ரிலம்பகம்2-53.) "தனிக்கயத் துழக்கி வென்றீர் தையலைச் சார்மின்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் "துணியலாகாமையின் பன்மையாற் கூறினான்" என்றமையால் இன்னதொன்று நிச்சயம் தோன்றாத விடத்துப் பன்மையாற் கூறுதல் இலக்கணமா மென்றுணர்க. அன்றி, முன்னே முன்னே செல்பவரெல்லாம் கண்டு சொல்லுங்கள் என்பதாகவுங் கொள்ளலாம்; பலரும் பழித்துக்கூறினால் ஒருகால் திரும்பிவரக்கூடுமென்று கருத்து. இங்ஙனம் பலவற்றையும் ஏககாலத்தில் தூதுவிடுதலால், ஒன்றை முன்பு தூதுவிட்டு அதுபோய்க் காரியம் பார்த்து வருமளவும் பொழுதுபோக்கி ஆறியிருக்கமாட்டாமை தோன்றும். அபிநிவேசத்தின் முதிர்ச்சி யிருக்கிறபடி.

ஆழ்வார், தம்மை எம்பெருமான் பக்கல் சேர்த்தற்கு உரிய ஆசாரியராகச் சிலரை வரித்து அவர்களைநோக்கிச் சொல்லும்

வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். அவர்களிற் சிறந்தாரை அன்னமென்றும் சிறிது தாழ்ந்தாரை வண்டானமென்றுங் குறித்தது. 'செல்வீர்' என்றதனால் அவர்கள் எம்பெருமானது திவ்ய தேசத்தை நோக்கிப் பிரயாணப்பட்டமை தோன்றும்.

எம்பெருமானை இடைவிடாது நினைத்திருக்கையினும் அவனைச் சேர்ந்து அநுபவித்து ஆநந்திக்கப் பெறாமையாலுண்டான ஆற்றாமைத் துயரினும் அவனை மறந்திருப்பதே நன்று என்று அன்பு மிகுதியால் ஒரு வெறுப்புக்கொண்டு நெஞ்சை மீட்கப் பார்க்கிறாரென்க. .... .... .... (கூ0)

**இசைமின்கள் தூதென் றிசைத்தா லிசையிலம்—என்தலைமேல்**
**அசைமின்க ளென்றா லசையுங்கோலாம்?—அம்பொன் மாமணிகள்**
**திசைமின் மிளிருந் திருவேங்கடத்துவன் தாட்சிமயம்**
**மிசை—மின்மிளிரிய போவான் வழிக்கொண்ட மேகங்களே.** (கூக)

| | |
|---|---|
| அம் பொன் | அழகிய பொன்னும் |
| மா மணிகள் | சிறந்த ரத்னங்களும் |
| திசை | திக்குக்கள்தோறும் |
| மின் மிளிரும் | மின்னல்போல ஒளி வீசப்பெற்ற |
| திரு வேங்கடத்து | திருவேங்கட மலையினுடைய |
| வல் தாள் சிமயம் மிசை | வலிய அடிவாரத்தை யுடைய சிகரத்தின் மேலே |
| [சிகரத்தை நோக்கி], | |
| மின் மிளிரிய போவான் | மின்னல்கள் விளங்கச் செல்லும் பொருட்டு |
| வழிக்கொண்ட | பிரயாணப்பட்ட |
| மேகங்கள் | மேகங்களானவை— |
| தூது இசைமின்கள் என்று இசைத்தால் | '(நீங்கள் எமக்காகத்) தூதுக்கு இசைந்து சென்று சொல்லுங்கள்' என்று சொல்லி வேண்டினால் |
| இசையிலம் | (அதற்கு உடனே) உடன்பட்டுச் செல்லக் காண்கிறோமில்லை; |
| என் தலைமேல் அசைமின்கள் என்றால் | 'நீங்கள் என்தலையின்மேல் பொருந்துங்கள்' என்று வேண்டினால் |
| அசையும் கொல் ஆம் | (அவை அங்குச்) செல்லக் கூடுமோ?. |

* * *— தூதுபோகச் சொன்னவிடத்தும் போகாத மேகங்களைக் குறித்துத் தலைவி இரங்கிப் பேசும் பாசுரம் இது. திருவேங்கட மலையின்மேற் சென்று சேரும்பொருட்டுப் பிரயாணப்

பட்ட மேகங்களை நோக்கித் தலைமகள் 'என்னைப்பிரிந்து அங்குச் சென்று வஸிக்கின்ற எனது தலைமகனுக்கு என் நிலைமையைச் சொல்லுமாறு நீங்கள்எனக்குத் தூதராகவேணும்' என்றுவேண்ட, அதற்கு அவை உடன்படக் காணாமையால் மீண்டும் அவற்றை நோக்கி 'அவனுள்ளவிடத்தேறச் செல்லும் பாக்கியமுடைய நீங்கள் அங்ஙனஞ் செல்லமாட்டாத எனது தலையின்மேல் உங்கள் பாதத்தை வைத்தாவது செல்லுங்கள்' என்றுபிரார்த்திக்க, திருமலைத் தலைமேற் சென்று தங்குவதற்கு த்வரைப்படுகின்ற அவை இவள் தலைமேல் தங்கி நிற்பதற்கும் இசைதல் அரிதாயிருந்த தன்மையைக் குறித்துத் தலைவி இரங்குகின்றாளென்னவுமாம்.

கீழ்ப்பாட்டில் அன்னங்களையும் வண்டானங்களையும் தூது வேண்டியவள் அவை அங்ஙனம் தூதுசெல்லக் காணாமையால் 'இப்பறவைகள்தாம் தம்தம் காரியத்திலேயே கருத்துடையன வாதலால் நம் காரியத்தைச் செய்தனவில்லை' என்று கருதி மேகங்களை நோக்கி 'எப்பொழுதும் கைம்மாறு கருதாமல் பிறர்க்கு உதவிசெய்வதையே இயல்பாகவுடைய இவை நம் காரியம் செய்யத்தக்கன' என்று துணிந்து அம்மேகங்களை வேண்ட, அவையும் இவள் காரியஞ் செய்யாமையால் மிக இரங்குகின்றாளென்க. இங்ஙனம் பலவாறு கூறி அலற்றுதற்குப் பயன் யாதெனில்; மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடி திறந்தவிடத்து ஆவியெழுந்து முன்னின்ற வெப்பம் நீங்கினாற்போல, ஆற்றாமையால் உள்ளே மிக்கு நின்ற தாபத்தை வாய்விட்டு வெளியிட அது சிறிதளவு குறைதலேயாம்; "வூரொத்பீடெ தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா। மோகக்ஷோபெ ச ஹ்ருதயம் ப்ரலாபைரேவ தார்யதெ." என்ற உத்தராமசரித நாடக ச்லோகமும் காண்க.

இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமாக அநுஸந்திக்கவேண்டியனவ :—"'கீழ் நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமானுலகு' என்று பரமபதத்தே தூதுவிட்டாள்; அது பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியுக்தானார்க்கல்லது புகவொண்ணாத தேசமாகையாலே அவதாரங்களிலே தூதுவிடப் பார்த்தாள்; அதுவும் ஸமகாலத்தி லுள்ளார்க்கப்பின்னையில்லையாகையாலே பிற்பட்டாருக்கும் அநுபவிக்கலாம்

படி ஸுலபமான திருமலையிலே திருவேங்கட முடையான் திருவடிகளிலே மேகத்தைத் தூதாக விடுகிறாள். திருமலைநோக்கிப் போகிற மேகங்களே! என்னுடைய தூதவாக்கியங்களைக் கொண்டுபோய்ச் சொல்லுங்கோ ளென்றால் சொல்லுகிறிலிகோள்; திருமலைக்குப் போகிற பராக்கிலே பேசாதே போகிறவற்றைக்கண்டு, சொல்ல மாட்டிகோளாகில் உங்கள் திருவடிகளை என் தலைமேலே வையுங்கோ ளென்றால் வைப்புதிகோளோ? திருமலைக்குப் போவாருடைய திருவடிகள் உத்தேச்ய மாயிறேயிருப்பது. திருமலைக்குப்போகிறவர்களைத் தலையிலேவைக்கக் கிடைக்குமோ? திருவடியை [ஹநுமானை] ப் பிராட்டிஇங்கே ஓரிராத் தங்கிப்போகவேணு மென்று அருளிச்செய்ய, ஒண்ணாது என்று அவனும் மறுத்துப் போனாப் போலே போகா நின்றன.'' என்று.

ரத்னங்கள் ஒளிவீசுகின்ற திருவேங்கட மலைக்குப் போவதாகப் புறப்பட்ட இம்மேகங்கள் 'நீங்கள் எனக்காகத் திருமலையப்பன் பக்கல் தூது செல்லவேணும்' என்று நான் வாய்வார்த்தை மாத்திரத்தால் வேண்டியதற்கு உடன் படுகின்றனவில்லை; அவற்றின் கால் எனது சிரஸ்ஸில் படும்படி சரணாகதி செய்தால் அதற்கு இசைந்து ஒருகால் உடன்பட்டுச் செல்லுமோ என்பது கருத்து. வானத்திற் பறந்து செல்லுகின்ற அன்னம் முதலிய பறவைகளைப் பரமபத நாதனிடம் செல்வனவாக நினைந்ததுபோலவே மேலே ஊர்கின்ற மேகங்களையும் திருவேங்கட முடையான் பக்கல் செல்வனவாக நினைத்தமை யுணர்க. யாரேனும் எங்கேனும் வழிநடந்து சென்றாலும் திவ்விய தேசங்களுக்கு யாத்திரை செல்வதாகவே நினைப்பது ஆழ்வாரது தொழிலாம். "வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த, என் திருவாழ் மார்பற்கு என் திறம் சொல்லார் செய்வதென்?" என்பர் திருவாய் மொழியிலும்; வழியிலே ஸ்வகார்ய பரர்களாய்ச் செல்பவர்க ளெல்லாரும் திருவண்பரிசார மென்னுந் திருப்பதிக்குச் செல்வதாகவன்றோ பாவனை நிகழ்ந்தது.

தூதுவிடுதற்கு உரியதைத் தன் தலைமேல் அடிவைத்துச் செல்லுமாறு வேண்டுதலை 1. "எங்கான லகங் கழிவாய் இரைதேர்ந்திங் கினிதமரும், செங்கால மடநாராய்! திருமூழிக் களத்

1. திருவாய் மொழி 9—7—1.

துறையும், கொங்கார் பூந்துழாய்முடியெங் குடக்கூத்தற் கென்னுதாய், நுங்கால்க ளென்தலைமேற் கெழுமீரோ நுமரோடே" என்னு மிடத்துங் காண்க.

இசையிலம் என்றது இசையப் பெற்றிலோம் என்றபடி. ஆம்-அசை. தாள்— பாதமென்னும் வடசொல்லின் பொருளது; "வாஹாஃஷூ த்ருஜவவ-கூதாஃ" என்றான் அமரன். மிளிரிய— செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்; இய - எதிர்காலங் காட்டும் விகுதி. மிளிரிய என்பதைத் தெரிநிலை யிறந்தகாலப் பெயரெச்சமாகக் கொண்டு, 'மிளிர்ந்த' என்று உரைத்து மேகங்களுக்கு விசேஷணமாக்கலும் ஒன்று. போவான்—வான் விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சம்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—கீழ் எம்பெருமான் பக்கல் ஆழ்ந்த நெஞ்சை மீட்கும்படி வேண்டப் பட்டவர்கள் 'இவர் நெஞ்சை மீளச்செய்வது ஸர்வசக்தனான அவ்வெம் பெருமானுக்கும் அஸாத்யமான தொன்றானால் நம்மாற் செய்யலாவதோ?' என்று கைவிட, பின்பு ஆழ்வார் திவ்யதேச யாத்ராபரராய்த் திருமலையை நோக்கிச் செல்கிற சிலரைக்கண்டு 'இவர் நம் குறையை எம்பெருமான் பக்கல் விண்ணப்பஞ்செய்து, நம்மை அவனோடு சேர்ப்பதற்கு ஏற்ற புருஷகாரமாவர்' என்று கருதி அவர்களை ஆசாரியராக வரிக்க, அவர்கள் இவர்க்கு ஆசார்ய ராவதற்கு உடன் படாமையால் 1. "எம்பெருமான் தாள் தொழுவார்காண்மின் என் தலைமேலாரே" என்னும்படி இவர் நமது சிரஸ்ஸின் மேல் திருவடிகளை வைப்பதும் புருஷார்த்தமாகும் என்று அதனை வேண்டுகிபடி. .... .... .... (கூக.)

மேகங்களோ! வுரையீர் * திருமால் திருமேனியொக்கும்
யோகங்களுங்களுக் கெவ்வாறு பெற்றீர்? * உயிரளிப்பான்
மாகங்களெலாந் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்தம்
ஆகங்கள்கோவ * வருத்துந் தவமா மருள்பெற்றதே. (கூஉ)

1. பெரிய திருமொழி 7—4—1.

| | |
|---|---|
| மேகங்களோ | ஓ மேகங்களே!, |
| திருமால் திருமேனி ஒக்கும் யோகங்கள் | எம்பெருமானது திருமேனியையொத்திருக்கும் படியான உபாயங்களை |
| உங்களுக்கு எவ் ஆறு பெற்றீர் | உங்களுக்கு (ஸித்திக்கும் படி) எவ்விதமாய் அடைந்தீர்கள்? |
| உரையீர் | சொல்லுங்கள்; |
| உயிர் | உயிர்களை |
| அளிப்பான் | பாதுகாக்கும் பொருட்டு |
| நல் நீர்கள் சுமந்து | நல்லஜலத்தைத் தரித்து |
| மா கங்கள் எல்லாம் திரிந்து | பெரிய வானங்களிலெல்லாம் ஸஞ்சரித்து |
| நும் தம் | உங்களுடைய |
| ஆகங்கள் நோவ | உடம்புகள் நோகும்படி |
| வருத்தும் | (அவ்வுடம்புகளை) வருந்திச் செய்த |
| தவ ஆம் | தபஸ்ஸோ |
| அருள் பெற்றது | (அவ் வெம்பெருமானது) அருளை நீங்கள் பெற்ற காரணம்?. |

* * *—நாயகனைப்பிரிந்த நிலையில் கண்ணிற் காணும் பொருள்களை யெல்லாம் நோக்கிப் பலவாறு இரங்குகின்ற நாயகி, புருஷோத்தமனோடு ஒத்த தன்மையையுடைய மேகங்களைக் கண்டு அவற்றை நோக்கி 'எம்பெருமானது திருமேனியையொத்த மேனியையுடைமையாகிய ஸாரூப்ய நிலையை நீங்கள் என்ன முயற்சிகள் செய்து பெற்றீர்கள்? கைம்மாறு கருதாமல் பரோபகாரத்துக்காகவே நல்ல நீரைச் சுமந்துகொண்டு உடம்பு வருந்தச்சென்று ஆங்காங்குப் பெய்து எல்லா வுயிர்களையும் பாதுகாத்தலாகிய பெருந்தவமுடைமையால் உங்களுக்கு எம்பெருமான் கருணை நேர்ந்து அதனாலேதான் இந்த நிலை வந்தது போலும்' என்று கூறுகின்றாள்.

பொய்கையாழ்வார் கடலை நோக்கி "மாலுங் கருங்கடலே! என் நோற்றாய்?, வையகமுண் டாலிலைத் துயின்றவாழியான், கோலக் கருமேனிச் செங்கண்மால் கண்படையுள், என்றுந் திருமேனி நீ தீண்டப்பெற்று" என்று எம்பெருமான் எக்காலமும் உன்னிடத்தே பள்ளிகொண் டிருப்பதற்கு ஏற்ப என்ன தவம் புரிந்தாய்? என்று கேட்டார்; இவ்வாழ்வார் மேகத்தை நோக்கி 'எம்பெருமானோடு உருவொத்திருக்கும்படியாக நீங்கள் என்ன தவம் புரிந்தீர்கள்?' என்று வினவுகின்றார். அவை அநுட்டித்த உபாயத்தையறிந்து

தானும் அனுட்டித்து அந்நிலைமை பெறக் கருத்துப்போலும். மேகம் வடிவத்தால் திருமாலை யொக்குமென்று தலைவி கூறுதலை 1. "கரும் பெரு மேகங்கள் காணில் கண்ணனென்று ஏறப்பறக்கும்" 2. "நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தானென்று ஆலும்" என்னுமிடங்களிலும் காண்க "ஒக்குமம்மானுருவ மென்று உள்ளங் குழைந்து நாணொடும், தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந் தோறுந் தொலைவன் நான்" என்றதுங் காண்க.

**மேகங்களோ**—ஓகாரம் மிக்கது, விளியுருபு. ஓ மேகங்கள் என மாறினுமாம். எவ்வளவு தூரத்திலிருந்தாலும் தன்குரல் கேட்கும்படி 'மேகங்களோ' என்று கூப்பிடுகிறாள்; 'நாராயணா ஓ! மணி வண்ணா நாகணையாய்' என்று கஜேந்திராழ்வான் கூப்பிட்டாற் போல. **யோகம்**—ஒத்திருப்பதற்குக் காரணமான உபாயம். 'ஜோவம்' என்னும் வடசொல் **மாகம்** எனத்திரிந்தது. ஆகாசம் பல வன்றியே ஒன்றுதானே, '**மாகங்கள்**' என்ற பன்மை எதுக் கென்னில்; இந்தப் பன்மை பொருளின் பன்மையைக் குறிப்பதன்று; ஒருபொருளின் பலவிடங்களைக் குறிக்கும். '**நீர்கள்**' என்றவிடத்துப் பன்மை மிகுதிகாட்டுவதாம். மேகம் பலவாதலால் நீரும் பலவாயிற்று என்னவுமாம்.

ஸ்ரீவைகுண்டத்தி லுள்ளவர்களும் எம்பெருமானோடொத்த வடிவத்தை அவனருளாற் பெற்றவர்களுமான முக்தர்களை ஆழ்வார் பாவனையாலே எதிரில் காணப்பெற்று அவர்களை நோக்கி 'நீங்கள் இந்த ஸாரூப்யநிலையை எங்ஙனம் அடைந்தீர்கள்? சொல்லுங்கள்; 3. "ஆதியந்தமனந்த மற்புதமான வானவர்தம் பிரான், பாதமா மலர்சூடும் பத்தியிலாத பாவிகளுய்ந்திடத், தீதில் நன்னெறிகாட்டி யெங்குந் திரிந் தரங்கனம்மானுக்கே, காதல்செய் தொண்டர்" என்றபடி இவ்வுலகத்தில் எல்லாப் பிராணிகளையும் உஜ்ஜீவிப்பிக்கும் பொருட்டு மெய்வருத்தம் பாராமல் எங்குந்திரிந்து குணரஸபூர்த்திகொண்டு நல்லொழுக்கங்காட்டிக் கைம்மாறு கருதாது உலவு

1. திருவாய்மொழி 4—4—6.
2. ஷை 4—4—4.
3. பெருமாள் திருமொழி 2—6.

தலாகிய ஸாதனத்தால் பகவானருளைப் பெற்று அதனால் உமக்கு இங்நிலை நேர்ந்தது போலும் என்று கூறுதல் இதற்கு ஸ்வாபதேசப் பொருள். .... .... .... .... (௬உ)

அருளார் திருச்சக்கரத்தா லகல்விசும்பு:நிலனும் *
இருளார் வினைகெடச் செங்கோல்கடாவுதிர் * ஈங்கோர்பெண்பால்
பொருளோவெனு மிகழ்வோ? இவற்றின்புறத் தாளென்றெண்ணோ?
தெருளோம் அரவணையீர்! * இவள்மாமை சிதைக்கின்றதே. (௬௩)

| | |
|---|---|
| அரவு அணையீர் | ஆதிசேஷ சயனத்தை யுடையவரே !, |
| அருள் ஆர் திரு சக்கரத்தால் | கருணை நிறைந்த திருவாழியைக் கொண்டு |
| அகல் விசும்பும் | பரந்த விண்ணுலகத்திலும் |
| நிலனும் | மண்ணுலகத்திலும் |
| இருள ஆர் வினை கெட | இருளை யொத்த கொடிய தொழில்கள் நிகழாதபடி |
| | (துஷ்ட நிக்ரஹஞ் செய்து) |
| செங்கோல் கடாவுதிர் | உமது கட்டளையைத் தடையின்றிச் செலுத்துகிறீர்; |
| | (அப்படி லோகங்களை ரக்ஷிக்கிற நீர்) |
| இவள் | இப்பராங்குச நாயகியினுடைய |
| மாமை | மேனி நிறத்தை |
| சிதைக்கின்றது | அழிப்பதானது |
| ஈங்கு | 'இவ்வுலகத்தில் |
| ஓர் பெண்பால் | ஓர் பெண்ணைக் காப்பது |
| பொருளோ எனும் | புருஷார்த்தமோ' என்கிற |
| இகழ்வோ | அநாதரவோ ? |
| | (அல்லது) |
| இவற்றின் புறத்தாள் என்று எண்ணோ | (உம்மால்ரக்ஷிக்கப் படுகின்ற) விண் மண்ணுலகங் களுக்கு உள் ளாகாமல் வெளி யாயிருப்பவ ளொருத்தியிவள்' என்ற எண்ணமோ ? |
| தெருளோம் | அறிகின்றிலோம். |

* * *—நாயகனுடைய விச்லேஷத்தால் நாயகி துடித்துக் கொண்டிருக்கச் செய்தேயும் வந்து உதவாத நாயகனைத் தோழி வெறுத்துரைக்கும் பாசுரமிது. நீரோ ஸாமாந்யமானவ ரல்லீர்; திருவாழியாழ்வானைப் பரிகரமாகக் கொண்டு எல்லாவுலகங்களிலும் துஷ்டர்களை நிரஸித்து சிஷ்டர்களை வாழ்விப்பதையே விரதமாகக் கொண்டிருக்கின்றீர்; இப்படி ஸர்வரக்ஷகரான நீர் இவளையும் ரக்ஷிக்

கக் கடமைப்பட்டிருந்தும் இவளொருத்தியை மாத்திரம் பாது காவாது கைவிட்டிருக்கின்றீர்; 'இவள் நம்மால் அவசியம் காக்கப் பட வேண்டியவளல்லள்; அப்படிப்பட்ட தகுதி இவளிடத்து ஒன்றுமில்லை' என்று இகழ்ந்து கைவிட்டீரோ? அன்றி, 'நம்மால் காக்கப்படும் உலகங்களுக்கு இவள் உட்பட்டவளல்லள்; பஹிர்ப் பூதை' என்று கருதிக் கைவிட்டீரோ? என வருந்திக் கூறியவாறு.

திருவாழியாழ்வானும் சேதநகோடியில் ஒருவராதலால் 'அரு ளார் திருச்சக்கரம்' என அருளுடைமை கூறப்பட்டது. ஆயுத கோடி ஆபரணகோடி என்னுமிரண்டிலும் அந்வயித்திருக்கின்ற திருவாழிக்கு ப்ரதிகூல நிக்ரஹத்தில் கோபம்போலவே அநுகூல ரக்ஷணத்தில் அருளும் மிக உரியதாம்.

**இருளார்வினைகெட** = ஸுதர்சநசதகத்தில் "வாஹ்யாவா ஹ்யாநுகாரக்ஷதஜஹநஹஂகாரஹேதிர் ஷ்யாத்ர" என்றதை நினைப்பது. இங்கு இருள் என்றது அகவிருளாகிய அஜ்ஞானத்தை யும் புறவிருளாகிய இருட்டையும்.

இங்கு எம்பெருமானை **அரவணையீர்!** என விளித்தது கருத் துடன் கூடியது; இவள் தரையிலே வருந்திக் கிடக்க உமக்குப் படுக்கை எங்ஙனே பொருந்திற்று? படுக்கைக்கு மேல்விரி வேண் டாவோ? படுக்கையில் கிடப்பார் ப்ரஹ்மசாரியாயோ கிடப்பது? தனிக்கிடை கூடுமோ? இவள் வேண்டாவோ? என்றவாறு.

"இவள் மாமை சிதைக்கின்றதே" என்றவிடத்துப் பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானங் காண்மின்:—"(இவளுடைய மேனிநிறத்தை) அவன்தானே கைதொட்டு அழிக்கிறானென்றபடி. பிரஜை கிணற்றிலே விழுந்தால் வாங்காத தாயைத் 'தள்ளினாள்' என்னுமோபாதி ரக்ஷகனானவன் ரக்ஷியாதொழிந்தால் அவ்வளவுஞ் சொல்லலாமிறே." என்று.

ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்ட அன்பர்கள் எம்பெரு மானை நோக்கி விண்ணப்பஞ்செய்த வார்த்தை யென்பது இதற்கு **ஸ்வாபதேசம்.** முதல்வாக்கியத்தால், எம்பெருமான் தனது ஸங்கல்ப **ரூபனான** திருவாழியாழ்வானைக் கொண்டு நித்யவிபூதியில் பகவத **நுபவ ப்ரதிபந்தகமான** இருள் நடையாடாதபடியும், லீலாவிபூதி

யில் அஜ்ஞாநகார்யமான பொல்லாவொழுக்காகிய இருள் நடையாடாதபடியுஞ் செய்து இரண்டுவிபூதியையும் இருள் அகலப் பாது. காப்பது தோன்றும். [இங்கே நம்பிள்ளை யீடு:—"கையுந் திருவாழியுமான அழகைக்காட்டி, பிரியாமையாலே ரக்ஷிக்குமங்குள்ளாரை; அந்தைக்கொண்டு விரோதிகளை இருதுண்டமாக இட்டு ரக்ஷிக்கும் இங்குள்ளாரை."] ஆழ்வார்க்கு உடனே பேறு உதவாது அவர்க்கு ஆற்றாமையால் நிறவேறுபாட்டை உண்டாக்கினது இவ்வுலகத்தில் ஒருபுறத்தில் தம்மைத் தாம் பாதுகாத்துக்கொள்ளவும் சக்தியில்லாமல் பாதந்திரராயிருப்பவர் இவரென்ற உபேக்ஷையோ? இவ்வுலகத்தார்போல ஸம்ஸாரத்திலே அழுந்திக்கிடப்பதும் அவ்வுலகத்தார் போல எம்பெருமானை யடுத்து அடிமை செய்து ஆராதித்தலுமில்லாதவராதலால் இவர் நமது பாதுகாப்புக்கு உட்பட்ட இரண்டு உலகிலுஞ் சேராது புறம்பானவரென்று நினைத்தோ? இன்னதென்று தெரியவில்லை யென்று அன்பர்கள் கூறியவாறு.

"அசக்தியும் பாரதந்திரியமும் அநாதரத்துக்கு உறுப்பல்லாமையாலும் விபூதித்வயவ்யாவ்ருத்தி வைலக்ஷண்யத்துக்கு உறுப்பாகையாலும் அங்கிகாரஹேது உண்டென்றபடி. அரவணையீர்! என்கையாலே அந்த விபூதியிலுள்ளாரோடு நித்யஸம்ஸ்லேஷம் நடக்கிறபடி சொல்லுகிறது" என்பது அழகிய மணவாளச் சீயருரை.

**சிதைக்கின்றதாழி யென்றுழியைச்சீறி * தன் சீறடியால்**
**உதைக்கின்ற நாயகந் தன்னுடைமாலே! * உனதுதண்டார்**
**ததைக்கின்ற தண்ணந்துழா யணிவானதுவே மனமாய்ப்**
**பதைக்கின்ற மாதின்திறத்து * அறியேன் செயற்பாலதுவே. (௩௪)**

| | | | |
|---|---|---|---|
| மாலே | எம்பெருமானே!, | தன் சிறு அடியால் | தனது சிறிய கால்களால் |
| ஆழி | கடல் வட்டமானது | உதைக்கின்ற நாயகம் தன்னுடை | உதைக்கும் படியான மேம்பாடுடனே |
| சிதைக்கின்றது | கார்யத்தைக் கெடுக்கின்றது | உனது | உன்னுடையதான |
| என்று | என்றகாரணத்தினால் | தண் தார் ததைக்கின்ற | வாடாத மலர்கள் நிறைந்த |
| ஆழியை | அக்கடல் வட்டத்தை | | |
| சீறி | கோபித்து | | |

| | | | |
|---|---|---|---|
| தண் அம் துழாய் | குளிர்ந்த அழகிய திருத்துழாயை | மாதின் திறத்து | இம்மங்கை விஷயத்தில் |
| அணிவான் அதுவே மனம் ஆய் பதைக்கின்ற | சூடும் பொருட்டு அதிலேயே கருத்தாய் வருந்துகிற | செயல்பாலது | செய்யத் தக்கதை |
| | | அறியேன் | யான் அறிகின்றிலேன். |

* * *—கூடலிழைத்து வருந்தாநின்ற தலைவியின் நிலையைப் பாங்கி தலைவனுக்கு உணர்த்துவதாம் இது. நாயகனான எம்பெருமானைக் கூடுகைக்குக் கூடலிழைத்து அது கலங்குகையாலே நோவுபடுகிற நாயகியின் வருத்தத்தைக் கண்டு தோழி கலங்கியுரைக்கின்றாள் என்க. கூடலிழைத்தலாவது—நாயகனைப் பிரிந்த நாயகி கூடல் தெய்வத்தை வாழ்த்தி மணலில் வட்டமாக ஒரு கோடு கீறி அதனுட் சுழிசுழியாகச் சுற்றுஞ் சுழித்து இரண்டிரண்டாகக் கணக்கிட்டு அக்கணக்கு இரட்டைப் பட்டால் பிரிந்த தலைவர் வந்து கூடுவரென்றும் ஒற்றைப் பட்டால் வந்து கூடாரென்றும் குறி பார்ப்பதொரு ஸம்ப்ரதாயம். நாச்சியார் திருமொழியில் "தெள்ளியார் பலர் கைதொழுந் தேவனார்" என்னுந் திருமொழியில் ஆண்டாள் $ கூடலிழைப்பது காண்க. அவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான அரும்பதவுரையில் "கூடலாவது—வட்டமாகக் கோட்டைக் கீறி அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றுஞ் சுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப் பட்டால் கூடுகை, ஒற்றைப் பட்டால் கூடாமை என்று ஸங்கேதம்" என்றுரைக்கப் பட்டுள்ளது. திருக்கோவையாரில் (186.) "ஆழி திருத்தும் புலியூருடையான் அருளினளித்து ஆழி திருத்தும் மணற்குன்றினீத்தகன்றார் வருகென்று, ஆழி திருத்திச் சுழிக்கணக்கோதி நையாமல் ஐய, வாழி திருத்தித் தாக்கிற்றியோ உள்ளம் வள்ளலையே" என்ற செய்யுளில் 'ஆழி திருத்திச்சுழிக்கணக்கோதி' என்றதும் இதுவே.

ஆழி சிதைக்கின்ற தென்று= அது காரியத்தைக் கெடுத்தலாவது சுழிக்கணக்கில் ஒற்றையாய்க் கூடாமையைக் குறித்தல்;

---

$ "கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே" "கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே" "கோமகன் வரில் கூடிடு கூடலே" எனப் பல வாய்பாடுகளால் தெய்வத்தைப் பிரார்த்தித்தவாறு காண்க.

இதுவே, கலங்குதலென்றும் பிழைத்தலென்றும் தவறுதலென்றும் கூடாமை யென்றும் சிதறுதலென்றும் கூறப்படும். இரட்டையாய்க் கூடுதலைக் குறித்தல் காரியத்தை அநுகூலிக்கச் செய்தலாம். அது, கூடுதலெனப்படும். இனி, கூடலிழைத்தலாவது—கண்களை மூடிக்கொண்டு தரையில் வட்டமாக ஒரு கோடு கீறி விட்டுப் பின்பு கண் திறந்து பார்த்து அது தொடங்கிய விடத்தில் தவறாது வந்து கூடியிருக்குமாயின் பிரிந்த தலைவன் தன்னை வந்து கூடுவானென்றும் அங்ஙனம் வந்து கூடாமல் விலகி யிருக்குமாயின் தலைவன் வந்து கூடானென்றும் குறிபார்த்தல் என்றும் சிலர் கூறுவராம்: அங்ஙனம் இலக்கணங் கொள்வதற்கு மேற்கோள் கிடைப்பரிது. பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலே யாகையாலே, இது கடற்கரையிலே நிகழும்.

"சிதைக்கின்ற தாழியென்று அதனைச் சீறி" என்ன வேண்டியிருக்க 'ஆழியைச் சீறி' என்றது பெரியார் பிரயோக முறைமையிற் பொருந்தும்: 'ஆழியை' என்றது அதனை யெனச் சுட்டுப் பெயர் மாத்திரமாய் நின்றதெனக் கொள்க; அவ்வாழியை என்றபடி. "ஆழி சிதைக்கின்றது" என்று கூடல் வட்டம் காரியத்தைக் கெடுப்பதாகச் சொன்னது தன் காரியம் கைகூடாமையைப் புலப்படுத்தியவாறு. விருப்பத்தோடு கையால் அருமைப்பட்டு இழைத்த கூடல் வட்டத்தை வெறுப்புக் கொண்டு காலால் விரைவில் அழிக்கின்றுளாம் தனது காரியம் கைகூடுமாறு குறி வரவில்லை யென்பது பற்றி. அங்ஙனம் காலால் அழித்தலே 'உதைக்கின்ற' என்றதனால் தெரிவிக்கப் பட்டதாம்.

"நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" [கலித்தொகை—முல்லைக் கலி-8] என்றபடி மாதர்கட்குப் பாதம் சிறுத்திருத்தல் நல்லிலக்கணமாதலால் சீறடி யெனப்பட்டது. சிறுமை X அடி, சீறடி. சிறுமை யென்னும் பண்புப் பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது. உதைக்கின்ற என்றதற்கு ஏற்ப 'சீறடி' என்பது சீற்றங்கொண்ட அடி எனவும் ஒரு பொருள் படுகிற நயம் காண்க. 'சீரடி' என்ற பாடத்துக்கு அழகிய பாதமெனப் பொருள் காண்க. 'நாயகன் தன்னொடு' என்பது பாடமன்று; 'நாயகம் தன்னொடு' என்க. நாயகமாவது தலைமை, கூடல் வட்டத்தைச் சீறிக் காலாலுதைக்கும்

படியான பெருமையோடும் திருத்துழாய் மலரணிவதிலுண்டான ஆசைப் பெருக்கோடுங் கூடிய இவள் திறத்து என்றவாறு.

**தார்**—பூ என்றும் பொருள்படுவதுண்டு; "மாலைபு மலருங் கொடிப்படைப் பெயரும், கிண்கிணி மாலையுந் தாரெனக் கிளத்துப" என்பது பிங்கலந்தை. '**தார் ததைக்கின்ற**' என்பதற்கு 'மாலையாகத் தொடுக்கப்பட்ட' என்று பொருள் கொள்ளவுந்தகும். **அணிவான்**—அணிவதற்காக என்று பொருள்படுதலால் எச்சம்: **பதைக்கின்ற**—துடிக்கிற. **மாது** என்றது மாதர் என்பதன் விகாரமாய் விரும்பப்படும் அழகுடைய மகளைக் குறிக்கும். இங்கு "மாதின் திறத்து' என்றது—இவ்வருத்தத்தை ஸஹிப்பதற்குத் தகாதவள் என்பதைக் காட்டும். 'செயற்பாலது யானறியேன்' என்றதனால் இவளைப் பதைப்பிக்கிற நீயே அதற்குப் பரிஹாரமும் அறிவாய் என்றதாம்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—ஆற்றாமை விஞ்சின ஆழ்வார் எம்பெருமானைச் சேர்தற்கு நம்மாற் செய்யலாவதொரு முயற்சியுண்டோவென்று பார்த்து அது கூடாமையாலே பின்னும் வருந்துகிற தன்மையைக்கண்ட அன்பர்கள் அதனை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்வதாம். ஆழி சிதைக்கின்றதென்று—தமது கையால் செய்யுந் தொழில் முயற்சி பேற்றுக்குக் காரணமாகாதென்றறிந்து, ஆழியைச் சிறி—அவ்வுபாயத்தைக் கைக்கொள்ளாது வெறுத்து, தன் சிறடியாலுதைக்கின்ற—(அவ்வுபாயத்தைக்) காற்கடைக் கொண்டு தள்ளிவிடுகிற, நாயகந்தனதெடு—திறமையுடனே, உனது தண்தார் ததைக்கின்ற தண்ணந்துழாயணிவானதுவே மனமாய்ப் பதைக்கின்ற—உன்னுடைய இனிமையை அநுபவித்தற்கு அதிலே முற்றுங் கருத்தைச் செலுத்திக் கால விளம்பத்தைப் பொறுமல் விரைந்து ஆற்றாமையால் வருந்துகிற, மாதின் திறத்து—பரதந்திரரான இவ்வாழ்வார் பொருட்டாக, செயற்பாலது அறியேன்—செய்யத்தக்கது இன்னதென்று யாம் அறியோம்; நீயே அறிவை யென்று கருத்து. **மாலே!**—ஞானம் சக்தி முதலிய எல்லாப் பெருமைக் குணங்களும்

நிறைந்தவனே! என்று விளித்ததனால் இப்படிப்பட்ட மஹாபுருஷனை நீ இவரை இன்னும் உன்பக்கற் சேர்த்துக் கொள்ளாமலிருப்பது தகுதியன்று என்றவாறு.

'திரைதக்கின்றதாழி யென்றாழியைச் சீறித் தன் சீறடியாலுதைக்கின்ற' என்பதற்கு வேறொருவகையாகவும் பொருள் கொள்ளலாம். 'ஆழி' என்று கடலுக்கும் பெயராகையாலே அப்பொருளை ஆழியை' என்றவிடத்துள்ள 'ஆழி' என்பதற்குக் கொள்ளலாம்; தான் இழைக்கிற கூடல் வட்டத்தைக் (கடல்) கலைத்து விடுகிறதென்கிற காரணத்தினால் கடலைச் சினந்து காலால் உதைக்கின்ற என்றபடி. இக்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங் காண்மின்;—"அவன் வருமளவும் ஆறியிருக்க வொண்ணாமையாலே கூடலிழைக்கத் தொடங்கினாள்; அது தப்பினபடியைக் கண்டு நாயகன்றன்னைக் கண்டால் கோபிக்குமாபோலே கடலோடே கோபிக்கிறாள். முன்புள்ளார், கூடலிழைக்கப் புக்கவாறே அது சிதறி வருகிறபடியைக் கண்டு அத்தோடே சீறி அழியா நின்றாளென்பர்கள். பட்டர், இது கூடுகைக்கு ஏகாந்தமன்றியே பிரிகைக்கும் ஒருபுடையுண்டாயிருக்கையாலே சீறி யுதையா நின்றாளென்று; கூடலிழைக்கப் புக்கவாறே கடலானது தன் திரையாகிற கையாலே அழிக்கப் புக அத்தோடே சீறா நின்றாளென்பர்." என்று. .... .... .... .... .... (கூச)

பால்வாய்ப் பிறைப்பிள்ளை யொக்கலைக்கொண்டு பகலிழந்த *
மேல்பாற் றிசைப்பெண் புலம்புறு மாலை * உலகளந்த
மால்பாற் றுழாய்க்கு மனமுடையார்க்கு நல்கிற்றையெல்லாம்
சொல்வான் புகுந்து * இதுவோர் பனிவாடை துழாகின்றதே. (கூரு)

| | | | |
|---|---|---|---|
| பால் வாய் பிறை பிள்ளை | அமிருத கிரணத்தை வெளியுமிழ்கிற தன்மையை யுடைய இளம் பிறைச் சந்திரனாகிற பால்மாறாத வாயையுடைய (தனது) இளங் குழந்தையை | ஒக்கலை கொண்டு | தனது இடைப்புறத்திலே [ஒருபக்கத்திலே] வைத்துக் கொண்டு |
| | | பகல் இழந்த மேல் பால் திசை பெண் | ஸூர்யனாகிற கணவனையிழந்த மேற்குப்பக்கத்துத் திக்காகிய பெண் |

| | |
|---|---|
| புலம்பு உறும் | வருந்தி அழப்பெற்ற |
| மாலை | மாலைப் பொழுதானது |
| உலகு அளந்த மால் பால் | உலகங்களை அளவிட்ட திருமாலினிடத்து உள்ள |
| அழாய்க்கு | திருத்துழாய்க்கு |
| மனம் உடையார்க்கு | ஆசைப்பட்ட நெஞ்சையுடையவர்களுக்கு |
| நல்கிற்றை எல்லாம் | அருள் செய்த உதவியை முழுவதும் |
| சோல்வான் | கவர்ந்து கொள்ளும் பொருட்டு |
| புகுந்து | வந்து |
| இது ஓர் பனி வாடை | இந்தக் குளிர்ந்த தொரு காற்று |
| துழாகின்றது | (என்மேல்) தடவுகின்றது; |
| ஏ | அந்தோ!. |

* * *—மாலைப் பொழுதுக்கு ஆற்றமாட்டாது வருந்தியிருக்குமிருப்பிலே அதற்கும் மேலாக வாடைவந்து வருத்த, அதற்குத் தலைமகள் இரங்கிக்கூறும் பாசுரமிது. வாடையாலுண்டாகிற வருத்தத்தின் மிகுதியை நோக்குமிடத்து மாலைப்பொழுதாலுண்டாகிய வருத்தம் இனிதென்று தோன்றுதலால், தலைவனைப் பிரிந்து அவனது ப்ரஸாதமான திருத்துழாயையாகிலும் பெற்றுத் தரிக்க ஆசைப்பட்ட ஸ்த்ரீகளுக்கு மாலைப்பொழுது செய்த உதவியையெல்லாம் கொள்ள வந்து இவ்வாடை வீசுகின்றது என்கிறாள். மாலைப்பொழுதானது மற்றவற்றையெல்லாங் கொள்ளை கொண்டாலும் உயிரை மாத்திரமாவது கொள்ளாது விட்டது; இவ்வாடை அதனையும் மிச்சமில்லாதபடி கொண்டுபோக வந்ததென்கிறாளென்க.

இதுவோர் பனிவாடை—'இது' என்று சுட்டினது—அந்த வாடையின் கொடுமையை வாய்கொண்டு கூறமுடியாமல் கையால் குறித்துக் காட்டினபடி. 'ஓர்வாடை' என்றது—இதற்கு முன்பு வந்த வாடைகள் போலன்றியே இது பெண்பிறந்தாரை மிக வருத்திப் புதியதாய் ஒப்பற்று ஒருதுணை வேண்டாது தனியே வருகிறதொன்று என்றபடி. 'பனிவாடை' என்றது—முன்பு குளிர்ச்சியாயிருந்த நிலைமையைப்பற்றி; இப்போது வெவ்வாடையாயிருக்குமே. அன்றியே, பனி—(ஸ்த்ரீகளை) நடுங்குவிக்கிற, வாடை என்று உரைத்தலுமாம். துழாகின்றது—உயிருள்ள விடத்தைத் தேடி மர்ம

ஸ்தாநத்திலே கைவைத்துத் தேடித் தடவுகின்றதென்கை. **ஓர் வாடை புகுந்து குழாகின்றது**—நிலாத்தோற்றம், மாலைப்பொழுது, கடலொலி என்னுமிவையெல்லாம் ஒருங்கு சேர்ந்தும் செய்ய மாட்டாத ஹிம்ஸையை இவ்வாடையொன்றே வந்து செய்கின்றதென்கை.

நாயகனைப் பிரிந்து வருந்துகிற தனக்குக் கண்ணிற்படும் பொருளெல்லாம் தன்னைப்போலவே வருந்துகிறதாகத் தோன்றுதலால் **'பகலிழந்த மேல்பால் திசைப்பெண் புலம்புறுமாலை'** என்றாள். இதனால் மாலைக்காலம் நாயகனைப்பிரிந்த ஸ்த்ரீகளை வருத்துமென்று தோற்றுவிக்கப் பட்டதாயிற்று.

**பால்வாய்** என்ற விசேஷணத்தை உபமானமாகிய பிறைக்கும் உபமேயமாகிய பிள்ளைக்கும் ஆக இரண்டுக்குங் கூட்டுக.

ஒன்றரையடியால் மாலைப்பொழுதை வருணிக்கிறாள்; மேற்குத்திக்காகிய ஒரு பெண்ணானவள் ஸூர்யனாகிற தனது நாயகனையிழந்து இளம்பிறைச் சந்திரனாகிற பால்மாறாத வாயையுடைய தனது இளங் குழந்தையைத் தன் இடுப்பிலே வைத்துக்கொண்டு 'அந்தோ! சிறு குழந்தையை விட்டிட்டுக் கணவன் முடிந்து போயினனே!' என்று கதறியழுவாரைப் போலே அழுகின்ற காலம் போலிருக்கின்றதாம் மாலைப்பொழுது.

இப்படிப்பட்ட மாலைப் பொழுதானது, **உலகளந்த மால்பால் துழாய்க்கு மனமுடையார்க்கு நல்கிற்றை யெல்லாம்**=உலகளந்த பெருமானிடத்துள்ள திருத்துழாய்க்கு ஆசைப்பட்டிருக்கின்ற நெஞ்சையுடைய ஸ்த்ரீகளுக்கு ஏதோ உதவி செய்திருப்பதாகவும், அந்த உதவி முழுவதையும் வாடைக்காற்றானது கவர்ந்துகொள்ளும் பொருட்டு வந்து குழாகின்றதாகவும் இங்குச் சொல்லப்படுகின்றதே, மாலைப்பொழுது என்ன உதவி செய்திருக்கின்றது! என்னில்; உயிரைக் கவர்ந்து கொண்டு போகாது விட்டதே அது செய்த பேருதவியாகு மென்க. அது கொண்டு போகாமல் வைத்திட்ட உயிரையும் கொண்டு போகவந்தது இவ்வாடை என்று இதன் கொடுமை சொல்லிற்றாயிற்று.

'மனமுடை**யேற்கு**' என்று தன்மையாகச் சொல்லவேண்டுமிடத்து **'மனமுடையார்க்கு'** என்றது தம்மையே படர்க்கையாகக்

**கூறின தென்க.** அன்றி, தம்போல்வாரைக் குறிப்பதுமாம். **நல்கிற்றை யெல்லாம்**—ஒருமைப் பன்மை மயக்கம். **நல்கிற்று—ஒன்றன்பால்** இறந்த கால வினையாலணையும் பெயர். **சோல்வான்—எச்சம்.** 'சோர்வான்' என்றும் பாடமுண்டு. **துழாகின்றது—'துழாவுகின்றது'** என்பதன் விகாரம்.

எம்பெருமானைச் சேர்ந்து ஆநந்த மநுபவிக்கக் கருதி விரைந்து அச்சேர்த்தி அப்பொழுதே கிடைக்காது விளம்பித்தலால் வருந்துகிற ஆழ்வார்க்கு அவ்வநுபவத்துக்கு ஏற்றகாலம் ஆற்றாமையை மிகுவித்துக்கொண்டு வந்தவளவிலே ஸம்ஸாரத்தில் ஸுக ஹேதுக்களான பொருள்களெல்லாம் பாதகங்களாய்த் தோன்றி மேன்மேலும் வருத்துகிற தன்மையைக் கண்டு அவ்வாழ்வார் இரங்கிக் கூறும் வார்த்தை இதற்கு ஸ்வாபதேசம். அப்பெருமானைப் பிரிந்த நிலைமையில் அவனைச் சேர்தற்கு உரியகாலம் நெருங்கினால் ஒரு சிறிது ஞானமே மிச்சமாம்படி மிக்க விளக்கமுடைய விவேகம் குலைந்து பாதந்த்ரராயிருப்பார்க்கு ஆற்றாமை மிகுமென்பது 'பால்வாய்ப் பிறைப்பிள்ளை பொக்கலைக்கொண்டு பகலிழந்த மேல்பால் திசைப்பெண் புலம்புறுமாலை' என்பதனால் தோன்றும். பால்வாய் பிறைப்பிள்ளை — ஞானத்தின் சிறுபகுதி. பகலிழத்தல்—விவேகங் குலைதல். மேல்பால்திசைப்பெண்-மற்றையோர்க்கு மேன்மையான வழியைக்காட்டுகிற பாதந்திரர். புலம்புறுதல்—ஆற்றாமைமிகுதல். மாலை—உரியகாலம். பின்னிரண்டடி—ஸகலப் பிரபஞ்சங்களையும் தனக்கே உரியபொருளாகவுடைய தலைவனான எம்பெருமானுடைய போக்யதையிலே யீடுபட்டார்க்கு அப்பெருமானுடைய அநுபவம் கிடைக்காமையினால் வந்த ஆற்றாமைக்குமேலே ஸம்ஸார பதார்த்தங்களும் பாதகமாய் வருத்தஞ் செய்யுமென்றவாறு. **'உலகளந்தமால்'** என்றதனால், அவரவர்கள் வேண்டாதிருக்கையிலும் எல்லாப் பிராணிகளின் தலையிலும் திருவடிகளைத் தானே கொண்டுவந்து வைத்து அவற்றைத் தன் உடைமையாக ஆட்கொண்டவன், வேண்டுகின்ற என்னை ஆட்கொள்ளா தொழிவதே! என்று ஈடுபட்டபடி.

**'மனமுடையார்க்கு'** என்று படர்க்கையாகக் கூறினதைக் கொண்டு இப்பாசுரத்தைத் தோழி வார்த்தையாகவும் தாய் வார்த்

னையாகவுங் கொள்வாருமுளர். அப்பொழுது ஆழ்வார் நிலைமையைக் கண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அஞ்சுதல் ஸ்வாபதேசார்த்தமாகக் கொள்ளத்தகும். .... .... .... .... (௫௫)

துழாநெடுஞ் சூழிருளென்று * தந் தண்டா ரதுபெயரா
எழாநெடு வூழி யெழுந்தவிக் காலத்தும் * ஈங்கிவளோ
வழாநெடுந்துன்பத்த ளென்றிரங்கா ரம்மனே! * இலங்கைக்
குழா நெடுமாடமிடித்த பிரானார் கொடுமைகளே! (௫௬)

| | |
|---|---|
| துழா நெடு சூழ் இருள் என்று | '(கண்ணுக்குப் பொருள்கள் புலப்படாமையால் கைகளால்) தடவித் தேட வேண்டும்படியான முடிவில்லாத நிறைந்த இருட்பொழுதென்று (ஒரு பேரிட்டுக் கொண்டு) |
| எழா நெடு ஊழி எழுந்த | (முன்பு ஒருகாலும்) தோன்றியறியாத நீண்ட கல்பம் தோன்றின |
| இக் காலத்தும் | இச்சமயத்திலும் |
| ஈங்கு இவளோ | இவ்விடத்துத் தனிமை பொறுக்க மாட்டாதிருக்கிற இவளோ |
| தம் தண் தார் அது பெயர் ஆ | தமது குளிர்ந்த திருத்துழாய் மாலை விஷயமாக [துழாய்மாலையென்னும் பெயரையே உருவிட்டுச் சொல்லிக் கொண்டு] |
| வழா நெடு துன்பத்தள் | தவறுதலில்லாத மிக்க [முடிவில்லாத] துன்பமுடையவள்' |
| என்று | என்று இவள் நிலைமையைத் திருவுள்ளத்திற்கொண்டு |
| இரங்கார் | (தலைவர்) இரக்கங் கொண்டு வந்து அருளுகிறாரில்லை; |
| அம்மனே | அந்தோ! |
| இலங்கை | இலங்காபுரியிலுள்ள |
| குழாம் | கூட்டமான |
| நெடு மாடம் | பெரிய மாளிகைகளை |
| இடித்த | (தம் சேனையைக் கொண்டு) இடித்துத் தள்ளின |
| பிரானார் | தலைவருடைய |
| கொடுமைகளே | கொடுந்தன்மைகள் இருந்தபடி என்னே!. |

* * *—தோழியானவள் நாயகனுடைய கொடுமையைக் கூறும் பாசுரமிது. கீழ்ப்பாட்டில் சந்தியா காலமும் வாடையும் ஹிம்ஸித்த வாறு சொல்லிற்று; அதற்குமேல் இருள் வந்து தோன்றிற்று. வாடையும் இராத்திரியும் 'நான்முன்னே அழிக்கிறேன், நான் முன்னே அழிக்கிறேன்' என்று சொல்வனபோல வந்து நலிகிற படி. ஒரு ராத்ரிதானே பல யுகங்களாகத் தோன்றி வருத்தத்தை மிகுவிக்கிற இக்காலத்திலும் இவளது தன்மையை அறிந்துவைத் தும் இரக்கங்கொண்டு வந்து உதவாதவர் மிகக் கொடியவர் என் கிறாள்.

அம்மனே=ஐயோ! என்பதுபோல; கொடுமைக்கு அஞ்சிக் கூறிய வார்த்தை. பிரிந்து தனியே நிற்கின்ற இந்தலைவிக்கு இருட் பொழுது கொடிதாகுமென்றும், இவள் பிரிவு பொறுக்க மாட்டாத தன்மையையுடையவளென்றும், திருத்துழாய் மாலையையாகிலும் பெற்றால் ஒருவாறு தரிக்கலாமென்று அதனையே விடாது வாய் பிதற்றும்படி ஆற்றாமை விஞ்சியதென்றும், அவ்வாற்றாமை வேறொரு விதத்தாலுந் தணியாதென்றும் இங்ஙனம் இரங்குகைக் குப் பல காரணங்களிருக்க, இவைகண்டு இரங்காமை தனித்தனியே கொடுமை என்பது தோன்ற 'கொடுமைகள்' எனப் பன்மையாகக் கூறிற்று. முன்பு ஒரு பிராட்டியின் ஆற்றாமைக்கு இரங்கி அது தீர்ப்பதற்காக இலங்கையையழித்து உதவினவர் இப்பொழுது அவ்வியல்புமாறி இவள் திறத்துக் கொடியரானபடி எங்ஙனே! யென்பாள் 'இலங்கைக்குழா நெடுமோட மிடித்தபிரானார் கொடுமை களே!' என்றாள். திருவரங்கக் கலம்பகத்தில் "கடல் வழிவிட நிசிசரர் பொடிபட விருகண் சீறி,வடகயிலை யிலெழுவிடைதழுவியது மறந்தாரோ, அடலர வமளியிலறிதுயிலமரு மரங்கேசர், இடர்கெட வருகிலர் முருகலர் துளவுமிரங்காரே" என்றது இங்கு அறியத்தக் கது. அன்றி, அப்பொழுதும் பிராட்டி பக்கல் இரக்கத்தாலன்று இலங்கையை யழித்தது; துஷ்ட நிக்ரஹஞ் செய்து தமது ப்ரபுத் வத்தை நிலைநிறுத்திக் கொள்ளும் பொருட்டாகவே யென்பது தோன்ற இங்ஙனங் கூறினளுமாம்.

இங்கே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்காண்மின்:— "ஒருத்திக்காகக் கடலையடைத்து ராமனென்றும் லக்ஷ்மணனென்

றும் எழுத்து வெட்டின அம்புகளைப் புகவிட்டுக் குட்டிச்சுவரும் மட்டைத் தெங்குமாக்கி மூலையடியே போகப்பண்ணின இந்த உபகாரகனுடைய இந்த நீர்மையெல்லாம் எங்கே குடிபோய்த்தோ என்கிறாள்' என்று எம்பார் அருளிச் செய்வர்; $ இதுவும் அழகிதொன்று உண்டாயிருக்கலாகாதென்று அஸூயையாலே அழித்தானித்தனைகாண்; ஒருத்திக்காக உதவினவனல்லன்காண் என்கிறாள்' என்று திருமலைநம்பி."

துழா என்பதற்கு—(பிரிந்த நாயகியின் உயிரைக்) கைவிட்டுத் தேடுகின்ற என்றும் பொருளுரைக்கலாம். சூழ் இருள்—தப்ப வேண்டுமென்று முயன்றாலும் தப்பவொண்ணாத இருள். 'தண்டாது பெயரா வழிமகட்கு அலப்பத்தன்' என்று அந்வயிக்கும். திருத்துழாய்மாலை நிமித்தமாகத் துன்பப்படுகின்றவள் என்றவாறு அன்றியே, 'தண்டாது பெயரா ஊழியெழுந்த' என்று அந்வயித்து—இவள் நாயகனது தாரை விரும்பினது வியாஜமாக (இவளை வருத்துதற்கு) இருளென்றொரு கற்பந் தோற்றின இவ்வளவினும் என்றுமுரைக்கலாம்.

இருளென்று ஊழியெழுந்த இக்காலம்=வருகிற பொழுது ஒரு ஸந்யாஸியாய்க் கிட்டினபொழுது இராவணனைப்போல வருகிறபொழுது ஓரிருளாய்க் கிட்டினபொழுது பல கல்பமாகுங்காலம் என்க. இரங்கார்=இராமபிரான் மோதிரத்தைக் கொடுத்து அநுமானைப் பிராட்டியினிடம் தூதனுப்பியதுபோல, தமது திருத்துழாயைக் கொடுத்து ஓராளைத் தூதுவிடுதலுஞ் செய்திலர் என்கிறாள். காதல் செய்யாவிடினும் ஐயோ வென்று இரக்கமாவது செய்யலாகாதோ வென்கிறாள். இரக்கமாவது—பிறர் துன்பம் பொறுக்கமாட்டாமை. 'நெடு ஊழி' என்றதற்கு—'கல்பத்துக்கும் ஓர் எல்லையுண்டு. அதுவுமில்லை இதுக்கு' என்று விசேஷார்த்தங் கூறுவர். பிரளயகாலத்திலே வந்து முகங்காட்டி ரக்ஷிக்குமவன் இக்காலத்திலும் முகங்காட்டா திருக்கலாமோ? என்பதுதோன்ற, 'இக்காலத்தும்' எனப்பட்டது

$ நம் கண்முன்னே லங்காபுரியும் அழகாக விளங்கிக்கொண்டிருக்கத் தகாது என்கை.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது:—காலம் வாய்த்த விடத்தும் பலன் கைபுகப் பெறாத ஆழ்வார்க்கு உண்டான ஆற்றாமைமிகுதியைக்கண்ட அன்பர்கள் எம்பெருமானுக்கு அருளில்லையோ வென்று சங்கித்துக் கூறுதலாம். 'துழா நெடுஞ்சூழிருளென்று எழா நெடுவூழியெழுந்த விக்காலத்தும்' என்றதனால் காலவிளம்பம் ஸஹிக்கமாட்டாமையால் மோஹாந்தகாரத்தை உண்டு பண்ணுகிற காலம் இவர்க்கு நீட்டித்துத் தோன்றுகிறதென்பது தெரிகின்றது. "ஈங்கிவளோ தம் தண்டாரது பெயரா வழா நெடுந்துன்பத்தளென்றிரங்கார்" என்றதனால், இந்த இருள் தருமா ஞாலத்திலே தமது துன்பத்தைத் தாம் தீர்த்துக்கொள்ளும் சக்தியற்ற இவ்வாழ்வார் நமது போக்யதையையே கூறிக்கொண்டு அது பெறாத காரணமாக மிக வருந்துவரென்று திருவுள்ளம்பற்றி எம்பெருமான் கருணை செய்திலனென்பது தெரிவிக்கப்படுகின்றது: 'இலங்கைக் குழா நெடுமாடமிடித்த பிரானார் கொடுமைகளே' என்றதனால், உலகமுழுவதும் உஜ்ஜீவிக்கும்பொருட்டுத் திருவவதரித்து துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனஞ் செய்தருளியவர் இவ்வொருவர் பக்கல் இரங்காதிருக்கிற கொடுமை என்னே! என்பது தோன்றும். இப்பாட்டை நாயகியின் வார்த்தையாகவுங் கொள்ளலாம்; அப்போது ஆழ்வார் வார்த்தையாக ஸ்வாபதேசத்திற் கொள்க.

துழா—'துழாவு' என்பதன் விகாரம். 'துழாம்' எனப் பிரித்து 'துழாவும்' என்னுஞ் செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர் மெய் கெட்டதென்றலுமொன்று. 'தாரது' என்பதில், அது—பகுதிப் பொருள்விகுதி. எழா—எழாத, வழா—வழாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். அம்மனே—இடைச்சொல்; வடமொழியில் 'அஹஹ!' என்னுமாபோலே. .... .... .... (௧௬)

கோடுங்காற்சிலையர் நிரைகோளுழவர் * கோலையில்வெய்ய
கடுங்காலிளைஞர் துடிபடுங்கவ்வைத்து *அருவினையேன்
நெடுங்காலமுங் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கா லோசியுமிடை * இளமான்சென்ற சூழ்கடமே(௧௭)

| | | | |
|---|---|---|---|
| அரு வினையேன் | அநுபவிக்கமுடியாத தீவினைப்பயனை யுடைய யான் | நெடு காலமும் | வெகு காலம் |
| | | கண்ணன் | கண்ணபிரானுடைய |

| | |
|---|---|
| நீள்மலர்பாதம் | நீண்ட தாமரை மலர்போன்ற திருவடிகளை |
| பாவி | வழிபட்டு |
| பெற்ற | (அந்த ஆராதனையின் பயனாக) ஈன்ற |
| தொடுங்கால் ஒசியும் இடை இள மான் | தொட்டால் ஒடியும் படியான [மிக மெல்லிய] இடையை யுடையவளும் இளமைதங்கிய மான்போன்ற பார்வை யுள்ள வளுமான மகள் |
| சென்ற | நடந்துபோன |
| சூழ் கடம் | பரந்த பாலைநிலம் |
| (எப்படிப்பட்டதென்னில்,) | |
| கொடு கால் சிலையர் | வளைந்தவிற்களுடைய யுடையவர்களும் |
| நிரை கோள் உழவர் | பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொள்வதையே தொழிலாக வுடையவர்களும் |
| கொலையில் வெய்ய | கொலைத் தொழிலில் கொடியவர்களும் |
| கடு கால் | நடைவிரைந்த கால்களை யுடைய வர்களுமாகிய |
| இளைஞர் | இளவீரர்களது |
| துடி | பறைகள் |
| படும் | ஒலித்தலாகிற |
| கவ்வைத்து | ஆரவாரமுடையது. |

* * *—தன் மகள் சென்ற சுரத்தருமையை நற்றாய் கூறி யிரங்கல் இது. களவு நெறியில் நாயகியைப் புணர்ந்த நாயகன் பழி பரவுதல் கண்ட தோழியினால் விலக்கப்பட்டு அதன் பின் உடனே அவளை வெளிப்படையாக மணஞ்செய்து கொள்ளுதல் உண்டு; அங்ஙனஞ் செய்யானாயின் அப்பழி அடங்குமாறு சில நாள் நாயகியை ஒருவாறு பிரிந்திருப்பதோ, நாயகியை உடன் கொண்டு தன்னூர்க்குச் செல்லுதலோ, ஏதேனுமொன்று முறைமையாய் நிகழும். அவற்றுள், நாயகன் நாயகியை அரிய பெரிய காட்டுவழி யாக உடன்கொண்டு போனமையைத் தோழியாலறிந்த செவிலித் தாய் அதனை நற்றாய்க்குத் தெரிவிக்க, அவள் மகள்சென்ற அப் பாலை நிலத்தின் பலவகைக் கொடுமைகளையும் மகளது மிக்க ஸௌ குமார்யத்தையும் கருதிக் கவலைப்பட்டு இது கூறுகிறாளென்க.

புணர்ந்து பிரிந்த நாயகியானவள் நாயகன் மீண்டு வருமளவும் பொறுத்திருக்கமாட்டாமல் ஆற்றாமை மிகுகையாலே பெற்றதாய்க் குந் தெரியாதபடி இரவில் தனிவழியே புறப்பட்டு நாயகனிருப் பிடத்தை நோக்கிச் செல்ல, இவளைப் படுக்கையிற் காணாத தாயர்

வழியில் நேரக்கூடிய அபாயங்களை நினைத்துச் சோகிக்கிறாள் என்பது முண்டு.

'அருவினையேன் நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற தொடுங்காலொசியுமிடையிளமான் சென்ற சூழ் கடம்—கொடுங்காற் சிலையர் நிரைகோளுழவர் கொலையில் வெய்ய கடுங்காவிளைஞர் துடிபடுங் கவ்வைத்து' என்று அந்வயிப்பது.

பலநாள் தேவதாநமஸ்காரமும் தேவாலய ப்ரதக்ஷிணமுமாகிற தெய்வ வழிபாடுகளைச் செய்து அருமையாகப் பெற்ற மகள் சொல்லாமல் பிரிந்து கொடிய பாலைவழியில் கடந்து சென்று நீங்குதற்கு ஏற்ற பாபத்தையுடையேன் நான் என்பாள் 'அருவினையேன்' என்றாள். பாவியான நான் பல பலவாண்டுகள் எம்பெருமானை ஆராதித்து அதன் பயனாகப் பெற்ற மகளின் ஸௌகுமார்யம் எப்படிப் பட்டது தெரியுமோ? [தோடுங்கால் ஒசியுமிடை] மருங்கணைகிற நாயகன் தான் தொடுமளவிலும் முறிந்துபோம் என்னும்படி நுட்பமாகவுள்ள இடையையுடையவள்; உல்லாஸமாகத் தானே தன் இடையிலே கையை வைத்தாலும் மலையை வைத்தாற்போலப் பொறாத இடையையுடையவள்; 'இடை உண்டோ இல்லையோ' என்கிற ஸந்தேஹந்தீரக் கையால் தொட்டுப் பார்க்கவும் பற்றாத இடையையுடையவள்; இளமான் போன்றவள்; இப்படிப்பட்ட கட்டழகி இப்போது நடந்துபோன பாலை நிலத்தின் கொடுமை எப்படிப்பட்டது தெரியுமோ? [கொடுங்காற் சிலையர் நிரைகோளுழவர் கொலையில் வெய்ய கடுங்காவிளைஞர் துடிபடுங் கவ்வைத்து.] ஹிம்ஸையே தொழிலாகத் திரியும் பாபிகளின் பறைகள் கோஷித்தலாலாகிற ஆரவாரமுடையது. அப்படி ஸுகுமாரமானவள் இப்படி கொடிதான வழியிலே நடந்து சென்றாளே! என்று வயிறெரிந்து சொல்லுகிறபடி.

மகள் சென்ற பாலைநில வழியிலுள்ளாருடைய கொடுமையை நான்கு விசேஷணங்களாற் கூறுகின்றாள்; [கோடுங்காற் சிலையர்] வளைந்த விற்கழுந்தையுடையவர் என்றதனால், ஒரு வஸ்துவைக் கண்டபின் அதனை எய்தற்காக வில்வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்துக் கையில் ஸித்தமாக வைத்துக்கொண்டு எய்ய இலக்குத் தேடிக்கொண்டிருப்பவர் என்றதாம். 'கொடுங்கால்' என்றவிடத்து

கொடுமை—வளைவு என்னும் பொருளதாதலை 'கொடுமரம்' என்னும் வில்லின் பெயரிலுங்காண்க. கொடுமை—பயங்கரத்தன்மையுமாம். காற்சிலை—சிலைக்கால்; தநுர்த்தண்டம்.

[நிரைகோளுழவர்] பசுக்கொலைக்குப் பின் வாங்காதவர் என்றபடி. நிரை—பசுக்களை, கோள்—ஹிம்ஸிப்பதையே, உழவர்—தொழிலாகவுடையவர். உழுது பயிர் செய்தல்போலப் பசுஹிம்ஸையையே இடைவிடாது வருந்தி முயன்று ஊக்கத்தோடுசெய்யும் ஜீவநோபாயவிருத்தியாகவுடையவரென்கை.

[கொலையில் வெய்ய] கொலைத் தொழிலிற் கொடியவர்கள். பொருளுக்காகவும் பகைமைக்காகவும் வேறொரு பயனுக்காகவுமேயல்லாமல் துடிப்புக்காணும் பொருட்டாகவுங் கொல்லுதல் இவர்க்குக் கொலையில் வெம்மையாம். அன்றி, சாவக்கொல்லாதே குற்றுயிர் குறையுயிராகக் கிடந்து நெடுநாள் துடிக்கும்படி கொல்லுகையுமாம்.

[கடுங்காலிளைஞர்] 'பதின்காதம் இருபதின் காதத்துக்கு அப்பால் ஹிம்ஸைக்கு ஒரு இலக்கு உண்டு' என்று யாரேனுஞ் சொன்னால் அதில் தட்டுப்பாராதே அவ்வளவும் விரைந்துபோய் மீளும்படியான காற்கடுமையை யுடையராயிருப்பர்களாம். ஆக இப்படிப்பட்ட கொலைத்தொழில்வல்ல இளவீரர்களின் பறைகள் ஓயாது ஒலிக்குமிடம் இளமான் சென்ற சூழ்கடம் என்றதாயிற்று. சூழ் கடம் என்பதற்கு—சூழ்ச்சியையுடைய வழி யென்றும், சூழ்ச்சியாவது—வெம்மையால் துயரை விளைத்தல் என்றும் உரைப்பர் அழகிய மணவாளசீயர்.

துடிபடுங் கவ்வைத்து—துடியாவது—பாலைநிலப்பறை. இங்கு ஊரவர் வாய்ப்பறையாகவும் நாக்கடிப்பாகவும் முழங்கி அலர் தூற்றும் ஆரவாரத்திற் காட்டிலும் அங்கு எயினர் பறையொலியைத் தலைமகள் போக்யமாகக் கொண்டபடி என்னே! என்கிறாள் போலும்.

'நெடுங்காலமும்' என்ற முற்றும்மை—பிகுதி விளக்குவது. 'கண்ணன் நீண் மலர்ப்பாதம்' என்றது த்ரிவிக்ரமாவதார காலத்தில் நீண்டமைபற்றி யென்னலாம். அன்றி, திருவடிகட்கு நீட்சியாவது—அன்பர் மனத்தில் உடனே சென்று சேர்தலுமாம். மரீன் =

உவமையாகு பெயர்; மடநோக்கிற்கு உவமை. அவள் தன்னை யுந் தோழியரையும் விட்டுப் பிரிந்த தனிமையால் மருண்ட மான் போலே எப்புறத்தும் விழித்துப் பார்ப்பளென்பது கருதி 'இள மான்' என்றாள்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப்பொருள்:—செல்லுதற்கரிய ஸம் ஸார மார்க்கத்தில் ஆழ்வார் அளவு கடந்த பக்தியோடு நடத்தலை யறிந்த ஞானிகள் அரிதென்று பாராட்டிக்கூறும் வார்த்தையாம். 'இளமான்' என்று பருவத்தையும் பெண்மையையுங் குறித்தலால் புதுமையான அடிமையைப் பூண்ட விசேஷபக்தியோடு கூடிய அறி வையுடைய ஆழ்வார் என்றபடி. 'தொடுங்காலொசியுமிடை' என் றது பக்திகார்யமான வைராக்யத்தின் முதிர்ச்சியைத் தோற்று விக்கிறது. "இடையழ கென்பது ஒன்றும் பொருத வைராக் யத்தை" என்பர் அழகிய மணவாளசீயர். 'அருவினையேன் நெடுங் காலமுங் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற' என்றதனால், பல பிறப்புக்களிற் செய்த தவம் ஞானம் யோகம் என்பவற்றில் தீவினை யொழிந்தாலன்றி இவர் பக்கல் நம்முடையவரென்ற அபி மானந் தோன்றுதென்று, தமக்கு அது ஸித்தித்த அருமைகாட் டப்பட்டதாகும். சென்ற சூழ்கடம்—இவர் இப்படி பக்தியோடு கூடி யொழுகுகிற ஸம்ஸாரமாகிய பெருங்காடானது, [கோடுங் காற் சிலையர் இத்யாதி.] வலிய பஞ்சேந்திரியங்கள் பறைபறைந் தாற்போல ப்ரஸித்திபெற்ற ஆடம்பரமுடையது என்றவாறு. மிகக் கொடியவை யென்று ப்ரஸித்தி பெற்ற பஞ்சேந்திரியங்கள் ஸ்வரூபஹாநியை விளைக்குமிடமான இவ்விருள்தருமாஞாலத்திலே கிடந்து துடிக்கிறேனே! என்று ஆழ்வார் தம் துயரை அந்யாப தேசத்தாலே அருளிச்செய்தாராயிற்று. .... (௩௭)

கடமாயினகள் கழித்துத் தம்கால்வன்மையால் * பலநாள்
தடமாயினபுக்கு நீர்நிலைநின்ற தவமிதுகொல்? *
குடமாடி யிம்மண்ணும் விண்ணுங் குலுங்கவுலகளந்து
நடமாடிய பெருமான் * உருவொத்தன நீலங்களே. (௩௮)

| | | | |
|---|---|---|---|
| கடம் ஆயினகள் கழித்து | காடுகளாகவுள்ள வற்றைக் கடந்து ஒழித்து | தடம் ஆயின புக்கு | தடாகங்களாக வுள்ளவற்றில் பிரவேசித்து (அங்கு) |

| | |
|---|---|
| தம் கால் வன்மையால் | தமது கால்களின் வலிமையால் |
| பல நாள் | அநேககாலம் |
| நீர் நிலை நின்ற | நீரிலே நீங்காது நின்று செய்த |
| தவம் இது கொல் | இத்தவத்தினாலேயோ |
| நீலங்கள் | நீலோற்பலமலர்கள், |
| குடம் ஆடி | (கிருஷ்ணாவதாரத்தில்) குடக்கூத்தாடினவனும் (த்ரிவிக்ரமாவதாரத்தில்) |
| இ மண்ணும் | இந்தமண்ணுலகமும் |
| விண்ணும் | விண்ணுலகமும் |
| குலுங்க | நெகிழும்படி |
| உலகு | உலகங்களை |
| அளந்து | அளவிட்டு |
| நடம் ஆடிய | (இங்ஙனம்) திருவிளையாடல்செய்தருளினவனுமான |
| பெருமான் | எம்பெருமானுடைய |
| உரு ஒத்தன | திருமேனி நிறம் போன்ற நிறம் பெற்றன. |

* * *—நாயகனைப் பிரிந்த நாயகி போலிகண்டு மகிழ்ந்து உரைக்கும் பாசுரம். ஸர்வேச்வரனாகிய தலைமகன் பிரியப் பெற்று அப்பிரிவை ஆற்றாது இரங்குகிற பராங்குசநாயகி தான் இரங்குமிடமாகிய நெய்தல்நிலத்திலேயுள்ள கருநெய்தல்மலர்களை நோக்கி அவை தலைமகனான திருமாலினது திருமேனிநிறத்தை ஒத்திருக்கக்கண்டு, இவற்றைக் கண்டுகொண்டாகிலும் ஒருவாறு தரித்திருக்கலாமென்று கருதி, அவை அவன்திருமேனிநிறத்தையொத்திருப்பதாகிய ஸாரூப்யநிலையைப் பெற்றமை பற்றி வியந்து 'இவை நெடுநாள் நீர்நிலையிலே நின்று இடைவிடாது செய்த தவத்தின் பலனாகவன்றோ இது பெற்றது' என்று கூறுகின்றாள். போலிகண்டு மகிழ்தல் தவிர 'போலிகண்டு அழிதல்' என்றும் ஒரு துறையுண்டு; அதனையே இப்பாட்டுக்குக் கூறுதலுமாம். போலியைக் கண்டு மகிழ்வதுமுண்டு, வருந்துவதுமுண்டு;—"பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவிமல ரென்றுங் காண்டோறும்—பாவியேன், மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை, யெல்லாம் பிரானுருவேயென்று" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தில் மகிழ்தலும், "ஒக்குமம்மானுருவ மென்று உள்ளங்குழைந்து நாணாளும், தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந்தோறும் தொலைவன் நான்" [8-5-8] என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் வருந்துதலுங்காண்க. "பைம்பொழில் வாழ் குயில்காள் மயில்காள் ஒண்

கருவிளைகாள், வம்பக்களங்கனிகாள் வண்ணப்பூவை நறுமலர்காள், ஐம்பெரும்பாதகர்காள் அணிமாலிருஞ்சோலை நின்ற, எம்பெருமானுடைய நிறம் உங்களுக் கென்செய்வதே ?" (9-4.) என்ற நாச்சியார் திருமொழியுங் காண்க.

கடமாயினகள் கழித்து ** நீர்நிலை நின்ற தவமிது கொல்?— அக் கருங்குவளைகள் காடுகளைத் தமக்கு இடமாகக் கொள்ளாமற் கழித்து நீர்நிலையை இடமாகக் கொண்ட தன்மையை, அருநெறியான வனங்களை யாத்திரை செய்து கடந்து தவத்துக்கு ஏற்ற இடத்தை நாடி அடைந்ததாகக் குறித்தார். நீலோற்பல மலர்கள் குடக்கூத்தாடினவனும் உலகளந்தவனுமான எம்பெருமானுடைய திருமேனிநிறம்போன்ற நிறத்தைப் பெற்றிருப்பதானது, காடுகளாக வுள்ளவற்றைக் கடந்தொழித்துத் தடாகங்களாகவுள்ளவற்றிற் புகுந்து அங்குத் தமது கால்களின் வலிமையால் நெடுநாள் நீரிலே நீங்காது நின்று செய்த தவத்தின் பயனோ? என்கிறார். மழை பனி வெயில் என்ற வேறுபாடின்றி எக்காலத்திலும் நீர் நிலையில் பாசி யேற நிற்றல் தவத்துக்கு ஓரிலக்கணமென்பது உலகறிந்த விஷயம்; இம் மலர்கள் அங்ஙனம் நிற்பதையே தவஞ்செய்தலாகக் குறித்தது. இவை தனித்தனி மேல்முகமாக ஒரு தாளால் நின்று மலர்ந்து தேன்சொரிதல் ஸூர்யனுக்கு அபிமுகமாக ஒற்றைக் காலால் நின்று மனங் குழைந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து யோகஞ்செய்தல் போலு மென்க. தவஞ்செய்து முக்தி பெற்றவர்கள் "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்ற சுருதியின் படியே எம்பெருமானோடு பரமஸாம்யம் பெறுவர்களாதலால் 'தவமிது கொல்—பெருமானுரு வொத்தன நீலங்கள்' என்றது. 1. "முருகவிழ் செய்ய கமலமுண்ணெகிழ்ந்து முகமலர்ந்துறுகணீர் சிந்தி, ஒரு பசுந் தாளின் வனத்தினின் றரிதினூன்றிய தவத்தினலன்றோ, விரிமலர்சோகின் தளிர் நலங்கவற்றி மென்சிறை யனமென மிழற்றும், பரிபுரமணிந்து பஞ்சியூட்டிய பொற்பதத்தினைச் சிறிது போன்றனவே" என்ற செய்யுளிலும் இக் கருத்து விளங்குமாறு காண்க.

---

1. நைடதம்—அன்னத்தைத் தூதுவிட்ட படலம் 25.

இது ஹேதூத்ப்ரேக்ஷாலங்கார மெனப்படும். கீழ் 'மேகங்களோ வுரையீர்' என்ற பாசுரம் போன்றது இது.

**கடமாயினகள் கழித்து** என்பதற்கு—தாம் அனுபவிக்கக் கடமைப்பட்டனவான தீவினைகளை யெல்லாம் கழிக்கத் தொடங்கி என்றும் பொருள் கூறலாம். நீண்ட நாளங்களின் நிலைநிற்குந் தன்மையே இவற்றிற்குக் கால்வன்மையாகக் கருதப்பட்ட தென்க.

**குடமாடி**=அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ் செய்வது போல இடையர்க்குச் செல்வம் மிகுந்தால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாகக் குடக்கூத்தாடுவார்கள். கண்ணபிரானும் சாதி மெய்ப்பாட்டுக்காகக் "குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாட வல்ல வெங்கோவே" என்கிறபடியே அடிக்கடி குடக்கூத்தாடுவது வழக்கம். தலையிலே அடுக்குக் குடமிருக்க, இருதோள்களிலும் இரு குடங்களிருக்க, இருகையிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து இது என்பர். இதனைப் பதினோராடலி லொன்றென்றும் அறுவகைக் கூத்தி லொன்றென்றுங் கூறி "குடத்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக்கடைக் குப வைந்துறுப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார். "**இம்மண்ணும் விண்ணுங் குலுங்க**" என்றதை மத்திமதீபமாகக் கொண்டு முன்னும் பின்னும் அந்வயிக்கலாம்; 'இம் மண்ணும் விண்ணுங் குலுங்கக் குடமாடி, இம்மண்ணும் விண்ணுங் குலுங்க உலகளந்து நடமாடிய பெருமான்' என்க. குடக்கூத்தாடுதலை நோக்கி மண்ணுலகத்தவர் போல விண்ணுலகத்தவரும் ஸௌலப்ய குணத்தைப் பாராட்டி வியந்தன ரென்க. குடமாடுதலும் உலகளத்தலுஞ் செய்யுமிடத்துச் சிறிதும் இளைப்புத் தோன்றாது விளையாட்டாகவே செய்தமை தோன்ற 'நடமாடிய' எனப்பட்டது. "வாமனனாய்ச் செய்த கூத்துக்கள் கண்டுமே" என்ற திருவாய்மொழியிலும் திரிவிக்கிரமனுக்குக் கூத்துக் கூறியவாறு காண்க.

"இம்மண்ணும் விண்ணுங் குலுங்க" என்பதற்கு—'இம் மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் மனம் இளகும்படியாக' என்றுரைப்பதே ஸம்ப்ரதாயமாகும்; 'உலகங்கள் நடுங்க' என்று உரைத்தல் ஸம்ப்ரதாயமன்று. பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்கிறார்

காண்மின்:—"ஸம்ஹார காரணனுடைய ந்ருத்தமாகிலிறே லோகம் நடுங்கிற்றென்னலாவது; அங்ஙனன்றிக்கே லோகமடைய அச்சேய னுக்கு நெஞ்சு உளுக்கினபடி." என்று. எம்பெருமானுடைய திரு வடியானது புஷ்பத்திற் காட்டிலும் மெல்லியதாதலால் அது மேலே பட்டபோது இன்பமுண்டாமேயன்றித் துன்பமுண்டாகமாட்டா தென்றுணர்க.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது:-எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்துகிற ஆழ்வார், பரமபதத்து முக்தர்கள் எம்பெருமானது வடிவோடொத்த வடிவைப் பெற்றுநிற்குந் தன் மையைத் தமது ஞானத்தாற் கண்ணுற்று, 'இவர்கள் இங்ஙன மானது உபாயாந்தரங்களைத் தவிர்ந்து நெடுங்காலம் இவ்வுலகில் நின்று செய்த யோகத்தினாலோ?' என்று ஒரு காரணத்தைக் கற்பித்து அக்காரணம் இன்னதென்று சங்கையறத் தெளிவாகத் தெரிந்தால் யானும் அது செய்து இங்ஙனே பெறுவேனென்று கருது தலாம். ப்ரபத்தி மார்க்கத்தில் நிற்பார் மற்ற ஸாதநாநுஷ்டானங் களையொழித்தல் இங்குக் கடமாயினகள் கழித்தலாகச் சொல்லப் பட்டது. அன்றி, எம்பெருமான் திறத்தில் செய்யத்தக்க கடமை களைத் தவறாது செய்து நிறைவேற்றுதலுமாம்; திவ்யதேச யாத் திரை செய்து முடித்தலுமாம். அவர்களது இடைவிடாத முயற்சி யின் ஆற்றலைத் '**தம் கால் வன்மை**' என்றது. ('தாள்' என்று முயற்சிக்கு ஒரு பேருண்டிறே.) பல நாள் தடமாயின புகுதல்— தடாகம்போலக் குளிர்ந்த எம்பெருமானது ஸ்வரூபத்திலே யீடு படுதல். நீர்நிலைநிற்றல்——அவ்வெம்பெருமானுடைய ஆச்ரித ஸௌலப்யமாகிற நீர்மையிலே ஆழ்தல். தவமென்றது, இங்கே, சிறந்த ஸாதநமென்னும் பொருளது. பெருமானுரு வொத்தல்— ஸாரூப்யமடைதல். முக்தரை நீலமலரென்றது யாவரும் மகிழ்ந்து தலைமேற் கொள்ளும்படியான சிறப்புக்கும் மேன்மைக்கும் முக மலர்ச்சிக்குமாம். .... .... .... (கஅ)

**நீலத்தடவரைமேற் புண்டரீக நெடுந்தடங்கள்**
**போல * பொலிந்தெமக் கெல்லா விடத்தவும் * பொங்குமுந்நீர்**
**ஞாலப்பிரான் விசும்புக்கும்பிரான் மற்றுமநல்லோர் பிரான்**
**கோலங் கரியபிரான் * எம்பிரான்கண்ணின் கோலங்களே.** (கக)

| | |
|---|---|
| நீலம் | நீலமணிமயமான |
| தட வரை மேல் | பெரியதொரு மலையின் மேலுள்ள |
| புண்டரீகம் நெடு தடங்கள் போல பொலிந்து | பெரிய செந்தாமரைப்பூம் பொய்கைகள் போல விளங்குகின்றவைகளும் |
| எமக்கு எல்லா இடத்தவும் | எமக்குக் காணுமிடந்தோறும் தோன்றுகின்றவையுமாயுள்ளவை |
| | (எவையென்னில்) |
| பொங்கு முந்நீர் ஞாலம் பிரான் | கிளர்கிற கடல்சூழ்ந்த மண்ணுலகத்துக்குத் தலைவனும் |
| விசும்புக்கும் பிரான் | விண்ணுலகத்துக்குந் தலைவனும் |
| மற்றும் நல்லோர் பிரான் | மற்றுமுள்ள நல்லவர் யாவர்க்கும் தலைவனும் |
| கோலம் கரிய பிரான் | திருமேனி நிறம் கறுத்திருக்கப்பெற்ற பிரபுவுமான |
| எம்பிரான் | எம்பெருமானுடைய |
| கண்ணின் | திருக்கண்களினுடைய |
| கோலங்களே | அழகுகளேயாம். |

* * *—நாயகனுடைய உருவெளிப்பாடு கண்ட நாயகி தோழிக்குக் கூறுதல் இது. ஒரு பொருளினிடத்து இடைவிடாது கருத்தைச் செலுத்த அந்தப் பாவனையின் ஊற்றத்தால் அப்பொருள் கண்ணுக் கெதிரில் தோன்றியது போலக் காணப்படுதல் இயல்பு. அதில் கண்ணழகில் ஆழ்ந்து கூறியது இது.

கடல் சூழ்ந்த மண்ணுலகத்துக்குத் தலைவனும் விண்ணுலகுக்குத் தலைவனும் மற்றுமுள்ள நல்லவர் யாவர்க்குந் தலைவனும் கரிய திருமேனியனுமான எம்பெருமானது திருக்கண்களின் அழகுகளே எமக்குக் காணுமிடந்தோறுந் தோன்றுகின்றவையாயுள்ளன. அவை எங்ஙனே விளங்குகின்றன வென்னில், நீலரத்ன மயமான தொரு பெரிய மலையின் மேலுள்ள பெரிய செந்தாமரை மலர்த் தடாகங்கள் போல விளங்கா நின்றன.

எம்பெருமானுடைய கரிய பெரிய திருமேனிக்கு நீலத்தடவரையும், அவனது திருக்கண்மலர்களுக்குப் புண்டரீக நெடுந் தடங்களும் உவமையாயின. 'கோலங்களே' என்ற ஈற்று ஏகாரம்— பிரிநிலை; ஸர்வாங்கஸௌந்தர்யனுடைய கண்ணழகி லீடுபட்டார்க்கு

மற்றொன்றும் பொருளாகத் தோன்றாமை காட்டும். 1. "தோள் கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாருமஃதே, வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார், ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவு கண்டாரை யொத்தார்" என்றாற் போல. இனி, ஏகாரத்தை இரக்கமாகக் கொள்ளின், கண்ணுக்குப் புலப்படும் வடிவு கைகளால் தழுவுதற்கு எட்டாது வருத்துகிறபடியை விளக்கும்.

இதில், ஞாலம் என்றதனால் லீலாவிபூதியையும், விசும்பு என்றதனால் வெளிநாடான நித்ய விபூதியையுங் குறித்தார். 'மற்றும் நல்லோர்' என்றது இவ்வுலகத்தில் ஆழங்காற் படாமலும் முக்தியிற் சென்று சேரப்பெறாமலும் எம்பெருமான் குணங்களில் ஈடுபட்டு இடை நிற்கிற முமுக்ஷுக்களை. அன்றி, விசும்பு—தேவலோகமும், நல்லோர்—நித்ய முக்தரும் என்னவுமாம்.

பகவத் கடாக்ஷத்திலே யீடுபட்ட ஆழ்வார் அவ்வீடுபாட்டின் முதிர்ச்சியாலே எம்பெருமானது திருக்கண்ணழகு உருவெளிப் பாடாய் எங்குந் தோன்றி விளங்கக் கண்டு அதனை அன்பர்க்குக் கூறுதல் இதற்கு ஸ்வாபதேசம். திருவாய்மொழியிலும் "ஏழையராவியுண்ணு மிணைக்கூற்றங்கொலோ வறியேன், ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கள் கொலோவறியேன், சூழவுந் தாமரை நாண் மலர்போல் வந்து தோன்றுங் காண்மின், தோழியர்காளன்னைமீர்! என் செய்கேன் துயராட்டியேனே" என்றருளிச்செய்வது காண்க. மிளிர்ச்சி, குளிர்ச்சி, மலர்ச்சி, பெருமை, செம்மை முதலியவற்றை யுட்கொண்டு "கண்ணின் கோலங்கள்" என்னப்பட்டது. "கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே" என்ற அமலனாதிபிரான்பாசுரங் காண்க. 'எமக்கெல்லாவிடத்தவும்' என்றது "நின்று தோன்றிக் கண்ணுள் நீங்கா என்நெஞ்சுள்ளும் நீங்காவே" என்றாற்போல, தம் திருவுள்ளம் எம்பெருமானது ஸௌந்தர்யத்திலகப்பட்டு மற்றொன்றுக்கு உரித்தல்லாமல் அழிந்தபடி சொல்லிற்றாயிற்று. .... .... .... ... (௩௧)

1. கம்பராமாயணம் - பாலகாண்டம் - உலாவியற் படலம் 19.

கோலப்பகற் களிறொன்று கற்புய்ய * குழாம்விரிந்த
நீலக்கங்குற் களிறெல்லாம் நிரைந்தன * நேரிழையீர்!
ஞாலப்பொன்மாதின் மணாளன் துழாய்நங்கள் சூழ்குழற்கே
ஏலப்புனைந்தென்னைமார் * எம்மை நோக்குவதென்றுகொலோ?(௩௦)

| | |
|---|---|
| கோலம் | அலங்காரத்தை யுடைய |
| பகல் | ஸூர்யனாகிய |
| களிறு ஒன்று | ஒப்பில்லாததொரு யானை |
| கல் புய்ய | அஸ்தமன பர்வதத்தில் மறைய, |
| குழாம் விரிந்த | திரளாகப்பரந்த |
| நீலம் | நீலநிறத்தை யுடைய |
| கங்குல் | இரவாகிய |
| களிறு எல்லாம் | யானைகளெல்லாம் |
| நிரைந்தன | அடைவே எதிரில் வந்து சேர்ந்தன; |
| நேர் இழையீர் | தகுதியான ஆபரணங்களை யுடையவர்களே! |
| ஞாலம் | பூதேவிக்கும் |
| பொன்மாதின் | ஸ்ரீதேவிக்கும் |
| மணாளன் | நாயகனான எம்பெருமான் |
| துழாய் | (தனது) திருத்துழாய் மாலையை |
| நங்கள் சூழ் குழற்கே | எமது அடர்ந்த தலை மயிரிலே |
| ஏல புனைந்து | தகுதியாகச்சூட்ட |
| என்னைமார் | எமது தாய்மார் |
| எம்மை நோக்குவது | என்னைப்பார்ப்பது |
| என்றுகொலோ | என்றைக்கோ? |

* * *—இருள் கண்டிரங்கிய தலைமகள் தோழியர்க்கு வரைவு விருப்புரைத்தல் இது. பகற்பொழுது கழிந்து எங்கும் இருள் பரவியது கண்டு வருந்தின தலைமகள் 'உறவினர் என்னைக் கலியாணஞ் செய்து கொடுப்பது என்றைக்கோ?' என்று தோழியரை நோக்கிக் கூறுகின்றாளென்க.

தகுதியான ஆபரணங்களையுடைய தோழியர்களே!, ஸூர்யனாகிற ஒரு யானையானது அஸ்தமன பர்வதத்திலே வீழ்ந்து மறைய, திரளாகப் பரந்த நீலநிறத்தையுடைய இரவாகிற யானைகளெல்லாம் வரிசையாக எதிரில் வந்து சேர்ந்தன; [ஸூர்யன் அஸ்தமிக்கவே இருட்பொழுது வந்து விட்டது.] இப்போது விரஹ வ்யஸநம் அஸஹ்யமாயிருக்கையாலே, பூதேவிக்கும் ஸ்ரீதேவிக்கும் கணவனான எம்பெருமான் தனது திருத்துழாய்

**மாலையை** எனது தலைமயிரிலே தகுதியாகச் சூட்ட **எனது தாய்மார்** என்னைக் கடாக்ஷிப்பது என்நாளோ? என்றது-1. "அன்றிப்பின் மற்றொருவற்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால், கொற்றவனுக் கிவளாமென்றெண்ணிக் கொடுமின்கள் கொடாதொழிகில் கோழம்பமே" என்றாற்போல அப்பெருமானுக்கு என்னைத் தாரைவார்த்துத் தத்தம் பண்ணுவதற்குத் தாய்மாருந் தோழிமாரும் விரைந்து காரியம் நடத்தவேணுமென்றவாறு.

ஸூர்யன் இயற்கையிற் செந்நிறத்தையும் மாலைப்பொழுதில் செவ்வானக் கோலத்தையுமுடையனாய்க் கம்பீரனாயிருப்பன்; உத்தம ஜாதியிற்பிறந்த யானையானது இயற்கையான உத்தம லக்ஷணமாகிய செம்புள்ளிகளையும், செயற்கையில் செந்நிற முகபடாமாகிய அலங்காரத்தையு முடைத்தாய்க் கம்பீரமாயிருக்கும்; ஆக இப்படிப்பட்ட ஒற்றுமையைக் கருதிக் '**கோலப்பகற்களிறொன்று**' என்று ஸூர்யன் ஒரு யானையாக உருவகப்படுத்தப் பட்டானென்க. பகற்பொழுதானது இராப்பொழுதுபோலல்லாமல் சிறிது ஆகியிருப்பதற்கு உரியதாயிருந்த தன்மைபற்றிக் '**கோலப் பகல்**' என்று விசேஷித்துக் கூறினனுமாம். இங்கு, 'பகல்' என்றது ஸூர்யனுக்கு வாசகமானது லக்ஷணையால். பகற்பொழுதுக்கு இறைவனாகையாலே ஸூர்யன் பகலெனப்பட்டான். 'கல்' என்பது மலைக்கு வாசகமாகப் பிரயோகிக்கப் படுதலைக் 2. "கல்லெடுத்துக் கன்மாரி காத்தாய்" இத்யாதிகளிற் காண்க.

ஒரு யானை நீங்கப் பல யானைகள்வந்து புகுந்தனவென ஒரு சமத்காரந் தோன்றப் "பகற்களிறொன்று கற்புய்யக் கங்குற்களிறெல்லாம் நிரைந்தன" எனப்பட்டது. ஓர் இரவை நோக்கிக் '**களிறு எல்லாம்**' என்றது இருட்சியாலும் திரட்சியாலும். சூழாம் விரிந்த' என்பதற்கு—ஸூர்யனொளியால் முன்பு திரள் திரளாகச் சிதறிப்போன என்றுரைப்பது பொருந்தும். **நிரைந்தன** — அணிவகுத்தேறுமாபோலே மீண்டும்வந்து போராதே நின்றன. 'நிரந்தன' என்றும் பாடமுண்டு; நிரத்தல்—கூடுதல். இரவைப்பன்மை

1. பெரியாழ்வார் திருமொழி 3—4—5.
2. திருநெடுந்தாண்டகம்--13.

யாகக் கூறின்து நெடுமைபற்றி ஒன்றே பலவாகத் தோற்றுதலால். பகல் அங்ஙனந் தோன்றாமையால் அதனை ஒருமையாகவே கூறலாயிற்று.

நேரிழையீர்!=உடம்பின் அழகுக்கு ஏற்ற ஆபரணங்களின் அழகமைதியையுடையவர்களே! என்கை. மெல்லிய ஆபரணங்களையுடையவர்களே! என்றுமாம். [ஞாலப்பொன்மாதின் மணாளன்.] ஞாலமாது பொன்மாது எனத் தனித்தனி கூட்டுக. 'இன்மணாளன்' என்றெடுத்து மனத்துக்கினிய மணாளன் என்னவுமாம். என்னைமார் என்றது மூத்தவர் என்ற மாத்திரமாய்த் தந்தையையும் உணர்த்தலாம். 'ஞாலப்பொன்மாதின் மணாளன்' என்றதனால்—நிலமகள் திருமகள் என்னுந் தேவிமாருடைய அநுபவம்போன்ற அநுபவம் எமக்கு இல்லையே யென்று உள்வெதும்புகின்றமை தோன்றும்.

எம்பெருமான் தன்னுடைய திருத்துழாய் மாலையை எமது தலைமயிரிலே தகுதியாகச் சூட்ட எமது தாய் தந்தையர் எப்போது பார்க்கப் போகிறார்களோ என்றும், எம்பெருமானது திருத்துழாய் மாலையை எமது தாய் தந்தையர் எம் தலையிலே சூட்டி எம்மை எம்மறைக்கு உவந்து பார்க்கப்போகிறார்களோ என்றும் பின்னடிகட்குப் பொருள் கூறலாம்.

முதல் வாக்கியம் ரூபகாலங்காரம். புய்ய='புய்' என்னும் வினைப்பகுதியடியாப் பிறந்த செயவெனெச்சம். மாது—மாதர் என்பதன் விகாரம். மணவாளன் என்பது மணாளனென மருவிற்று. குழற்கு—குழலிலே எனப்பொருள்பட நிற்றலால் உருபுமயக்கம். புனைந்து—புனைய என்னும் எச்சத்தின் திரிபு.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கப் பெறாத நிலையில் ஆழ்வார் தமது விவேக ப்ரகாசமும் நிலைகுலையும்படி மோஹாந்தகாரம் மேலிடுமளவான படியால் 'இந்நிலையில் எமது பெரியோர் எம்மை எம்பெருமானது ப்ரஸாதத்துக்குப் பாத்திரமாம்படி ஸமர்ப்பியாமல் தாமதிப்பதே!' என்று அன்பரை நோக்கி யருளிச்செய்வதாம்- [கோலப் பகற்களிறொன்று கற்புய்ய] பக்திமேலிட்டுச் செவ்வியதான விவேக

ப்ரகாசம் மறையும்படியாக. [சூழாம்விரிந்த நீலக்கங்குல்களிறு எல்லாம் நிரைந்தன] மோஹாந்தகாரம் மிக மேலிட்டது. இவற்றைக் களிறென்றது அடக்குதற்கு அருமையால். 'ஞாலப்பொன் மாதின்மணாளன்' என்றதனால், நாய்ச்சிமார்கள் போலத் தாமும் எம்பெருமானோடு சேர்தலில் விருப்பங்கொண்டமை தோன்றும். [மணாளன் துழாய் நங்கள் சூழ் குழற்கே ஏலப்புனைந்து] எம்பெருமானுடைய ப்ரஸாதத்தை எமது முடிமேற்கொள்ளும்படி கிடைக்கச் செய்து. 'என்னைமார்' என்றது—பகவத் பக்தர்களில் தம்மினும் மூத்தவரை. 'என்று கோலோ' என்றதனால், அது விஷயமான அபேக்ஷையே இவர்க்குத் தலையெடுத்தமை தோன்றும். 'நேரிழையீர்!' என்றது அன்பர்க்கு நற்குணங்களாகிய அணிகலங்கள் அமைந்திருத்தலைக் குறிக்கும்; "ஜ்ஞாந வைராக்ய பூஷணம்" என்றாற் போல.

கட்டளைக் கலித்துறையிலமைந்த செய்யுட்களெல்லாம் ஏகாரவீற்றதாய் முடிதல் வேண்டுமென இலக்கண மிருப்பது கொண்டு இப்பாசுரத்தின் முடிவை 'என்று கோலே' என்று சிலர் திருத்தப் பார்ப்பர்; அது வேண்டா. மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் இங்ஙன மருளிச்செய்திருத்தலால் கட்டளைக்கலித்துறைக்கு ஓகாரவீற்றதாதலும் சிறுபான்மை இலக்கணமா மென்பது அறியத்தக்கது. "இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்பலின்" என்றன்றோ நன்னூலிற் சொல்லப்பட்டது. அன்றியும் வடமொழியில் வால்மீகி வ்யாஸர் முதலிய மஹர்ஷிகளுடைய கவிதைகளில் ஏதேனும் இலக்கணமாறுபாடு காணுமிடத்து "ஆர்ஷ: ந்யாயோ ந தோஷ: =ரிஷிவாக்யமாதலால் குற்றமில்லை" என்று அதனை வழுவமைதியாக ஏற்றுக்கொள்ளல் ஆன்றோர் மரபாதலால், அவர்களினும் ஞானங்கனிந்து நலங்கொண்ட ஆழ்வார்களின் அருளிச் செயலை அங்ஙனம் அமைத்துக்கொள்ளத் தட்டில்லை யென்க. மேலும் வடமொழி வேதத்தின் பிரயோகம் மற்றை வழக்குக்குச் சிற்சிலவிடத்தில் வேறுபடுதல் போலத் தமிழ்வேதமாகிய இத்திவ்ய ப்ரபந்தத்துக்குங் கொள்க. சிறுபான்மையாகிய இதற்கு இலக்கணமும் இலக்கியமும் வந்தவிடத்துக் கண்டுகொள்க. இங்ஙனன்றிக்கே 'என்று கொலே' என ஏகாரவீறாகத் திருத்துதல் அஸம்

ப்ரதாய மென்பதும் சொல்நிலைக்குச் சிறவா தென்பதும் உணரத் தக்கது. .... .... .... .... (௪௰)

என்றும் புன்வாடை யிதுகண்டறிதும் * இவ்வாறு வெம்மை
ஒன்று முருவுஞ் சுவடுந் தெரியிலம் * ஓங்கசுரர்
பொன்றும்வகை புள்ளையூர்வா னருளருளாத விந்நாள்
மன்றில் நிறைபழி தூற்றி * நின்றென்னை வன்காற்றடுமே (௪௧)

| | |
|---|---|
| என்றும் | எப்பொழுதும் |
| புன் | கொடுமைசெய்கிற |
| வாடை இது | இந்த வாடையை |
| கண்டு அறிதும் | கண்டறிவோம்; |
| இ ஆறு வெம்மை உருவும் | இப்படிப்பட்ட (வாடையி னுடைய) வெப்பத்தின் தன்மையையும் |
| சுவடும் | குறிப்பையும் |
| ஒன்றும் | ஒருவிதத்தாலும் |
| தெரியிலம் | அறிகின்றிலோம்; |
| ஓங்கு அசுரர் | வலிமையாற் கிளர்கின்ற, அசுரர்கள் |
| பொன்றும் வகை | அழியும்படி |

| | |
|---|---|
| புள்ளை | கருடப்பறவையை |
| ஊர்வான் | ஏறி நடத்துகிற எம்பெருமான் |
| அருள் அருளாத | தனது கருணையால் என்னைவந்து காத்தருளாத |
| இ நாள் | இக்காலத்திலே |
| வன் காற்று | வலியவாடையானது |
| என்னை | என்னை |
| மன்றில் நிறை பழி | வெளியிலே பரவி நிறைகிற பழிப்பை |
| தூற்றி | அயலாரையிட்டுத் தூற்றுவித்து |
| நின்று அடும் | அப்பாற் போகாமல் நிலைநின்று அழிக்கின்றது. |

* * *—வாடைக்கு வருந்தின நாயகியின் வார்த்தை இது. பிரிந்த நிலையில் பல பொழுதும் வாடை வருத்துதலால் அதனைப் பற்றி அடிக்கடி கூறி அலற்றும்படியாயிற்று; ஆகவே கூறியது கூறல் [புநருக்தி] என்னுங் குற்றத்திற்கு இடமில்லாமை உணர்க. இங்ஙனம் வருவன வேறு சிலவற்றிற்கும் இவ்வாறே கண்டு கொள்க.

எப்பொழுதும் கொடுமை செய்வதையே இயல்வாகக்கொண்ட இந்த வாடையை இன்று நேற்றல்ல, நெடுநாளாகவே கண்டறிவோம். 'வாடை வருத்துகிறது' என்று பொதுப்படக் கூற முடிவதேயன்றி இன்ன வடிவமாய் இன்னகுணத்தால் இன்னது

செய்து வருத்துகிறதென்று ஒருவகையாலும் விவரித்துக் கூறக் கூடாதபடியுள்ளது இதன் கொடுமை; ஆஸுரப்ரக்ருதிகளான துஷ்டர்களை யொழித்து சிஷ்டர்களான அடியாரைக் காத்தருளுமியல்வுடைய பெருமான் எனக்குக் கொடியதான வாடை வருத்துதலைத் தவிர்த்து அடிமையாகிய என்னை ரக்ஷித்தருளா தொழிவதே!; நான் வாடைக்கு வருந்துவதைக் கண்டு ஊரார் அலர்தூற்றும்படியாயிற்றே!; இப்படியன்றோ என்னை இவ்வாடை கொலைசெய்கின்றது! என்கிறாள்.

'புன்வாடை' என்பதற்கு மந்தமாருத மென்றும் பொருள் கொள்ளலாம். **வாடையிது கண்டறிதும்**=இவ்வாடையின் துஷ்டத்தனத்தை அநுபவித்திருக்கிறோ மென்றவாறு. முன்னடிகளின் கருத்தை வேறுவகையாகவு முரைக்கலாம்;—வெகு காலமாகவே இந்த மாருதத்தை அநுபவித்தறிவோம்; ஆனால், இப்படி வெப்பம் பொருந்திய வடிவத்தையும் தன்மையையும் (இதற்கு உள்ளனவாக) முன்பு கண்டறியோம்; இதன் ஸ்வரூபஸ்வபாவங்கள் இன்றே மாறுபட்டன) என்று. இவ்வுரைக்கு 'ஊன்றும்' என்பது பெயரெச்சம்; ஊன்றுதல்—பொருந்துதல்.

**ஓங்கு அசுரர்**=தேவதாந்தரங்களை ஆராதித்துப் பெற்ற வரபலத்தாலும் புஜபலத்தாலும் கொழுத்திருக்கின்ற அசுரர். அன்றி, வணங்காமுடி மன்னராய் நிமிர்ந்ததலையராயுள்ள அசுரர் என்னவுமாம். 'மன்றில் நிறைபழி தூற்றி' என்று பழிதூற்றுதலுக்கு வாடையே கர்த்தாவாகக் கூறப்பட்டிருப்பதன் கருத்து என்னெனில்; தான் வாடைக்கு வருந்துதலைக் கண்டு ஊரார் அலர்தூற்றுகிறபடியால் வாடை ப்ரயோஜக கர்த்தா என்றபடி; 'ஒரு சிறுக்கி நாயகனைப் பிரிந்தாளாம்; காற்று மேலேபட்ட மாத்திரத்தில் துடிக்கிறாளாம்; நாண்மட மச்சம் நன்றாயிருக்கிறது!' என்று பிறர் ஏசும்படியாயிற்றென்கை. "இருங் குங்குமத்தோளரங்கேசர் முன்னாளிலங்கா புரங்காவலன் காவினுல் வீழ், கருங்குன்றுபோல் மண் முகங்குத்தி வீழக் கண்டாரெனக்கின்று தண்டாரளித்தால், மருங்கெங்கும் வம்போதுவரர் வாயடங்கும் வாடைக்கும் நிலமங்கையாடைக்கும் நோகேன், நெருங்குந்தனம் சந்தனம் பூசலாகும் நீளாதிரா மையல் மீளாதிராதே" என்ற திருவரங்கக்கலம்பகச்

செய்யுளின் கருத்து இங்கு உணரத்தக்கது. 'நிறைபழி' என்றது நாயகியைப் பற்றினபழி என்பது மாத்திரமல்லாமல் நாயகனைப் பற்றின பழியுமாம் என்பது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம். ஒருத்தியைத் தன் பக்கவிலே ஆசைப்பட வைத்து வாடைக்கு ஈடுபட்டுத் துடிக்கும்படியாக உபேக்ஷிப்பதே! என்று எம்பெருமானையும் அலர் தூற்றுவர்களாம். அடும்—கொல்லும்; மரணபர்யந்தமான வேதனையைச் செய்யும் என்றவாறு. வன்காற்று என்னை அடும்=கண்ணோட்டமில்லாத காற்றானது, பரிஹாரஞ் செய்யவும் பொறுத்திருக்கவும் மாட்டாத மெல்லியலான என்னைப் பெண் கொலை யென்பதும் பாராது நாசப்படுத்தா நிற்கும்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது:—ஆழ்வார் தாம் எம்பெருமானைச் சேர்வதற்கு த்வரைப்படுகிற வளவில் உடனே பேறு கிடையாமல் தாமதித்தலால் அப்பொழுது இவ்வுலகத்துப் பொருள் தம்மை வருத்தும் விதத்தைக் கூறுவதாம். முன்பு ஸம்ஸாரத்தில் அநுபவித்த துக்க பரம்பரைகள் இனியன என்னும்படி இப்பொழுது எம்பெருமானைச் சேரப்பெறாத துயரம் அதிகப்பட்டமை இதில் தோன்றும். [என்றும் புன்வாடை யிதுகண்டறிதும்] எப்பொழுதும் வருத்துந் தன்மையதான இவ்வுலகப் பொருளை யாம் கண்டறிவோம். [இவ்வாறு வெம்மை உருவும் சுவடும் ஒன்றும் தெரியிலம்] இப்படிப்பட்ட பொருளின் தன்மையுங் குறியும் ஒருபடியாலும் எம்மாற் கூறமுடியாதபடி மிக்குள்ளன. [ஓங்கசுரர் பொன்றும்வகை புள்ளையூர்வானருளருளாத விந்நாள்] துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலந சீலரும் அதற்கு ஏற்றபடி விரைவுள்ள வாஹனத்தை யுடையவருமான எம்பெருமான் தனது இயல்பாகிய கருணையால் அடியேனை ஆட்கொள்ளாத இக்காலத்தில். [மன்றில் நிறைபழி தூற்றி வன்காற்று என்னை நின்று அடும்] எம்பெருமானைச் சரணமடைந்தும் இங்ஙனம் பரிபவப்படுகிறேனென்ற பழியைப் பலரும் எங்குந் தூற்றச்செய்து இவ்வுலகத்துப் பொருள் என்னை நிலையாக வருத்துகின்றது என்றதாயிற்று. ஸ்வாபதேசத்தில் பழியாவது— எம்பெருமான் தானேவந்து ஆட்கொள்ளுமளவும் ஆறியிராமல் பதறுகின்றதனாலுண்டாகும் ஸ்வரூபஹாநி. "பேற்றுக்குத் தான் ப்ரவர்த்திக்கையும் பழியிறே" என்பர் நம்பிள்ளை. .... (சக)

**வன்**காற்றறைய வொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த *
**மென்**காற் கமலத்தடம்போற் பொலிந்தன * மண்ணும் விண்ணும்
**என்**காற் களவின்மைகாண்மினென்பானொத்து வான்நிமிர்ந்த
**தன்**காற்பணிந்த வென்பால் * எம்பிரான தடங்கண்களே. (சஉ)

| | |
|---|---|
| **எம்** பிரான | எம்பெருமானுடைய |
| **தட** கண்கள் | பெரிய திருக் கண்களானவை |
| | (எங்ஙனம் விளங்குகின்றன வென்றால்,)— |
| **மண்**ணும் விண்ணும் | 'மண்ணுலகமும் விண்ணுலகமுமாகிய விசாலமான இடமிரண்டும் |
| **என்** காற்கு | எனது இரண்டு பாதங்களின் அளவுக்கு |
| **அளவு** இன்மை | இடம்போதாத அற்புதத்தை |
| **காண்**மின் | பாருங்கள்' |
| **என்**பான் ஒத்து | என்று (அந்தந்த உலகங்களிலுள்ளார்க்குக் கூறி) ஒருவித்தை காட்டுபவன் போன்று |
| வான் நிமிர்ந்த | மேலுலகை நோக்கி வளர்ந்த |
| தன் | தன்னுடைய |
| கால் | திருவடிகளை |
| பணிந்த | வணங்கின |
| என்பால் | என்னிடத்து, |
| வன் காற்று அறைய | பெருங்காற்று வீசுதலால் |
| ஒருங்கே மறிந்து கிடந்து அலர்ந்த | ஒருபக்கமாகச் சாய்ந்துகிடந்து மலர்ந்த |
| மென் கால் | மெல்லிய நாளத்தையுடைய |
| கமலம் தடம் போல் | தாமரைத்தடாகம் போல |
| பொலிந்தன | அழகுமிக்கு விளங்கின. |

* * *—நாயகனது நோக்கில் ஈடுபட்ட நாயகி வியந்துரைத்த **பாசுரம் இது.** ஸர்வேச்வரனாகிய நாயகன் தன் கடைக்கண்பார் **வை**யால் பராங்குசநாயகியாகிய தன்னை ஒருக்கணித்துக் குறிப்பாக **நோக்**கிப்போன தன்மையில் ஈடுபட்டுக் கூறியதென்க.

எம்பெருமானுடைய திருக்கண்களானவை தனது உலகமளந்த **திருவடிகளில்** வணங்கின என்னிடத்தில் எப்படியிருந்தனவென் **றால், வலிய** காற்று வீசுதலால் ஒருபக்கமாகச் சாய்ந்து கிடந்து

மலர்ந்த தாமரைத் தடாகம்போல அழகு மிக்கு விளங்கின—என்கிறாள். ஒருக்கணித்துக் கடைக்கண்ணால் நோக்கிய கண்கள்—வலிய காற்றினால் நேர்நிற்கமாட்டாது ஒருபுறஞ் சாய்ந்து அந்நிலைமையில் மலர்ந்த தாமரைமலர் போன்றனவாம்.

இப்பாசுரத்தைச் சிறுபான்மை அடியொற்றி ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் "ஸ்ரீரங்கேஶய! ஶரணம் மமாஸி வாத்யாவ்யாலோலத்கமல தடாக தாண்டவேந = ஸ்ரீரங்கேசய! சரணம் மமாஸி வாத்யாவ்யாலோலத்கமல தடாக தாண்டவேந" என்று பட்டர் அருளிச்செய்த ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

எம்பெருமான் உலகமளந்த வரலாற்றை ஒரு உத்ப்ரேக்ஷையிலே யிட்டுப் பேசுகிறது மூன்றாமடி; 'மண்ணுலகும் விண்ணுலகுமாகிய பரந்த இடமிரண்டும் எனது இரண்டு பாதங்களின் அளவுக்கு இடம்போதாத ஆச்சரியத்தைப் பாருங்கோள்' என்று அவ்வவ்வுலகங்களி லுள்ளார்க்குக் கூறி ஒருவித்தை காட்டுபவன் போன்று உலகமளந்தனனும் எம்பெருமான். மண்ணும்விண்ணும் எம்பெருமானுடைய பாதங்களின் அளவுக்கு இடம்போதாத தன்மை கம்பராமாயணத்திலும் 1."நின்றகால் மண்ணெலாம்நிரப்பி யப்புறம், சென்று பாவிற்றிலை சிறிது பாரெனா, ஒன்ற வானகமெலாமொடுக்கி யும்பரை, வென்ற கால் மீண்டது வெளிபெறாமையே" 2. "உலகெலாமுள்ளடி யடக்கி" என்பவற்றால் காட்டப்பட்டது. 'தன்கால் பணிந்த' என்றவிடத்து 'கால்' என்பதை ஏழனுருபாகக் கொண்டு 'தன்னிடத்தில் ஈடுபட்ட' என்றும் பொருள் கொள்ளலாம்.

எல்லாவுலகத்து உயிர்களையும் தன் காற்கீழடிமைகொள்ளத் திருவுள்ளமுகந்த எம்பெருமான் அவ்வுலகை நோக்கி 'உங்கள் தலையில் என்காலை வைக்கிறேன்' என்று சொன்னால் அவ்வுயிர்களில் அஹங்கார மமகாரமுடையவை 'நாங்கள் உன்காலை எம் தலையில் வைக்கவொட்டோம்' என்று ஆணையிட்டுத் தடுக்கக்கூடுமென்று கருதி அங்ஙனஞ் சொல்லாமல் 'என்காலுக்கு இவை இடம்போதாத வேடிக்கையைப் பாருங்கோள்' என்று ஒரு வியாஜமிட்டுச் சொல்லி

1. பாலகாண்டம்—வேள்விப்படலம்—360.
2. ௸ 37.

அவற்றின் முடிமேல் அடிவைத்து அவற்றை ஆட்கொண்டருளின னென்பது "மண்ணும் விண்ணுமென் காற்களவின்மை காண்மி **னேன்பானொத்து** வான்நிமிர்ந்த தன்கால்" என்றதிற் போதரும். உயிர்களுக்கு முயற்சியில்லாமலே எம்பெருமான் அருள் செய்தமை இதனால் அறியக் கிடக்கிறது.

இரண்டாமடியில் "மண்ணும் விண்ணும்" என்றிருப்பது 'விண்ணும் மண்ணும்' என்றிருந்தால் மோனைக்கு இனிது பொருந்தும்; அப்பாடமேயிருந்து மாறியுமிருக்கலாம். **'எம்பிரான'** என்றதில், **அ**—ஆறனுருபு; "கவியன தமிழிவை" என்றவிடத்திற் போல.

ஆழ்வார் தம் பக்கல் எம்பெருமான் பரிபூர்ண கடாக்ஷம் பண்ணினபடியைப் பாவனையாலே அநுபவித்து அருளிச்செய்த பாசுரமிது. 'வன் காற்றறைய' என்றது தடையில்லாத நடையையுடைய கருணையால் தூண்டப்பட்டது கடாக்ஷவீக்ஷணம் என்றபடி. "**காருண்யமாருதாநீதை:**" என்றாரிறே திருக்கச்சிநம்பிகள். 'ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த' என்றது—இவ்வாழ்வா ரொருவர் பக்கலிலே அபிமுகமாய் இவரையேநோக்கி மலர்ந்தமை சொன்னபடி. மென்காலாவது—இந்த அருள்நோக்குக்கு மூலமான திருவுள்ள நெகிழ்ச்சி. கமலத்தடமென்றது நிறத்தாலும் குளிர்ச்சியாலும் பரப்பாலும் உண்டான போக்யதையைப்பற்றி. .... (௪௨)

**கண்ணுஞ் செந்தாமரை கையுமவை யடியோ வவையே *
வண்ணங் கரியதோர் மால்வரை போன்று * மதிவிகற்பால்
விண்ணுங்கடந் தும்பரப்பால்மிக்கு மற்றெப்பால்யவர்க்கும்
எண்ணு மிடத்ததுவோ? * எம்பிரான தெழில்நிறமே.** (௪௩)

| | | | |
|---|---|---|---|
| **கண்ணும்** | திருக்கண்களும் | அவையே | அத்தாமரைப் பூக்களையே யொப்ப, |
| **செம் தாமரை** | செந்தாமரைப் பூவையொப்ப | எம்பிரானது | எம்பெருமானுடைய |
| **கையும்** | திருக்கைகளும் | எழில் நிறம் | அழகிய திருமேனி விளக்கம் |
| **அவை** | அத்தாமரைப் பூவையொப்ப, | | |
| **அடியோ** | திருவடிகளும் | | |

| | | | | |
|---|---|---|---|---|
| வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று | நிறத்தில் கறுத்ததான வொருபெரிய மலையையொத்து, | | மற்று எப்பால் யவர்க்கும் | அதன்மேல் பாமபதத்தில் எவ்விடத்து முள்ள நித்யஸூரிக ளெல்லோர்க்கும் |
| மதி விகற்பால் | ஞானத்தின் மிகுதியால் | | எண்ணும் இடத்ததுவோ | (இப்படிப்பட்டதென்று) அளவிடும்படி யான தன்மை யுடையதோ?. (அன்று.) |
| விண்ணும் கடந்து | ஸ்வர்க்க லோகத்தாரை மேவிட்டு | | | |
| உம்பர் அப்பால் மிக்கு | அதன் மேலிடத் துள்ள ஸத்ய லோகத்தார்க்கும் அப்பாற் சென்று | | | |

* * *—நாயகனுடைய ரூப வைலக்ஷண்யமுரைத்த நாயகியின் பாசுரம் இது. 1. "கைவண்ணந் தாமரை வாய் கமலம் போலும் கண்ணிணையு மரவிந்தம் அடியுமஃதே" என்றாற்போலே யிருக்கிறது முதலடி. வேறு உபமாநம் கிடைப்பது அரிது என்பது தோன்றப் பல அவயவங்களுக்கு ஒரு பொருளையே உவமை கூறியது. எம்பெருமானுடைய திருக்கண் திருக்கை திருவடி என்னுமுறுப்புகள் ஸாக்ஷாத் தாமரை மலர்களே; திருமேனி நிறமோவென்னில், ஒரு அஞ்சன மாமலை போன்றுள்ளது; இதன் வைலக்ஷண்யத்தைச் சொல்லப்புகில், லீலாவிபூதியில் பலவுலகங்களிலுமுள்ளா ரெல்லாரிற் காட்டிலும் ஞானத்தில் மேம்பட்ட பரமபதத்து நித்யஸூரிகளுக்கும் இத்தன்மையதென்று நெஞ்சால் நினைக்கவுமாகாதென்றால் வாய்கொண்டு சொல்லவல்லாருண்டோ என்றாளாயிற்று. மநுஷ்யர்களிற் காட்டில் தேவர்களுக்கும், இந்திராதி தேவர்களிற் காட்டில் ஸ்ருஷ்டிகர்த்தாவான பிரமனுக்கும், அவனிற்காட்டிலும் முக்தர்க்கும், அவர்களிற் காட்டிலும் நித்யர்க்கும் ஞானம் படிப்படியே சிறக்குமென்பது கொள்கை. மிக மேம்பட்ட ஞானிகளாலும் எம்பெருமானது திருமேனியழகு வரையறுக்கவொண்ணாது எனவே, இங்குள்ளாரால் வரையறுக்கலாகாமை தானே விளங்கும்.

1. திருநெடுந்தாண்டகம் 21.

'மதி விகற்பால் எண்ணுமிடத்ததுவோ' என்று அந்வயிக்கும். 'விகல்பம்' என்னும் வடசொல் 'விகற்பு' எனத்திரிந்தது; விகல்பமாவது வேறுபாடு; மற்றையோரறிவினுஞ் சிறந்து வேறுபட்டுத் தோன்றுகின்ற மதியினால் என்றவாறு. அப்படிப்பட்ட மதியினாலும் எண்ணுந் திறத்ததன்று எம்பெருமானது எழில் நிறம் என்க.

ஆழ்வார் தமது அகக் கண்ணுக்குப் புலப்பட்ட எம்பெருமானுடைய வடிவழகில் ஈடுபட்டு இது எமக்கேயன்றி நித்யஸூரிகளுக்கும் அளவிட வொண்ணாதது என்று இதனை அருளிச் செய்தாராயிற்று.

மூன்றாமடியில் 'யாவர்க்கும்' என்பது 'யவர்க்கும்' எனக்குறுகியுள்ளது. 1. 'உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்' என்ற பாசுரத்திலும், 2. "நெஞ்சினால் நினைப்பாயவன்" என்ற பாசுரத்திலும் 'யவன்' என்பதும், 3. 'பயிலுந் திருவுடையார் யவரேலுமவர் கண்டீர்' என்பதில் 'யவர்' என்பதுங் காண்க. இங்கே யா வினா எஞ்சாமைப் பொருளது. "ஆவோடல்லது யகரமுதலாது" [தொல்காப்பியம்—எழுத்ததிகாரம்—மொழிமரபு—32.] என்ற விதியைக்காட்டி 'யவர்க்கும்' என்றும் 'யவன்' என்றும் 'யவர்' என்றுமுள்ள பாடங்களை மறுத்து எகரமுதலதாகப் பாடங்கொள்ள வேணுமென்று சிலர் வற்புறுத்துவர்; அது அஸம்ப்ரதாயம்; ஏட்டுப் பிரதிகளிலெல்லாம் யகரமுதலதான பாடமே காண்கிறது; "ஆவோடல்லது யகரமுதலாது" என்ற விதிக்குக் கதியில்லையோவெனின், அச் சூத்திரவிதி இயற்கை மொழிக்கேயன்றிச் செய்யுளில் வேண்டுழிக் குறுக்கல் பெற்ற மொழிக்கு விலக்காகாது என்று கொள்க. .... .... .... .... .... (௪௩)

நிறமுயர் கோலமும் பேருமுருவு மிவையிவையென்று *
அறமுயல் ஞானச் சமயிகள் பேசிலும் * அங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச் சுடர்விளக்காய் நின்றதன்றி யொன்றும்
பெறமுயன் றாரில்லையால் * எம் பிரான பெருமையையே. (௪௪)

1. திருவாய்மொழி 1—1—1. 2. திருவாய்மொழி 3—6—9.
3. ௸ 3—7—1.

| | |
|---|---|
| நிறம் | திருமேனிநிறமும் |
| உயர் கோலமும் | சிறந்த அலங்காரமும் |
| பேரும் | திருநாமமும் |
| உருவும் | வடிவமும் |
| இவை இவை என்று | இன்னின்னவையென்று |
| அறம் முயல் ஞானம் சமயிகள் பேசிலும் | தருமமார்க்கத்தால் முயன்று பெற்ற ஞானத்தையுடைய வைதிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் (ஒருவாறுபிறர்க்குச்) சொன்னாலும் |
| | (அவர்கள்) |
| அங்கு அங்கு எல்லாம் | கீழ்ச்சொன்ன நிறம் அலங்காரம் திருநாமம் வடிவம் இவையெல்லாவற்றிலும் |
| உற உயர் ஞானம் சுடர் விளக்கு ஆய் நின்றது அன்றி | மிகவுயர்ந்த (தமது) ஞானமாகிற தீபத்தால் சிறிது விளக்கத்தைப் பெற்று நின்றதொழிய |
| எம்பிரானை பெருமையை | எம்பெருமானுடைய (ஒப்புயர்வற்ற) மஹிமையை |
| ஒன்றும் பெற முயன்றார் இல்லை | ஒருவகையாலும் முற்றும் அளவிட்டுக்கூறப் பெறும்படி முயற்சி செய்தார்களில்லை. |

* * *—நாயகி நாயகனுடைய பெருமையையுரைக்கும் பாசுரமிது. 1. "வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார், ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவுகண்டாரை யொத்தார்" என்றாற்போல எம்பெருமானுடைய நாமம் ரூபம் குணம் முதலியவற்றில் அந்தந்த மதஸ்தர்கள் தாம் தாம் ஒவ்வொரு பகுதியை அறிந்ததேயன்றி முற்றும் எவரும் அறிந்திலர் என்கிறாள். கீழ்ப்பாட்டில் 'எம்பிரானதெழில் நிறம் யவர்க்கு மெண்ணுமிடத்ததுவோ' என்றதன்மேல், 'எம்பெருமானுடைய நிறத்தையும் கோலத்தையும் பெயரையும் உருவையும் இவையிவையென்று ஞானச் சமயிகள் பேசுகின்றனரன்றோ? அப்படியிருக்க 'எண்ணுமிடத்ததுவோ?' என்று எங்ஙனே சொல்லலாம்? என்று எழுந்த ஆக்ஷேபத்திற்கு விடை கூறுவது போலும் இப்பாட்டு; அவர்களும் அவன் பெருமையைச் சிறிது சிறிது கண்டதேயன்றி முடியக் காணப்பெற்றாரில்லை எனப்பட்டது.

1. கம்பராமாயணம்

'அறமுயல் ஞானச் சமயிகள்' என்றவிடத்து 'அறம் முயல்' எனப் பிரிக்காமல் 'அற முயல்' என்றே எடுத்து 'மிகவும் முயன்று பெற்ற' என்றும் பொருளுரைக்கலாம். (அற—மிகவும்.)

ஆழ்வார் தமக்கு ஸேவைதந்த ஸர்வேச்வரனுடைய மஹிமை எவ்வளவு ஞானம் கைவந்தவர்க்கும் முற்றிலும் உணரப்பெறாததென்று உண்மையுரைத்தாராயிற்று. ஸ்வயத்நத்தாலே அறிவோமென்பார்க்கு அறியமுடியாததாய் அளவிடவொண்ணாததான தன் பெருமையைப் பரமகிருபையாலே தமக்கு விளங்கச் செய்த உபகாரத்தைக் கருதி **எம்பிரான்** என்றார்.

**நிறமுயர்கோலமும் பேரு முருவும்**—நிறமாவது—1. "முன்னை வண்ணம் பாலின்வண்ணம் முழுதும் நிலைநின்ற, பின்னைவண்ணங் கொண்டல்வண்ணம்" இத்யாதிகளிற் சொல்லப்பட்ட வெண்மை கருமை முதலியன. கோலமாவன—ஸ்ரீகௌஸ்துபமணி முதலியன. பேர்—ஸஹஸ்ரநாமங்கள் உரு—மத்ஸ்ய கூர்மாதிரூப பேதங்கள். .... .... .... .... (சச)

**பெருங்கேழலார் தம்பெருங் கண்மலர்ப் புண்டரீகம் * நம்மேல்**
**ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம் * ஒருவர்நம்போல்**
**வருங்கேழ்பவருளரே? தொல்லை வாழியம் சூழ்பிறப்பு**
**மருங்கே வரப்பெறுமே? * சொல்லு வாழி மடநெஞ்சமே!** (சரு)

**மட நெஞ்சமே** — பேதைநெஞ்சே!

**பெரு கேழலார்** — (பிரளய வெள்ளத்திலழுந்தின பூமியை யெடுப்பதற்கு) மஹாவராஹரூபியானவர்

**இ அகாலம்** — (ரக்ஷிப்பதற்கு) எளியதல்லாத இக்காலத்தில்

**தம்** — தம்முடைய

**பெரு கண் மலர் புண்டரீகம்** — பெரிய செந்தாமரைப்பூப் போன்ற திருக்கண்களை

**நம் மேல்** — நம்பக்கலில்

**ஒருங்கே பிறழ வைத்தார்** — ஒரு படிப்பட மிளிரும்படி வைத்தார் [கடாக்ஷித்துக் காத்தருளினார்];

**நம் போல் வரும் கேழ்பவர்** — (அவரோடு) நம்மைப்போல் பொருந்திய ஸம்பந்தம் பெற்றவர்

**ஒருவர் உளரே** — வேறொருத்தர் உண்டோ? (இல்லை.)

1. **பெரியதிருமொழி** 4-9-8.

| | | | |
|---|---|---|---|
| தொல்லை வாழியம் | (அவரோடு பழமை யான வாழ்க்கையையும் யாமுடையோம்; (அப்படிப்பட்ட நமக்கு) | மருங்கே வர பெறுமே | அருகிலும் வரக் கூடுமோ? |
| | | சொல்லு | சொல்வாய்; |
| சூழ் பிறப்பு | விடாது சூழ்கிற பிறப்புத் துன்பங் கள் | வாழி | (கலக்கந் தெளிந்து) வாழ்வாயாக. |

* * *—நாயகி நாயகனுடைய நீரிடை யுதவியை நினைந்துரைத்த பாசுரம் இது. நாயகனைப் பிரிந்த நாயகியானவள் அவனையே இடைவிடாது சிந்தனை செய்துகொண்டு நீண்டகாலம் வருத்தப் படா நிற்கையில், அவளது மனம் 1. "எண்பது கோடி நினைந் தெண்ணுவன" என்றபடி அவன் முன்பு செய்த உதவியையும் அவ னோடு தனக்குள்ள ஸம்பந்தத்தையும் மறந்து 'அவன் இரக்கமற்ற வன், ஈரநெஞ்சு இல்நெஞ்சு அற்றவன்' என்று சொல்லி அவனது கொடுமையையே பாராட்டி வெறுக்கப்புக, அந்த நெஞ்சத்தை முன்னிலைப்படுத்தித் தலைவி 'நாம் முன்பு நீர்நிலையில்விளையாடச் சென்றபோது பெருவெள்ளத்தில் அகப்பட்டு ஆழ்ந்து முடிந்து போக விருக்குந்தருணத்தில் அவர் தமது அபாயத்தைக் கருதாது துணிந்து வந்து இறங்கி நம்மை யெடுத்துக் கரை மேல்விட்டு உயிர்காத்தவ ரல்லரோ?' என்றும், 'இப்படிப்பட்ட ப்ராப்தி அவரோடு வேறு யாவர்க்கு நேர்ந்தது?' என்றும், 'இவ் வுதவி செய்தற்கு முன்னமே அவரோடு நாம் இயற்கைப் புணர்ச்சி பெற்றோமன்றோ' என்றும் பழைய ஸம்பந்தங்களை யெடுத்துச் சொல்லி மனத்தைத் திருப்புதல் ஒரு கிளவித் துறையாகவுள்ளது. அத்துறையில் அமைந்த பாசுரம் இது என்னலாம்.

இப்பாட்டில் நீரிடையுதவியை நினைந்துரைத்தல் காணவில் லையே என்னவேண்டா; 'பெருங் கேழலார்' என்றது அதுவே. எம்பெருமான் மஹாவராஹ மூர்த்தியாய்த் திருவவதரித்தது பிர ளயப் பெருங்கடலினுட்பட்டு ஆழ்ந்த பூமிப்பிராட்டியை அதில்

1. நல்வழி 28,

நின்று எடுத்துப் பாதுகாப்பதற்காதலால் அதுதான் நீரிடை யுதவியாதலால் அது இங்கு நினைந்துரைக்கப் பட்டதென்க. அவ்வுதவி பூமிப்பிராட்டிக்குச் செய்ததாயினும் ஆச்ரித வர்க்கங்களில் எவர்க்கு எவ்வுதவி செய்யினும் அதனை மற்றுள்ள அடியாரனைவரும் தந்தமக்குச் செய்ததாகப் பாவிக்கும் முறைமை யுண்டாதலால் தனக்கேயாகக் கொள்ளக் குறையில்லை. அன்றியும், 1. "பின்னைகொல் நிலமாமகள் கோல் திருமகள் கொல் பிறந்திட்டாள்" என்ற ஐக்கியமுமுண்டு பராங்குசநாயகிக்கு.

"தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தார்" என்றது—தன்னை எம்பெருமான் குளிர நோக்கினமை கூறியவாறு. நம்மேல் வைத்த கடாக்ஷத்தை மாற்றிப் பிராட்டி தன்பக்கலிலே வைக்கவேணு மென்றாலும் மாற்ற வொண்ணாதபடி வைத்திட்டானென்பது தோன்ற 'ஒருங்கே' என்றது; "எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக்கண்ணனே" என்பர் திருவாய்மொழியிலும். பிறழ—மிக.

'இக்காலம்' என்னாது 'இவ்வகாலம்' என்கையால்—தன்னுயிர் போனாலும் போகட்டுமென்று தன்னை மதியாமல் வந்து ரக்ஷிக்கப் பார்த்தாலன்றி மற்றைப்படி எளிதாக ரக்ஷிப்பதற்கு உரியதல்லாத காலம் என்பது தோன்றும். இனி நாம் பிழைக்கும் வகையில்லையென்று நிராசை பண்ணிவிட்டிருந்த ஸமயத்திலே வந்து ரக்ஷித்தாரென்றவாறு. காலமல்லாத காலம் அகாலமெனப்படும். மஹாவராஹரூபியாய்க் கடாக்ஷித்துக் காத்தருளினது நெடுநாளைக்கு முன்பே நடந்ததாயினும் அன்பின் மிகுதியாலே இப்பொழுது நடக்கிறதுபோலத் தோன்றுதலால் 'இவ்வகாலம்' என அண்மைச் சுட்டாற் குறித்தாள்.

பகவத் கடாக்ஷம் பெறப்பெற்ற பெருமையினால் உண்டான மனக்களிப்பு பின்னடிகளில் புலனியுரைக்கப்படுகின்றது. அவரோடு நம்மைப்போலப் பொருந்திய ஸம்பந்தம் பெற்றவர் வேறு யாரேனு முண்டோ? எவருமில்லை; இவ்வுறவு நமக்கே அஸாதாரணம்; நாம் இன்று நேற்று வாழ்வுடையோமோ? நெடுநாளைய

1. திருவாய்மொழி 6—5—10.

வாழ்வுடையோமன்றோ; இப்படிப்பட்ட நமக்கு ஸம்ஸாரத்துன் பங்கள் அருகிலும் வரக்கூடுமோ? சொல்லாய் நெஞ்சமே! யென் கிறாள். இந்த ஸம்ஸாரத்திலே பிறந்த ஸ்த்ரீகளுக்கு வரக்கூடிய விரஹத்துன்பங்களானவை இங்ஙனம் கருணையையும் ஸம்பந்தத் தையுமுடைய நாயகரைக்கொண்ட நமக்கு வாரா என்றவாறு.

வாய்திறந்து ஒன்று சொல்லுவதற்கு யோக்யதையற்றதான நெஞ்சைப் பார்த்து 'சொல்லு' என்றது—தேற்றப் பொருள்விளக் கும்; 'காண்' என்பதுபோல. 'உளரே' 'பெறுமே' என்ற ஏகா ரங்கள் எதிர்மறைப் பொருளன; இலர் என்றும், பெறாது என் றும் பொருள்படுதலால். **தொல்லை**—தொன்மை; ஐ விகுதிபெற்ற பண்புப்பெயர்.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப்பொருள் வேறு சொல்ல வேண்டுவது அவசியமன்றாயினும் ஒருபடி நிஷ்கர்ஷித்துச் சொல்லு வோம். நாம் ஸம்ஸார ஸமுத்ரத்தில் அகப்பட்டு வருந்துகின்ற இக்காலமானது எளிதில் ரக்ஷிப்பதற்கு உரியதல்லாதது; இப்படிப் பட்ட அகாலத்திலே, பிரளய வெள்ளத்துப் பூமியைத் காத்த பெருமான் நம்மேல் பூரண கடாக்ஷம் வைத்தருளினன்; ஆதலால் நம்மைப்போல அவனோடு ஸம்பந்தம் பெற்றார் வேறு எவரு மில்லை. அன்றியும், பரமாத்மாவாகிய அவனோடு ஜீவாத்மாவாகிய நாம் இயற்கையில் அடிமைப்பட்டு வாழ்தலுமுடையோம்; நமக்கு இனிப் பிறவித்துன்பங்கள் அருகிலும் வரக்கடவனவல்ல. (பக வத் கடாக்ஷமுண்டாகி அநுபவம் பெற்றார்க்கு ஜந்மஸம்பந்த முண்டென்று எங்கேனுங் கேட்டறிவதுண்டோ?) நெஞ்சே! இனிக் கலக்கந்தெளிந்து வாழ்வாயாக என்று ஆழ்வார் பிறவித் துயருக்கு அஞ்சியொடுங்கிய தமது நெஞ்சத்தை நோக்கிக் கூறித் தெளிவிக்கும் பாசுரமாமிது. .... .... (சரு)

மடநெஞ்ச மென்றுந் தமதென்றும் * ஓர்கருமங் கருதி
விடநெஞ்சை யுற்றார் விடவோ வமையும் * அப்பொன்பெயரோன்
தடநெஞ்சங்கீண்ட பிரானார் தமதடிக்கீழ்விடப்போய்த்
திடநெஞ்சமாய் * எம்மைநீத் தின்றுதாறும் திரிகின்றதே. (சகூ)

| | |
|---|---|
| மடம் நெஞ்சம் என்றும் | பேதைமையை யுடைய மனமென்று எண்ணியும் |
| தமது என்றும் | நமக்கு அந்தரங்க மான தென்று எண்ணியும் |
| ஓர் கருமம் கருதி | ஒரு காரியத்தை யுத்தேசித்து |
| நெஞ்சை விட உற்றார் | மனத்தைத் தூதுபோக விடத் துணிந்தவர் |
| விடவோ அமையும் | அத்துணிவை விட்டொழிதல் தகுதி ; |

(ஏனெனில்,)

| | |
|---|---|
| அ பொன் பெயரோன் | அந்த (கொடிய) இரணிய னுடைய |
| தட நெஞ்சம் | பெரிய மார்பை |
| கீண்ட | எளிதிற் பிளந்தருளிய |
| பிரானார் தமது | பராக்ரமசாலியான எம்பெருமா னுடைய |
| அடிக்கீழ் | திருவடிகளிலே |
| விட | (யாம் எமது நெஞ்சைத்) தூதுவிட |

(அது)

| | |
|---|---|
| போய் | விரைவாகச் சென்று |
| திடம்நெஞ்சம் ஆய் | உறுதியான கருத்துள்ளதாய் |
| எம்மை நீத்து | (தூதுவிட்டவரும் தனக்கு உடையவருமான) எம்மை நினையாமற் கைவிட்டு |
| இன்றுதாறும் | இன்றுவரையில் |
| திரிகின்றது | (அப்பெருமானையே தொடர்ந்து உல்லாஸமாகத்) திரிந்துகொண்டிருக்கின்றது. |

* * *—நெஞ்சைத் தூதுவிட்ட நாயகி அது மீண்டுவருதலின்மை கண்டு இரங்கிக் கூறுதல் இது. இப்பாட்டை ஒரு புடை அடியொற்றியே திருவரங்கக் கலம்பகத்தில் "நீரிருக்க மடமங்கைமீர்! கிளிகள் தாமிருக்க மதுகரமெலாம் நிறைந்திருக்க மடவன்ன முன்ன நிரையாயிருக்க வுரையாமல் யான், ஆரிருக்கினு மென்னெஞ்ச மல்லதொரு வஞ்சமற்ற துணையில்லையென் றாதரத்தினொடு தூதுவிட்டபிழை யாரிடத்துரை செய்தாறுவேன், சீரிருக்கு மறை முடிவு தேடரிய திருவரங்கரை வணங்கியே திருத்துழாய்தரில் விரும்பியே கொடுதிரும்பியே வருதலின்றியே, வாரிருக்கு முலை மலர்மடந்தை யுறைமார்பிலே பெரிய தோளிலே மயங்கியின்புற முயங்கியென்னையு மறந்து தன்னையுமறந்ததே" என்ற செய்யுள் அவதரித்த தென்க.

மேகம், கிளி, வண்டு, அன்னம், தோழி முதலியோரைத் தூதுவிடலாமாயிருக்கச் செய்தேயும், கபடமும் வஞ்சனையுமில்லாத தென்றும் நம்முடைய அந்தஃகரணமென்றும், 'நெஞ்சையொளித்தொரு வஞ்சகமில்லை' என்றும் இவை முதலிய காரணங்களை ஆலோசித்து மற்றையோரைத் தூது விடுவதிற் காட்டிலும் நெஞ்சைத் தூது விடுவது உசிதம் என்று கருதி அதனை ஒரு காரியத்தின் பொருட்டு ஓரிடத்துத் தூதுவிடத் துணிந்தவரெல்லோரும் அத்துணிவை விட்டொழிவதே தகுதி; ஏனென்றால், எமது நாயகரிடத்து யாம் முன்பு தூதுவிட்ட நெஞ்சம் இதுவரையிலும் திரும்பி வாராதவளவேயன்றி எனக்குந் தனக்குமுள்ள ஸம்பந்தத்தையும் எமது நிலைமையையும் சிந்திப்பதுஞ் செய்யாமல் வன்மைப்பட்டு அவர் பின்னேயே ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறது என்று, நெஞ்சைத் தூதுவிட்ட நாயகி தனது அநுபவத்தால் உலகத்தார்க்கு ஒருறுதிமொழி கூறினளென்க.

மடம்—பேதைமைக்குணம்; கபடம் வஞ்சகம் முதலிய தீய குணங்களில்லாமைக்குப் பரியாய மென்க. கண்டவர்களையுங் கொண்டு செய்வித்துக்கொள்ளக் கூடிய காரியங்கள் சிலவுண்டு; அந்தரங்கரானவரைக் கொண்டே செய்வித்துக் கொள்ளத்தக்க காரியங்களுஞ் சிலவுண்டு; புறம்புள்ளாரைக்கொண்டு செய்துகொள்ளத் தக்கதன்றியே அணுக்கரானவரைக் கொண்டு செய்துகொள்ளத்தக்க. காரியமாகில் அக்காரியத்தில் நெஞ்சை ஏவுவது தகுதியேயன்று என்கிறது முன்னடிகளில்.

'விடநெஞ்சையுற்றார்' என்ற விடத்து, 'விடம் - நெஞ்சை' என்று பிரித்து, விஷம்போல் கொடிதான மனத்தை உற்றார்—அதற்கு உரியவர், விட அமையுமோ—தூதுவிடத்தகுமோ? தகாது, என்று முரைக்கலாம். 'ஓர் கருமங்கருதிவிட நெஞ்சையுற்றார் விடவோ வமையும்' என்பதற்கு—ஒரு காரியத்தைக் குறித்து மனத்தைத் தூதுவிடத் துணிந்தவர்கள் அப்படி அதனைத் தூது விடுதலிற் காட்டிலும் அக்காரியத்தைக் கைவிடுவதே தகுதி என்று முரைப்பர். நெஞ்சைத் தூதுவிடுதல் தகுதியன்று என்று நீர் சொல்வதற்கு யாதுகாரணம்? என்று கேட்க, அதனைத் தூது

விட்டு நான் பட்ட பரிபவத்தைக் கேண்மினென்கிறார் பின்னடிகளில். 'இரணியன் மார்பைப் பிளந்து ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பேரருள் செய்த பெருமாள் நம் திறத்திலும் அருள் செய்யாதொழியார்; அவ்வருளைப் பெற்றுவா' என்று அப்பெருமான் திருவடிக்கீழ்த் தூதுவிடப்பட்ட நெஞ்சானது அங்குச் சென்று எம்மை மறந்து கைவிட்டு இன்றளவும் அத்திருவடிவாரத்திலேயே பேர்க்கவும் பேராதபடி கிடந்து திரிகின்றதென்றாளாயிற்று.

'அப்பொன் பெயரோன்' என்ற அகரச்சுட்டு—கொடுமையில் அவனுக்குள்ள ப்ரஸித்தியைக் காட்டும். பொன்னுக்கு வடமொழியில் 'ஹிரண்யம்' என்பது ஒரு பர்யாயநாமமாதலால் ஹிரண்யாஸுரனைப் பொன்பெயரோ னென்றது. பொன்னிறமான உடம்புடைமைபற்றி அவனுக்கு இப்பெயர் வந்ததென்க. நெஞ்சங்கீண்ட—நெஞ்சமென்னும் மனத்தின்பெயர் அதற்கு இடமான மார்புக்குத் தானியாகு பெயர். தம்மைச் சரணமடைந்தார்க்கு வலியபகையுண்டாகிலும் அதனை எளிதில் ஒழித்து அவர்களைப் பாதுகாத்தருளும் பேருதவிக் குணமுடையவரென்பது 'அப்பொன் பெயரோன் தட நெஞ்சங் கீண்ட பிரானார்' என்றதனால் விளங்கும். 'அடிக்கீழ்' என்றது உபசாரம். 'போய்த் திடநெஞ்சமாய்' என்றதனால், போகும்பொழுது எமது பிரிவாற்றாமையை நோக்கி நெகிழ்ச்சி கொண்டிருந்தது; அங்கே போனபின்பு அவன் போலவே வன்மை கொண்டுவிட்டதென்பது தோன்றும். திரிகின்றது=நம்மையல்லது தஞ்சமில்லாதவரைத் தனியேவிட்டு வந்தோமென்னும் அநுதாபத்தாலே ஓரிடத்தில் விழுந்து கிடந்ததென்று சொல்லப் பெறாதே, உல்லாஸந் தோற்றத் தான் நினைத்தபடி திரிந்துகொண்டிருக்கின்றதென்றவாறு.

இன்றுதாறும்=இன்றுவரைக்கும். காறு என்பதுபோலத் தாறு என்பதும் எல்லைப்பொருளது. "தனையும் காறும் தாறும் துணையும், வரையும் பிரமாணமும் மாத்திரையும் மட்டும், அளவின் பெயரென்றறைந்தனர் புலவர்" என்பது பிங்கலந்தை நிகண்டு.

கீழ்ப்பாட்டில் வராஹாவதாரத்தில் ஈடுபட்ட ஆழ்வார் இப்பாட்டில் அதற்கடுத்த நரஸிம்ஹாவதாரத்திலீடுபட்டு, தமது திருவுள்ளம் மீட்க முடியாதபடி எம்பெருமான் பக்கல் சென்று ஆழ்ந்தமையை அருளிச்செய்தாராயிற்று. .... .... (சக)

திரிகின்றது வட மாருதம் * திங்கள் வெந்தீமுகந்து
சொரிகின்றது அதுவுமது * கண்ணன் விண்ணூர்தொழவே
சரிகின்றது சங்கம் தண்ணந்துழாய்க்கு வண்ணம்பயலை
விரிகின்றது முழுமெய்யும் * என்னாங்கொலென் மெல்லியற்கே?

| | |
|---|---|
| வட மாருதம் | வாடைக்காற்று |
| திரிகின்றது | உலாவுகிறது; |
| திங்கள் | (குளிர்ந்த இயல்வை யுடைய) சந்திர மண்டலம் |
| வெம் தீ | கொடிய நெருப்பை |
| முகந்து சொரிகின்றது | வாரியிறைக்கின்றது; |
| அதுவும் அது | முற்சொன்ன வாடைக்காற்றும் அப்படியே நெருப்பை வீசுகின்றது; |
| கண்ணன் | கண்ணபிரானுடைய |
| விண் ஊர் | பரமபதமாகிய வாஸஸ்தானத்தை |
| தொழவே | இடைவிடாது தொழுது அநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டு அது கிடையாமையால் வந்த மெலிவாலே |
| சங்கம் | (கையிலணிந்துள்ள) சங்குவளை |
| சரிகின்றது | கழன்று விழுகின்றது; |
| தண் அம் துழாய்க்கு | (அவனது) குளிர்ந்த அழகிய திருத்துழாயினிடத்தில் வைத்த ஆசையினால் [ஆசைப்பட்டு அது கிடையாமையினாலே] |
| முழு மெய்யும் | உடம்பு முழுவதிலும் |
| வண்ணம் பயலை விரிகின்றது | (இயற்கையான மாமை நிறம் நீங்கிப்) பசப்பு நிறம் பாவுகின்றது; |
| (இனி) | |
| என் மெல்லியற்கு | மென்மையான தன்மையையுடைய என் மகளுக்கு |
| என் ஆம் கொல் | யாதாய் முடியுமோ? |

* * *—விரஹவேதனை பொறாமல் வருந்துகின்ற தலைவியின் நிலைமையைக் கண்டு செவிலித்தாய் இரங்கிக்கூறும் பாசுரம் இது. வாடையும் சந்திரனும் இன்பந்தருவனவேயாயினும் விரஹிகளுக்குத் துன்பந்தருவனவாதலால் அவற்றுக்கு ஆற்றாது வளையிழந்து பசப்பு ஊர்ந்து வருந்தினள் தலைமகள்; அன்னவளைக் கண்டு தாய் இரங்கிக் கூறுகின்றாள்.

**திரிகின்றது வடமாருதம்**=ஒரு மதயானையானது ஆளைக் கணிசித்து உலாவுமாபோலே வாடையானது இவளுக்கு வருத்தஞ் செய்தலில் கருத்து வைத்து உலாவுகின்றது என்கை. திரிதல் என்று விகாரப்படுதலுக்கும் பேராதலால், திரிகின்றது—விகாரப்படுகின்றது, (அதாவது—தன் தன்மை மாறுபடுகின்றது; தனக்கு இயற்கையான குளிர்ச்சி மாறி வெப்பத்தைக் கொண்டு சுடுகின்றது) என்று முரைப்பர். வடமாருத மென்றதனால் சரத்கால மென்பது தோன்றும். வடக்கிற் செல்லும் மாருதம் வடமாருதம் என்று கொண்டால் தென்றல் காற்றுக்கும் பேராகலாம்.

**திங்கள் வெந்தீமுகந்து சொரிகின்றது**=சந்திரன் வெவ்விய நெருப்பைக் குடத்தைபிட்டு மொண்டெடுத்துச் சொரிதல்போலச் சொரிகின்றான். உலகத்து நெருப்பிற்காட்டிலும் மிகக் கொடியதொரு புதுநெருப்பு என்பது தோன்ற 'வெந்தீ' என்று விசேஷித்துக் கூறப்பட்டது. **அதுவுமது**=வடமாருதமும் வெந்தீமுகந்து சொரிகின்றதென்கை. 'வெந்தீ முகந்து சொரிகின்றது' என்பதை மறுபடியும் தன் வாயாற் கூறுதற்குங் கூசி 'அதுவுமது' என்று கண்களை மூடிக்கொண்டு சொல்லுகிறாள்போலும். இதனால், வடமாருதத்தின் கொடுமை 1. "படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா, முடியவேம்" $ என்னலாம்படியுள்ளது என்பது விளங்கும்.

**கண்ணன்விண்ணூர் தொழவே சரிகின்றது சங்கம்**=எம்பெருமானது பரமபதத்தை அநுபவிக்கவேணுமென் றாசைப்பட்டு அது கிடையாமையால் வந்த மெலிவாலே கையிலணிந்துள்ள சங்குவளை கழன்று விழுகின்றது. இயற்கையழகு, செயற்கையழகு என்று இருவகைப்பட்ட அழகுகளுள் செயற்கையழகு குலைந்து போனமை இதனாற் சொல்லப்பட்டது. இயற்கையழகு குலைந்து போனமை 'தண்ணந்துழாய்க்கு வண்ணம் பயலைவிரிகின்றது முழுமெய்யும்' என்றதனாற் சொல்லப்படும். துழாய்க்கு—திருத்துழாய்ப் பிரசாதத்தை யாசைப்பட்டு அது கிடையாத காரணத்தினாலென்ற

---

1. கம்பராமாயணம்—பாலகாண்டம்—தாடகை வதைப்படலம்—6.

$ அப்பாலை நிலத்தின் வெப்பத்தைக் குறித்து வாயாற் சொன்னாலும் சொல்லுகின்ற நாமுழுதும் வெந்துபோம் என்றபடி.

படி. வாடையாலும் திங்களாலுமுண்டான வெப்பம் தணிதற்காக அவனது திருத்துழாயை விரும்பினமை தோன்ற இங்கே '**தண்ணந்துழாய்**' என்றது. இத்தனை துயரங்களைப் பொறுக்கமாட்டாத மென்மைத் தன்மையுடையவள் இவள் என்பது தோன்ற '**மெல்லியல்**' என்ற சொல்லாற் சொல்லிற்று.

**மாருதம், சங்கம்**—வடசொற்கள். வர்ணமென்ற வடசொல் வண்ணமெனத் திரிந்தது. **மெல்லியல்**—பண்புத் தொகையன்மொழி

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்தும் நிலையில் ஆழ்வாரை இவ்வுலகத்துப் பொருள்கள் பலவும் துன்புறுத்துந் தன்மையைக்கண்டு ஞானிகள் வருந்திக்கூறும் வார்த்தை யென்பதாம். [திரிகின்றது வடமாருதம் திங்கள் வெந்தீமுகக்கும் சொரிகின்றது அதுவும் அது] இவ்வுலகத்து இனிய பொருள்கள் யாவும் எம்பெருமானது இனிமையை ஞாபகப்படுத்தலால் அவனைப் பிரிந்த நிலையில் வருத்தத்தைவிளைக்கின்றன என்றபடி. [கண்ணன் விண்ணூர்தொழுவே சரிகின்றது சங்கம்] ஸர்வ ஸுலபனை எம்பெருமானது பரமபதத்தினிடத்து விருப்பமுண்டானதால் இவரது பாரதந்திரியமும் குலைகிறது என்றபடி. [தண்ணந்துழாய்க்கு வண்ணம் பயலை விரிகின்றது முழுமெய்யும்] அப்பெருமானது போக்யதையில் உண்டான ஈடுபாட்டால் இவரது ஸ்வரூபமும் மாறுபடும்படி ஆற்றாமை அதிகப்பட்டதென்றபடி. [என் மெல்லியற்கு என் ஆங்கொல்] எங்களுக்கு உரியவரான இவ்வாழ்வார்க்கு இவ்வாற்றாமை யாதாய் முடியுமோ? .... .... (சஎ)

மெல்லிய லாக்கைக்கிருமி * குருவில் மிளிர்தந்தாங்கே
செல்லிய செல்கைத் துலகையென் காணும் * என்னாலுந்தன்னைச்
சொல்லிய சூழற் றிருமா லவன்கவி யாதுகற்றேன் * [பண்டே. (சஅ)
பல்லியின் சொல்லுஞ்சொல்லாக் கொள்வதோவுண்டு பண்டு

மெல் இயல் { மென்மையான தன்மையை யுடைய | ஆக்கை { உடம்பை யுடைத்தான

| | |
|---|---|
| கிருமி | புழுவானது |
| குருவில் | புண்ணிலே |
| மிளிர்ந்து | வெளிப்பட்டு |
| ஆங்கே | அவ்விடத்திலேயே |
| செல்கிய | நடமாடும்படியான |
| செல்கைத்து | ஸ்வபாவத்தை யுடையது; (அது) |
| உலகை என் காணும் | உலகநடத்தையை எங்ஙனம் அறியும்? (அறியமாட்டாது; அதுபோல) |
| என்னாலும் | என்னைக்கொண்டும் |
| தன்னை சொல்லிய | தன்னைப்பாடுவித்த |

| | |
|---|---|
| சூழல் | சூழ்ச்சியையுடைய |
| திருமாலவன் | ஸ்ரீய:பதியான அப்பெருமானுடைய |
| கவி | புகழுரையை |
| யாது கற்றேன் | (யான்) யாதென்று அறிவேன்? |
| பல்லியின் சொல்லும் | பல்லியின் வார்த்தையையும் |
| சொல் ஆ கொள்வதோ | (பின்நிகழ்ச்சியை முன்குறிக்குஞ்) சொல்லாகக் கொள்ளுதலோ |
| பண்டு பண்டே உண்டு | மிகவெருகாலமாக வுள்ளது. |

※ ※ ※—தலைவி நல்நிமித்தங்கண்டு தான் ஆற்றாமை தணிந்திருக்குமாற்றைத் தோழிக்குக் கூறல் இது. நாயகன் பிரிந்து சென்ற காலத்து அவன் பிரிவை ஆற்றாது வருந்துகிற நாயகி, தன் அருகிலே பல்லி நல்ல இடத்தில் அவன் வரவுக்குப் பொருந்தக் குரல் செய்ததைக் கண்டு அந்த நன்னிமித்தத்தால் நாயகன் விரைவில் வந்து விடுவானென்று துணிந்து சிறிது ஆறியிருக்க, முன்பு அவளுடைய துயரத்தைக் கண்டு தானும் துயருற்றிருந்த தோழி இப்போது இவள் ஆறியிருத்தலைக்கண்டு 'திடீரென்று நீ இப்படி ஆறியிருப்பதற்கு ஏதேனுங் காரணமுண்டோ? காதலன் கூடியிருக்குங் காலத்தில் உன்னை யிழுத்தணைத்துக்கொண்டு உன்னைப் பிரியேன், பிரிய நேர்ந்தாலும் தரித்திருக்கமாட்டேன், விரைவில் வந்துவிடுவேன் என்று சொல்லுஞ் சொற்களைப்பாராட்டி ஆறியிருக்கிறாயோ? அன்றி வேறுகாரண முண்டோ?' என்று கேட்க, அதற்குத் தலைவி தான் ஆறியிருத்தற்காரணங் கூறியதுபோலும் இது.

1. "கொட்டாய் பல்லிக்குட்டி! குடமாடியுலகளந்த, மட்டார் பூங்குழல் மாதவனைவரக் கொட்டாய்பல்லிக்குட்டி!" என்ற திரு

---

1. பெரியதிருமொழி 10-10-4.

மங்கையாழ்வார் பாசுரத்தில் தலைவி தலைமகன் வரவு கூறும்படி பல்லியை வேண்டியதாகப் பாடியுள்ளதனாலும், கலித்தொகையில், 1. "இணைநலமுடைய கானஞ் சென்றோர், புணைநலம் வாட்டுநரல்லர் மனைவயிற், பல்லியும் பாங்கொத்திசைத்தன, நல்லெழிலுண் கணு மாடுமாலிடனே" $ என்று நிமித்தங்கூறித் தலைவி தோழியை ஆற்றுவித்தலாலும் பல்லிசொல்லை நிமித்தமாகக் கொள்ளுதல் தொன்று தொட்டுவரும் மிகப் பழமையான ஸம்ப்ரதாயமாதலால், 'நமது மனையிடத்துப் பல்லி நல்ல இடத்தில் அவன் வரவுக்கு ஏற்ப ஒலித்தலைக்கண்டு அந்த நற்குறியாலேயே ஆறியிருக்கிறே'னென்று கூறுகின்றாள்.

நாயகன் கூடியிருக்குங் காலத்தில் 'பிரியேன், பிரியில் தரியேன்' என்று சொல்லுஞ் சொற்களை நினைந்து ஆறியிருக்கிறாயோ? என்று தோழி கேட்டதற்கு மறுமொழியாயிருக்கின்றன முன்னடிகள். புண்ணிலே தோன்றின புழுவானது தான் தோன்றிய இடமான அப்புண்ணைத் தவிர வேறொன்றை யறியாதவாறுபோல, அகமாகிய அவன் காதலிலே அகப்பட்ட யான் அதனைக் கருதியிருப்பேனத்தனையல்லது புறமாகிய சொற்செயல்களைக் கருதுவேனல்லேன்; ஆகையாலே அவற்றை நினைந்து ஆறியிருக்கிறேனல்லேன் என்றவாறு. ஆனாலும் பல்லியின் சொல்லைக்கொண்டு ஆறியிருக்கிறே னென்கிறது பின்னடிகளில்.

புழு, தொட்டாலும் வருந்தும்படியான உடம்பையுடையதாதலால் 'மெல்லியலாக்கைக் கிருமி' எனப்பட்டது. 'குரு' என்பதற்குப் புண் என்று பொருளுள்ளமையை 'வேர்க்குரு' என்னும் வழக்கிலுங்காண்க. புருஷோத்தமனாகிய நாயகனிடத்து ஈடுபட்ட தனக்கு, புண்ணில் வெளிப்பட்ட புழுவை உபமானமாகக் கூறியது, அதனையன்றி வேறொன்றை யறியாமையாகிய ஸாதர்ம்யம் பற்றியே யென்க. 2. 'வேம்பின் புழு வேம்பன்றியுண்ணாது, அடி

1. பாலைக்கலி-10.

$ காட்டுக்குச்சென்ற தலைவர் நமது நலத்தைக் கெடுக்குமவரல்லர் காண்; அதற்குக் காரணமென்னெனின்; நம்மனையிடத்துப் பல்லியும் நல்ல இடத்தே அவர் வரவுக்குப் பொருந்தக் கூறின; நல்ல அழகையுடைய மையுண்கண்ணும் இடந்துடியா நிற்கும் என்கை.

2. பெரிய திருமொழி 11-8-7.

பேன் நான் பின்னு முன் சேவடியன்றி நயவேன்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமுங் காண்க. இதனால், இது இழிவுவமை [நிஹீநோபமை]க் குற்றத்தின்பாற் படாது என்றுணர்க.

'என்னாலும்' என்ற விடத்து உம்மை உயர்வுசிறப்பும்மை; 2. "காமுற்ற பெண்ணுக்கு அணிகலம் நாணுடைமை" என்றபடி நாணத்தை முக்கிய குணமாகக்கொள்ளுமியல்புடைய என்னாலும் என்று பொருள்படுதலால். நாணத்தையே செல்வமாகக் கொண்டிருந்த நான் நாணமழிந்து தன்வசமின்றிப் பரவசப்பட்டு அவன் விஷயமாகவே கண்டபடி வாய்பிதற்றுமாறு எனக்கு மோஹத்தை உண்டாக்கினவனென்று கருத்துப்பட 'என்னாலுந் தன்னைச் சொல்லிய சூழல் திருமாலவன்' எனப்பட்டது. இங்குத் திருமால் என்றது—வேறெருத்தியிடத்தே 'வேட்கையுடையவன் என்பது தோன்ற. கீழே 'காண்கின்றனகளும்' என்ற எட்டாம் பாட்டில் 'பாண்' என்றதுபோல இங்கே 'கவி' என்றது—உண்மையாக வல்லாமல் புத்திசாதுரியத்தாற் கற்பித்துக் கூறுஞ் சொற்களைக் குறிக்கும். என்னாலுந் தன்னைச் சொல்லிய சூழல்திருமாலவன் கவியாது கற்றேன்—மெல்லியலாளான என்னை இங்ஙனம் மொழி பல பிதற்றும்படி காமவேதனைப் படுத்தினவனும் வேறெருத்தி பக்கல் வேட்கையிருந்தவனுமான தலைவன் முன்பு எனக்குக் கூறின காதல்மொழிகளை மெய்யென்று கருதி ஆதரிப்பதற்கும் பொய் யென்று கருதி வெறுப்பதற்கும் யான் தாமுடையேனல்லேன் என்றவாறு. 'பல்லியின் சொல்லும்' என்றவிடத்துஉம்மை இழிவு சிறப்பும்மை; விவேக வுணர்ச்சியில்லாத ஜந்துவாகிய பல்லியினது சொல்லையும் என்று பொருள்படுதலால்.

எம்பெருமானைச் சேர விளம்பித்தலால் ஆற்றாமைமிஞ்சின ஆழ்வாரை நோக்கி அன்பர்கள் 'நீர் இங்ஙனம் பரமபதாநுபவத்துக்கு விரையலாமோ? உம்மைக்கொண்டு லோகத்தைத் திருத்தும் பொருட்டுக் கவிபாடுவித்துக் கொள்வதற்காகவன்றோ எம்பெருமான் உம்மை இங்கு வைத்திருக்கிறது?' என்று கூறித் தேற்றுவிக்கத் தொடங்க, அவர்களை நோக்கி ஆழ்வார் தமது தாழ்வு முதலியவற்றைக் கூறுகிறார் இப்பாட்டால். [மெல்லியலாக்கைக் கிருமி குருவில்

2. திரிகடுகம்—52.

மினிர்தந்து ஆங்கே செல்லிய செல்கைத்து உலகை என் காணும்?] அற்பமான ஞானசக்திநனேயுடைய யான் உலகத்தை யறிந்து திருத்துகையாவது என்? இதற்கு நான் அசக்தன் என்ற படி. தம்முடைய நைச்யத்தைப் புலப்படுத்துவதற்குப் புழுவை உவமையாகக் கொண்டார். ஆழ்வீர்! நீரோ இப்படி சொல்லுகிறீர்; எம்பெருமான் உம்மைக்கொண்டு கவிபாடுவித்துக் கொண்டருளா நின்றானே என்ன; "என்னாலுந் தன்னைச் சொல்லிய சூழல் திரு மாலவன் கவி யாது கற்றேன்" என்கிறார். மிக நிஹீந ஜாதியிற் பிறந்தவனாய் அறிவு ஒழுக்கங்களில் குறைய நிற்பவனான என்னைக் கொண்டு தன்னைக் கவிபாடுவித்துக்கொண்ட சூழ்ச்சியையுடைய திருமாலின் கவிகளை மொழிய யான் யாது அறிவேன்? இதில் எனக்கொன்றும் அந்வயமில்லை என்றவாறு. யான் யாது கற் றேனோ அது திருமாலவன் கவி என்னவுமாம். இதனால் இவர் திரு வாயைக் கொண்டு எம்பெருமான் தானே கவிபாடுவித்துக்கொண்டா னென்பது விளங்கும். உயர்ந்தாரெல்லாரினும் மிகவுயர்ந்தவனான தன்னை நீசர்களில் மிக நீசனான என்னைக்கொண்டு கவிபாடுவித்துக் கொண்ட தந்திரம் என்னே! என்று எம்பெருமானது அற்புத சக் தியை வியக்கின்றமை **'என்னாலுந் தன்னைச் சோல்லிய சூழல்'** என் பதில் உறையும். தனது உயர்ந்த நிலையைத் தானே கவிபாடிக் கொண்டால் அதிற் பெருமையில்லை யென்று கருதி அந்நிலையை உண்மையாக அறிந்து கவிபாடவல்லா ரெவரும் உலகிலில்லாமை யால் அடியேனை ஒரு வியாஜமாக வைத்து என்னைக் கொண்டு தன் னைத்தானே கவிபாடிக்கொண்ட உபாயம் என்பது **'சூழல்'** என்றதின் உட்கருத்து.

வாதிகேஸரி அழகிய மணவாளஜீயர் இத்திவ்ய ப்ரபந்தத் துக்கு இட்ட வுரையின் அவதாரிகையில்—"ஈச்வரன் தானே லோ கத்தைத் திருத்துகைக்கு இவர் ஆவரென்று அங்கீகரித்து **'என்னா லுந் தன்னைச் சோல்லிய சூழல் திருமாலவன் கவியாது கற்றேன்'** என்னும்படி இவர் திருவுள்ளத்திலும் நாக்கிலும் நின்று இவர் தம் மைக் கொண்டு தானே ப்ரவர்த்திப்பிக்கையாலும் அத்யந்த வ்யா வ்ருத்தராயிருப்பாரொருவர்" என்றது இங்கே ஸ்மரிக்கத்தகும்.

**திருமாலவன் கவி**—பிராட்டியும் பெருமானுமான சேர்த்தி எப்

படி வாய்ப்பாக அமைந்ததோ அப்படியே கவியும் வாய்ப்பாக அமைந்தது என்க. அவன் முன்னூருச் சொல்லிக்கொண்டு போக நான் பின்னூருச் சொல்லிக்கொண்டு வந்த அவ்வளவே; நான் என்னுணர்வால் அறிந்து கவிபாடினேனல்லேன் என்பது தோன்ற 'யாதுகற்றேன்' என்றார்: நான் என் வசமிழந்து பக்தி பரவசப்பட்டு வாய்க்கு வந்தபடி பாடினவவ்வளவேயன்றி வேறில்லையென்பதுந் தோன்றும்.

ஆனால், நீர் பாடின கவியென்று எம்பெருமானும் உலகத்தாருங் கொள்ளுகின்றனரே யென்ன; [பல்லியின் சொல்லும் சொல்லாக் கொள்வதோவுண்டு பண்டு பண்டே.] அற்ப ஜந்துவாகிய பல்லி தன்னடைவிலே செய்யும் சப்தத்தையும் தம் தமது பெரிய காரியங்களைக் குறிக்கின்றனவாக நிமித்தவேதிகள் கொள்ளும் இயல்பு அநாதிகாலமாக உண்டன்றோ? அப்படியே யான் பாதந்திரமாய்க் கூறுஞ் சொல்லையும் எனது இழிவுபாராது யாவரும் அங்கிகரித்துப் பொருள் பாராட்டுகின்றனரென்று தமது விநயந்தோற்ற அருளிச்செய்கிறபடி.

'யாக்கை' என்பது ஆக்கை என மருவிற்று; தனிச் சொல் லென்பாருமுளர். உண்டாக்கப்பட்டதென்று பொருள். கிருமி— 'க்ரிமி:' அல்லது 'க்ருமி:' என்னும் வடசொல்லின் விகாரம். 'கிரிமி' என்று முண்டு. 'பண்டு பண்டே' என்ற அடுக்கு மிகுதியைக் காட்டும்: மிக வெகுநாளாகவே யென்றபடி. (சஅ)

**பண்**டும் பலபல வீங்கிருள் காண்டும் * இப் பாயிருள்போற்
**கண்**டு மறிவதுங் கேட்பதும் யாமிலம் * காளவண்ண
**வண்**டுண் துழாய்ப்பெருமான் மதுசூதனன் தாமோதரன்
**உண்**டு முமிழ்ந்துங் கடாய * மண்ணேரன்னவொண்ணுதலே. (சகூ)

| | |
|---|---|
| காள வண்ணம் } கறுத்ததிருநிறத்தையும் | வண்டு உண் துழாய் { வண்டுகள் தேனுண்ணப் பெற்ற திருத்துழாய் மாலையையுமுடைய |

| | |
|---|---|
| பெருமான் | ஸர்வேச்வரனும் |
| மது சூதனன் தாமோதரன் | மதுஸூதந னென்றும் தாமோதர னென்றும் திருநாமங்களை யுடையவனுமான திருமால் |
| உண்டும் | ப்ரளயகாலத்திலே வயிற்றினுட் கொண்டும் |
| உமிழ்ந்தும் | (ப்ரளயம் நீங்கின வளவிலே) வெளிப்படுத்தியும் |
| கடாய | பாதுகாக்கப்பெற்ற |
| மண் | பூமியினுடைய |
| ஏர் | அழகை |

| | |
|---|---|
| அன்ன | ஒத்த |
| ஒள் நுதலே | ஒளிபொருந்திய நெற்றியை யுடையவளே! |
| பண்டும் | முன்பும் |
| பல பல | மிகப்பலவான |
| வீங்கு இருள் | பெரிய இருட் பொழுதுகளை |
| காண்டும் | பார்த்திருக்கிறோம்; |
| இ பாய் இருள் போல் | இந்தப் பரந்த இருட்பொழுது போல |
| கண்டும் அறிவதும் கேட்பதும் யாம் இலம் | யாம் (வேறொரு பொருளைக்) கண்டறிவதும் கேட்டறிவதும் இல்லோம். |

* * *—இருளுக்கு ஆற்றாத நாயகி, அவ்விருளின் கொடுமையைத் தோழிக்குக் கூறுதல் இது. எம்முடைய ஆயுஸ்ஸில் இது காறும் யாம் தினந்தோறும் இருட்பொழுதைப் பார்த்திருக்கிறோம்; அவற்றுக்கெல்லாம் ஓர் எல்லை உண்டு; வருத்தத்தை வளரச் செய்யுந் தன்மை இல்லை. இங்ஙனம் ஓய்தலொழிவில்லாமல் நீண்டு செல்வதும் வருத்தத்தை வளரச் செய்வதுமான ஓர் காளராத்ரியை எங்கும் எப்பொழுதும் கண்டதும் கேட்டதுமில்லை யென்று வருந்திக் கூறுகின்றாள்.

இருளின் கொடுமையைக் கூறுமிப்பாசுரத்தில் எம்பெருமானுக்குக் '**காளவண்ணம்**' என்று விசேஷணமிட்டது—இவ்விருட்பொழுதானது எம்பெருமானுடைய இருளன்ன மாமேனியைக் காட்டி வருத்துகின்றது என்ற கருத்தைத் தோற்றுவிக்குமென்னலாம். அன்றி, 'காளவண்ணம்' என்பதை எம்பெருமானுக்கு விசேஷணமாக்காமல் வண்டுக்கு விசேஷணமாக்கவுமாம்

பின்னடிகள் தோழியின் ஸம்போதநம் (விளி;) திருத்துழாய் மாலையை யணிந்து யாவர்க்கும் தலைவனாக விளங்குபவனும் தன்

அடியார்களுக்குப் பகையானவர்களை யழிப்பவனும் உகப்பார்க்குக் கட்டிவைக்கலாம்படி எளியவனுமான எம்பெருமான் பிரளயத்தில் உண்டு பிறகு வெளிப்படுத்தியும் பாதுகாத்தருளின மிகப் பெரிய நிலவுலக முழுவதும் விலைமதிக்கும்படியான நெற்றியழகுடையவளே! என விளித்தபடி. இப்பொருளில் 'மண்ணோரன்ன' என்பது நுதலுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. 'ஒண்ணுதல்' என்பது பண்புத்தொகை யன்மொழியாய் ஒண்ணுதலாளைக் குறிப்பதாதலால் 'மண்ணோரன்ன' என்பதை ஒண்ணுதலாளுக்கு விசேஷணமாக்குதலுமாம்; அப்போது, பூமிப்பிராட்டி போன்ற சிறப்புடையவளே! என உயர்த்தி விளித்தபடி.

பராங்குச நாயகியானவள் தன்தோழியை விளித்து இப்பாசுரங் கூறுவதாகக் கொள்வதில் ஒரு குறையுண்டு; ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் "இத்திரு மண்ணோரன்னவொண்ணுதல் பின்னைகொலென்கிற வொப்பு" இத்யாதி சூர்ணிகையில் 'மண்ணோரன்ன வொண்ணுதலே!' என்ற இவ்விளியை ஆழ்வார் விஷயமாகத் திருவுள்ளம்பற்றினமை விளங்குதலால் அதற்குப் பொருந்தாதொழியும். பொருந்த வுரையிட வேண்டுகையாலே, இப்பாசுரம்—தோழி தலைவியை நோக்கிக் கூறுவது என்று கொள்ளத்தகும். "கலந்து பிரிந்து பிரிவாற்றாத தலைமகள் ராத்ரிவ்யஸநத்தாலே தான் நோவுபடுகிறபடியைத் தானே சொல்லுகிறாளாதல்; தோழி வார்த்தையாதல்" என்ற நம்பிள்ளையீடு (அவதாரிகை) இங்கு அறியத்தக்கது. மண்ணோரன்ன வொண்ணுதலே=பூமிப்பிராட்டிபோலே எம்பெருமானுக்கு ப்ரிய மஹிஷியாயிருக்கின்ற பராங்குச நாயகியே! என்றவாறு.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—எம்பெருமான் பலவகையாலும் பாதுகாத்த லீலாவிபூதியை ஒருபுடையொப்புமை சொல்லத்தக்க ஞானவொளி திருமுகத்தில் விளங்கப்பெற்ற ஆழ்வாரே!, (அல்லது) ஊர்த்வ புண்ட்ரரூபமான திருமண்காப்பைத் தகுதியாகத் தரித்த திருநெற்றியையுடைய ஆழ்வாரே! இதற்கு முன்பும் பலபல வ்யாமோஹ பரம்பரைகளை உம்மிடத்துப் பார்த்திருக்கிறோம்; இப்பொழுது மிக்கிருக்கின்ற வ்யாமோஹம்போல்வதொன்றை ஒருநாளும் கண்டறியோம் என்று பாகவதர்கள் ஆழ்வாருடைய வ்யாமோஹாதிசயத்தை வியந்து கூறுவதாம்.

இரண்டாமடியின் முதலில் 'கண்டும்' என்றதில் உம்மை—அசைநிலை; கண்டறிவதும் கேட்டறிவதும் எனப்பிரித்துக்கூட்டுக. கண்டுமில்லோம், அறிவதுமில்லோம், கேட்பதுமில்லோம் என்றும் உரைப்பர். .... .... .... .... (௪௯)

ஒண்ணுதல் மாமையொளி பயவாமை * விரைந்து நந்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவ! கடாகின்று * தேன்நவின்ற
விண்முதல் நாயகன் நீண்முடி வெண்முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்று * அருவிசெய்யாநிற்கும் மாமலைக்கே. (௫௦)

| | |
|---|---|
| வலவ | பாகனே! |
| ஒண் நுதல் | அழகிய நெற்றியையுடையவளான நாயகியின் |
| மாமை ஒளி | மேனி நிறத்தின் விளக்கம் |
| பயவாமை | பசப்பு அடையாதபடி |
| [அதற்கு முன்னமே] | |
| நம் தேர் | நமது தேர் |
| விரைந்து நண்ணுதல் வேண்டும் | துரிதமாகச் சென்று சேரவேண்டும்; |
| (எவ்விடத்திற்கு? என்றால்) | |
| தேன் நவின்ற | வண்டுகள் பாடப்பெற்ற |
| விண் முதல் நாயகன் நீள் முடி | பரமபதநாதனான பெருமானது நீண்ட திருமுடியில் தரித்த |
| வெள் முத்தம் வாசிகைத்து ஆய் | வெண்ணிறமான முத்துமாலையின் தன்மையதாய் |
| மண் முதல் சேர்வுற்ற | (முடிதொடங்கி) அடிவாரத்து நிலத்திலே சேரும்படியான |
| அருவி | நீர்ப்பெருக்கை |
| செய்யாநிற்கும் | செய்துநிற்கிற |
| மா மலைக்கு | பெரிய திருமலைக்கு; |
| இன்று கடாக | இப்பொழுது (தேரை) நடத்துவாயாக. |

* * *—நாயகன் நாயகியினிருப்பிடம் நோக்கி மீண்டு வருகையில் தேர்ப்பாகனோடு கூறுதல் இது. பொருளீட்டிவரப் பிரிந்து சென்ற நாயகன் காரியம் தலைக்கட்டித் தேரில் திரும்பிவருகின்றான்; வரும்போது தான் காலங்கடந்து வருகின்றமை கருதி நாயகி மிகவும் துயரப்படுவளென்றெண்ணித் தேர்ப்பாகனை நோக்கி விரைந்து தேரை நடத்துமாறு கட்டளையிடுதல் இது.

தன்னைப் பிரிந்து நந்திக்ராமத்தில் துடித்துக் கொண்டிருக்கின்ற பரதாழ்வானுடைய ஆற்றாமையைக் கருதி ஸ்ரீராமபிரான்

பதினான்குவருஷகாலம் சென்ற வழியைச் சிறிதுகாலத்தில் கடந்து மீண்டு வந்தாற்போல, நெடுங்காலம் பிரிந்த நாயகன் தான் மீண்டு வரக்கடவதாக முன்பு சொல்லிப்போன காலம் வந்திட்டவளவிலே இவளாற்றாமையைக் கருதி நெடுநாட் போன வழியைச் சிறிது பொழுதில் கடந்து மீண்டுவர நினைத்துப் பாகனை நோக்கி 'விரையத் தேரை நடத்து' என்கிறான்.

'வலவ!, ஒண்ணுதல் மாமையொளி பயவாமை மாமலைக்கு நம் தேர் விரைந்து நண்ணுதல் வேண்டும்; (ஆகையாலே) விரைந்து கடாக' என்று அந்வயிப்பது. நாயகியின் மேனிநல்நிறத்தின் விளக்கம் விகாரப்படுவதற்கு முன்னம் திருமலைக்குச் சென்று சேர வேண்டுமாதலால் தேரை விரைந்து நடத்து என்றதனால், நாயகியின் மேனியழகு மாறிப்போனால் தான் ஆறியிருக்க வொண்ணாதென்பதும் பசலை நிறம் படர்ந்துவிட்டால் அது தன்னாலும் நீக்க வொண்ணாதென்பதும் தோன்றும். விரைந்து நந்தேர் நண்ணுதல் வேண்டும்=விரையச் சென்று சேராவிடின் ஆற்றாமை அதிகப்பட்டு அவள் இறந்து படுவளாதலால் நமக்குப் பழி நேர்ந்திடும்; அதற்கு முன்பே செல்லவேண்டு மென்றவாறு.

வலவ கடாக இன்று=வலவன்—வல்லவன், ஸாரதி. தேர் நடத்த வல்லவனே! முன்போலன்றி இப்பொழுது உன் வல்லமை முழுவதையுங்கொண்டு விரைந்து செலுத்தவேணு மென்கை.

'வலவ!' என்றது அண்மைவிளி. கடாக=கடாவுக. 'கடாக இன்று'—கடாகவின்று என்று ஆக வேண்டுவது அங்ஙனம் ஆகாமை தொகுத்தல். இனி, 'கடாகின்று' என்பதைக் 'கடாவுக' என்னும் பொருளதான ஓர் வினைத்திரிசொல்லாகக் கொள்வாருமுண்டு. 'கடாகின்று நண்ணுதல் வேண்டும்' என அந்வயித்து, தேரைக் கடாவிக்கொண்டு கிட்ட வேண்டும் என்று உரைப்பாருமுளர். அப்போது 'கடாகின்று' என்பது-நிகழ்கால வினையெச்சம்.

தேரை நடத்த வேண்டுவது வடதிருவேங்கட மாமலையை நோக்கி என்கிறது பின்னடிகளில். இதனால், பராங்குச நாயகி திருமலையில் அவகாஹித்து நோவுபடுகின்றமை தோன்றும். கீழ் "காண்கின்றனகளும்" என்ற எட்டாம்பாட்டில் "இதெல்லாமறிந்தோம் மாண்குன்ற மேந்தி தண்மாமலை வேங்கடத்தும்பர் நம்புஞ்

சேண்குன்றஞ் சென்று பொருள் படைப்பான் கற்றதிண்ணனவே' என்று நாயகன் பொருளீட்டுதற்காகப் பிரிந்து திருவேங்கடமலைக்குச் செல்ல நினைத்திருப்பதாகச் சொல்லியிருக்கிறது; இதில் பொருள்வயிற்பிரிந்த தலைமகன் வினைமுற்றித் திருவேங்கடமலைக்குத் திரும்பி வருவதாகச் சொல்லப்படுகிறது; இவை ஒன்றோடொன்று மூரண்படுமவையல்ல. இனி, அழகிய மணவாள ஜீயருரையில்—"இவ்விடத்தில் **மாமலைக்கே** யென்கிறவிடம் ஆழ்வார்க்கு அணித்தான தெற்குத் திருமலையையாகவுமாம்" என்றதுங் காண்க; திருமாலிருஞ்சோலைமலையைச் சொன்னவாறும்.

**தேன் நவின்ற விண்முதல் நாயகன் நீண்முடி**—'தேன்நவின்ற முடி' என்று அந்வயிப்பது. எம்பெருமானது திருக்குழல் இயற்கையில் திவ்ய பரிமள முடையதாகையாலும், * செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி முதலிய நன்மலர்களை எப்பொழுதும் தரித்துள்ளதனாலும் தேன் நவின்ற நீண்முடி யெனப்பட்டது. இனி, 'தேன்நவின்ற' என்பதை முடிக்கு விசேஷணமாக்காமல் நாயகனுக்கே விசேஷணமாக்கி, மிக்க போக்யதையினால் தேனாகச் சொல்லப்படுகிற எம்பெருமான் என்னவுமாம். "திருவரங்கத்தே வளருந்தேன்" என்றார் கலம்பகத்தில் ஐயங்கார். அன்றியே 'தேன் நவின்ற மாமலைக்கே' என்று அந்வயித்து மலைக்கு விசேஷணமாக்கவுமாம். "தென்னாதென வென்று வண்டுமுரல் திருவேங்கடம்" "கோல்தேன் பாய்ந்தொழுகுங் குளிர் சோலை சூழ் வேங்கடம்" என்றவை காண்க. **தேன்**—மதுவும், வண்டும். **விண்முதல் நாயகன்**—விண்ணுலகத்துக்கு முதன்மையான நாயகன் என்றும், விண் முதலிய உலகங்கட்கெல்லாந் தலைவன் என்றும் உரைக்கலாம். **வாசிகை**—மாலை. 'வாசிகைத்து' என்றது—ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். கரிய திருநிறமுடைய எம்பெருமானது திருமுடியினின்று திருவடியளவுந் தொங்குகின்ற முத்துமாலை—கரியமலையின் உச்சிமுதல் அடியளவும் இடையறாது பெருகுகின்ற வெள்ளருவிக்கு வாய்த்த உவமை. சேர்வுற்ற அருவி—சேர்வுற்றருவி; பெயரெச்சவீறு தொகுத்தல். 'மாமலைக்கு நண்ணுதல்வேண்டும்' என்றதனால் குறிஞ்சி நிலத்துத் தலைமகளென்பது போதரும். 'கூடுமிடம் குறிஞ்சி' என்றதும் நினைக்கத்தக்கது.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—பேறு பெறுமையால் வருந்துகிற ஆழ்வாருடைய ஆற்றாமையை உணர்ந்து அன்புடைய பாகவதர் தேசாந்தரத்தினின்று விரைந்து வருதலாம். எம்பெருமானையும் எம்பெருமானடியாரையும் பிரிதலாலாகிய துயரை ஆற்றி ஆழ்வாரைத் தேற்றுவதாக மநோரதம் மேற்கொண்ட பாகவதர் அம்மனோரதத்தைச் செலுத்துதலில் வல்ல நெஞ்சை விரையத் தூண்டிய தன்மையாகும் இது. [ஒண்ணுதல் மாமையொளி பயவாமை] திவ்யமான ஊர்த்வபுண்ட்ரத்தால் விளங்குகின்ற திருநெற்றியையுடைய ஆழ்வாரது இயற்கை வண்ணம் கெடாதபடி யென்க. மலை என்றது—ஆழ்வார் எழுந்தருளியுள்ள மேலான இடத்தை. அதன் உயர்வு தோன்ற 'மாமலை' என விசேஷித்தது. .... .... .... .... .... (ருo)

**மலைகொண்டு மத்தா வரவாற் சுழற்றிய மாயப்பிரான் ***
**அலைகண்டு கொண்ட வமுதங்கொள்ளாது கடல் * பரதர்**
**விலைகொண்டுதந்த சங்கமிவை வேரித்துழாய் துணையாத்**
**துலைகொண்டு தாயங்கிளர்ந்து * கொள்வானைத் தழைக்கின்றதே.**

| | | | |
|---|---|---|---|
| கடல் | கடலானது, | கொள்ளாது | (மீண்டும்) வாங்கிக் கொள்ள மாட்டாமல், |
| மலை | மந்தரபர்வதத்தை | வேரி துழாய் துணை ஆ | பரிமளத்தையுடைய (எம்பெருமானது) திருத்துழாயைத் தனக்குத் துணையாகக் கொண்டு |
| மத்து ஆ கொண்டு | மத்தாகக் கொண்டு | துலை கொண்டு | ஒத்து எதிர்வந்து |
| அரவால் | வாஸுகிநாகமாகிய கடை கயிற்றால் | தாயம் கிளர்ந்து | பங்காளி யுரிமை கொண்டாடுசல் போலே மேலெழுந்து, |
| சுழற்றிய | (தன்னைக்கடைவதற்குச்) சுழலச் செய்த | | |
| மாயம் | அற்புதசக்திவாய்ந்த | | |
| பிரான் | எம்பெருமான் | | |
| அலை கண்டு | (தன்னை) அலைத்து | | |
| கொண்ட | (தன்னிடத்தினின்று) எடுத்துக்கொண்ட | | |
| அமுதம் | அமிர்தத்தை | | |

| | | | |
|---|---|---|---|
| பாதர் விலை கொண்டு தந்த சங்கம் இவை கொள்வான் ஒத்து | நெய்தல் நிலமாக்களான வலையர் (என்னிடத்தினின்று) விலை வாங்கிக்கொண்டு எனக்குக் கொடுத்த இச்சங்கு வளைகளை மீட்டும் வாங்கிக் கொள்வது போன்று | அழைக்கின்றது | (சண்டைக்குக்) கூப்பிடுகின்றது. |

* * *—கடலோசைக்கு ஆற்றாத நாயகி இரங்கியுரைத்த பாசுரம் இது. பிரிந்தார்க்குக் கடலோசையானது மிகவும் காமோத்தீபகமாயிருக்கும். அக்கடலோசையால் தன் உடம்பு இளைக்கையில் கைவளைகள் கழன்று விழுவதைக்கண்ட பராங்குச நாயகி 'பரிபூர்ணசக்தி வாய்ந்த எம்பெருமான் மந்தரகிரியை மத்தாக நாட்டி வாசுகியைக் கடைகயிறாகப் பூட்டித் தேவாசுரர்களாலும் தனது திருக்கைகளாலும் இடமும் வலமுமாக இழுத்துக் கடைந்து இக்கடலில் நின்றும் அமிர்தத்தை வலிய எடுத்துக்கொண்டு போய்விட்டான்; அவ்வமுதத்தை மீண்டும் தன் வலியால் வாங்கிக் கொள்ள மாட்டாத இக்கடல் ('வலியாரிடத்து வலிமைகாட்ட மாட்டாதவன் எளியாரை வலிந்து நலிவன்' என்னுமாபோலே) மெல்லியலான என்னிடத்தே தன் வலிமைகாட்ட வேண்டி, யான் வியாபாரிகளிடத்து விலைகொடுத்து வாங்கிக்கொண்ட சங்கு வளைகளைத் தான் வலியக் கவர்ந்துகொண்டு போகக் கருதி, அதற்குத் தன் வலிமை போதாதென்று திருத்துழாயையுந் துணைக்கொண்டு, ஜ்ஞாதிகள் தாயப்பொருளை வலியப் பெறும்பொருட்டு மேலெழுந்து வந்து போர்க்கு அழைப்பதுபோல, தானும் தனது மிக்க வொலியால் என்னை அறைகூவுகின்றது' என்று தன் ஆற்றாமையை வெளியிடுகிறாள்.

'வேரித்துழாய் துணையா' என்றதன் கருத்து யாதென்னில்: எம்பெருமானது திருத்துழாய் மாலையினிடத்து யான் ஆசைப்பட்டு அது கிடைக்கப் பெறாமல் தளருஞ் சமயம் நோக்கித் தானும் என்னை வருத்தத் தொடங்கிற்று என்றவாறு. அவனது திருத்துழாய்ப் பிரசாதம் என் கைக்கு எட்டாமல் என்னை எப்படி வருத்துகின்

**றதோ** அப்படியே இக்கடல் தானும் வருத்தா நின்றதென்கிறு **னென்க.** [**துலைகொண்டு**] திருத்துழாயைத் துணை கொள்ளாத **பொழுது** எனக்கு எதிராகமாட்டாதது, அதனைத் துணைகொண்ட **பின் எதிராய்** வந்ததென்றபடி. இயற்கையில் வாலியினும் வலிமை **குறைந்த** ஸுக்ரீவன் இராமபிரானைத் துணைகொண்டபின் அத் **துணை** வலிமையால் வாலிக்கு எதிராய் மேற்சென்று குரல் காட்டித் **தாயாதித்** தன்மைதோன்ற வலியப் போருக்கு அழைத்தாற்போல. **அன்றி,** 'துலைகொண்டு' என்பதற்கு—(என்னைத்) தலைத்தலைக் கொண்டு—[என்னை] அழித்திடவேணுமென்று உட்கொண்டு என்று உரைக்கவுமாம். துலைத்தல் எனினும் தொலைத்தல் எனினுமொக்கும். **தொலைத்தல்,** தொடர்தல், தொடங்கல், தொளை, தொடை இச் சொற்கள் ஏட்டுப் பிரதிகளில் பெரும்பாலும் துகர முதலனவாக எழுதப்பட்டுள்ளன வென்பது உணரத்தக்கது.

[**துழாய் துணையாத் துலைகொண்டு**] (கடலானது) தன்னை வருத்திய அவனைத் தான் ஒன்றும் எதிர்க்கமாட்டாது அவனது ஸம்பந்தமுள்ள திருத்துழாயினிடத்து நான் அன்புடையேன் என்று இவ்வளவே கொண்டு பகைமை பாராட்டி என்னை வருத்தத் தொடங்கிற்று என்றுங் கொள்வர். [**தாயங்கிளர்ந்து கொள்வா னொத்து**] கிரயத்தால் நாலைந்துகை சென்றிட்ட பொருளையும் தாயாதிகள் எங்களதென்று சொல்லி விடாமல் வழக்குத்தொடர்ந்து மீட்கப் பார்ப்பது போன்றுள்ளது இதன் செய்கை. [**அழைக்கின் றதே!**] இங்ஙனம் என்னை வருத்துகின்றது பிரிந்து சென்ற அவனையும் வருத்த வேண்டாவோ? கடல் அவனது திருமேனி நிறத்துக் கும், அதனொலி அவனது கம்பீரமான குரலொலிக்கும் போலியாய் வருத்தும்.

**அலைகண்டு**—அலையக்கண்டு; அலைத்து. 'கொள்ளாது' என்றதை வினைமுற்றாகவுங் கொள்ளலாம், வினையெச்சமாகவுங் கொள்ளலாம். வினைமுற்றாகக் கொள்ளில், 'கடல்' என்னும் எழுவாய் மத்திமதீபமாய் 'கொள்ளாது' என்றதனோடும் 'அழைக்கின்றது' என்றதனோடும் அந்வயிக்கும்.

எம்பெருமானைச் சேரப் பெறாது வருந்துகிற ஆழ்வார் இவ்வுலகத்து ஸம்ஸார கோலாஹலத்தைக் கண்டு தளர்தல் இப்பாட்

டுக்கு ஸ்வாபதேசம். கடல் என்றது ஸம்ஸாரமாகிற கடலைச் சொன்னபடி. ஸம்ஸார ஸாகரத்திலே சலநமில்லாத மனவுறுதியாகிய மந்தரமலையை நாட்டி அன்பாகிய கயிற்றைக்கொண்டு கடைந்து எம்பெருமான் தானே ஒரு கலக்கத்தை உண்டுபண்ணி இனியதான ஓராத்மாவை ஈடேற்றி யெடுத்துக்கொண்டு போய் அநுபவிக்கத் தொடங்கினால் அதனை மீட்டுக் கொள்ளவல்ல சக்தி இந்த ஸம்ஸாரத்துக்கு இல்லை; இத்தன்மையதான இந்த ஸம்ஸாரத்தின் ஆடம்பரமானது, எம்பெருமானது இனிமையில் எனக்கு உண்டான மிக்க விருப்பத்தால் யான் 1. "கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா அடியேனைப், பண்டேபோற் கருதாது உன்னடிக்கே கூய்ப் பணிகொள்ளே" என்று ஆற்றாது விரையும்படி பகைமை காட்டி என்னை மிக வருத்துகின்றது என்றதாயிற்று. [பரதர்வலை கொண்டு தந்த சங்கமிவை கொள்வானுக்கு] ஸம்ஸாரத்தைக் கடக்க நீந்துகிற ஆசார்யரால் எனது சுச்ரூஷைகளுக்குத் தகுதியாகத் தரப்பட்டதும் என் கைவசமாகவுள்ளதுமான சுத்தஸ்வபாவத்தை மீட்டுக்கொள்ள முயல்கின்றது இந்த ஸம்ஸார ஸாகரம் என்றவாறு.

பரதர்=நெய்தல் நிலத்துப் புருஷர்களுக்குப் பரதர், வலையர், நுளையர் என்றும், அந்நிலத்து ஸ்த்ரீகளுக்குப் பரத்தியர், வலைச்சியர், நுளைச்சியர் என்றும் பெயர். (௫௧)

அழைக்குங் கருங்கடல் வெண்டிரைக் கைக்கொண்டுபோய் * அலாவாய்
மழைக்கண்மடந்தை யரவணையேற * மண் மாதர்விண்வாய்
அழைத்துப் புலம்பி முலைமலை மேனின்று மாறுகளாய்
மழைக்கண்ண நீர் * திருமால் கொடியானென்று வார்கின்றதே.

1. திருவாய்மொழி 4-9-3,

அழைக்கும் — (அன்போடு) அழைக்கிற

கரு கடல் — (தன்னிடத்திற் பள்ளி கொண்டிருக்கிற எம்பெருமானது திருமேனியின் நிழலீட்டாலே) கறுத்துள்ள திருப்பாற் கடலானது

வெண் திரை கை — (தன்னுடைய) வெளுத்த அலைகளாகிய கைகளாலே

கொண்டு போய் — எடுத்துக்கொண்டு போக,

அலர் வாய் மழை கண் மடந்தை — தாமரைமலரில் வாழ்பவளும் மழை போலக் குளிர்ந்த கண்களையுடையவளுமான திருமகள்

அரவு அணை ஏற — (அப்பாற் கடலினிடையிற் பள்ளிகொண்டுள்ள எம்பெருமானது) ஆதிசேஷனாகிய சயனத்தின் மீது ஏற,

(அதுகண்டு)

மண் மாதர் — பூமிப்பிராட்டி

விண் வாய் — ஆகாயத்திலே

புலம்பி அழைத்து — (மேககர்ஜனை மூகமாக) அழுது கூப்பிட்டு

முலை மலை மேல் நின்றும் — (தனது) ஸ்தனங்களாகிய மலைகளின் மேல் நின்றும்

ஆறுகள் ஆய் — ஆறுகளாக(ப் பெருக விட்ட)

மழை கண்ண நீர் — மழையாகிய கண்ணீரானது

திருமால் கொடியான் என்று — திருமால் கொடியவனென்று வெளியிட்டு

வார்கின்றது — பெருகுகிறது.

* * *—இப்பாட்டுக்குத் துறை கால மயக்கு. கீழே "ஞாலம் பனிப்ப" என்ற ஏழாம்பாட்டுக்கும் "கடல்கொண்டெழுந்தது வானம்" என்ற பதினெட்டாம் பாட்டுக்கும்போலே. மேல் "மலர்ந்தே யொழிந்தில" என்ற அறுபத்தெட்டாம் பாட்டுக்கும் துறை இதுவே. இப்பிரபந்தத்தில் காலமயக்கு அடுத்தடுத்து வருதற்குக் காரணம்—நாயகியின் விரஹகாலம் நீட்டித்தலென்றும், "இந்நின்ற நீர்மையினியாமுறாமை" என்று தம்வேண்டுகோளை விண்ணப்பஞ் செய்த பொழுதே எம்பெருமானைச் சேரவேண்டியிருக்க அப்பேறு கிடையாமையாலுண்டாகிய ஆழ்வாரது ஆற்றாமையின் மிகுதியென்றுங் கூறுவர். கார்காலத்திலே மீண்டுவருவேனென்று சொல்லிப்போன நாயகன் வாராமல் விளம்பிக்க, அக்

காலம் வந்தவாறே நாயகி கலக்கமடைய 'இது அவன் சொன்ன காலமன்று' என்று தோழி காலத்தை மயக்கியுரைத்து அவளது கலக்கத்தைத் தீர்க்கிறாள். "காரெனக் கலங்கு மேவெழிற்கண்ணிக்கு, இன்துணைத்தோழி அன்றென்று மறுத்தது" என்ற திருக்கோவையாருரையுங் காண்க. இது 'பருவமன்றென்று கூறல்' என்றும் வழங்கும்.

ஸ்ரீதேவி பூதேவி என்னும் தேவிமாரிருவருள் ஸ்ரீதேவியின் ஜன்மபூமியான திருப்பாற்கடலினிடையில் திருமால்பள்ளிகொண்டருளுதலால் அக்கடல் தன் மகளான ஸ்ரீதேவியைத் தன் ஓசையாகிய இனிய குரலால் அன்போடு அழைத்து அலைகளாகிய கைகளை முன் நீட்டி அவற்றால் அவளை யெடுத்துக்கொண்டுபோய் எம்பெருமானிடம் சேர்க்க, அத்திருமகள் அந்த அலைகளாகிய படிகளின் மூலமாக எம்பெருமானது உயர்ந்த திருவனந்தாழ்வானாகிய படுக்கையின் மீது ஏறி அப்பெருமானோடு கூடிக் குலாவி ஆநந்தப்பட்டுக் கொண்டிருக்க, இப்படிப்பட்ட பாக்கியம் பெறாத பூதேவியானவள் வானமாகிய பரந்த தனியிடத்திலே மேக கர்ஜனையென்னும் வியாஜத்தால் வாய்விட்டுக் கூவியழுது மிக்க கண்ணீரை இடைவிடாது பெருக்க, அந்நீர் அவளது கொங்கைகளாகிய மலைகளின் மேல் ஆறு வெள்ளமாகப் பெருகுகின்றமை பாராய் என்று வருணித்து, தோழி 'இது நீ நினைக்கிற கார்காலமன்று' என்று தலைவியைத் தேற்றினாள். முறைப்படி (பக்ஷபாதமின்றி) ஒரு ஸமமாகக் கொண்டாடத் தக்க பத்னிகள் இருவருள் ஒருத்தியைப் பெருமான் காதலித்துக் கைக்கொண்டு மற்றொருத்தியை உபேக்ஷித்த கொடுந்தன்மை, அவளது இக்கண்ணீரால் உலகில் வெளியாகுமென்பது தோன்ற '**திருமால் கோடியானேன்று வார்கின்றது**' எனப்பட்டது. **மால்**—என்ற சொல் வேட்கைமயக்கமென்று பொருள்படுதலால் இங்கே 'திருமால்' என்றது—திருமகளிடங் காதற்பித்துக் கொண்டவனென்றவாறு; 1. "பித்தர் பனிமலர்மேற் பாவைக்கு" என்றதுங் காண்க. நாயகன் தன்னை உபேக்ஷித்தானென்று வருந்துகிற நாயகிக்குத் தோழி இது கூறியதனால் 'பல பெண்டுகளுக்குக் கணவராயிருப்பார்க்கு இது இயல்புகாண்; ஸ்ரீதேவியைப் பாராட்டிய

1. திருநெடுந்தாண்டகம் 18.

திலில் பூதேவி படும்பாட்டைப் பாராய்' என்று ஓரியற்கையைத் தெரிவித்து ஆற்றுவித்தவாறுமாம். இங்ஙனம் தோழி கூறுவதனை நாயகி நம்பக்கடவளோ வென்னில்; நம்பாவிடினும் 'இங்ஙனமும் ஒன்று உலகத்திலுண்டோ?' என்று ஆராய்ச்சி பிறந்து அதிற் கருத்தைச் செலுத்தி ஆலோசித்து முடிவு செய்யுமளவில் நாயகன் வந்திடுவானென்று கருதித் தோழி இது கூறினள் போலும்.

திருப்பாற்கடலைக் கருங்கடல் என்றது என்னே? எனின்; உயர்ந்தசாதி நீல ரத்னத்தைப் பாலினுள்ளே யிட்டால் அதனொளியால் அப்பால் முழுவதும் தன் இயற்கையான வெண்ணிறம் மாறி அம்மணியின் நிறமாகத் தோன்றுதல் போல, இயற்கையில் வெளுத்த நிறத்ததான திருப்பாற்கடல் தன்னிடையிற் சயனித்துள்ள திருமாலின் திருமேனி யொளியாற் கரியதாதல் பற்றிக் கருங்கடலெனப்பட்டது. "1. ஃபணிபதிஃபவா ஷஸ்யாஸநோ: ஸமுக்ஹமஸநாஸொ பாஹுஹஸ்தம் யஸ்யைவ ஸ்ருஃஸுத்ஆருநஸஹாருஸங்தமிஜ்ரஸ்ம வர்ணம் யதி திஸ: விஷாலம் வாஸ்ததம் ஹோதிஷ:" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியும், 2. "க்ஷீராம்போநிதியஜ்ஞஷுஷோஹிதொசெஹணஷாஸம் ரூஹோஹோ காரேணி நீஷ்ருகவுமாவஸ்ய்முந்சாரேஉஷவாஃய ஸு" என்ற போஜசம்பூ ச்லோகமும் இங்கு ஸ்மரிக்கத்தக்கன. இனி, கருங்கடலென்பதற்கு — பெரிய கடல் என்றும் பொருள் கொள்ளலாம்; கருமை—பெருமை.

---

1. பூர்வ சதகம்-(இதன் கருத்தாவது)—'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்' என்றபடியே ஸகலவித கைங்கரியங்களுக்கும் உரியவனான திருவனந்தாழ்வானே ஸ்ரீரங்க விமானமாக வடிவெடுத்திருப்பதனால் அத்திருவனந்தாழ்வானுடைய நிறம் வெளுத்ததாகையாலே இவ்விமானமும் வெண்ணிற முடையதேயாயினும் உள்ளே கண்வளர்ந்தருளா நின்ற காளமேகத் திருவுருவான பெரிய பெருமாளுடைய திருமேனியின் நிழலீட்டாலே கறுத்து, கடல் முழுவதையும் பருகித் திளர்ந்த காளமேகத்திலும் வீறுபெற்று விளங்குகின்றது; ஆகவே பரம போக்யமாயிருக்கின்ற இத்திவ்ய விமானம் நமது கண்களைக் குளிர்ப்பிக்கின்றது என்றதாம்.

2. பாலகாண்டம்—23.

முதலடியினிறுதியில், போய்—போக என்றபடி: எச்சத்திரிபு. 'கடலின் அலைகளாகிய கைகளைப்பற்றிக் கொண்டு சென்று' என்று பொருள் கூறும் பக்ஷத்தில் எச்சத்திரிபு அன்று. மழைக் கண் மடந்தை=தன் கண்ணழகாலே திருமகளானவள் திருமாலை யீடு படுத்தினமை தோன்றும். 'அலர்வாய்' 'விண்வாய்' என்ற விடத்தி, வாய்=ஏழனுருபு. அன்றியே, 'அலர்வாய்' என்பதற்கு—(செவ் வாம்பல் மலர் போன்ற வாயையுடைய [ஸ்ரீ மஹாலக்ஷ்மி] என் றும், 'விண்வாய்' என்பதற்கு—வானமாகிய வாயினால் என்றும் உரைக்கலாம்.

1. "காரார்வரைக் கொங்கை" இத்யாதி இடங்களில் மலை பூமிப்பிராட்டியின் ஸ்தன மெனப்படுதலால் 'முலைமலைமேல்' எனப் பட்டது.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—ஜீவகோடிகளில் ஸ்ரீதேவி பூதேவி தொடக்கமான அருகிலுள்ளார் எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணப்பெற்று வாழ, யான் இங்ஙனம் அவனைச் சேராது வருந்துவதே! என்று ஆற்றாமைவிஞ்சிய ஆழ்வார்க்கு அன் பர் ஒரு த்ருஷ்டாந்த மூலமாக எம்பெருமானுடைய ஸ்வாதந்திரி யத்தைத் தெரிவித்து ஆற்றுதலாம். எம்பெருமானை ஒரு நொடிப் பொழுதும் விட்டுப்பிரியாத தேவிமாரென்று ஸமமாகச் சொல்லப் படுகிற ஸ்ரீதேவி பூதேவிகளுள் ஒருத்தியைப் பிரித்து ஒருத்தி யைத் தழுவும்படியுமுள்ளது ஒருகாலத்தி லெம்பெருமானுடைய ஸ்வாதந்திரியம்; இப்படியிருக்க, நீர் அவனது கால விளம்பத்துக்கு ஆறியிருத்தலே தகுதியென்று தேற்றினரென்க. இப்பாட்டில் பூமிப்பிராட்டி விஷயமாகக் குறித்த வர்ணனை—எம்பெருமானது ஸ்வாதந்திரியத்தை எடுத்துக் காட்டுதற்காயது. .... (டுஉ)

வாராயின முலையாளிவள் வானோர் தலைமகனாம் *
சீராயினதெய்வ நன்னோயிது * தெய்வத் தண்ணந்துழாய்த்
தாராயினுந் தழையாயினுந் தண்கொம்பதாயினுங் கீழ்
வேராயினும் * நின்ற மண்ணாயினுங் கொண்டு வீசுமினே. (டுஙு)

1. சிறிய திருமடல் 1.

| | |
|---|---|
| ஏர் ஆயின முலையாள் | கச்சுப் பொருந்திய தனத்தை யுடையவளான |
| இவள் | இப்பராங்குச நாயகி யினுடைய |
| இது | இந்த நோயானது |
| வானோர் தலைமகன் ஆம் சீர் ஆயின தெய்வம் நல் நோய் | தேவாதி தேவனை திருமாலினது தகுதியான திருக்கல்யாண குணவிஷயமாக வுண்டான சிறந்த நல்ல நோய்; |

(இதற்குப் பரிஹாரமுறை யாதெனில்;)

| | |
|---|---|
| தெய்வம் | திவ்யமான |
| தண் | குளிர்ந்த |
| அம் | அழகிய |
| துழாய் தார் ஆயினும் | (அப்பெருமானது) திருத்துழாய் மாலையை யாயினும் |
| தழை ஆயினும் | (அத்திருத்துழா யின்) ஓரிலையை யாயினும் |
| தண் கொம்பு அது ஆயினும் | குளிர்ச்சியான (அதன்) கிளையை யாயினும் |
| கீழ் வேர் ஆயினும் | கீழிலுள்ள (அதன்) வேரையாயினும் |
| நின்ற மண் ஆயினும் | (அதற்கு இருப்பிட மாய்) நின்ற மண்ணையாயினும் |
| கொண்டு வீசுமின் | (நீங்கள்) கைக்கொண்டு (அதன்காற்று இவள் மேற்படும் படி) வீசுங்கள். |

* * *—இப்பாட்டுக்குத் துறை—வெறிவிலக்கு; கீழ் "சின் மொழி நோயோ" என்ற இருபதாம் பாட்டிற்போல, பராங்குச நாயகியின் மோஹத்துக்கு நிதான மறியாதே க்ஷுத்ரதேவதையின் ஆவேசத்தாலே வந்ததாகக் கருதி உற்றாருறவினர் கலங்கி வழியல்லாவழியே யிழிந்து பரிஹாரங்கள் செய்யப்பார்க்க, இவளது பிரக்ருதியை அறிந்திருப்பாளொரு மூதறிவாட்டி 'நீங்கள் செய்கிற வித் தகுதியன்று; இவளுடைய இந்நோய் தேவதாந்தரத்தின் ஆவேசத்தால் வந்ததன்று; தேவாதி தேவனை எம்பெருமானிடத்து ஈடுபட்டதனாலுண்டான சிறந்த நல்ல நோய் இது; இவள் பிழைக்கவேணுமாகில் நான் சொல்லுகிறபடியே பரிஹாரஞ் செய்யப்பாருங்கோள்;—திவ்யமான திருத்துழாய் மாலையையாயினும் அத்துழாயின் ஓரிலையையாயினும் அதன் கிளையையாயினும் அதன் வேரையாயினும் அதற்கு இருப்பிடமாய் நின்ற மண்ணையாயினும் கொண்டு வீசுங்கோள்; அதன் காற்று இவள்மேல் பட்ட மாத்திரத்திலே இவள் பிழைத்திடுவள்' என்கிறாள் என்க.

இனி, இதனைக் § கட்டுவிச்சிகூறல் என்பதுமுண்டு; "தலைவி யாற்றாமையால் வந்த நோவுக்குப் பரிஹாரம் ஏதோவென்று வினவின செவிலி முதலானோர்க்குக் கட்டுவிச்சி நோய்நாடிப் பரிஹாரஞ் சொன்ன பாசுரம்" என்பர் அழகிய மணவாள சீயர். களவொழுக்கத்தால் நாயகனோடே கலந்து பிரிந்து ஆற்றாது மெலிந்து வருந்திய நாயகியைக் கண்ட செவிலித்தாய் இவள் நோய்க்குக் காரணம் இன்னதென்று அறியாமல், நிமித்தங்கண்டு கூறவல்ல கட்டுவிச்சியை யழைத்து வினவுவதாக இருக்கையில்,

"கொங்குங் குடந்தையும் கோட்டியூரும் பேரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ !!!
கண்டியூ ரரங்கம் மெய்யம் கச்சி பேர்மல்லை யென்று
மண்டியே திரிவேனை யாரிங்கழைத்ததூஉ !!!
விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடமும்
மண்ணகரம் மாமாடவேளுக்கை தென் குடந்தை
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ !!!
நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத்தணை யரங்கம் பேரன்பில் நாவாயும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ !!!
வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவு மஃகாத
பூங்கிடங்கின் நீள் கோவல் பொன்னகரும் பூதூரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ !!!

என்று தெருவேறக் கூவிக்கொண்டு § கட்டுவிச்சி வந்து சேர்ந்து குறியிலக்கணைப்படி சிறு முறத்திலே சில நெற்குறிகண்டு அதனால் உண்மையை யுணர்ந்து கூறுகிறாளென்க. இப்பாட்டின் முன்னடிகளால் நோய்க் காரணமும் நோயும், பின்னடிகளால் அது தணிக்கும் உபாயமும் கூறியவாறு. எம்பெருமானோடு ஸாக்ஷாத்தாகவோ பாரம்பரையாகவோ ஸம்பந்தம் பெற்ற பொருள் யாதாயினும் இந்நோய்க்குப் பரிஹாரமாகு மென்றுணர்த்தப்பட்டது.

க்ஷுத்ரமான தேவதாந்தரங்களின் ஆவேசத்தாற் சீர்குலைந்து அல்லல்படும் நோய் அன்று என்பதைத் தெரிவிக்க 'வானோர்

§ கட்டுவிச்சி—குறி சொல்லுங் குறத்தி.

தம்மகனுஞ் சேராயின தெய்வ நன்னோயிது' என்றது. 'தெய்வ நன்னோய்' என்றதில் விசேஷண ஸ்வாரஸ்யத்தால்—இப்படிப்பட்ட நோய் இவ்வுலகிற் பெறுதற்கு அரியது என்றும், நோன்பு நோற்றுப் பெறவேண்டிய நோய் இது என்றும், இந்நோய் பேரின்ப மூலமுடையது என்றும் தெரிவித்தவாறு.

தாம் நினைத்தபடி எம்பெருமானோடு கலந்துபரிமாறப் பெறாது வருந்துகிற ஆழ்வாரது துயரைக்கண்ட ஞானிகள் இதற்குப் பரிஹாரம் ஏதோ வென்று கலங்கினவளவிலே, காரணகாரிய வுண்மை புணர்ந்த நிருபகர் 'பகவத்விஷயத்தில் ஈடுபாடே காரணமாகவுண்டான இவ்வாற்றாமைக்கு அதன் ஸம்பந்தமான பரிஹாரஞ் செய்தலே தகுதி' என்று கூறுதல் இப்பாட்டுக்கு உள்ளுறை பொருள். எம்பெருமானுக்கே உரியதும் அவனை யநுபவித்தற்குக் கருவியாவதுமான பக்தியே முலையாகக் கொள்ளப்படுதலால் 'வாராயின முலையாள்' என்றது—பக்குவமாய் முதிர்ந்த பக்தியை யுடைய ஆழ்வாரென்றபடி. .... .... .... .... .... (௩௩)

**வீசுஞ்சிறகாற் பறத்திர் * விண்ணாடு நுங்கட்கெளிது**
**பேசும்படியன்ன பேசியும் போவது * நெய்தொடுவுண்**
**டேசும்படியன்ன செய்யுமெம்மீசர் விண்ணோர் பிரானார்**
**மாசின் மலரடிக் கீழ் * எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே!** (௩௪)

| | |
|---|---|
| **நெய்** | (திருவாய்ப்பாடியிலே) நெய்யை |
| **தொடு உண்டு** | கைதொட்டுக்கவர்ந்து அமுது செய்து |
| **ஏசும்படி** | (பலரும்) பரிஹஸிக்கும்படி |
| **அன்ன செய்யும்** | (மற்றும்பல) அப்படிப்பட்ட காரியங்களைச் செய்தருளிய |
| **எம் ஈசர்** | எமது தலைவரும் |
| **விண்ணோர் பிரானார்** | மேலுலகிலுள்ளார்க்குத் தலைவருமாகிய எம்பெருமானுடைய |

| | |
|---|---|
| மாசு இல் மலர் அடி கீழ் | குற்றமில்லாத செந்தாமரைமலர் போன்ற திருவடிகளின் கீழ் |
| எம்மை சேர்விக்கும் | எம்மை அடைவிக்கவல்ல |
| வண்டுகளே | ஓ வண்டுகளே!, (நீங்கள்) |
| வீசும் சிறகால் பறத்திர் | வேகமாக வீசுகிற சிறகுகளாலே பறந்து செல்லவல்லீர்; |
| விண் நாடும் நுங்கட்கு எளிது | (அவர் வீற்றிருக்குமிடமான) பரமபதமும் உங்களுக்கு (ச்செல்ல) எளிது; |

| | | |
|---|---|---|
| (எனக்காக நீங்கள் அவர் பக்கல் தூது செல்லுதற்குப் புறப்படும் பொழுது) | பேசும்படி அன்ன பேசியும் போவது | (நீங்கள் எனக்காக அவரிடம்) சொல்லும்படியான அவ்வார்த்தைகளை (எனக்கு)ச் சொல்லியும் போகவேணும். |

* * *—இப்பாசுரம் வண்டு விடு தூது. பிரிந்து போன நாயகன் வந்திடுவனென்று ஆறியிருக்க வொண்ணாதே அவன் வரவுக்கு விரைந்து ஆள்விடும்படியாயிற்று ஆற்றாமைமிகுதி; ஆகவே வண்டுகளைத் தூதாக நாயகனை ஸர்வேச்வரன் பக்கலிலே போகவிடுகிற நாயகியின் பாசுரமாய்ச் செல்லுகிறது. எம்பெருமானது திருவடித்தாமரைகளின் கீழ் எம்மை அடைவிக்கவல்ல வண்டுகளே! நீங்களோ விரைந்து செல்லத்தக்க கருவியையுடையவர்களாயிருக்கின்றீர்; நானோ அப்படிப்பட்ட வலிமையில்லாத மெல்லியலாய் இட்டகாலிட்ட கையளாயிருக்குந் தன்மையையுடையேன்; எம் காதலர் வீற்றிருக்கிற பரமபதமும் உங்களுக்கு எட்டிப் பிடிக்கலாம்படியிராநின்றது; எனக்கோ அது சென்று சேர்தற்கு அரிதாயிருக்கின்றது. ஆகவே நீங்கள் எனக்காகப் பரமபதஞ்சென்று பேசுதல் வேண்டும்; அப்படி அவர் பக்கல் நீங்கள் தூது செல்லுதற்குப் புறப்படும்பொழுது, எனக்காக நீங்கள் அவரிடம் சொல்ல நினைத்திருக்கும் வார்த்தைகளை என் பக்கலிற் சொல்லிக் காட்டியும் போகவேணும் என்கிறாள். அங்குச் சொல்லவேண்டிய வார்த்தைகளை இங்குத் தன் பக்கல் சொல்லிக் காட்டுமாறு வேண்டியதனால், நீங்கள் அங்குப் பேசும் பேச்சுக்களை இங்கு என் முன் சொன்னால் அப்பேச்சுக்களில் ஏதேனுங் குறைவு உண்டாகில் அதனை யான் திருத்தித் தருதலுமின்றி உங்கள் பேச்சின் சாதுர்யத்தினால் அவர் விரைவில் வந்திடுவரென்னுந் துணிவை யடைந்து அதுவரை ஆறியிருப்பேனென்பதை வெளியிட்டாளாயிற்று.

'பறத்திர்' என்னும் வினைமுற்று எதிர்கால முணர்த்தவல்லதாயினும் இங்கு எதிர்கால முணர்த்தாது தன்மையுணர்த்திற்று. **போவது**—ஒருவகை வியங்கோள்.

'தேவாதி தேவனை எம்பெருமான் பக்கலிலே வெகு அற்பங்களான நாங்கள் சென்று கிட்டுதல் அருமையன்றோ' என்று வண்டு

கன் பின்வாங்காமைக்காக ‘நெய்தோவேண்டேசும்படி யன்ன செய்யும்’ என்று அவனது ஸௌலப்யத்தை முற்பட எடுத்துக் காட்டுகின்றான். நெய்யைச் சொன்னது—மற்றுமுள்ள பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றிற்கும் உபலக்ஷணமென்க. ஏசும்படி அன்ன செய்யுமென்றது—‘வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட் டதனோசை கேட்கும்’ ‘இல்லம்புகுந்தென் மகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு, கொல்லையில் நின்றுங் கொணர்ந்து விற்ற அங்கொருத்திக்கு அவ்வளை கொடுத்து, நல்லன நாவற்பழங்கள்கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே’ இத் யாதிகளிற் சொல்லப்பட்ட ஏச்சுக்குரிய காரியங்களை உட்கொண்டு.

‘எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே’ என்றது—எம்மைச் சேர்விக்கவல்ல சக்தியுள்ளது உங்களுக்கேயென்று புகழ்ந்துரைத்தவாறு.

ஆழ்வார் தம்முடைய ஆற்றாமையை ஆசார்யர் மூலமாக எம்பெருமானுக்குத் தெரிவித்துத் தமது துயரம் தணியக் கருதி அவர்களைப் புருஷகாரமாக வேண்டுதல் இப்பாட்டின் ஸ்வாபதேசார்த்தமாகும். [விசுஞ் சிறகால் பறந்தீர்] “𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍇𑌵 𑌪𑌕𑍍𑌷𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌯𑌥𑌾 𑌖𑍇 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂 𑌗𑌤𑌿𑌃। 𑌤𑌥𑍈𑌵 𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑌾𑌂 = உபாப்யா மேவ பக்ஷாப்யாம் யதா கே பக்ஷிணாம் கதி:—ததைவஜ்ஞாந கர்மப்யாம்” என்று ஞானனுட்டானமிரண்டும் சிறகாகச் சொல்லப்படுகின்றன; பறவைகளின் உயர்கதிக்குச் சிறகுகள் இன்றியமையாதவை போல ஆசார்யனுடைய உயர்கதிக்கும் ஞானனுட்டானங்களே முக்கிய ஸாதநமாதல் அறிக. பலவகை மலர்களிலுஞ் சென்று அவற்றின் ஸாரமான தேனை அம்மலர்கள் கெடாதபடி கவர்ந்து உண்ணுந் தன்மையனவான வண்டுகளை, பலவகை நூல்களிலும் அவகாஹித்து அவற்றின் ஸாரமான தத்துவப் பொருளை அந்நூல்கள் நலிவுபடாதபடி க்ரஹித்து அநுபவிக்குந் தன்மையரான ஆசார்யராகச் சொல்லத் தட்டில்லை.

புருஷகார பூதராயிருந்து எம்பெருமான் பக்கலிலே என்னைச் சேர்ப்பிக்கும் சக்திவாய்ந்த ஆசார்யர்களே!, நீங்கள் ஞானனுட்டானங்களால் குறையற்றிருக்கின்றீர்கள். [விண்ணுடும் நுங்கட்கு

எளிது] 1. "ஞானமனுட்டான மிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால்—மாநிலத்தீர், தேனார்கமலத் திருமாமகள் கொழுநன், தானே வைகுந்தந்தரும்" என்று அப்படிப்பட்ட ஆசார்யனை யடிபணிந்த சிஷ்யனுக்கும் பரமபதம் எளிதாகும்போது ஆசார்யனுக்குச் சொல்லவேணுமோ? அப்பரமபதமும் உங்களுக்குக் கைவசமாகவுள்ள தென்கை. [பேசும்படி அன்ன பேசியும் போவது] அப்படிப்பட்ட நீங்கள் எனக்காக அப்பெருமானிடஞ் சென்று விண்ணப்பஞ் செய்யும் வார்த்தைகளை இப்பொழுது எனக்குச் சொல்லிப் போகவேணும்; என்றது, அவற்றைக் கேட்டாகிலும் அடியேன் ஆறியிருப்பேன் என்றவாறு. இவ்வாழ்வார் "1. மத்துறுகடை வெண்ணெய்களவினி லுரவிடை யாப்புண்டு, எத்திறமுரலினோ டிணைந்திருந் தேங்கிய எளிவே!" என்று கண்ணனது களவில் ஈடுபட்டு ஆறுமாஸகாலம் மோஹித்துக் கிடக்குந் தன்மையராதலால் இங்கும் 'நெய் தொடுவுண்டேசும்படி அன்ன செய்யுமெம்மீசர்' என்று அந்த ஸௌலப்ய குணத்தையே பாராட்டிக் கூறினார். அடியாருடைய குற்றங்களைக் கணிசியாமையே எம்பெருமானது மலரடிக்கு மாசில்லாமையாம். .... (௫௪)

வண்டுகளோ! வம்மின் நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ *
உண்டு களித்துழல்வீர்க் கொன்றுரைக்கியம் * ஏனமொன்றாய்
மண்டுகளாடி வைகுந்தமன்னான் குழல்வாய்விரைபோல்
விண்டு கள்வாரும் * மலருளவோ நும்வியலிடத்தே? (௫௫)

| | | | |
|---|---|---|---|
| வண்டுகளோ | வண்டுகளே! | உண்டு | (தேனைக்) குடித்து |
| வம்மின் | வாருங்கள்; | களித்து | களிப்படைந்து |
| நீர் பூ | நீரிலுண்டாகிறபூவும் | உழல்வீர்க்கு | (எங்கும்) திரிகிற உங்களுக்கு |
| நிலம் பூ | நிலத்திலுண்டாகிற பூவும் | ஒன்று உரைக்கியம் | (யாம் இப்பொழுது) ஒரு புதுமையைச் சொல்லுவோம்; |
| மரத்தில் ஒண் பூ | மரத்திலுண்டாகிற சிறந்த பூவும் என்கிற இவை யெல்லாவற்றிலும் | | |

1. உபதேசரத்தினமாலை.
1. திருவாய்மொழி 1-3-1.

| | | | |
|---|---|---|---|
| ஏனம் ஒன்று ஆய் | ஒப்பற்ற வொரு வராஹ மூர்த்தியாய் | விரை போல் | பரிமளம்போல |
| மண் தகள் ஆடி | பூமியின் தூளியை அளைந்த எம்பெருமானுடைய | விண்டு | மலர்ந்து மணம்வீசி |
| | | கள் வாரும் | தேன் பெருகப்பெற்ற |
| வைகுந்தம் | பரமபதத்தை | மலர் | பூக்கள் |
| அன்னான் | ஒத்திருக்கின்ற இப்பராங்குச நாயகியினுடைய | நும் வியல் இடத்து | உங்களாட்சிக்கு உட்பட்ட [நீங்கள் தடையின்றி ஸஞ்சரிக்கிற] விசாலமான இடத்திலே |
| குழல் வாய் | கூந்தலிலே இயற்கையாய் அமைந்துள்ள | உளவோ | இருக்கின்றனவோ? |

* * *—இப்பாட்டுக்குத் துறை நலம்பாராட்டு என்பதாம். நாயகனானவன் நாயகியினிடத்தில் தான் வைத்துள்ள காதலை ஒருவாறு வெளியிட வேண்டி அவளது சிறப்பை அந்யாபதேசமாகப் புகழ்ந்துரைத்தல் இது. ஒரு பூந்தோட்டத்தில் ஒரு புறமாய் நாயகி நிற்கையில் அவளை அணுகிச் செல்லுதற்குக் கூசா நின்ற நாயகன் 'இவள் திறத்தில் நமக்குள்ள காதலை ஒருவாறு இவளுக்கு நாம் உணர்த்துவோம்; பிறகு என்னுகிறதோ பார்ப்போம்' என்றெண்ணி அங்குப் பலவகைப் பூக்களிலும் வாய் வைத்துக் களித்துத் திரிகின்ற வண்டுகளை விளித்து 'நீங்கள் எவ்விடத்துஞ்சென்று நீர்ப்பூ நிலப்பூ கோட்டுப்பூ என்றிப்படி வெவ்வேறு வகைப்பட்ட பூக்களைக் கண்டறிவீர்களன்றோ? அவற்றில் எவையேனும் இவளது கூந்தலின் இயற்கை நறுமணத்தை யொத்த மணமுடையவை உண்டோ? சொல்லுங்கள்' என்று தனது அன்பை வெளிப்படுத்தித் தலைமகளைப் புகழ்ந்து தனது மிக்ககாதலை அறிவித்தானென்க. "மருங்குழலுங் களி வண்டினங்காளுரையீர் மடந்தை, கருங்குழல் நாறுமென்போதுடைத்தோ நுங் கடிபொழிலே" என்றும், "மருங்குழல்வாய் நீயறிதிவண்டே சொல்லெனக்கு மங்கை, கருங்குழல் போலுளவோ விரைநாறு கடிமலரே" என்றுமுள்ள பிறருடைய செய்யுட்களும் இப்பாசுரத்தை அடியொற்றி யுள்ளன.

பூவின் வாசியும் மணத்தின் வாசியும் தேனின் வாசியும் அறியும் நீங்கள், புறம்புண்டான உங்களுடைய ரஸத்தில் பாரக்கை

விட்டு, நான் சொல்லுகிற வார்த்தை கேட்கும்படி வாருங்களென்று அழைக்கிறது **வண்டுகளோ வம்மின்** என்று. கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ என்ற நால்வகையில் கொடிப்பூ நிலப்பூவில் அடக்கப்பட்டது. புதற்பூ என்பதும் இதில் அடங்கும். மஹாவராஹமூர்த்தியாகிப் பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்து வந்தது 'ஏனமொன்றாய் மண் துகளாடி' என்றதனால் சொல்லப்பட்டது. இதில், அந்தப் பெரிய பன்றி வடிவத்துக்குப் பெரிய பூமி முழுவதும் ஒரு துகளாயினமை தோன்றும்; 1. "பன்றியாய்ப் படியெடுத்த பாழியா யென்பரது, வென்றியா ருணதெயிற்றின் மென்துகள் போன்றிருந்ததால்" என்ற ஐயங்கார் பாசுரங்காண்க. **வைகுந்த மன்னன்** என்றது, இங்கே, அழியாத நலமுடையவனென்றபடி. **குழல்வாய்விரை**=புஷ்பம் முதலியவற்றாலே வந்தேறியான பரிமளமன்றியே ஸ்வாபாவிகமான குழலின் பரிமளம். உத்தமசாதி மகளிரின் கூந்தலுக்கு இயற்கை நறுமணமுண்டென்ப.

**வண்டுகளோ**=ஓகாரம் மிக்கது விளியுருபு; ஓ வண்டுகள் என மாறினுமாம். **வம்மின்**=வா என்பதன் ஏவற்பன்மை. துகளாடி=வினையெச்சமன்று; பெயர்ச்சொல். 'குழல்வாய் விரை' என்பதற்கு குழலிடத்துள்ள பரிமளம் என்று பொருள் கொண்டால், **வாய்**—ஏழனுருபு; அன்றி, 'குழலில் வாய்ந்த விரை' என்றுரைத்தால், **வாய்**—வினைத்தொகை. **விண்டு**=தன்வினை பிறவினை யிரண்டுக்கும் பொது; 'பிளந்து' என்பதுபோல. **வியல்**—பரப்பு உணர்த்தும் உரிச்சொல். "வியலென் கிளவி அகலப்பொருட்டே" என்பது தொல்காப்பியம்.

எம்பெருமான் திறத்தில் ஆழ்வார்க்கு அளவு கடந்து உண்டான பக்தியின் தலைமையைக் கண்ட பாகவதர் கொண்டாடிக் கூறும் வார்த்தை இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாம். பரம்பொருளை நாடித்திரிபவரான ஸாரக்ராஹிகளை 'வண்டுகளோ வம்மின்' என விளித்து முன்னிலைப் படுத்தினது. [நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூவுண்டு களித்துழல்வீர்க்கு ஒன்றுரைக்கியம்] 'நீர்ப்பூ' என்றதனால் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள வ்யூஹமூர்த்தியை நினைத்தபடி. 'நிலப்பூ' என்றதனால் பூமியில் திருவவ

1. திருவரங்கக் கலம்பகம் 1.

தரித்த ராமக்ருஷ்ணாதி விபவாவதார மூர்த்திகளை நினைத்தபடி; 'மூர்த்திலொண்சூ' என்றதனால் வேதசாகைகளின் முடியிலே காண்கிற தேஜோரூபியான பரமபத நாதனை நினைத்தபடி. ஆக இப்படிப்பட்ட பகவந் மூர்த்திகளின் விளக்கத்தை இடையறாது அநுபவித்து ஆநந்தித்து எவ்வுலகிலும் தடையின்றித் திரிகிற உங்களுக்கு ஒன்று சொல்லுகிறோம். பிரளயகாலத்தில் பூமியின் ஆபத்தைத் தீர்த்த எம்பெருமானது அழிவற்ற வைகுந்த நாடுபோலப் பேரானந்தம் தருபவரான இவ்வாழ்வாரது சிரோபூஷணமாகவுள்ள பக்திமிகுதியின் புகழ்போல நீங்கள் எங்கேனுங் கண்டதுண்டோ வென்று கொண்டாடி யுரைத்தன ரென்க. .... (ரு௫)

வியலிடமுண்ட பிரானார் விடுத்த திருவருளால் *
உயலிடம் பெற்றுய்ந்த மஞ்சலந் தோழி! * ஓர் தண்தென்றல்வந்
தயலிடையாரு மறிந்தில ரம்பூந்துழாயினின் தேன்
புயலுடை நீர்மையினால் * தடவிற்றென் புலன்கலனே. (ரு௬)

| | |
|---|---|
| வியல் | விசாலமான |
| இடம் | உலகங்களை |
| உண்ட | திருவயிற்றில் கொண்டருளிய |
| பிரானார் | பிரபுவாகிய எம்பெருமான் |
| விடுத்த | (எம்மிடத்துச்) செலுத்திய |
| திரு அருளால் | சிறந்த கருணையினால் |
| உயல் இடம் பெற்று | உஜ்ஜீவிப்பதற்கு இடம்பெற்று |
| உய்ந்தம் | வாழ்ந்திட்டோம்; |
| அஞ்சலம் | (இனி வாடை முதலியவற்றுக்கு) அஞ்சுவோமல்லோம்; |
| தோழி | வாராய் தோழீ!, |
| ஓர் தண் தென்றல் வந்து | ஒரு குளிர்ந்த தென்றற் காற்று வந்து |
| அயலிடை யாரும் அறிந்திலர் | அருகில் எவரும் அறியாதபடி |
| அம் பூ துழாயின் இன் தேன் | அழகிய பூக்களையுடைய திருத்துழாயின் இனிய தேன் துளிகளை |
| புயலுடை நீர்மையினால் | மழைதுளித்தல் போலத் துளிக்குந்தன்மையுடையதாய் |
| என் | என்னுடைய |
| புலன் | அவயவங்களிலும் |
| கலன் | ஆபரணங்களிலும் |
| தடவிற்று | ஸ்பர்சித்தது. |

* * *—நாயகன் இரவிலே வந்து கலந்தமையை நாயகி தன் தோழிக்குக் கூறிநில் இது. தன் ஆற்றாமைக்குக் கலங்கியுரைத்த

தோழியைக் குறித்துத் தலைவி இரவிடத்துந் தலைமகன் கலந்தமையைத் தென்றல் மேல் வைத்து உரைத்த பாசுரம்' என்ற அழகிய மணவாள பெருமாள் வாக்கியங்காண்க. தென்றல் மேல் வைத்துக் கூறுதலாவது—நாயகன் அன்போடு வந்து கலந்ததைவெளிப்படையாகக் கூறுதற்கு வெட்கப்பட்டுத் தென்றல் மேல்வைத்துக் குறிப்பாகக் கூறுதலாம்.

எனது விரஹவ்யஸநத்தை அநுஸந்தித்து வருந்தா நின்ற தோழீ! நாயகனது அருளால் யான் உஜ்ஜீவிக்க ஓர் அவகாசம் பெற்று உஜ்ஜீவித்தேன்; இனி வாடை முதலியவற்றிற்கு அஞ்ச வேண்டுவதில்லை; ஏனென்னில்;—ஒரு குளிர்ந்த தென்றற்காற்று அயலறியாமல் ஏகாந்தமாக நாயகனது திருத்துழாயின் தேனைத் துளித்துக்கொண்டு எனது அவயவங்களிலும் ஆபரணங்களிலும் பட்டு ஆற்றாமை தீர்த்ததுகாண் என்றாள். பிரிந்த காலத்தில் வெவ்விதாய் வருத்திய தென்றல் குளிர்ந்ததாம்படி தலைமகன் வந்து தன் திருத்துழாய் மாலையின் தேன் என் அவயவங்களிலும் ஆபரணங்களிலும்படும்படி தழுவியணைத்தனன் என்றவாறு.

"வியலிடமுண்ட பிரானார் விடுத்த திருவருளால்" என்றதன் உட்கருத்தாவது—துக்கஸாகரத்தில் மூழ்கித் தவிக்கின்ற என்னை இங்ஙனம் அவர் காத்தது பிரளயக்கடலில் மூழ்குகிற உலகங்களைத் தம் வயிற்றில் வைத்துக் குறிக்கொண்டு காத்தருளியதுபோலு மென்பதாம். **உய்ந்தம்**—உய்ந்தனம் என்றபடி; அன் சாரியை பெறாது வந்த தன்மைப்பன்மை யிறந்தகாலவினைமுற்று. **அஞ்சலம்**—தன்மைப்பன்மை யெதிர்மறை முற்று. அஞ்சல் அம் தோழி எனப்பிரித்து, அழகிய தோழியே! எனது ஆற்றாமைக்காகக் கலங்காதே என்பதாகவு முரைக்கலாம்: அப்பொழுது, **அஞ்சல்**—எதிர்மறை யொருமையேவல். உலகத்தில் ஸாதாரணமாகக் காணப்படுகிற தென்றலைப் போலல்லாமல் ஒப்பற்றதாய்த் தன் வருகை மாத்திரத்தால் எமது ஆற்றாமை யெல்லாந் தீரும்படி மிக்க குளிர்ச்சியையுடையதாய்ப் புதுமையாக வொன்று வந்த தென்பாள் 'ஓர் தண் தென்றல் வந்து' என்றாள். இதுவரையில் தென்றலுக்கு வருந்திக் கிடந்த நாயகி இப்போது தென்றல் வரவை உகந்து உரைத்தமையால், நாயகனுடைய வரவைச் சொன்னாளென்று தோழி அறிந்து,

'**இக் களவொழுக்கத்தை** அயலாரறிந்தால் பெரும்பழிப்பாகுமே' **என்று அஞ்சக்கூடு**மே; அங்ஙனம் அஞ்சாமைக்காக '**அயலிடை யாருமறிந்திலர்**' என்கிறாள். நாயகனுடைய கருணைத் திறத்தைப் **பாராட்டிய**மை தோன்றப் '**புயலுடை நீர்மையினால்**' என்கிறாள். **மழையின்** தன்மையினால் என்றது—மழை பெய்யுமாபோலே என்றபடி. **கலன்**—அணிகலம். '**பொலன் கலன்**' என்று பாடமாகில், **பொன்**னாலாகிய அணிகலமென்று பொருளாம்; **பொலன்**—பொன் என்பதன் திரிபான பொலம் என்பதன் இறுதிப்போலி. '**கடலிற் றென்புலன் கலனே**' என்பதற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங் காண்மின்:—"இந்த்ரியங்கள் விடாய் தீரவும் ஆபரணங் கழலாதபடியும் கடலிற்றுப் போலேகாணும்."

**விடுத்த**—வரவிட்ட. **தோழி**—அண்மைவிளி. **அறிந்திலர்**—எதிர்மறை முற்றெச்சம்.

ஆழ்வார் எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கப் பெறாமல் வருந்துமளவில், அவ்வருத்தந்தீரப் பெருமான் ஒருகால் அருகில் வந்து ஸேவை தந்து இவரைத் தான் சேர்த்துக்கொள்ளுந் தன்மையை வெளியிட, அதனால் ஆழ்வார் துன்பந்தணிந்து, முன்புள்ள ஆற்றாமையைக் கண்டு கலங்கின அன்பரை நோக்கிக்கூறும் வார்த்தை இதற்கு உள்ளுறைபொருள். ஆபத்துக்கு உதவுமியல்வினனான எம்பெருமானது ஒப்புயர்வற்ற வரம்பிலாத திருவருளால் ஓர் அவகாசம் கிடைத்து வாழ்வுபெற்றோம்; இனி லௌகிக பதார்த்தங்களுக்கு அஞ்சவேண்டுவதில்லை; உயிர்க்குயிராகிய அப்பெருமான் பிறரொருவர்க்கும் புலனாகாமல் வந்து தனது போக்யதையை வெளிக்காட்டி எமது துயரமெல்லாந் தீரும்படி எமது உறுப்புக்களையும் ஞானம் முதலிய குணங்களாகிய அலங்காரங்களையும் விரும்பி பாராட்டிக்கொண்டான் என்று அருளிச்செய்து அன்பரை ஆற்றிய வாறு. .... .... .... .... .... (௫௬)

**புலக்குண்டலப் புண்டரீகத்த போர்க்கெண்டை * வல்லியொன்றால்**
**விலக்குண் டுலாகின்று வேல்விழிக்கின்றன * கண்ணன்கையால்**
**மலக்குண் டமுதஞ்சுரந்த மறிகடல் போன்றவற்றால்**
**கலக்குண்டநான்று கண்டார் * எம்மை யாருங்கழறலரே.** (௫௭)

| | |
|---|---|
| புலம் குண்டலம் | அழகிய குண்டலங்களையுடைய |
| புண்டரீகத்த | தாமரைமலர் போன்றதான தலைவியின் முகத்திலுள்ள |
| போர் கெண்டை | (தம்மில் ஒன்றோடொன்று எதிர்த்துப்) போர் செய்கிற இரண்டு கெண்டைமீன்கள் போன்ற கண்கள் |
| வல்லி ஒன்றால் விலக்குண்டு | (மூக்காகிய) ஒரு கொடியால் (குறுக்கிட்டு இடையில்) விலக்கப்பட்டு |
| உலாகின்று | (தனித்தனி சீற்றத்தோடு) உலாவிக்கொண்டு |
| வேல் விழிக்கின்றன | வேலாயுதத்தைக்கொண்டு குத்தினாற்போல வருத்துவனவாய் நோக்குகின்றன; |
| தண்ணன் | எம்பெருமானுடைய |
| கையால் | திருக்கைகளால் |
| மலக்குண்டு | கடைந்து கலக்கப்பட்டு |
| அமுதம் சுரந்த | (தன்னிடத்திலுள்ள) அமிர்தத்தை வெளிப்படுத்தின |
| மறி கடல் போன்று | அலைகளைப்பெற்ற கடல்போல |
| அவற்றால் கலக்குண்ட நான்று | அக்கண்களால் (யாம்) கலக்கப்பட்ட பொழுது |
| கண்டார் | (அக்கண்களின் நிலைமையை ப்ரத்யக்ஷமாகப்) பார்த்தவர்கள் |
| யாரும் | எவரும் |
| எம்மை | எம்மை |
| கழறலர் | (ஒருத்தியின் கண் பார்வையில் அகப்பட்டு இப்படி கலங்கினானென்று) குற்றஞ்சொல்ல மாட்டார்கள். |

* * *—இப்பாட்டுக்குத் துறையாவது-தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர் மறுத்தலாம். அதாவது—தெய்வப்புணர்ச்சி புணர்ந்து பின்பு விரஹவ்யஸநத்தினால் மிக மெலிந்து கிடக்கின்ற நாயகனைக் கண்ட தோழன் 'நாளடைவில் நீ இங்ஙனம் இளைத்து வருவதற்கு யாதுகாரணம்?' என்றுகேட்க, தோழனுக்கு உண்மை யொளிக்கவொண்ணாதாகையாலே 'நான் ஒருத்தி வலையிலே அகப்பட்டேன் காண்' என்று தலைமகன் உற்றது கூற, அதுகேட்ட தோழன் கடல்போல் கம்பீரனான நீ ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக இவ்வாறாயினையென்பது உனது பெருந் தன்மைக்குத் தகாது' என்று இடித்துக் கூற, அதற்குத் தலைமகன் 'என்னால் காணப்பட்ட வடிவை நீ கண்டாயில்லை, கண்டவரெவரும் இவ்வாறு வன்சொற் கூறார்; அப்படிப்பட்ட பரமவிலக்ஷணமான வ்யக்தியன்றோ அது, என்று அவனோடு

மறுத்துரைத்தல். "காணிற் கழறலை கண்டிலை மென்தோட் கரும் பிணையே" என்ற திருக்கோவையார் காண்க.

தோழனே!, அந்த நாயகியின் முகம் எப்படிப்பட்டது தெரியுமோ? அழகிய குண்டலங்களையுடையதாய்த் தாமரை மலர் போன்றது. அந்த முகத்திலே கண்கள் எப்படிப்பட்டவை தெரியுமோ?, தம்மில் ஒன்றோடொன்று எதிர்த்துப்போர் செய்கிற இரண்டு கெண்டை மீன்கள் போலும்; அப்படிப்பட்ட கண்களானவை ஒன்றின்மேல் ஒன்று பாய்ந்து நெருக்க வேணுமென்னும் மாத்ஸர்யங் கொண்டிருந்தும் மூக்காகிய ஒரு கொடியால் குறுக்கிட்டு இடையில்விலக்கப்பட்டுச் சிற்றத்தோடு தனித்தனி உலாவிக் கொண்டு வேற்படையைக்கொண்டு குத்தினாற்போல வருத்துவனவாய் நோக்குகின்றன: அப்படிப்பட்ட கண்களால் தலைவி என்னை நோக்கும்போது அவற்றால் நான் கலக்கப்பட்ட விதம்—திருமால் கடலைக் கடைந்தருளின காலத்து அலைகளாகப் பெற்ற அக்கடல் கலங்கினவிதத்தோடொக்கும்; அப்படி நான் கலக்கப்பட்டபொழுது அக்கண்களின் நிலைமையைப் பிரத்யக்ஷமாகப் பார்த்தவர் எவரேனு முளரேல் அவர் ஒருகாலும் என்னை இங்ஙனம் இடித்துரைக்கமாட்டார்; "இக்கண்ணழகில் ஈடுபட்ட நீ உயிர் தொலையப்பெறாது உயிர்த்திருப்பது எவ்வளவோ விசேஷம்" என்றே சொல்லும்படியாயிருக்கும். வேணுமாகில் அக்கண்களின் அழகை நீ ஒருகால் கண்டுபார் என்றான்போலும்.

வாலிவதமான பிறகு இராமபிரான் கார்காலங்கழிப்பதற்கு மால்யவானில் தங்கியிருக்கும்போது பிராட்டியை நினைந்து நினைந்து அவர் குழையும்படிகளைக் கண்ட அநுமான் 'அந்தோ! வஸிஷ்டசிஷ்யனுமிவன்; "ஸமுத்ர இவ காம்பீர்யே" என்று இவனையோ கடல்போல் கம்பீரத்தன்மை வாய்ந்தவனென்று புகழ்வது; ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக இப்படி கதறுகிறானே!' என்று வெறுத்திருந்தான்; பிறகு இலங்கைபுக்கு அசோகவனத்தில் பிராட்டியின் லோகோத்தரமான திவ்யரூபத்தைக் காணப்பெற்றபின் அவ்வநுமான் தானே "துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யதநயா ப்ரபு: । தாரயத்யாத்மநோ தேஹம் ந சோகேநாவஸீததி —துஷ்கரம் க்ருத

வாக் ராமோ ஹீநோ யதகயா ப்ரபு;—தாரயத்யாத்மநோ தேஹம் ந சோகேநாவஸீததி" [அந்தோ! இராமன் அருந்தொழிலன்றோ செய்தான்; இப்படிப்பட்ட பிராட்டியையும் விட்டுப் பிரிந்தானே; அவன் யானை குதிரை ஏறக்கற்றவனத்தனையே யன்றி, காமசாஸ்த்ரத்தில் அடியிட்டிலன்போலும்; இவளைப் பிரிந்த பின்பும் பாழுந்தேஹத்தை ஏதுக்கோ சுமந்து பிழைத்திருக்கிறான்? இந்த வ்யக்தியின் பிரிவுக்குத் தகுந்தவாறு அவன் பரிதாபப்படக்காணோமே] என்றான். அவ்விஷயம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. நான் கண்ட நாயகியை நீ காணப்பெறில் அவ்வனுமான்பட்டபாடு படுவாய் என்கை.

**புலக்குண்டலம்** = புலப்படுதல் — காணப்படுதல்; ஆகவே, விரும்பிக்காணப்படும்படி அழகிதான குண்டலம் என்றதாயிற்று. புலப்படுதல்—விளங்குதலுமாம். 'போலக்குண்டலம்' என்ற பாடத்துக்கு—பொன்னலாகிய குண்டலம் என்க. **குண்டலம்** என்பதைக் கெண்டைக்கு அடைமொழியாக்கி, காதணி வரையில் அளாவிச் செல்லுகிற நீண்ட கண்கள் என்றுரைக்கவுமாம். குண்டலப்புண்டரீகம்—வட்ட வடிவான முகமண்டலமெனினுமாம். புண்டரீகம் போன்ற முகம் என்றும், கெண்டை போன்ற கண்கள் என்றும், கொடிபோன்ற மூக்கு என்றும் சொல்லவேண்டுமிடங்களில் மூன்று உபமேயங்களையுஞ் சொல்லாது உபமான பதங்களையிட்டே சொல்லியிருக்கின்றமை காண்க; உவமையாகுபெயர்கள். செவ்வியும் அழகும் மணமுமுடைமையால் முகத்திற்குத் தாமரையுவமை.

இப்பாட்டின் முன்னடிகளையே பெரும்பாலும் திருவுள்ளம்பற்றி, பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் "ஸுவொநாஸாவொாயா த்ஷவயிகவொனாயிகமவெத......ஜியொவஜஹுய—ஷுாரிதஸுஹ ாதுஂதுஷிவெத கியாஹூாஂ ஸ்ரீாஂமஹுணயிநயநாஜெ ஊயிஷயாழ" என்ற ச்லோகமருளிச் செய்தாரென்றுணர்க.

'**வல்லியோன்றால் விலக்குண்டுலாகின்று**' என்றவிடத்திற்கு "இரண்டு மத்தகஜம் தன்னிலே பொர உத்யோகித்து, நடுவிலே கணையமிட்டவாறே தாம் நினைத்தபடி பொரப் பெறுதொழிந்து பெருஞ்சீற்றத்தோடே ஸஞ்சரிக்குமாபோலே நின்று" என்பது

பூருவர்களின் வியாக்கியானம். நாயகியின் கண்கள் தன்னை வருத்தும்படி கூர்மையான பார்வையை யுடையனவாயிருந்தன என்பதை 'வேல் விழிக்கின்றன' என்றதனால் சொல்லிற்று. அக்கொடுமை இன்னமும் மாறாதன என்பது தோன்ற 'விழிக்கின்றன' என நிகழ்காலத்தாற் கூறிற்று. வேல்விழிக்கின்றன—உவமத்தொகை. எம்பெருமான் ஆழ்கடலைக்கலக்கி ஸாரமான அமிர்தத்தை யெடுத்துக் கொண்டாற்போல, நாயகியின் கண்களும் ஆழ்ந்த என்னெஞ்சைக் கலக்கி ஸாரமான அறிவைக் கவர்ந்து கொண்டன என்னுங் கருத்து பின்னடிகளில் உய்த்துணரத்தக்கது. நான் பன்னியுரைத்துப் பயனென்? அக்கண்களின் வைலக்ஷண்யம் அநுபவித்தார்க்கன்றி மற்றையோர்க்கு அறியவொண்ணாது என்னுங் கருத்து ஈற்றடியில் தோன்றும். யாரும்—மிக்க வைராக்கியத்தோடு விவேகிகளாயுள்ளவர்களும் என்றபடி. 'மறிகடல்போன்றவற்றால்' என்றவிடத்து, 'போன்று அவற்றால்' எனப் பிரிப்பதல்லாமல் 'போன்றவற்றால்' என்று ஒரு சொல்லாகவே யெடுத்து, திருமாலால் கடையப்பட்டு அமிர்தத்தைச் சுரந்த அலையெறிகடல் போன்ற கண்களால் என்றுரைக்கவுமாம். தன் அழகைக்கண்டு கலங்கி மருண்டு நோக்கிய கண்ணுக்கு கண்ணன் கையால் கலக்குண்ட கடல் உவமையென்றுங் கூறுவர். 'கண்டார் சுழறலர்' என்றதனால் அவரும் தன்னைப்போல் பித்தேறிப் போவார்கள் என்பது காட்டப்பட்டதாகும்.

இனி இப்பாட்டுக்கு ஸ்வாபதேசார்த்தமாவது;—ஆழ்வாருடைய ஞானக்கண் விளக்கத்தை யறிந்து ஈடுபட்ட பாகவதர், தங்கள் ஈடுபாட்டைக் கண்டு அதனைக் குறைத்திட வேண்டுமென்று நியமித்துக் கூறுகிற தம் சுற்றத்தாரை நோக்கி மறுத்துச் சொல்லும் வார்த்தையாம். முக்திக்குக் காரணமான முதற்பொருளை யறிவதற்கு உபாயம் மூன்று; அவை,—கேள்வி, சிந்தனை, காட்சி என்பன. அவற்றுள், கேள்வியாவது உபதேச மொழிகளை அநுபவமுடைய ஆசார்யர் பக்கல் கேட்டல். சிந்தனையாவது அவ்வுபதேசமொழிப் பொருளைப் பிரமாணங்களாலும் யுக்தியாலும் உள்ளத்தில் தெளிய ஆராய்தல். காட்சியாவது இவ்வாற்றால் முதற்பொருளை ஐயந்திரிபறத் தெளிதல். ஸ்வாபதேசத்தில் ஆழ்வாரது

கண்ணாகிய ஞானமானது முறையே இம்மூன்று உபாயங்களோடும் அமைந்திருத்தல் இப்பாட்டின் முதல் வாக்கியத்தால் விளங்கும். முன்னம் 'புலக் குண்டலம்' என்று செவியணியைக் கூறியதனால் அவ்வுபாயங்களுள் முந்தியதான செவிக்கணியாகிய கேள்வியைக் குறித்தபடி. அதன்பின் 'புண்டரீகம்' என்றது ஹ்ருதய கமலத்தைக் குறித்ததாய், கேள்வியின் பின் உள்ளம் நிகழ்த்துதலாகிய சிந்தனையை ஸூசிப்பித்தபடி. 'போர்க்கெண்டை' என்றது— அங்ஙனம் சிந்தனை செய்யும்பொழுது பூர்வபக்ஷ ஸித்தாந்த யுக்திகளால் ஒன்றுக்கொன்று விரோதத்தை யுண்டாக்கிப் பண்ணும் ஆராய்ச்சியைக் காட்டும். 'வல்லியொன்றால் விலக்குண்டுலாகின்று' என்றது—மத்யஸ்தமான ஸித்தாந்த யுக்தியால் அவ்விரோதம் தணிந்தமையைக் காட்டும். 'வேல்விழிக்கின்றன' என்றதனால், இங்ஙனம் கேள்வி சிந்தனைகளால் சலகமொழிந்து ஒரு நிலைநின்ற ஞானம் நுண்மையும் கெடுமையுமுடையதாய் எம்பெருமானைத் தரிசித்தமை தோன்றும். கண்ணன் கையாற் கலக்கப்பட்டு அமுது சுரந்த அலைகடல் போலச் சபல சித்தரான யாம் இப்படிப்பட்ட ஆழ்வாரது ஞான விசேஷத்தால் பரவசப்பட்டு இனிய பக்தியைச் சுரந்து நிலைமாறிய பொழுது அவ்வாழ்வாரது ஞான நிலையையறிந்தவரெவரும் எம்மை இங்ஙனங் கூறார் என்பது பிந்தின வாக்யத்தின் உட்கருத்து. 'போன்றவற்றால்' என்று ஒரு சொல்லாக எடுக்கும் போது, கண்ணன் கையால் கலக்கப்பட்டு அமுதுசுரந்த அலைகடல் போல எம்பெருமான் வசப்பட்டுத் தன் வசமிழந்து பக்தியைச் சொரிகிற அதி விசாலமான அவரது ஞான விசேஷத்தால் என்று உள்ளுறை காண்க. **'கண்டார் எம்மையாரும் கழறலர்'** என்கையாலே, புறம்புள்ளாரும் புகுந்தால் தாங்களும் ஈடுபடுமதொழியப் பிறரை நியமிக்கமாட்டாரென்பதுஞ்சொல்லிற்றாயிற்று. ''மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே, **தேவுமற்றறியேன்** குருகூர்நம்பி, பாவினின்னிசை பாடித்திரிவனே'' என்ற மதுரகவியாழ்வார் போல நம் ஆழ்வார் விஷயத்தில் ஈடுபட்டவர் எம்பெருமானையும் விரும்புதல் அரிது என்க. .... .... .... .... .... (ருஎ).

**கழறல மொன்றே நிலமுழு தாயிற்று * ஒருகழல்போய்**
**நிழல்தர வெல்லா விசும்பும் நிறைந்தது * நீண்டவண்டத்து**
**உழறலர் ஞானச்சுடர்விளக்கா யுயர்ந்தோரையில்லா**
**அழறலர் தாமரைக் கண்ணன் * என்னோவிங்களக்கின்றதே? (ருஅ)**

| | |
|---|---|
| கழல் தலம் ஒன்றே | ஒரு திருவடியிடமே |
| நிலம் முழுது ஆயிற்று | பூமிமுழுவதும் தானாய்ப் பரந்தது; |
| ஒரு கழல் | மற்றொரு திருவடி |
| போய் | (பூமியில் இடமில்லாமையாலே மேலே) போய் |
| நிழல் தர | நிழலைச் செய்யும்படி |
| எல்லா விசும்பும் | ஆகாசாவகாசம் முழுவதிலும் |
| நிறைந்தது | வியாபித்தது; |
| நீண்ட அண்டத்து | அளவிடவொண்ணாத பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனும் |
| உழறு | எங்குஞ்செல்லவல்ல |
| அலர் | பரந்த |
| ஞானம் சுடர் விளக்கு ஆய் | ஞானமாகிய ஒளிக்கு இடமான விளக்குப் போன்றவனாய் |
| உயர்ந்தோரை இல்லா | (தன்னிலும்) மேம்பட்டவரையுடையவனல்லாதவனும் |
| அழறு அலர் தாமரை கண்ணன் | சேற்றில் மலர்ந்த செவ்விமாறாத செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையவனுமான திருமால் |
| இங்கு அளக்கின்றது என்னே | இந்த லீலாவிபூதியில் அளக்க வேண்டுவதுண்டோ? |

* * *—இப்பாட்டில் த்ரிவிக்ரமாவதார வரலாற்றைப்பற்றின விஷயம் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ளதானது எம்பெருமானுடைய ஸர்வசக்தித்வத்தைக் கூறியவாறு. 'நாயகன் என்னோடு ஸம்ச்லேஷிக்க வரக்காணவில்லையே; என்ன ப்ரதிபந்தகமுள்ளதோ அறியேன்; ப்ரதிபந்தகங்களைப் பரிஹரித்துக் கொண்டு வந்து சேர்தற்குரிய ஆற்றல் அவர்க்கு இல்லைபோலும்' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த தலைவியை நோக்கித் தோழியானவள் 'நங்காய்! இப்படியோ நீ நினைக்கிறாய்? உன்னுடைய நாயகனான ஈச்வரனுக்குச்செய்யவரிய தொழிலுமொன்றுண்டோ? எல்லாம் வல்லவனன்றோ அவன்' என்று அவனுடைய வல்லமைகளுள் சிறந்ததான ஒன்றையெடுத்துரைக்கும் முகத்தால் 'இப்படி ஸர்வசக்தியுக்தனான நாயகன் நம்மோடு கலப்பதற்கு இடையூறாக வுள்ளவற்றைப் பரிஹரித்து விரைவில் வந்திடுவனென்று நீ அறியிருக்கவேணுமேயொழிய வல்லவனல்லனென்று கருதிக் கலங்குவது தகுதியன்றென்று ஆற்றுகிறாளாயிற்று; ஆகவே, தோழி தலைவன் பெருமையை யுரைத்துத் தலைவியை ஆற்றல் இது.

'**தாமரைக் கண்ணன் என்னோவிங் களக்கின்றதே!**' என்ற

தற்கு இரண்டு வகையான கருத்து உண்டு;—ஓரடியைப் பூமி முழுவதும் பரப்பி வைத்து மற்றோரடியை மேலுலக முழுவதும் பரப்பி வைத்து இங்ஙனம் உலகங்களெல்லாவற்றையும் அளந்திட்டானே! இஃது என்ன ஆச்சரியம்! என்று வியந்து கூறுவதாக ஒரு கருத்து. எம்பெருமான் உலகளந்தானென்று சொல்லுகிறார்களே, இது எப்படி பொருந்தும்? ஒருவன் தான் நின்ற இடந்தவிர மற்றோரிடத்தில் மாறிக் காலிட்டாலன்றோ அளந்ததாகச் சொல்லலாம்; நிலமும் விசும்பும் இரண்டு திருவடிகளுக்கும் இடமாகப் போந்து விட்டதென்று சொல்லாநின்றமையால் இவற்றை அளந்திட்டானென்று எங்ஙனே சொல்லலாகும்? என்பதாக மற்றொரு கருத்து. இங்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்காண்மின்:–'அளக்கைக்கு ஒரு அவகாசம் காண்கிறிலோம்; நின்ற நிலையிலே நின்றானாய் அளந்தானென்ன வொண்ணுகிறதே; அடிமாறியிடுகிற அளந்ததாவது; இவன் இங்கு அளந்தானாக ஒன்றுங்காண்கிறிலோமே!" என்று.

**நீண்டவண்டத்து** என்று தொடங்கி மூன்று வாக்கியங்கள் எம்பெருமானைக் குறிப்பன; நீண்டவண்டத்திலுள்ளவன், உழறலர் ஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லாதவன், அழறலர் தாமரைக்கண்ணனாயிருப்பவன் என்க.

**அழறலர் தாமரைக்கண்ணன்** = தாமரைக்குப் பங்கஜம் என்று வடநூலார் பெயர் கூறுவர்; சேற்றில் முளைப்பது என்று பொருள்; இங்கும் அங்ஙனமே 'அழறலர் தாமரை' எனப்பட்டது. அழறு—சேறு. அளறு என்பதுபோல அழறு என்பதும் ஒருதனிமொழியே யென்றும், ளகரத்துக்கு ழகாம் போலியாக வந்ததன்று என்றும் அறிக. தாமரைப்பூ நீர்நிலையை விட்டு நீங்கினால் வாடிப்போய் விடுமாதலால் நீர்நிலையிலேயே அலர்ந்து செவ்வி குன்றாதிருக்கிற தாமரைபோன்ற திருக்கண்களையுடையவன் என்றவாறு.

கழல் X தலம், கழறலம். உழறுதல் எனினும் உழலுதல் எனினும் ஒக்கும்.

எம்பெருமான் தம்மைச் சேர்த்துக் கொள்ளாமையால் தளர்ந்த ஆழ்வாரை அன்பர்கள் அவனுடைய அபார சக்தியை யெடுத்துக் காட்டி ஆற்றுதல் இப்பாட்டுக்கு உள்ளுறைபொருள். த்ரிவிக்ரமாவதார வியாஜத்தால் எல்லா வுலகங்களையும் தனக்கேயாக்கிக்கொண்ட

ஸர்வேச்வரன் அதுபோலவே உம்மையும் தன் திருவடிகளிற் சேர்த்துக்கொண்டருளத் தட்டில்லையென்று அவனுடைய ஸம்பந்தத்தையும் சக்தி விசேஷத்தையும் விளக்கி ஆற்றாமையைத் தணித்தன ரென்க. .... .... .... .... .... (ருஅ)

அளப்பருந் தன்மைய ஊழியங் கங்குல் * அந்தண்ணந்துழாய்க்
குளப்பெருங் காதலின் நீளிய வாயுள * ஓங்குமுந்நீர்
வளப்பெரு நாடன் மதுசூதனனென்னும் வல்வினையேன்
தளப்பெரு நீண்முறுவல் * செய்ய வாய தடமுலையே. (ருகூ)

| | | | |
|---|---|---|---|
| வல் வினையேன் | கொடிய தீவினையையுடைய எனது | கங்குல் | இராப்பொழுதுகள் |
| தள பெரு நீள் முறுவல் செய்ய வாய தட முலை | முல்லையரும்பினளவான பெருமையும் நீட்சியுமுள்ள பல்வரிசையையுடையசிவந்த வாயுடையளாய்ப் பெரிய தனங்களையுடைய வளாகிய இப் பெண்பிள்ளை | அம் தண்ணம் துழாய்க்கு உளம் பெரு காதலின் நீளிய ஆய் உள | அழகியகுளிர்ந்த திருத்துழாய் விஷயமாக (என்) உள்ளத்திலேவளர்கிற மிக்க வேட்கை போல நீண்டனவாயுள்ளன ; |
| (என்ன சொல்லுகிறாளென்றால்) | | ஓங்கு முந்நீர் வளம் பெரு நாடன் | உயர்ந்த கடல் சூழ்ந்த வளப்பமுள்ள பெரிய நாட்டையாளுபவன் |
| அளப்பு அரு தன்மைய | "அளவிடுதற்கு அரியதான தன்மையையுடைய | மதுசூதனன் | மதுவென்னும் அசுரனையழித்தவன்" |
| ஊழி | கற்பங்களினும் | என்னும் | என்று வாய்விட்டுச் சொல்லி யலற்றுகிறாள். |
| அம் | அழகிய [நீண்ட] | | |

* * *—இராப்பொழுது நெடுகிச் செல்லுமாறு கண்டு ஆற்றாமை மீதூர்ந்த தலைவியைப்பற்றித் தாய் இரங்கிக் கூறும் பாசுரம் இது. என் மகளானவள் ஓரிரவு ஊழியாய் நெடுகும்படியையும் தனது நாயகனான திருமாலின் ரக்ஷகத்வத்தையும் விரோதி நிரஸந ஸாமர்த்தியத்தையும் வாய்மாறாது கூறி அலற்றுகிறாளென்கிறாள் தாய். என்னுடைய காதலுக்கு எப்படி முடிவு இல்லையோ அப்படியே இவ்விரவுக்கும் முடிவில்லை யென்கிறாள் மகள்—என்பது முன்னடிகளால் தெரிவிக்கப்பட்டது. "நீளியவாயுள என்

னும்'' என்று அந்வயித்துக்கொள்க. 'என்னும்' என்பது இப்பாட்டிற்கு வினைமுற்று. என்று சொல்லுகிறாள் என்கை.

'அளப்பருந்தன்மைய வூழியங்கங்குல்' என்பதற்கு—''அளக்கவரியதையும் அளந்தவன் திருவடிகளாலும் அளக்கப்போகிறதில்லை; அளக்கலாகில் வந்து தோற்றானோ?'' என்று விசேஷார்த்தமருளிச் செய்வர் பெரியவாச்சான்பிள்ளை. 'ஓங்கு முந்நீர் வளப்பெருநாடன்' என்றது—உலகத்தைக் கடல் விழுங்காமல் நோக்குமவன் என்ற கருத்தைத் தந்து அவனது ரக்ஷகத்வத்தைப் புலப்படுத்தும். 'மதுசூதனன்' என்றது—உலகத்துக்குக் கொடியவரால் நேரும் நலிவைத் தீர்த்துக் கொடுப்பவனென்று துஷ்டநிக்ரஹ ஸாமர்த்தியத்தைப் புலப்படுத்தும். ஊழியங்கங்குல்—''கங்குலுக்கு அழகாவது—கற்பத்தினும் நெடிதாயிருக்கை'' என்பது அழகிய மணவாள ஜீயருரை. 'கள்ளியங்காடு' 'புளியஞ்சாலை' என்பவற்றிற்போல 'அம்' சாரியையுமாம். நெடுகிச் செல்லுகின்ற கங்குலைக் குறுக்குதலோ, அல்லது எம்பெருமானைக் கூட்டுதலோ இரண்டத்தொன்று செய்யமாட்டாமையால் தாய் 'வல்வினையேன்' என்று தன்னைத்தானே வெறுத்துக் கூறுகின்றாளென்க.

இரண்டாமடியில் 'காதலின்' என்ற ஐந்தனுருபு—ஒப்புப்பொருளது. என் காதல்போல நீண்டிருக்கின்ற தென்கை. முல்லையரும்பு என்னும் பொருள்கொண்ட 'தளவு' என்னுஞ் சொல் 'தள' என விகாரப்பட்டது. தடமுலை—தடமுலையையுடையவள் எனப்பொருள் படுதலால் அன்மொழித்தொகை. 'வாய' என்னுங் குறிப்புப் பெயரெச்சம் தடமுலையவளுக்கு அடைமொழி. நீளிய=இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். நீள் என்பது பண்படியல்லாமல் வினைப்பகுதியாதலால் குறிப்பு வினையாலணையும் பெயரன்று.

எம்பெருமானைச் சேர்தற்குங் கால தாமதத்தைப் பொறுக்கமாட்டாத ஆழ்வாருடைய நிலையைக்கண்டு ஞானிகள் நொந்துரைத்த வார்த்தை இதற்கு உள்ளுறைபொருள். உலகமுழுவதையும் தன்னுடைமையாக வுடைய எம்பெருமான் இவரதுஉட்பகைகளையொழித்து இவரைச் சேர்த்துக்கொள்ள வல்லவனாயிருக்கச் செய்தேயும் அங்ஙனஞ் செய்யாது விளம்பித்தலால்,இவர்க்கு இந்த இருள்தருமா

ஞாலத்திலிருப்பு கெடுகித் தோற்றுகையாலே, ஆற்றாமை பிறந்து, அது விஞ்சுதலால் இவர் அந்தன்மையை வாய்விட்டுக் கூறியமை இப்பாட்டில் விளங்கும். இவருடைய திருமுகமண்டல விளக்கமும் சொல்திறமும் பக்திவளர்ச்சியும் ஈற்றடியிற் சொல்லிற்றும். (௫௯)

**முலையோ முழுமுற்றும் போந்தில * மொய்பூங்குழல்குறிய**
**கலையோ வரையில்லை நாவோ குழறும் * கடல்மண்ணெல்லாம்**
**விலையோ வெனமிளிருங்க ணிவள்பரமே? பெருமான்**
**மலையோ * திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே.** (௬௦)

| | |
|---|---|
| முலையோ | ஸ்தனங்களோ வென்னில் |
| முழுமுற்றும் போந்தில | மிக முழுவதும் தோன்றினவில்லை; |
| மொய் பூ குழல் | அடர்ந்த மென்மையான தலைமயிர்கள் |
| குறிய | (முடிகூடாமல்) குட்டையாயுள்ளன; |
| கலையோ | ஆடையோ வென்னில் |
| அரை இல்லை | இடையிற்பொருந்த உடுக்கப்படுவ இல்லை; |
| நாவோ | நாக்கோவென்னில் |
| குழறும் | (திருத்தமாக வார்த்தை சொல்ல மாட்டாமல்) குதலைச்சொல் பேசுகின்றது; |
| கண் | கண்களோ வென்னில் |
| கடல் மண் எல்லாம் விலையோ என | கடல்சூழ்ந்த உலகமுழுவதும் (இவற்றுக்கு) விலைப்பொருளோ வென்று சொல்லும்படி |
| மிளிரும் | (ஒருநிலையில் நில்லாமல்) பிறழ்ந்து நோக்குகின்றன; |
| பெருமான் மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகம் | 'திருவேங்கடமலை எனதுதலைவனது இருப்பிடமோ?' என்று பலகாலுஞ் சொல்லிப் பயில்கிற வார்த்தை |
| இவள் பரமே | (இப்படி இளமைப் பருவமுடைய) இவளிடம் உண்டாகக் கடவதோ?. |

* * *—தலைமகளின் இளமையை நோக்கிச் செவிலித்தாய் இரங்கிக் கூறும் பாசுரம் இது. நாயகனோடு களவொழுக்கத்திற் புணர்ந்த நாயகி அவன் பிரிந்த நிலையில் ஆற்றாது வருந்தி வாய் பிதற்றிக் கண்ணீர் சொரிந்து உடலிளைத்து வடிவம் வேறுபட, அவ்வேறுபாடு மாத்திரத்தைக் கண்ட தாய் இதற்குக் காரண

மென்னோ வென்று கவலைப்பட்டு அவளது உயிர்த்தோழியைக் கேட்க, அவள் ஒளிக்காமல் உண்மையான காரணத்தைக் கூறியிட, அதுகேட்ட தாய் இவளது இளமையைக் கருதி இரங்கிக் கூறிய துறை இது. உண்மையில் நாயகி யௌவன பருவத்தை அடைந்திருந்தும் இவள்தாய்மார்க்கு அன்பு மிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க. "செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்" "வாயிற்பல்லு மெழுந்தில மயிரும் முடி கூடிற்றில.......மாயன் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறுகின்றாளே" "கொங்கையின்னங் குவிந்தெழுந்தில" என்ற பெரியாழ்வார் பாசுரங்களும் "முள்ளெயிறேய்ந்தில கூழை முடி கொடா, தெள்ளியளென்பதோர் தேசிலள்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமும் காண்க.

முலையோ முழுமுற்றும் போந்தில=முலைகளானவை ஆண் முலைக்கும் பெண் முலைக்கும் வாசிதோற்ற முகந்திரண்டு கிளர்ந்தனவில்லையென்க யௌவந ஸூசகமாதலால் முலை முந்துறக் கூறப்பட்டது. குழல் குழிய=மயிரும் சேர்த்து முடிக்கலாம்படி கூடினவில்லை. கலையோ அரை இல்லை=சிற்றாடையை உடுக்கும் அடைவு அறிந்து நன்றாக உடுக்கவும் மாட்டாள் என்றபடி. நாவோ குழறும்=தட்டுத் தடங்கலின்றிப் பேசப் பழகின பருவமல்லாமையாலே பேச்சுக் குளறும். 'கடல் மண்ணெல்லாம் விலையோ' என்புதற்கு ரத்நாகரமான கடல்களும் பூலோகமும் மற்ற வுலகங்களும் விலை போதா என்றும் உரைப்பர். மிளிரும் கண்=ஒரு பொருளை விசேஷித்துக் குறிப்பாக நோக்குதலின்றிப் பொது நோக்கு நோக்குதலே யொழியக் காதற் குறிப்பை வெளிப்படுத்துகிற சிறப்பு நோக்கு இல்லை என்றபடி. நாயகனை வசப்படுத்துவது முலையழகாலேயாதல் சொற் சாதுரியத்தாலேயாதல் கருத்தோடு கடைக்கணித்துப்பார்க்கும் குறிப்புநோக்கினாலாதல் கூடுவதாயிருக்க முலையும் அரும்பாதே குழலும் முடிகூடாதே ஆடையும் செவ்வையுடுக்க அறியாதே சொல்லும் குதலையாய்க் கண்ணும் ஒதுக்கிப் பாராமற் செவ்வே நோக்கும்படியான இந்தப் பேதைக்கு இப்படி தலைவனிடம் விருப்புதலுண்டானவாறு என்கொல்? என்று அதிசயப்பட்டாளாயிற்று.

நாயகனை வசப்படுத்துகிற ஸாதனங்களின் நிறைவில்லாமை யைச் சொல்லுகிற அடைவில் 'கடல் மண்ணெல்லாம் விலேயோ வெனமிளிருங்கண்' என்று சிறப்புறச் சொல்லுவானேனென்னில்; பொதுவாகவுள்ளது இச்சிறப்பு என்க. நாயகனை வசப்படுத்துதற் குரிய சிறப்பன்று. பருவத்தின் மிக்க இளமையைக் காட்டும் இது.

ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்ட ஞானிகள் 'எம்பெரு மானைச் சேரப் பெறுதற்கு உபாயமான பக்தி முதலியன நிறையாம லிருக்க, இவருக்கு உண்டாகிய விரைவு என்னோ?' என்று சொல் லும் வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். ஸ்வாபதேசத்தில் முலையென்று பக்தியைச் சொல்லுகிறது. [முலையோ முழுமுற்றும் போந்தில] எம்பெருமானைச் சேர்ந்து அநுபவித்தற்கு உபகரண மான பக்தி முதிர்ந்து பேற்றுக்குச் சாதனமான பரமபக்தியாகப் பரிணமித்ததில்லை. [மொய் பூங்குழல் குறிய] முடியழகில்லை; அதாவது—கலையாலே வசப்படுத்துகிற பிரணயம் பூர்ணமாகத் தோன்றவில்லை. [கலையோ அரையில்லை] 1. "மடிதற்றுத் தான் முந்துறும்" என்றபடி அரையில் ஆடையை இறுகஉடுத்துக்கொண்டு முந்துற்றுக் கிளம்பும் முயற்சியில்லை; முயற்சியை அதன் காரணத் தாற் கூறினபடி. [நாவோ குழறும்] இடைவிடாத பகவந் நாம ஸங்கீர்த்தனமில்லை. [கண்மிளிரும்] பொதுப்படப் பொருள்களின் உண்மையறியும் தத்துவஞானமொழிய அவ்வறிவை ஓரிடத்திலே ஒடுக்கி நிறுத்தும் த்யாநரூபமான ஞானமில்லை. 'கடல் மண்ணெல் லாம் விலேயோவென' என்றதனால் ஆழ்வாரது ஞானத்தின் சிறப் புத் தோன்றும். [இவள்பரமே] கேவலம் பரதந்திரமா யிருக்க வேண்டுவார்க்கு, ஸாதகமொன்றுமின்றியே யிருக்க விரைவை ஏறிட்டுக் கொள்ளுதல் தகுமோ? [பெருமான் மலையோ திருவேங் கடமென்று கற்கின்ற வாசகம்] "வெருவாதாள் வாய்வெருவி வேங் கடமே வேங்கடமே யென்கின்றாளால்" என்னுமாபோலே அவனே முந்தருளி நிற்கிற திருமலையாகிய ஹேயாபாதாநத்தையே வாய்புலத் தல்.

இப்பாட்டில், ஆழ்வார் திருவவதரித்த பொழுதே தொடங்கி எம்பெருமானையல்லது தரியாமை வெளியாம். .... (௩௦)

1. திருக்குறள்—குடி செயல் வகை—3.

வாசகஞ் செய்வது நம்பரமே * தொல்லை வானவர்தம்
நாயகன் நாயகரெல்லாந் தொழுமவன் * ஞாலமுற்றும்
வேயக மாயினுஞ் சோராவகை யிரண்டேயடியால்
தாயவன் * ஆய்க்குலமாய் வந்துதோன்றிற்று நம்மிறையே. (௯௧)

| | |
|---|---|
| தொல்லை வானவர் தம் நாயகன் | பழமையான * நித்ய ஸூரிகளுக்குத் தலைவனும் |
| நாயகர் எல்லாம் தொழுமவன் | ஈச்வரத்வம் பாராட்டுகிற (பிரமன் முதலியோர்) எல்லோரும் (தம்தம் தலைமை பெறும்பொருட்டு) வணங்கும்படி யானவனும் |
| ஞாலம் முற்றும் | உலகம் முழுவதையும் |
| வேய் அகம் ஆயினும் சோரா வகை | ஒரு கோற்குத்து நிலமாயினும் *தவறாதபடி [துளியிடமும் மிச்சமாகாதபடி] |
| இரண்டே அடியால் தாயவன் | (தனது) இரண்டு அடிகளாலே அளந்துகொண்டவனுமாகிய |
| நம் இறை | நமது தலைவன் |
| ஆய் குலம் ஆய் வந்து தோன்றிற்று | இடையர்குலத்தை யுடையவனாய்க் கொண்டு அக்குலத்தில் வந்துவளர்ந்த எளிமையை |
| வாசகம் செய்வது | எடுத்துப்புகழ்ந்து கூறுவது |
| நம் பரமே | நம்மாலாகக் கடவதோ? (ஆகாது) |

* * *—தலைவனுடைய நீர்மையைத் தலைவிக்குத் தோழி கூறல். இது நாயகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து வருந்துகிற நாயகி 'பராத்பரனா யிருக்கின்ற அத்தலைவன் என்னை ஒரு பொருளாகக் கருதி விரைவில் வந்து விவாஹஞ் செய்துகொள்ளுதல் கூடுமோ?' என்று கவலைப்பட, அதுகண்ட தோழி, 'அங்ஙனம் யாவரினும் உயர்ந்த அவனுக்கு அன்புடையார் பக்கல் எளியனாகுந் தன்மையும் இயல்பில் உண்டு' என்று அவனது ஸௌலப்யத்தை யெடுத்துக்காட்டி நாயகிக்கு ஆறுதல் கூறுகின்றாள். இதனால், நமக்கு எளியனாய் வந்து விவாஹஞ் செய்துகொள்வான் என்றதாயிற்று.

எம்பெருமானைப் புகழ்வதற்கென்று ஏற்பட்ட வேதங்களும் அவன் தன்மையை முடியச் சொல்லமாட்டாமல் "**யதோ வாசோ**

நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" என்று மீண்டனவென்றால் அதனைக் கூறுதல் நம்மாலாகுமோ? என்பது 'வாசகஞ் செய்வது நம்பரமே' என்றதன் கருத்து. **வேய் அகமாயினும்**=வேய் என்று மூங்கிலுக்குப் பெயர்; ஒரு மூங்கில் நாட்டப்படும் இடமாயினும் என்றபடி. சிறிதிடமேனும் தவறாமல் எல்லாவிடத்தையும் என்கை. **இரண்டேயடியால் தாயவன்**=" ஒரு குறளாயிருநிலம் மூவடி மண் வேண்டி உலகனைத்து மீரடியா லொடுக்கி ஒன்றுந், தருகவென மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்" என்கிறபடியே தான் கேட்ட மூவடிநிலத்துக்கும் இடம் பற்றாதபடி இரண்டடிகளாலேயே அளவிட்டு முடித்தவன். **ஆய்க்குலமாய்வந்து தோன்றிற்று**= அரசர் குலத்திலே ஒருத்திமகனாய்ப் பிறந்து இடையர் குலத்திலே ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்த எளிமை, வாசகஞ் செய்வது நம்பரமே? என்று அந்வயிப்பது. முதல் மூன்றடிகள் பரத்வத்தையும் ஈற்றடி ஸௌலப்யத்தையும் விளக்கும்.

மேன்மையோடு நீர்மையும் உடையவனாதலால் எம்பெருமான் உம்மைச் சேர்த்துக் கொள்வன்; விரைந்து வருந்தவேண்டா என்று அன்பர்கள் ஆழ்வாரைத் தேற்றியபடி. லீலாவிபூதி நித்ய விபூதியென்னும் இரண்டுக்குந் தலைவனான மேன்மையையுடைய ஸர்வேச்வரன் ஆச்ரித ஸுலபனாய்க் கண்ணனாக வந்து அவதரித்த நீர்மையிற் கருத்து ஊன்றும்பொழுது, 'கருமவசமில்லாதவன் பிறப்பு எடுத்தலும் அதிலும் அறிவில்லாமைக்கு எல்லைநிலமான எளிய குலத்தினனாதலும் என்ன ஆச்சரியம்!' என்று கொண்டு 1. "பிறந்தவாறும்" என்றும் 2. "எத்திறம்" என்றும் மோஹித்துக் கிடக்குமதொழிய அதற்குமேற் சொல்லிப் புகழ்தற்கு ஸாத்யப்படுமோ? என்றதாயிற்று.

'பரம்' என்னும் வடசொல் பர மெனத் திரிந்தது; கீழ்ப் பாட்டிலு மிதுவே. 'பரமே' என்ற ஏகாரம் எதிர்மறை; நம்பர மன்று என்கை. தாயவன்—தாவியவன். தோன்றிற்று—இறந்த காலத் தொழிற்பெயர்; இரண்டாம் வேற்றுமைத் தொகை.....(சுக)

1. திருவாய்மொழி 5—10—1.
2. ௸ 1—3—1.

இறையோ இரக்கினு மீங்கோர்பெண்பாலெனவும்மிரங்காது *
அறையோ! வெனநின் றதிருங் கருங்கடல் * ஈங்கிவள்தன்
நிறையோ வினியுன் திருவருளாலன்றிக் காப்பரிதால்
முறையோ? அரவணைமேற் பள்ளிகொண்ட முகில்வண்ணனே.

| | |
|---|---|
| இரக்கினும் | எவ்வளவு வேண்டிக் கொண்டாலும் |
| ஓர் பெண்பால் எனவும் ஈங்கு இறை இரங்காது | இவள் ஒரு பெண் மகளென்று கருதியும் இவளிடத்திற் சிறிதும் இரக்கங் கொள்ளாமல் |
| கரு கடல் | கரியகடலானது |
| அறையோ என நின்று அதிரும் | (இவளெதிரில்) அறை கூவுகிறதோ வென்று சொல்லும்படி நிலைநின்று [ஒரே விதமாக] கோஷஞ் செய்கின்றது; |
| ஓ | இஃது ஒரு கொடுமையே! |
| அரவு அணை மேல் | சேஷசயனத்தின் மீது |
| பள்ளி கொண்ட | சயனித்தருளாநின்ற |
| முகில் வண்ணனே | காளமேகம்போன்ற வடிவுடையவனே! |
| ஈங்கு | இவ்விடத்தில் |
| இவள் தன் | இவளுடைய |
| நிறையோ | நிறைக்குணமோ வென்னில், |
| இனி | இனிமேல் |
| உன் திரு அருளால் அன்றி | உனது கிருபையினாலல்லது (வேறொன்றாலும்) |
| காப்பு அரிது | பாதுகாத்துவைக்க முடியாது; |
| முறையோ | (இவளை நீ இங்ஙனம் உபேக்ஷித்தல்) முறைமையோ? |

* * *—நாயகனை நோக்கி நாயகியினாற்றாமையைத் தோழி கூறுதல் இது. தலைமகளாற்றாமைகண்டு வருந்தாநின்ற தோழி தன் ஆற்றாமையாலே தலைமகனை உட்கொண்டு விளித்து முன்னிலைப் படுத்தி, தலைமகள் கடலோசைக்கு ஆற்றாதுவருந்தும் நிலைமையும், இதுவரையிலும் தான் அவளை ஒருவாறு ஆற்றிவைத்திருந்தமை யையும், இனித் தன்னாலும் ஆற்றவொண்ணாதபடி வருத்தம் விஞ்சுகின்றபடியையும் கூறுகின்றாள்.

நோவுபடுவாரைக்கண்டு தானே இரங்கவேண்டுவது ப்ராப்தம்; அப்படி செய்யாததோடு, இவளது பெண்மையையும் ஸௌகுமார்யத்தையும் இளமையையும் காட்டி இரங்குமாறு யாம் வேண்டிக்கொண்டாலும் இப்பாழுங்கடல் இரங்குகின்றதில்லை; 'பெண்

என்றால் பேயும் இரங்கும்' என்றபடி எவ்வளவு கொடுமையுடையாரும் இரங்கும்படியான பெண்தன்மைக்கும் இது இரங்குகிறதில்லை என்றாள். மேலில்காணுங் கருமைநிறத்தோடு உள்ளுள்ள கருமையையும் [கொடுமையையும்] காட்டுதற்குக் '**கருங்கடல்**' என்றது. கறுப்பு $ வெகுளிப் பொருளதாதலால் 'கோபமுடையகடல்' என்னுமாம்.

'இறையோ **உரைக்கிலும்**' என்னும் பாடமுண்டாம்.

**இவள் தன்** = தன்னைத் தான் காத்துக்கொள்ள வல்லமையில்லாதவளான இவளுடைய என்றபடி. **நிறை**—அடக்கம். **இனி**= கடலாகிய பெரும்பகையு முண்டாய்த் தனக்கு நிறைகாக்கும் சக்தியுமில்லையான பின்பு என்றபடி. இனி இவள் தன் நிறை உன் திருவருளாலன்றிக் காப்பரிது = நீ வந்து ஸம்ச்லேஷித்தாலன்றி இவள் அடங்கியிருக்கமாட்டாள் என்றவாறு. நீ படுக்கைவாய்ப்பு அறிந்து கிடக்க, படுக்கைகொள்ளாத இவளுக்கு இடங்கொடாத விது முறைமையன்று என்கிறாள் 'முறையோ அரவணை மேற்பள்ளி கொண்ட முகில்வண்ணனே!' என்பதனால். **அரவணை மேற்பள்ளி கொண்ட**= இவள் கருந்தரையிலே கிடக்க, நீர் மெல்லிய படுக்கை தேடிக்கிடக்கிறீரே!, இது நல்ல முறைமைதான்!, **முகில் வண்ணனே!**=மேகம்போல உதாரகுணமுடைய நீ இவளது துயரந் தீர உதவாதிருப்பதும் ஒரு முறைமைதான்!

ஏற்கனவே எம்பெருமானைச் சேரப்பெறாது வருந்துகிற ஆழ்வார் ஸம்ஸார ஸாகரத்தின் கோலாஹலத்தையுங்கண்டு அதிகமாகத் தளர்கிறபடியைக் கண்ட அன்பர், தங்களால் இத்தளர்ச்சி பரிஹரிக்க வொண்ணாதென்று கருதித் தங்களாற்றாமை தோன்ற எம்பெருமானைக் குறித்து விண்ணப்பஞ்செய்த பாசுரமாமிது. நாங்கள் எவ்வளவு முயன்றாலும் இவரது அடிமைத் தன்மையைக் கருதியும் சிறிதும் பின்வாங்காமல் கொடிய ஸம்ஸாரஸாகரம் பயங்கரமாய் இவரை வருத்துகின்றது; இனி இவரது ஸ்வரூபத்தை உனது திருவருளாலன்றிப் பாதுகாக்க வொண்ணாது; ஆதிசேஷனாகிய ஒரு சேதநனை எப்பொழுதும் விட்டு நீங்காது அவனிடத்தில் ஸகல விதமான கைங்கரியங்களையுங் கொண்டு அருள்காட்டுவதுபோல

$ வெகுளி—கோபம்,

இவ்வாழ்வாரிடத்தும் அருள்காட்டவேணும்; உனது இனிமையான வடிவை இவர் அநுபவிக்கப் பெறும்படி செய்வதே உனக்குத் தகுதி என்றதாயிற்று. ... .... .... (கூஉ)

வண்ணஞ் சிவந்துள வானாடமருங் குளிர்விழிய *
தண்மென் கமலத்தடம்போற் பொலிந்தன * தாமிவையோ
கண்ணன் திருமால் திருமுகந்தன்னொடுங் காதல்செய்தேற்
கெண்ணம் புகுந்து * அடியேனொடிக்கால மிருக்கின்றவே.

| | |
|---|---|
| வண்ணம் சிவந்தன | திருநிறம் சிவந்துள்ளவையும் |
| வான் நாடு அமரும் குளிர் விழிய | பரமபதம் ஆனந்த மடையும்படியான குளிர்ந்த பார்வையையுடையவையும் |
| தண் மெல் கமலம் தடம் போல் பொலிந்தன | குளிர்ந்த மென்மையான தாமரைத் தடாகம்போல விளங்குகின்றவையுமாகிய |
| இவையோ தாம் | இத்திருக்கண்களோ, |
| கண்ணன் | கிருஷ்ணாவதாரஞ் செய்தவனும் |
| திருமால் | திருமகள்கணவனுமான பெருமானுடைய |
| திருமுகம் தன்னொடும் | திருமுகமண்டலத்திலே |
| காதல் செய்தேற்கு | வேட்கை கொண்டிருக்கிற என்னுடைய |
| எண்ணம் | மனத்திலே |
| புகுந்து | பிரவேசித்து |
| இ காலம் | இப்பொழுதும் |
| அடியேனொடு இருக்கின்ற | (விட்டுநீங்காமல்) என்னோடு இருக்கின்றன. |

* * *—நாயகனை இயற்பழித்த தோழிக்கு நாயகி இயற்பட மொழிதல் இது. அதாவது—நாயகனைப் பிரிந்து நாயகி வருந்தும் நிலையில் அவளைத் தோழி பலவிதங்களாலும் ஆற்றுவதுண்டு; நாயகனுடைய கொடுமையைச் சொல்லிப் பழித்து அம்முகத்தாலே ஆற்றுதலும் ஒருவிதமாதலால், அவ்விதமாகச் சிறிது ஆற்றுதற் பொருட்டுத் தோழி அவன் கொடுமையைச் சொல்லிப்பழிக்க அது பொறுக்கமாட்டாது நாயகி 'இப்பொழுதும் அவனது கண்கள் என்னெஞ்சிலுங் கண்ணிலும் தோன்றி நீங்காதிருக்கின்றன; இங்ஙனம் அன்போடு அணியனாயுள்ளவனை, அநாதரஞ் செய்து பிரிந்து சென்றானென்று நீ கொடுமை கூறுகின்றது என்னோ?' என்று கூறுகின்றாளென்க.

சிவந்த நிறமுள்ளவையாய்க் குளிர்ந்த பார்வையையுமுடைய வையாய்த் தாமரைத் தடாகம்போல விளங்குகின்றவையான இத் திருக்கண்கள் அப்பெருமானது திருமுகமண்டலத்திலே வேட்கை வைத்த எனது மனத்திலே புகுந்து இப்பொழுதும் விட்டு நீங்காமல் என்னோடிருக்கின்றனவே, என் ப்ரமித்துப் பழிக்கின்றாய்! என்றவாறு.

**வண்ணஞ் சிவந்துள**—என்பக்கல் இவர்க்குண்டான அநுராகத்தால் கண்கள் சிவந்துள்ளன என்பது உட்கருத்து. சீற்றத்தாலும் கண்கள் சிவக்கக் கூடுமாதலால் அங்ஙனமாகாது அநுராகத்தாலே சிவந்தன வென்று கொள்வதற்குக் காரணமுண்டோ வென்ன, '**வானாடமருங் குளிர்விழிய**' என்கிறாள்; சீற்றத்திற்கு விரோதியான குளிர்ச்சியுள்ளதனால் வேட்கையால் சிவந்துள்ளனவென்பது திண்ணமென்க. **தாம் இவையோ**—இடைவிடாத நினைப்பினால் இவள் மனத்தில் மாத்திரம் தோன்றுதலன்றி அந்நினைவின் முதிர்ச்சியால் இவளெதிரிலும் எப்பொழுதும் உருவெளிப்பாடாகத் தோன்றுமாறு இதனால் அறியத்தக்கது; 'இவை' என்பது ப்ரத்யக்ஷ நிர்த்தேசமாதலால். பிரியாமையும் அதற்குக் காரணமான அன்புமுடையனாய் இடையீடின்றிக் கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காது நின்று தோன்றுகிறவனை அன்பின்றிப் பிரிந்தானாக நினைப்பதும் சொல்லுவதும் தகுதியல்ல என்பது தோன்ற '**அடியேனுடை இக்காலமிருக்கின்றவே**' என்றது; ஆகவே ஈற்று ஏகாரம்—தேற்றத்தோடு இரக்கம். தன்னை நெடுநாள் பிரிந்து வருத்துங்காலத்திலும் நாயகனைப் பிறர்பழிக்கக் கேட்டுத் தரியாது மறுத்தல் கற்பின் குணம்.

ஆழ்வார்க்கு மிக்க ஆற்றாமையை விளைத்துக் கடுகமுகங்காட்டாமலிருக்கிற எம்பெருமானிடத்துக் கொடுமையுளதென்று சங்கித்த அன்பர்களை நோக்கி ஆழ்வார், அவனது பூர்ண கடாக்ஷம் தமது நெஞ்சிலே நிலைபெறும்படி அவன் தமக்குப் பேரருள் செய்த விதத்தை அறிவித்து அவர்களை ஸமாதானப்படுத்தின பாசுரம் இது. .... .... .... .... .... (கூக)

இருக்கார் மொழியால் நெறியிழுக்காமை * உலகளந்த
திருத்தாளிணை நிலத்தேவர் வணங்குவர் * யாமுமவா
ஒருக்கா வினையொடு மெம்மொடும் நொந்து கனியின்மையிற்
கருக்காய் கடிப்பவர் போல் * திருநாமச்சொல் கற்றனமே.

நிலம் தேவர் — பூமிதேவர்களாகிய பிராமணர்கள்
இருக்கு ஆர் மொழியால் — வேதங்களிற் பொருந்தின மந்திரங்களைக் கொண்டு
நெறி இழுக்காமை — முறைதவறாமல்
உலகு அளந்த திரு தாள் இணை வணங்குவர் — உலகங்களை அளவிட்ட (எம்பெருமானது) திருவடிகளை வணங்கி அநுபவிப்பார்கள்:
யாமும் — நாமும்
அவா ஒருக்கா — (எமது) ஆசையை அடக்கமாட்டாமல்
வினையொடும் எம்மொடும் நொந்து — (அப்படி அநுபவிப்பதற்கு விரோதியான எமது) பாவத்தையும் (அப்பாவத்திற்கு இடமான) எம்மையும் வெறுத்துக் கொண்டு
கனி இன்மையின் கருக்காய் கடிப்பவர் போல் — பழம் கிடைக்காமையாற் பிஞ்சைத் தின்பவர் போல
திரு நாமம் சொல் கற்றனம் — (பூர்ணாநுபவம் கிடைக்காமையால் அதுவரையில் தரித்திருப்பதற்காக அவனது) திருநாமங்களாகிய சொற்களைச் சொல்லுதல் செய்கிறோம்.

* * *— நாயகியானவள் நாயகனுடைய பேர்கூறித் தரித்திருப்பதைத் தோழிக்குக் கூறுதல் இது. ஸம்ச்லேஷித்துப் பிரிந்த நாயகியானவள் மீண்டும் ஸம்ச்லேஷம் கிடைக்கப்பெறாமையினாலே தான் ஒருவாறு தரித்திருப்பதற்காக நாயகனுடைய நாமங்களைச் சொல்லிக்கொண்டு போது போக்குத லென்பதொன்றுண்டு; அது நிகழ்கின்றதென்க.

புண்யசாலிகளான ப்ராஹ்மணோத்தமர்கள் வேதமந்திரங்களால் எப்பொழுதும் எம்பெருமானைத் தவறாமல் அடைந்து அநுபவிப்பர்; யானோ அப்படிப்பட்ட நல்வினையில்லாமையால் எனது ஆசையை அடக்கமாட்டாமல் எனது தௌர்ப்பாக்யத்தை நொந்துகொண்டு இனிய பழங்களை உண்டு வாழப்பெறாத ஏழையர் காய்களைக் கடித்து உயிர் வாழுமாபோலே அவனது பூர்ணாநுபவம் பெறாமையால் நாமோச்சாரணஞ் செய்து உயிர் தரிக்கிறேனென்கிறாள். 'கருக்காய் கடிப்பவர்போல்' என்ற உபமானத்தினால் இத்

திருநாமச்சொல் கற்பதிலுள்ள அத்ருப்தி விளங்கும். கண்ணாலே கண்டு கையாலே அணைக்க ஆசைப்பட்டவர்க்குத் திருநாமச்சொல் கற்ற மாத்திரத்தால் என்னாகும்?

'இருக்கார்மொழி' என்றது புருஷஸூக்தம் முதலியவற்றை. அன்றியே, **இருக்கு** — வேதங்களெல்லாம், **ஆர்**— தனக்குள்ளே பொருந்தும்படியான, **மொழி**—மூலமந்திரமாகிய அஷ்டாக்ஷரமஹாமந்த்ரம், என்றுங் கூறுவர். "ஸர்வே வேதா: ஸர்வ சாஸ்த்ராணி ஸர்வே வர்ணாஸ்ச ஸர்வஶ: அஷ்டாக்ஷராந்தஸ்ஸர்வே யச்சாந்யதபி வாங்மயம்" என்றது காண்க. **நெறி இழுக்காமை**=எம்பெருமானை வழிபடும் முறைமையில் ஒன்றும் வழுவாமல். 'உலகளந்த திருத்தாளிணை' என்றது—ஸர்வ ஸுலபமான திருவடி என்றபடி. **நிலத்தேவர்**= 'பூஸுரா:' என்பர் வடநூலார்; இந்திரன் முதலிய தேவர்கள் ஸ்வர்க்க லோகத்தில் விளங்குவதுபோல இந்நிலவுலகத்தில் விளங்குபவர் ப்ராஹ்மணர்கள். **வினையோடும் எம்மோடும் நொந்து**= எம்பெருமானோடு கூடிக்குலாவி அநுபவிக்கப்பெறாத ப்ரதிபந்தகம் நமக்கு உண்டாயிற்றே! என்று வெறுப்புற்று என்றவாறு. [**கனியின்மையில் கருக்காய் கடிப்பவர்போல்**] கருக்காய்—பசுங்காய், இளங்காய். நன்றாக முதிர்ந்து, நுகர்வார்க்கு மிகவும் இனிதாயிருக்கின்ற கனி — பகவதநுபவத்தாலாகும் இனிய ஆநந்தத்துக்கு உவமை. கட்டிளமைத்தாய் நுகருஞ் செவ்வியதல்லாத காய்—அவ்வளவு இனியதல்லாத நாமோச்சாரண மாத்திரத்துக்கு உவமை. காயின் முதிர்ச்சி கனியாதல்போல நாமோச்சாரணத்தின் பயன் அநுபவாநந்தமாகும் என்பது இவ்வுவமையால் உய்த்துணரத்தக்கது.

உயர்வறவுயர்நல முடையவனை அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் ப்ராஹ்மணோத்தமர்களினுஞ் சிறந்து ஸகல வேத வேதாந்த ரஹஸ்ய ஸாரப் பொருள்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக்கண்டு பேசியநுபவிக்கச் செய்தேயும் நைச்யாநுஸந்தாந ரூபமாக இப்பாசுரம் அருளிச் செய்தாரென்க.

இருக்கு—ருக் என்னும் வட சொல்லின் விகாரம்; வேதத்துக்குப் பொதுப் பெயரும் ஒரு வேதத்துக்குச் சிறப்புப் பெயருமாக வழங்கும் அது. ஒருக்கா=ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம் [ஒருக்காமல்]; இதில், ஒருங்கு என்பதன் பிறவினையான 'ஒருக்கு'—பகுதி. வினையோடும், எம்மோடும்—உருபுமயக்கம்; வினையையும் எம்மையும் எனப்பொருள்படுதலால்.

'யாமுமவா' என்பதற்கு வேறொரு வகையாகவும் பொருள் கூறுவதுண்டு; 'அவ்வா' என்பது 'அவா' எனத் தொக்கியிருப்பதாகக் கொண்டு, யாமும் அவ்வா?—நாமும் அப்படியோ? நிலத்தேவர் போல இருக்கார் மொழியால் திருத்தாளிணை வணங்கும் பாக்கியமுடையோமோ? அல்லோம் என்றபடி. ஒருக்காவினையொடும்—அடக்க முடியாத [பரிஹரிக்கப்போகாத] வினையென்றபடி. 'ஒருக்காவினையொடும் எம்மொடும் நொந்து'—அபரிஹார்யமாயிருப்பதொருபாபம் உண்டாவதே!, இதை அநுஷ்டிக்கைக்கு நானுண்டாவதே! என்று நொந்து. .... .... ... (கூச)

கற்றுப்பிணைமலர் கண்ணின் குலம்வென்று * ஓரோகரும
முற்றுப்பயின்று செவியொடுசாவி * உலகமெல்லாம்
முற்றும் விழுங்கி யுமிழ்ந்த பிரானார் திருவடிக்கீழ்
உற்று முறுதும் * மிளர்ந்தகண்ணா யெம்மை யுண்கின்றவே.

| | | | |
|---|---|---|---|
| கன்று பிணை | இளமையான பெண் மான்களுடைய | கண் ஆய் | கண்களாய் (இவை) |
| மலர் கண்ணின் | பரந்த கண்களின் | | |
| குலம் | சாதியை | | |
| வென்று | ஜயித்து,— | | |
| ஓரோ கருமம் உற்று | ஒருகாரியத்திலே பொருந்தி | உலகம் எல்லாம் முற்றும் விழுங்கி உமிழ்ந்த பிரானார் திரு அடி கீழ் | எல்லாவுலகங்களையும் மிச்சமில்லாதபடி (பிரளயகாலத்தில்) வயிற்றிலுட்கொண்டு (பின்பு) வெளியிட்ட எம்பெருமானது திருவடிகளின் கீழே [இவ்வுலகத்திலே] |
| பயின்று | அக்காரியத்திலே பழகி | | |
| செவியொடு உசாவி | (அக்காரியத்தைச்) சாதகனோடு விசாரித்து ஆலோசித்து,— | | |
| உற்றும் உறுதும் மிளிர்ந்த | (எனக்கு) அநுகூலமாயும் பிரதிகூலமாயும் தடுமாறுகிற | எம்மை உண்கின்ற | எம்மை(த் தமக்கு உள்ளாம்படி) கலந்துகொள்கின்றன. |

* * *—தலைவிநோக்கின் வாசிகண்டு தலைவன் குறிப்பறிந்து உரைத்தல் இது. இப்பாட்டு நெஞ்சை நோக்கித் தன்னுள்ளே சொல்லியது. 'தலைமகள் நோக்கிலே யீடுபட்ட தலைமகன் அக்கண்கள் தனக்குப் பாதகமாகிறபடியைப் பாங்கனுக்குச் சொல்லுகிறான்' என்றுங் கொள்வர்.

இளைய மான்பேடை மருண்டு நோக்கும் நோக்கத்தினும் இவளுடைய நோக்கம் அழகியதென்பதைக் காட்டக் '**கற்றுப் பிணை மலர் கண்ணின் குலம் வென்று**' எனப்பட்டது. கன்று+பிணை, கற்றுப்பிணை, மென்றொடர் வன்றொடராயிற்று. கன்று-இளமைப்பெயர். பிணை—பெண்மைப் பெயர். § "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையும், மானோடைந்துங் கன்றெனற் குரிய," "புல்வாய் நவ்வி யுழையே கவரி, சொல்வாய் நாடிற்பிணை யெனப்படுமே" என்பவற்றால் இச்சொற்கள் மானுக்கு உரியனவாதல் அறிக.

**ஒரோ கருமமுற்றுப் பயின்று செவியோடு உசாவி**=தான் நாயகியை நோக்காத பொழுது அவள் தன்னை மனத்திற் பொருந்திய காமக் குறிப்பு வெளியாம்படி அன்போடு நோக்குதலும், தான் அவளை நோக்கும் பொழுது அவள் நாணத்தால் தன்னை யெதிர் நோக்காது பார்வையைப் பொது நோக்காக வேறொரு வஸ்துவைப் பார்ப்பவள்போல வேற்றிடத்திற் செலுத்தலும், இங்ஙனம் அடிக்கடி பலகால் விரைவில் நிகழும் பொழுது அவள் கண்பார்வை காதளவுஞ் செல்லுதல் தான்கருத்தூன்றியதொரு காரியத்தைப்பற்றிக் காதையடுத்து வினவி அதனோடு ஆராய்தல் போலுதலும் என்னுமிவை வெளியிடப்பட்டனவாயின. ஒரு பொருளிலும் பற்றில்லாமலிருந்தவனொருவன் அத்தன்மை யொழிந்து ஒருபொருளில் பற்று வைக்க நேர்ந்தால் அதில் கருத்தூன்றி அவ்விஷயத்தைக் குறித்து அறிவுடையாரோடு ஆலோசித்து முடிவுசெய்யத் தொடங்குவது வழக்கமாதலால், அப்படியே இதுவரையிலும் பொது நோக்கமுடைய கண்கள் தன்னிடத்தில் அன்புநோக்கம் வைத்து ஈடுபட்டு அத்தன்மையைக் குறித்துக் காதுகளோடு வினவுவுற்றன என்று கண்களின் மேலேற்றிக் கூறினனென்க. நாயகியின் கண்கள் காத

§ தொல்காப்பியம்—பொருளதிகாரம்—மரபியல் 5.

ளவும் நீண்டு விலக்ஷணமாயிருக்குந் தன்மை இதனால் வெளியிடப்பட்டதாம்.

குறிப்பு நோக்கத்தைத் தனக்கு அநுகூலமாகவும் பொதுநோக்கத்தைத் தனக்குப் பிரதிகூலமாகவுங் கொண்டு **'உற்றும் உறுதும் மிளிர்ந்த'** என்றான். 'உலகமெல்லாம் முற்றும் விழுங்கியுமிழ்ந்த பிரானார் திருவடிக்கீழ் எம்மை யுண்கின்றவே' என்று அங்வயிப்பது. த்ரிவிக்ரமாவதார காலத்தில் பூமி முழுதும் அப்பெருமான் திருவடிக்கீழிடமானதால், தனக்கு இவ்வுலகில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பிரானார் திருவடிக்கீழ் நிகழ்ந்ததென்றான் ஸர்வரக்ஷகனை ஸர்வேச்வரனுடைய விபூதியின்கண் எனக்கு இந்த நலிவு உண்டாயிற்றென்றவாறு.

**உண்கின்ற**—வினைமுற்று; உண்கின்றன என்றபடி. என்னை வசப்படுத்திக்கொள்கின்றன; என்னை நலிகின்றன என்றுமாம்.

ஆழ்வாருடைய ஞானத்திலே பாகவதர் ஈடுபட்டு உரைக்கும் வார்த்தை இதற்கு உள்ளுறைபொருள். [கற்றுப் பிணைமலர் கண்ணின் குலம் வென்று] ஸம்ஸாரமாகிற காட்டிலே திரிகிற பேதைமையுள்ள மிருகம் போல்வாருடைய ஐம்புல வழியிற் பரவுகிற ஞான சாதியை அதிசயித்து உத்க்ருஷ்டமாயிருக்கும் இவ்வாழ்வாருடைய ஞானம் என்கை. [ஓரோ கருமமுற்றுப் பயின்று] அந்த ஞானம் அறியத்தக்க பகவத் ஸ்வரூபம் முதலியவற்றிற் பொருந்தி ஊன்றி ஆராய்ச்சிசெய்து நிற்குந் தன்மை சொன்னபடி. [செவியொடு உசாவி] செவியென்றும் ச்ருதியென்றும் பர்யாயம்; அந்த ஞானம் சிறந்த பிரமாணமான ச்ருதியோடு ஒத்திருத்தல் தோன்றும். [பிரானார் திருவடிக்கீழ் உற்று முறுதும்] கீழ் 1. "எண்ணம் புகுந்து" என்றபடி மாநஸாநுபவம் நடத்தலால் வந்த உறவும் 2. "கருக்காய் கடிப்பவர் போல்" என்றபடி பூர்ணாநுபவம் பெறுமையாலுண்டான உறுமையும் என்னுமிரண்டும் குறிப்பிக்கப்பட்டன. [மிளிர்ந்த கண்ணைப்] எல்லா நிலையிலும் ஆழ்வாரது ஞானம் குவியாது விசாலித்துள்ளமையைக் காட்டும். [எம்மை உண்கின்றவே] இப்படிப்பட்ட ஆழ்வாருடைய ஞானம் தம்மை வசப்படுத்தினமையைச் சொன்னபடி. .... .... .... .... .... (கூ0)

1. 63 ஆம்பாட்டு. 2. 64 ஆம்பாட்டு.

**உண்ணா**துறங்காது உணர்வுறு மெத்தனை யோகியர்க்கும்*
**எண்ணாய்**மிளிரு மியல்வினவாம் * எரி நீர்வளிவான்
**மண்ணா**கிய வெம்பெருமான்றனது வைகுந்த மன்னாள்
**கண்ணா**யருவினையேன் * உயிராயின காவிகளே. (கூகூ)

| | |
|---|---|
| எரி | அக்கியும் |
| நீர் | ஜலமும் |
| வளி | வாயுவும் |
| வான் | ஆகாசமும் |
| மண் | பூமியும் |
| ஆகிய | என்னும் பஞ்ச பூதங்களின் வடிவமான |
| எம்பெருமான் தனது | எம்பெருமானுடைய |
| வைகுந்தம் அன்னாள் | ஸ்ரீவைகுண்டத்தையொத்து எப்பொழுதும் அநுபவிக்கத் தக்கவளான தலைமகளினுடைய |
| கண் ஆய் | கண்களென்று பேராய் |

| | |
|---|---|
| அருவினையேன் உயிர் ஆயின | தீராமுடியாத தீவினைகளையுடைய எனக்கு உயிர்நிலையான |
| காவிகள் | செங்கழுநீர்ப் பூக்களானவை — |
| உண்ணாது | உண்ணாமலும் |
| உறங்காது | தூங்காமலும் |
| உணர்வு உறும் | (எப்பொழுதும் த்யானரூபமான) ஞானத்திற் பொருந்தின |
| எத்தனை யோகியர்க்கும் | மிக்க யோகநிலையையுடைய முனிவர்களெல்லோர்க்கும் |
| எண் ஆய் | (அந்தயோகத்தை விட்டு எப்பொழுதும்) நினைக்கத் தக்கவையாய் |
| மிளிரும் | பிறழ்ந்து தோன்றுகிற |
| இயல்வின ஆம் | தன்மையையுடையவையாம். |

* * *—கீழ் "புலக்குண்டலப் புண்டரீகத்த" என்ற பாட்டுப் போலவே இப்பாட்டும்—தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறுத்தல். இத்துறையின் விரிவு அப்பாட்டினுரையிற் காணத்தக்கது. தன்னால் காணப்பட்ட நாயகியினுடைய கண்களினழகு இவ்வுலகப் பற்றை நீத்து ஊணுமுறக்கமு மற்று யோக நிலையிற் பயின்று அதில் தேர்ச்சிபெற்ற மஹா யோகிகளையும் வசப்படுத்திக் கொள்ள வல்லது என்றதனால், தான் அக்கண்ணழகில் ஈடுபட்டதைக் குறித்து நீ என்னைப் பழிக்க இடமில்லையென்று பாங்கனை நோக்கி நாயகன்

கூறினையிற்று. வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் வேறு வகையாகக் கொள்வர்;—'தலைமகளை இயற்கையிற் கலந்து பிரிந்த தலைவன் தன் உருவுதல் கண்டு வினவின பாங்கனைக் குறித்து உற்ற துரைத்த பாசுரம்' என்றார். கழற்றெதிர்மறுத்தலாகவே நம்பிள்ளை திருவுள்ளம்.

"எரி நீர் வளி வான் மண்" என்றவிதில் பஞ்ச பூதங்களின் அடைவு [வரிசைக் கிரமம்] இல்லாமை செய்யுளானமைபற்றி. **எம் பெருமான் தனது வைகுந்த மன்னாள் கண்ணாய்**=பரமபதம்போல் பேரின்பமே வடிவெடுத்தவள் போன்றுள்ள அத் தலைவியின் கண் என்று பேர் மாத்திரமாய் என்னுடைய உயிர் நிலையான செங்கழு நீர் மலர்களாகிய அவை—போகம் கைவந்திருக்கப் பெற்ற பரம யோகிகட்கும் இடைவிடாது சிந்தனைக் குரியன; அதாவது—அவர்கள் இக்கண்ணழகைக் காணப்பெறில், தாங்கள் சிந்தனை செய்து கொண்டிருக்கும் பரம்பொருளை அப்பால்தள்ளி அந்த ஸ்தானத்தில் இக்கண்களையே வைத்துச் சிந்தனை செய்வர்களென்றவாறு.

**அருவினையேன்**=அவளை எப்பொழுதுங் கூடியிருக்கப் பெறாமல் பிரியும்படி நேர்ந்த மஹாபாபத்தைப் பண்ணினேன் யானென்று வெறுத்துக்கொள்ளுகிறபடி. 'உயிராயின' என்றதனால், அக்கண்கள் மிக்க அன்புக்கிடமானவை என்பதும் விட்டுப்பிரிந்து தரிக்க வொண்ணாதவை என்பதும் தோன்றும்.

ஆழ்வாருடைய ஞானத்தின் சிறப்பைப் பாகவதர் அன்பர்க்குக் கூறுதல் இதற்கு உள்ளுறைபொருள். பஞ்சமஹா பூதங்களுக்கும் அந்தராத்மாவான எம்பெருமானுடைய பரமபதம்போல அழிவற்றவரும் எப்பொழுதும் அநுபவிக்கத்தக்கவருமான ஆழ்வாருடைய ஞானமென்று பேராய்ப் பெறுதற்கரிய நல்வினையுடைய எமக்கு உயிர்போல அன்புக்கிடமான மெல்லிய மலர்கள் எமக்கேயன்றி உண்ணுதல் உறங்குதல் இல்லாமல் எப்பொழுதும் நிரந்தராநுபவஞ் செய்கிற நித்யயோகத்தையுடைய நித்யஸூரிகளுக்கும் எப்பொழுதும் அநுபவிக்கத் தக்கவையாய் விளங்கித் தோன்றும் இயல்புடையனவாம் எனப் பொருள்காண்க. யாவரும் மகிழ்ந்து சிரமேற்கொண்டு கொண்டாடத் தகுந்த தன்மைபற்றி ஞானவகைகளைக் காவிமலர்களாகச் சொல்லிற்று. .... .... (கக)

**காவியும்** நீலமும் வேலுங்கயலும் பலபலவென்று *
**ஆவியின்** தன்மை யளவல்ல பாரிப்பு * அசுரைச்செற்ற
**மாவியம்** புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடஞ்சேர்
**தூவியம்**பேடையன்னாள் * கண்களாய துணைமலரே. (௬௭)

| | | | |
|---|---|---|---|
| அசுரை | அசுரர்களை | காவியும் | செங்கழுநீர்ப் பூவையும் |
| செற்ற | அழித்த | நீலமும் | கருநெய்தற் பூவையும் |
| மா வியம் புள் வல்ல | பெரிய ஆச்சரியகரமான கருடப்பறவையை ஏறிநடத்துகிற | வேலும் | வேற்படையையும் |
| மாதவன் | திருமகள்கணவனும் | கயலும் | கயல்மீனையும் |
| கோவிந்தன் | பசுக்களைக் காப்பவனுமான பெருமானுடைய | பல பல | (மற்றும் கண்ணுக்கு ஒப்பாகின்றமான் விழி முதலிய) மிகப்பல பொருள்களையும் |
| வேங்கடம் | திருவேங்கட மாமலையிலே | | |
| சேர் | பொருந்திவாழ்கிற | வென்று | (தமக்கு ஒப்பாகாத படி) ஜயித்து |
| தூவி அம் பேடை அன்னாள் | சிறகழகையுடைய அன்னப்பேடை போன்றவளது | பாரிப்பு | என்னை வருத்துவதற்கு அடி கோலியபாரிப்பு |
| கண்கள் ஆய | கண்களாகிய | ஆவியின் தன்மை அளவு அல்ல | (எனது) உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவல்ல. |
| துணை மலர் | ஒன்றோடொன்று ஒத்த இரண்டு தாமரைமலர்கள் | | |

* * *.—கீழ்ப்பாட்டில் தலைமகன் கழற்றெதிர் மறுத்துரைத்து **வருந்**துவதைக் கண்ட தோழன் 'ஒருகாலும் கலங்கக் கடவதல்**லாத** உனது உள்ளம் இங்ஙனே கலங்குவதற்குக் காரணம் **என்னோ?'** என்று தலைவனுக்குக் கூற, அதற்குத் தலைவன் தன் **ஆற்**றாமையுணர்த்தியது இது. யான் திருவேங்கடமலையிற் கண்ட **மங்**கையின்கண்கள் வருத்தத் தொடங்கிய அளவுக்கு என் உயிர் **ஓர்** ஈடாகாதென்று தலைமகன் தன் வலியிழந்தமையைப் பாங்கனுக்**குக் கூறி** வருந்துகிறானுயிற்று.

அசுரர்களையழித்த பெரிய ஆச்சரியகரமான கருடப்பற**வையை** ஏறி நடத்துகிற திருமாலின் திருப்பதியாகிய திருவேங்கட

மலையிலே பொருந்திவாழ்கிற அன்னப்பேடைபோல் நடையழகுடையளான நாயகியின் இரண்டு தாமரை மலர்போன்ற கண்களானவை உத்தம லக்ஷணமாகிய ரேகைகளின் செம்மையால் செங்கழுநீரையும் கருநிறத்தால் நீலோற்பல மலரையும், கூர்மையாலும் ஒளியாலும் வருத்துதலாலும் வேலாயுதத்தையும், குளிர்ச்சியாலும் வடிவத்தாலும் கயல்மீனையும், மற்றும் மருட்சி முதலியவற்றால் மற்றுங் கண்ணுக்கு ஒப்பாகின்ற மான்விழி முதலிய மிகப் பல பொருள்களையும் தமக்கு ஒப்பாகாதபடி ஜயித்து என்னை வருத்துதற்கு அடிகோலிய பரப்பு எனது உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவல்ல; உயிரின் அளவை மீறிக்கிடக்கின்றது: இந்த மெல்லிய உயிரை மாய்ப்பதற்கு இத்தனை பெரிய முயற்சி கொள்ளத் தேவையில்லை என்றவாறு.

ஸ்வாபதேசத்தில், ஆழ்வாருடைய ஞான விளக்கத்தைப் பாகவதர் அன்பர்க்கு எடுத்துரைத்தலாமிது. 'அசுரைச்செற்ற மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடஞ் சேர்' என்றதனால்—துஷ்ட நிக்ரஹசீலனும் கருடவாஹநாரூடனும் உத்தம ப்ரமாணப்ரதிபாத்யனும் புருஷகாரஞ் செய்பவளான திருமகளுக்கு வசப்பட்டவனும் ஆத்மாக்களைப் பரிபாலிப்பவனுமான திருமாலினது ஸௌலப்யஸ்தானமான பெரிய திருமலையில் ஈடுபாடுடையவர் ஆழ்வார் என்பது விளங்கும். 'வேங்கடஞ்சேர்' என்றது வேங்கடத்தை இடைவிடாது நினைப்பவரென்றவாறு. 'தூவியம் பேடையன்னாள்' என்றதனால்—ஆழ்வாரது சுத்த ஸ்வபாவமும் ஜ்ஞாநாநுஷ்டாநரூபமான மேற்கதி செல்லுங் கருவியிரண்டையுமுடைமையும் பாரதந்த்ரியமும் குறிப்பிக்கப்பட்டன. 'வேங்கடஞ் சேர் தூவியம்பேடை' என்று அலர்மேல்மங்கைத் தாயாரைச் சொல்லி, அவளோடே இவருடைய ஸ்வரூபத்துக்கு ஒப்புச் சொல்லிற்றாகவுமாம். [கண்களாய துணைமலர்] தமக்கும் தமடியார்க்கும் துணையாகிற பரந்த ஞானவகைகளென்க. அந்த ஞானம் காவியை வென்றதாகச் சொன்னது செந்நிறத்ததாகிய ரஜோகுணத்தைக் கடந்தமை சொன்னபடி. நீலத்தை வென்றதாகச் சொன்னது—கருநிறத்ததான தமோகுணத்தைக் கடந்தமை சொன்னபடி. வேலை வென்றதாகச் சொன்னது—வெண்ணிறத்ததான ஸத்வகுணத்தை

யும் கடந்தமை சொன்னபடி. கயலை வென்றதாகச் சொன்னது— இப்படி முக்குணங்களையுங் கடத்தலால் ஜடபதார்த்தங்களிற் சேராமை சொன்னபடி; சஞ்சலத்தன்மையில்லாமை சொன்னபடியுமாம். இப்படிப்பட்ட ஞானத்தின் மஹிமைக்கு எம்மை வசப்படுத்திக் கொள்ளுதல் ஒரு பெரிதன்று என்றதாயிற்று.

‘அசுரரை’ என்பது ‘அசுரை’ எனத் தொகுத்தல் விகாரப்பட்டது. ‘வியப்புள்’ என்பது ‘வியம்புள்’ என மெலித்தலாயிற்று. .... .... .... .... .... (கஎ)

**மலர்ந்தே யொழிந்தில மாலையும் மாலைப்பொன் வாசிகையும் ***
**புலந்தோய் தழைப்பந்தர் தண்டுற நாற்றி * பொருகடல்சூழ்**
**நிலந்தாவியவெம்பெருமான் தனது வைகுந்தமன்னாய்!**
**கலந்தார் வரவெதிர் கொண்டு * வன் கொன்றைகள் கார்த்தனவே.**

| | | | |
|---|---|---|---|
| பொரு கடல் சூழ் | அலைமோதுகிற கடலால் சூழப்பட்ட | கார்த்தன | கருவடைந்து அரும்பின; |
| நிலம் | பூலோகத்தை | | (அதுவேதவிர,) |
| தாவிய | அளந்தருளின | மாலையும் | மாலைகளையும் |
| எம் பெருமான் தனது | எம்பெருமானுடைய | மாலை பொன் வாசிகையும் | பொன்னாலாகிய சுருள்மாலை வட்டத்தையும் |
| வைகுந்தம் | ஸ்ரீவைகுண்டத்தை | புலம் தோய் தழை பந்தர் | மனோஹரமான தழைகளாகிய பந்தலிலே |
| அன்னாய் | ஒத்துவிளங்குகிறவனே!, | தண்டு | கொம்புகளிலே |
| கலந்தார் வரவு எதிர் கொண்டு | (உன்னோடு) கலந்து பிரிந்து சென்றவருடைய வருகையை முந்தி எதிர்பார்த்து | உற | நெருங்க |
| | | நாற்றி | தொங்கவிட்டுக் கொண்டு |
| வன் கொன்றைகள் | வலிய கொன்றை மரங்கள் | மலர்ந்தே ஒழிந்தில | முற்றும் மலர்ந்து விட்டனவில்லை. |

* * *—இப்பாட்டுக்குத் துறை காலமயக்கு: காலம் இளையது என்றல். நாயகன் நாயகியை விட்டு நீங்கும்போது கார்காலத்திலே மீண்டு வருவேனென்று காலங் குறித்துச் சென்றானாய் அக்காலம் வந்தவளவிலும் தான் வாராதிருக்க, கொன்றை மரங்கள் பூத்த

தொடங்கியதை நோக்கிக் 'கார்காலம் வந்துவிட்டதே, இன்னமும் நாயகன் வரவில்லையே' என்று நாயகி கலங்காநிற்க, அதுகண்ட தோழி 'நங்காய்! கார்காலம் வந்ததன்றுகாண்; பிரிந்துசென்ற நாயகருடைய வருகையை முற்பட எதிர்நோக்கிக் கொண்டு தமது மகிழ்ச்சியால் கொன்றைகள் தாமாக அரும்பிநின்றன; அதுவேயன்றிக் காலம் வந்து நன்கு மலர்ந்தனவில்லை' என்று காலத்தை மயக்கிக்கூறி அவளை ஆற்றுவிக்கிறாள்: "காரெனக் கலங்கும் வரெழிற் கண்ணிக்கு, இன்துணைத் தோழி அன்றென்று மறுத்தது" எனத் துறையிலக்கணங் காண்க.

இங்கே நம்பிள்ளை யீடு:-"கலந்துபிரிந்த தலைமகன் கொன்றை பூக்குங் காலத்திலே வருகிறேனென்று காலங் குறித்துப் போனான், அக்காலம் வந்து அவையும் பூக்கச் செய்தே அவன் வாராமையாலே தலைமகள் தளர, அத்தைக்கண்ட தோழியானவள் அக்காலமல்ல வென்ன வொண்ணாதபடி அது முடுகிக்கொடு நிற்கையாலே 'இவை பூக்க உத்யோகிக்கிற வித்தனை; பூத்துச் சமைந்தனவில்லை காண்; ஆனபின்பு அவனும் வந்தானத்தனை, நீ அஞ்சாதே கொள்' என்று அவளை ஆச்வஸிப்பிக்கிறாள். அக்காலமல்லகாணென்னுமே தோழி; கெடுவாய், இவை இங்ஙனே மலரா நிற்க அல்லகாணென்னும்படி எங்ஙனே யென்ன, மலர உபக்ரமித்த வித்தனைகாண், மலர்ந்து சமைந்ததில்லை காண் என்கிறாள்" என்று. இதனால், காலம் இளையதென்றவாறும்.

மாலைகளாகவும் பொன்மாலையாற் சமைந்த வட்டம்போலே சுருளவும் கொன்றை பூத்தலால் 'மாலையும் மாலைப்பொன்வாசிகையும்' எனப்பட்டது. தழைத்த மரங்களிலே கிளைகளில் அம்மலர் அடரத்தொங்குதல் பந்தலிற் கொம்புகளினிடையிலே தொங்கவிட்டவைபோலுதலால் 'தழைப்பந்தர் தண்டுற நாற்றி' எனப்பட்டது. இத்தழையைக்கண்ட கண் வேறொன்றிற் செல்லமாட்டாமை பற்றிப் புலந்தோய்தழை எனப்பட்டது. 'புலம்' என்ற சொல் பொதுப்படையாக இந்திரியத்தைக் குறிப்பதாயினும், இந்திரியங்களுட் சிறந்தவுறுப்பான கண்ணை இங்குக் குறித்தது; 'மலர்' என்னும் பொதுச்சொல் சில விடங்களில் தாமரையைக் குறிப்பதுபோல. இனி, 'புலம்' என்பதற்கு நிலம் என்று பொருள் கொண்டு, தரை

யிலே வந்து தோயும்படி கவிந்து செழித்துள்ள தழை என்று முரைப்ப.

**வைகுந்தமன்னாய்**—வைகுந்தம் எம்பெருமானுக்கே உரிய பொருளாதல்போல நாயகனுக்கே உரிய தன்மையுடையவளே! என்றபடி. இதனால், உன்னைப் பிரிந்து அவன் ஆற்றான் என்பது தோன்றும். பிரிந்திருக்கிற நிலையில் 'பிரிந்தார்' என்று குறிக்க வேண்டியிருக்க, அங்ஙனங்குறியாது 'கலந்தார்' என்ற பெயராற் குறித்தது என்னேவெனின்; உன்னோடே கலந்து உன் தன்மையையறிந்தவர் உன்னைவிட்டிருக்கமாட்டார் என்று ஆற்றுவைக்காக வாம். **வரவெதிர்கொண்டு வன்கொன்றைகள் கார்த்தனவே**—வாசியறியாத ஸ்தாவரங்களுக்கூட அவர் வரவிருப்பதைக்கண்டு அலராநிற்க, நீ தளரலாமோ? என்றபடி. நாம் மலரத்தொடங்கினால் இவள் கலங்குவளே என்னும் இரக்கமில்லாதன வென்பாள் 'வன் கொன்றைகள்' என்றாள். அன்றியும், 'அவன் வரின் அலரக்கடவதாய் இல்லையாகில் தவிருமதாய் இப்படி அவன் வரவோடு தப்பாதான கொன்றைகள்' என்றுங்கொள்வர். **கார்த்தன**—கருக் கொண்டன; என்றதனால், அரும்பின் நிலையையே யொழிய மலரின் நிலையை அடைந்தில வென்கை. காலம் இளையதென்கைக்குச் சான்று இது. 'கார்த்தன' என்பதற்கு—கார்காலத்தைக் காட்டாநின்றன என்று பொருள் கொள்ளவுமாம்.

**பந்தர்**—ரகரல்கரப் போலி. **நாற்றி**—நால் என்பதன் பிறவினையான நாற்று—பகுதி; நாலல்—தொங்குதல்; று—பிறவினைவிகுதி.

எம்பெருமானையும் எம்பெருமானடியார்களையும் எப்பொழுதுஞ் சேர்ந்து அநுபவிக்கலாயிருக்க, உரிய காலத்தில் அநுபவிக்கப் பெறுமையால் ஆழ்வார்க்குண்டான தளர்ச்சியை அன்பர்கள் ஆற்றுதல் இதற்கு உள்ளுறைபொருள். எம்பெருமானுக்கே உரிய பொருளானவரே! உம்மை அவன் ஆட்கொள்ளாதொழியான்; எம்பெருமானது வரவு நேர்தலை முந்தி ஸூசிப்பிக்கிற காலம் தோன்றாநின்றது; ஆனால் அவன் வருங்காலம் இன்னும் அணுகிற்றில்லை என்றுகூறி ஆற்றியபடி. ..... ..... ..... ..... (கூஅ)

காரேற்றிருள் செகிலேற்றின் சுடருக்குளைந்து * வெல்வான்
போரேற் றெதிர்ந்தது புன்றலைமாலை * புவனியெல்லாம்
நீரேற்றளந்த நெடியபிரா னருளாவிடுமே
வாரேற் றிளமுலையாய்! * வருந்தே லுன்வளைத்திறமே. (கூகூ)

| | |
|---|---|
| கார் | கறுத்த |
| இருள் | இருளாகிய |
| ஏறு | எருதானது |
| செகில் | சிவந்த |
| சுடர் | ஸூர்யனாகிய |
| ஏற்றிற்கு | எருதுக்கு எதிரில் |
| உளைந்து | இளைத்து |
| வெல்வான் | (மீள) வெல்லும் பொருட்டு |
| போர் ஏற்று | போர் செய்வதை ஏற்றுக் கொண்டு |
| எதிர்ந்தது | வந்து எதிரிட்டது ; |
| நீர் ஏற்று | (மாவலியையால் தாரைவார்த்துத் தத்தஞ்செய்த) நீரை(க் கையில்) ஏற்று |
| புவனி எல்லாம் | எல்லாவுலகங்களையும் |
| அளந்த | அளந்துகொண்ட |
| நெடிய | நீண்டவடிவமுடைய |
| பிரான் | தலைவன் |
| புன் தலை மாலை | அற்புதமான தன்மையையுடைய மாலைப் பொழுதிலே |
| அருளா விடுமே | (உனக்கு) அருள்செய்யாதொழிவனோ? [ஒழியான்.] |
| வார் ஏற்று இள முலையாய் | கச்சைமேலேறுவிக்கும்படி வளர்ந்த இளமைமாறாத தனங்களையுடையவளே! |
| உன் வளை திறம் | உனது கைவளையின் நிமித்தமாக |
| வருந்தேல் | வருத்தப்படாதே. |

* * *—மாலைப்பொழுது கண்டு மயங்கிய தலைவியைத்தோழி ஆற்றும் பாசுரம் இது. பிரிந்துபோனவர் வந்து சேர்தற்கு உரியதும் போகத்துக்கு உரியகாலமான இரவின் தொடக்கமுமாகிய மாலைப்பொழுதுவரக்கண்டு இன்னமும்நாயகன் வந்திலனேயென்று நாயகி நோவுபட, அதுகண்ட தோழி 'இது நீ நினைக்கிற ஸந்தியா காலம் வந்தன்று; இருளாகிய கறுத்த எருதுக்கும் ஸூர்யனாகிய சிவந்த எருதுக்கும் யுத்தம் நிகழ்கிறபடி காண்; நீ நினைக்கிறபடி உண்மையான மாலைப்பொழுதாயின், உலக முழுவதையும் பாது

காக்கவல்ல அருளையுடைய தலைவன் உனக்கு அருள்செய்ய வாராதொழிவனோ? அவன் வாராமையாலும் இதனை மெய்யான மாலைப் பொழுதன்றென்று நீ தெளிந்து கொள்ளலாம்; உன் கைவளைகள் கழன்றுபோவதைக் குறித்து நீ வருத்தப்படவேண்டா; அவை கழல வொண்ணாதபடி அவன் விரைவில் வந்தருளுவன்' என்று கூறி ஆற்றுவிக்கிறாள்.

ஒரு கறுப்பெருதும் ஒரு சிவப்பெருதும் தம்மில் எதிர்த்துப் போர் செய்கையில் முந்திச் செவ்வெருதுக்குத் தோற்ற காரெருது பிந்தி அதனை வெல்வதற்கு எதிரிட்டதென்கிறது முதல் வாக்கியம். ரூபகத்தை அங்கமாகக்கொண்டு வந்த உத்ப்ரேக்ஷாலங்காரம் கொள்க. ஸாயம் ஸந்தியாகாலமானது முழு வெளிச்சமும் முழு விருளுமல்லாமல் இரண்டுங் கலந்து தோன்றுங்காலமாதலால் இங்ஙனம் வருணிக்கப்பட்டது; அதில், வர வர இருள் மேலிட்டுப் பகலொளி குறைந்து போவதுபற்றி, காலையில் பகலுக்குத் தோற்ற இருள் இப்பொழுது அதனை வெல்லும்பொருட்டு வந்து மேலிட்டதெனக் குறித்தார்.

ஒருவன் ஒருவனிடத்துத் தோற்றுப்போனால் அவன் மறுபடியும் தக்க ஸமயம்பார்த்து மற்றவனை வெல்வதற்கு முயல்வது இயற்கை. இராவணன் போர்க்களத்திலே இராமபிரானது அம்புகட்கு இலக்காகிப் பட்டுப்போனவாறே மந்தோதரி வந்து நின்று புலம்புகிறாள் காண்மின்:—"𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑍁𑌰𑌾 𑌜𑌿𑌤𑍍𑌵𑌾 𑌜𑌿𑌤𑌂 𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌂 𑌤𑍍𑌵𑌯𑌾 । 𑌸𑍍𑌮𑌰𑌦𑍍𑌭𑌿𑌰𑌿𑌵 𑌤𑌦𑍍𑌵𑍈𑌰𑌂 𑌅𑌦𑍍𑌯 𑌤𑍈𑌰𑍇𑌵 𑌨𑌿𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 = இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா— ஸ்மரத்பிரிவ தத் வைரம் அத்ய தைரேவ நிர்ஜித:" என்கிறாள்; அதாவது—இராவணனே! நீ முன்பு இந்திரியங்களை யெல்லாம் வென்று அதனால் மூவுலகையும் வென்றாய்; (இந்திரியங்களை நிக்ரஹித்துக் கொடுந் தவம்புரிந்து வரம் பெற்றமையால் மூவுலகும் வென்றனனாதலால் இங்ஙனம் கூறப்பட்டது.) அந்த இந்திரியங்கள் 'இப்பாவி நம்மை இப்படி தலையெடுக்க வொட்டாமல் பண்ணிவிட்டானே; ஆகட்டும், தக்க ஸமயம்பார்த்து இவனைத் தலையமுக்குவோம்' என்று நெஞ்சில் கறுக்கொண்டிருந்து அவை இப்போது உனக்குப் பிரதிக்ரியை செய்துவிட்டன என்றாள். (இந்திரியங்களை

அடக்காமல் அவற்றுக்குப் பரவசப்பட்டு ஸீதையைக் கவர்ந்து வந்ததனால் உனக்கு இக்கேடு விளைந்ததென்றபடி.) அப்படி இராவணனிடத்தில் இந்திரியங்கள் முதலில் தோற்று,பிறகு அவனைத்தோற்கடித்தது போல, தொண்டரடிப்பொடியாழ்வார் முந்தித் தாம் இந்திரியங்களுக்குத் தோற்றுப் பொன் வட்டில் நிமித்தமாகச் சிறைப்பட்டிருந்த சினத்தை நெஞ்சில் வைத்துக்கொண்டிருந்து ஸமயம் பார்த்து அவற்றைத் தாம் சிறைப்படுத்தினதாக "காவலில் புலனை வைத்து" என்ற (திருமாலை) முதற்பாசுரத்தில் அருளிச்செய்கிறார். அப்படியே இங்கும் செவ்வெருதுக்கு முந்தித் தோற்ற காரெருது கறுக்கொண்டிருந்து இப்போது அதனை வெல்ல எதிரிட்டதாகக் கூறப்படுகிறது.

இருளையும் சுடரையும் 'ஏறு' என்றது, மேலெழுச்சியை யுடைமையால். மாலைப்பொழுது, பிரிந்து வருந்துவாரை மேலும் நலிகையால் '**புன் தலைமாலை**' எனப்பட்டது. அன்றி, பகலுக்கும் இரவுக்கும் இடையிலே மிகச் சிறுபொழுதாய் விரைந்து கழியுந் தன்மையது எனினுமாம்.

**நீரேற்று**=ஸத்ய லோகத்திற் சென்ற திருவடியை விளக்குதற்குப் பிரமன் சேர்த்த தீர்த்தத்தை அத்திருவடியிலேற்று என்றும் பொருள் கூறுவர்; "தாரேற்ற வெண்குடை மாவலி வார்க்கவுந் தாமரைமேற், சீரேற்ற தொல் நான்முகத்தோன் விளக்கவுஞ் செம்பொன்முடிக், காரேற்ற மேனியரங்கேசர் கையுங்கழலுமொக்க, நீரேற்றன வண் திருக்குறளாகி நிமிர்ந்தவன்றே" [திருவரங்கத்துமாலை—33.] என்ற ஐயங்கார் பாசுரம் இங்கு அறியத்தக்கது. **நெடியபிரான்**=(உலகளப்பதற்காக) நீண்ட வடிவங் கொண்டவன் என்றும், யாவரினும் மேம்பட்டவனென்றும் பொருள் கொள்ளலாம்.

**புவனியெல்லாம் நீரேற்றளந்த நெடியபிரா னருளாவிடுமே?**= "தாமஸப்ரக்ருதிகளானார் மேலிடப்புக்கால் வந்து உதவுமவன் தமஸ்ஸூத் தான்வந்து நலிக்கப் புக்கால் விட்டிருக்குமோ?.... .......தன் உடைமையைப் பிறர் எனதென்று அபிமானித்திருந்தால் தன்னை அர்த்தியாக்கி அவர்கள் பக்கலிலேயும் வந்து இரந்துகொள்ளுமவன், இரக்கவேண்டாதே தன் உடைமையேயான உன்னை விட்

டிருக்குமோ ?" என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகொண்க. 'வாரேற்றிள முலையாய்!' என்றது—இப்படிப் பட்ட அழகையும் இளமையையும் அவன் விட்டிருப்பனோ ?விரைந்து வந்திடுவன் காண் என்ற குறிப்பு. 'வாரேற்ற இளமுலையாய்' என்றும் பிரிக்கலாம்; பெயரெச்ச விறு தொகுத்தல். வார் ஏற்ற—கச்சையணிந்த என்றபடி. 'ஹுவநம்' என்னும் வடசொல் புவனியெனத் திரிந்தது.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—தகுந்த காலத்தில் எம்பெருமானை அல்லது பாகவதரைச் சேர்ந்து அநுபவிக்கப் பெருமையால் தளர்ந்த ஆழ்வாரை அன்பர்கள் ஆற்றுவித்தலாம். முன்பு இருந்த அஜ்ஞாநமானது பக்திரூபமான செவ்விய ஞானத்தால் கழிந்ததென்பதும், உரிய காலத்தில் அநுபவிக்கப்பெருமையாலே உள்ள விவேகமும் அழியும்படி மோஹாந்தகாரம் மேலிட்டதென்பதும் முதல் வாக்கியத்தால் தெரிவிக்கப்பட்டனவாம். [வாரேற்றிள முலையாய்!] அடக்குவதற்கும் மறைப்பதற்கும் அரிதான பக்தியின் வளர்ச்சியையுடையவரே ! என்று ஆழ்வாரை விளித்தபடி. [வருந்தேல் உன் வளைத்திறம்] இப்படிப்பட்ட பக்தியையுடைய உமது அடிமைத்திறம் குலையுமென்று வருந்த வேண்டாவென்கை. மற்றது வெளிப்படை. (கூகக)

வளைவாய்த் திருச்சக்கரத்தெங்கள் வானவனார் முடிமேல் *
தளைவாய் நறுங்கண்ணித் தண்ணந்துழாய்க்கு வண்ணம்பயலை*
விளைவான் மிகவந்து நாள்திங்களாண்டூழி நிற்கவெம்மை
உளைவான்புகுந்து * இதுவோர்கங்கு லாயிர மூழிகளே. (எ௦)

| | | | |
|---|---|---|---|
| வளை வாய் திரு சக்கரத்து | வட்டமான நுனியையுடைய அழகிய சக்கராயுதத்தையுடைய | முடி மேல் | திருமுடியிற் சாத்தியுள்ள |
| | | தளை வாய் | கட்டுவாய்ந்த |
| | | நறு | பரிமளமுள்ள |
| | | கண்ணி | மாலைவடிவமான |
| எங்கள் வானவனார் | எமக்குத்தலைவரும் பரமபதத்தி லிருப்பவருமான பெருமானுடைய | தண் அம் | குளிர்ந்து அழகிய |
| | | துழாய்க்கு | திருத்துழாய்க்கு (ஆசைப்பட்டு) |

| | | | |
|---|---|---|---|
| வண்ணம் பயலை விளைவான் | (எமது) மாமைநிறம் மாறிப் பசலை நிறம் விஞ்சும்படி | எம்மை உளைவான் புகுந்து | எம்மை முற்று மழிக்கநெருங்கி |
| மிக வந்து | அடாவந்து | இது ஓர் கங்குல் | இந்த ஒரு ராத்ரிதானே |
| நாள் இங்ஙன் ஆண்டு ஊழி நிற்க | நாளாயும் மாதமாயும் வருடமாயும் கற்பமாயும் தோன்றினது தவிர | ஆயிரம் ஊழிகளே | ஆயிரங் கற்பமாகாநின்றது. |

* * *—இராப்பொழுதின் நெடுமைக்குத் தலைவி இரங்கிக் கூறும் பாசுரம் இது. நாயகனைப் பிரிந்து அந்த விரஹவ்யஸநத்தை ஆற்றாமல் பகலிற் காட்டிலும் இரவில் மிகவருந்தி அரிதிற் சிலநாட்களைக் கழித்த நாயகி அவ்வருத்தம் நாளுக்குநாள் அதிகப்படுதலால் இரவும் ஒருநாளைக் கொருநாள் மிக நெடுகுவதாகத் தோன்றுதல் பற்றி 'இதுக்கு முன்பு எனது நிறத்தை மாறுபடுத்தும் பொருட்டு ஒரு நாளாயும் ஒரு மாதமாயும் ஒரு வருடமாயும் ஒரு கற்பமாயும் படிப்படியாக வளர்ந்து தோன்றி வருத்திவந்த இருள் இன்றைக்கு என்னை அடியோடு முடிக்கும்பொருட்டு மிகப் பல கற்பங்களாகத் தோன்றி வருத்துகின்றது' என்று ஒருநாளிரவிற் கூறியதாமிது.

வளைவாய்த் திருச்சக்கரத்து=சங்கையும் கூர்மையான சக்கரத்தையுமுடைய என்று முரைக்கலாம்.

இதற்கு ஸ்வாபதேசார்த்தமாவது:—எம்பெருமானைச் சேரப்பெறாத நிலையில் தாமதம் பொறுக்கமாட்டாமையால் காலம் நீட்டித்ததாகத் தோன்ற வருந்துகிற ஆழ்வார் வார்த்தையென்க. ஸர்வேச்வரத்வத்துக்கு அறிகுறியான திருவாழியையும் ஜீவாத்மாக்களை அடிமையாகக் கொள்ளுதற்கு உரிய ஸம்பந்தத்தையும் உபயவிபூதியையும் அலங்காரத்தையுமுடைய எம்பெருமானது போக்யதையை அநுபவிக்கப் பெறாமையாலே தன்மை குலையும்படி எம்மை வருத்துவதாகக் காலம் வரையறை யில்லாமல் வளர்கிறதென்று தளர்ந்து அருளிச்செய்தவாறு. .... .... .... (எ०)

ஊழிகளா யுலகேழுமுண்டா னென் றிலம் * பழங்கண்
டாழி களாம்பழ வண்ணமென்றேற்கு * அஃதேகொண்டன்னை
நாழிவளோவென்னும் ஞாலமுண்டான் வண்ணஞ் சொல்லிற்
[றென்னும்
தோழிகளோ! வுரையீர் * எம்மை யம்மனை சூழ்கின்றவே. (எக)

| | |
|---|---|
| ஊழிகள் ஆய் | காலங்களுக்கு நிர்வாஹகனாய் (மஹாகல்பகாலத்தின் முடிவிலே) |
| உலகு எழும் உண்டான் | உலகமுழுவதையும் திருவயிற்றில் வைத்துக் காத்தருளியவன் |
| என்றிலம் | என்று (யாம் தலைவனது பெயர் பெருமை தொழில் முதலியவற்றை வெளிப்படையாகக்) கூறினோமில்லை; |
| களா பழம் கண்டு | களாப்பழத்தைப் பார்த்து |
| பழம் வண்ணம் ஆழி என்றேற்கு | 'இப்பழத்தின் நிறம் கடலின் நிறம்' என்று (குறிப்புப் பொருளொன்றுங் கருதாமல் இயல்பாகச்) சொன்ன எனக்கு |
| அஃதே கொண்டு | அந்தச் சொல்லையே பொருளாகக் கொண்டு |
| அன்னை | (எனது) தாய் |
| இவளோ நாழ் என்னும் | 'இப் பெண்பிள்ளையோ (என் சொற்கேளாது தன் நினைவின்படி) சுதந்திரமாய் நடக்குஞ் செருக்குடையவள்' என்று (கடுஞ்சொற்) கூறுவள்; |
| ஞாலம் உண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும் | உலகமுண்ட அத்தலைவனது நிறத்தைச் சொன்னவாறு இது என்று குற்றங்கூறுவள்; |
| தோழிகளோ | தோழிகளே! |
| எம்மை அம்மனை சூழ்கின்ற | எம்மை எமது தாய் மாறுபடநினைத்து எதிரிட்டுச் சொல்லுஞ் சொற்களுக்கு |
| உரையீர் | நீங்கள் (சமாதானஞ்) சொல்லுங்கள். |

* * *—தாயின் முனிவைத் தலைவி தோழியர்க்கு உரைத்த பாசுரம் இது. நாயகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து நாயகி வருந்துமளவில் அக்களவொழுக்கம் மெல்ல வெளிப்பட்டு

ஊரெங்கும் பழி பரவ, அதனையறிந்த தாய் 'இது நம் குடிக்குக் குறையாம்' என்று கருதி இவளை நிர்ப்பந்தத்திலே வைத்திருக்க, அவளுக்கு அஞ்சி நாயகி தன் ஆற்றாமையால் வாய் பிதற்றுத லொன்றுஞ் செய்யாது ஆற்றாமையை அடக்கிக் கொண்டிருக்க, அவ்வளவிலே சிலர் களாப்பழங்கொண்டு விற்க, அதனை நோக்கி நாயகி 'இதன் நிறம் கடல்போலுள்ளது' என்று பாராட்டிக் கூற, ஏற்கனவே இவள்மேல் குறிப்புக் கொண்டுள்ள தாய் 'இவள் இப்படி சொன்னது நாயகனது நிறத்தைப் பாராட்டிக் கூறியபடியாம்' என்று உட்கொண்டு 'இப்படியும் ஒரு அடங்காத்தன்மை யுண்டோ' என்று வெறுக்க, அதற்குக் கலங்கிய நாயகி தோழியரை நோக்கி ஒருவகையான உட்கருத்தையுங் கொண்டு சொல்லவறியாத எனது தன்மையை நீங்கள் அவளுக்குச் சொல்லி அவளுடைய கோபத்தைத் தணிப்பிராகவென்று வேண்டிக் கொள்ளுகிறாளென்க.

சில பிரதிபந்தகங்களினால் நாயகனை அடையப் பெறாத நாயகி, அவன் தன்னை வெளிப்படையாக விரைவில் விவாஹஞ் செய்து கொள்ள வேண்டுமெனக் கருதிச் சிறைப்புறத்தானுகுமளவில் தோழியர்க்குச் சொல்லுவாள் போன்று ஊர்ப்பழி மிகவும் பரவியிருக்கிறபடியையும் அதனைத் தாயுமறிந்து வெறுக்கிறபடியை யும் தெரிவிக்கும் முகத்தால் விரைவில் வெளிப்படையாக விவாஹஞ் செய்து கொள்ளத் தூண்டியதாமிது. அலர்பரவவும் தாய் முனியவும் இருக்கிற இக்களவொழுக்கம் இனி ஆகாது, மணந்து கொள்ளல் வேண்டும் என்று விவாஹ ருசியை வெளியிட்டவாறு.

**ஊழிகளாய் உலகேழு முண்டானேன்றிலம்**=ஊழிகள் என்ற பன்மை காலத்தின் பகுப்புக்களைக் குறிக்கும்; ஸகல காலங்களுக் கும் நிர்வாஹகனும் மஹாகல்பகாலத்தின் முடிவிலே திருவயிற்றில் வைத்துக் காத்தருளியவனை எம்பெருமான் என்று அவன் திரு நாமத்தையோ தொழிலையோ பெருமையையோ ஒன்றையும் நான் வெளிப்படையாகச் சொன்னேனில்லை; ஒருகால் அப்படி சொல்லி யிருந்தேனாயின் தாய் குறைகூறுவது தகுதியேயாம்; அந்தோ! ஆதாரமொன்று மின்றிக் குறைகூறுகின்றாளே யென்றவாறு. 'ஊழிகளாய்' என்பதற்கு—கல்பமும், அக்காலத்தில் அழிவு செய் கிற கடல் நெருப்பு முதலியனவுமாகிய இவற்றின் வடிவமாய் என்

னும் உரைப்பர். என்றிலம் — என்று சொல்லிற்றிலோம்.

ஊழிகளாயுலகேழு முண்டான் என்று சொல்லவில்லையாகில் பின்னை என்னவென்று சொல்லிற்றென்னா, 'பழங்கண்டு ஆழிகளாம் பழ வண்ணமென்றேற்கு' என்கிறாள். (விற்பனைக்காக வீதியில் வந்த) களாப்பழத்தைப்பார்த்து இப்பழத்தின் நிறம் கடலின் நிறம் போன்றுள்ளதென்று உட்கருத்து ஒன்றுமின்றியே இவ்வளவே சொன்னேன்: குறிப்புப்பொருளொன்றுங் கருதாது இயல்பாகச் சொன்ன இச்சொல்லையே பற்றிக்கொண்டு எனது தாய் "இப்பெண்பிள்ளை என் சொற்கேளாது தன்நினைவின்படி ஸ்வதந்த்ரமாய் நடக்குஞ் செருக்குடையளாயினள்' என்றுகடுஞ்சொல் கூறத்தலைப் பட்டாள். களாம்பழவண்ணம் கடல்வண்ணமென்று இவள்சொன்ன தானது வெறுமனேயோ? உலகமுண்ட பெருவாயனுடைய திருமேனி நிறத்தைச் சொன்னபடியன்றோ வென்றுகுற்றங்கூறுகின்றாள்; தோழிமார்களே! இப்படி எனதுதாய் என்னை மாறுபட நினைத்து எறிட்டுச் சொல்லுஞ் சொற்களுக்கு நீங்களே ஸமாதானஞ் சொல்லித் தெளிவிக்கவேணுமென்றாளாயிற்று.

நாழ்—குற்றம்; "நாமா மிகவுடையோம் நாழ்" "நாழாலமர் முயன்ற" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரங்களில் இப்பொருளில் ப்ரயோகங்காண்க. பெரியாழ்வார் திருமொழியில் "பல பல நாழ்ஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்றவிடத்தில் இச்சொல் 'அம்' சாரியை பெற்று வந்தமையுங் காண்க. இங்கே, நாழுடையாள் என்ற பொருளில் 'நாழ்' என்றது உபசார வழக்கு.

இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது—ஆழ்வார் எம்பெருமானிடத்தில் தமக்கு உண்டான ஈடுபாட்டின் மிகுதியால் அப்பெருமானது பயனாகிய வடிவத்தின் கடல்போலளவிடப் படாத பெருமையைப் பாராட்டி ஒரு வார்த்தை சொல்ல, அது கேட்ட ஞானிகள் அவ்வார்த்தைக்கு வேறு பொருள் சங்கித்து, ஸாதநாந்தர நிஷ்டையுடையார்போல உபாஸநைக்கு உரியதொரு காரணவடிவத்தைப் போற்றினதாக நினைத்து அது தகுதியன்றென்று உபேக்ஷிக்க, அத்தன்மையை ஆழ்வார் தமது அன்பர்கட்கு வெளியிட்டு இவர்கள் என் நெஞ்சறியாமல் ஆரோபித்துச் சொல்லும் வார்த்தைக்குளென் நினைவறிந்து பழகிய நீங்கள் மறுமாற்

றஞ் சொல்லி இவர்களைத் தெளிவிக்க வென்று அருளிச் செய்த லாம். [ஊழிகளாய் உலகேழு முண்டானென்றிலம்] ஸாதநாந்தர நிஷ்டையுடையார்போல உபாஸநைக்கு உரிய காரணவடிவத்தைச் சொன்னேமில்லை. [பழங்கண்டு ஆழி களாம்பழவண்ணமென் றேற்கு] பயனாகிய வடிவத்தைக் குறித்து அவ்வடிவம் கடல் போலும் என்று கூறிய எமக்கு. [அஃதே கொண்டு] அந்தச்சொல் லுக்கே வேறு பொருள் கொண்டு. [அன்னை] ஞானிகள், [இவளோ நாழ்என்னும்] இவரே பாதந்த்ரமான ஸ்வரூபத்துக்குவிரோதமான ஸ்வாதந்திரியத்தையுடையாரென்று குறையேறிட்டுச்சொல்வார்கள். [ஞாலமுண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும்] உபாஸநைக்கு விஷயமாகின்ற காரணவடிவத்தை யாம் கூறியதாகக்குற்றங்கூறுவார் கள். [அம்மனை எம்மை சூழ்கின்ற] தாய்போலெம்மிடத்துப் பரிவு டையரான ஞானிகள் எமதுஸ்வரூபத்துக்கு எங்கே குறைபாடு வரு கிறதோ வென்று ஏறிட்டுச் சங்கித்த சங்கைக்கு [தோழிகளோ! உரையீர்] என் நெஞ்சறிந்த அன்பர்களே! நீங்கள் பரிஹாரஞ் சொல்லித் தெளிவிக்கவேணும் என ஸ்வாபதேசப் பொருள்காண்க. ப்ரபத்திமார்க்கத்தை யனுட்டிப்பவர் எம்பெருமானது பயனாகிய வடிவத்தையே கருதிப் பாராட்டக்கடவரென்றும், அதுவே முக்தி பெறுவதற்குச் சிறந்த வழியாகு மென்றும், உபாஸநைக்கு உரிய காரணவடிவத்தையே பாராட்டி உபாஸித்தல் முக்தி பெறுவார்க்கு அவ்வளவாகச் சிறவாதென்றும் உணர்க.

இப்பாட்டில் (இரண்டாமடியில்) ஆய்தம் உயிர்போலொலித் தது; அலகிட்டுக் காண்க. .... .... (எக)

சூழ்கின்ற கங்குற் சுருங்காவிருளின் கருந்திணிம்பை *
போழ்கின்ற திங்களம்பிள்ளையும் போழ்க * துழாய்மலர்க்கே
தாழ்கின்ற நெஞ்சத்தொரு தமியாட்டியேன் மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ? * வந்து தோன்றிற்று வாலியதே. (எஉ)

| | | | |
|---|---|---|---|
| சூழ்கின்ற | (இடைவிடாது) சூழ்ந்து நிற்கிற | சுருங்கா இருளின் | சுருங்காமற் பெருகுகிற இருளினுடைய |
| கங்குல் | ராத்ரியினுடைய | கரு திணிம்பை | கறுத்த செறிவை |

| | | | |
|---|---|---|---|
| **பேழ்கின்ற** | பிளக்கிற | ஒரு தமியாட்டியேன் | ஒரு துணையு மில்லாமல் மிக்க தனிமையை யுடையேனான என்னுடைய |
| **அம் பிள்ளை திங்களும்** | அழகிய இளஞ் சந்திரனும் | மாமைக்கு | (இயல்பான) மேனி நிறத்துக்கு |
| **பேழ்க** | (என்னையும்) பிளக்கட்டும்; | இன்று வாழ்கின்ற ஆறு | இப்பொழுது வாழ்க்கை நேரும்படி |
| **துழாய் மலர்க்கே தாழ்கின்ற நெஞ்சத்து** | (நாயகனது) திருத்துழாய் மலரைப் பெறுதற்காகவே யீடுபடுகிற மனத்தை யுடைய | வாலியது வந்து தோன்றிற்று | சுத்தமான இளம் பிறை வந்து தோன்றியது |
| | | இதுவோ | இப்படியோ? |

* * *—இருளுக்கு ஆற்றாத தலைவி இளம்பிறை கண்டு தளர்ந்து உரைத்தல் இது. நாயகனைப் பிரிந்த நிலையில் பகலிற் காட்டிலும் இரவில் இருளில் மிக வேதனைப்படுகிற நாயகி, அப்பொழுது இளம்பிறை தோன்றி அவ்விருளை அழிக்கத் தொடங்கியதை நோக்கி இனி நமக்கு இருளினாலாகுந் துயரம் குறைவுபடுமென்று கருதி ஒருவாறு தணிந்திருக்கத் தொடங்கியவளவிலே, இளம்பிறையும் விரஹிகளுக்குத் தாபஹேதுவான பொருள்களுள் ஒன்றாதலால் அது இவளை இருளினும் அதிகமாக வேதனைப்படுத்த, அது நோக்கி அத்தலைவி இரங்கிக் கூறியதென்க. எனக்குப் பகையாய்ச் சூழ்கிற இருளைப் பிளந்தொழிக்கிற இளம்பிறை அவ்விருளின் ஒழிவுக்கு மகிழ்கிற என்னையும் பிளந்தொழிக்கட்டும். பிறைதோன்றி இருள் அகன்றதைக் கண்டு இனி என் துயரங் குறைந்து இழந்த மாமைநிறத்தைப் பெற்று வாழ்வேனென்று கருதிய எனக்கு அந்தோ! பிறை தோன்றியது இங்ஙனமோ முடிந்தது!! என்கிறாள். துயர் நீக்க வந்தானென்று கருதப்பட்டவன் தானே துயரை மிகுவிக்கின்றானே! என்செய்வேன்! என்கிறாள்.

**வாலியது**—வாலிமை யென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். **இதுவோ வந்து தோன்றிற்று**—இப்பிறையோ வந்து தோன்றியது; **வாலியதே**—இதன் தன்மை சிறிதாகவுள்ளது! என்றுங் கொள்ளலாம்; இப்பொருளில்

விபரீத லக்ஷணையால் வெறுப்புத் தோன்றும். பிள்ளை—இளமைப் பெயர்.

தாம் நினைத்தபடியே பேறுகிடைத்திடாமையா லுண்டான மோஹாந்தகாரமும் இதனை யடக்கி மேலிடுவதான தத்துவஞானப் பிரகாசமும் இரண்டும் எம்பெருமானைச் சேராத நிலையில் தம்மை ஒன்றினுமொன்று மிகுதியாக வருத்தித் தமது ஸ்வரூபத்தையும் அழிக்கவிருக்குந் தன்மையை ஆழ்வார் வெளியிடுதல் இதற்கு உள்ளுறை பொருள். சந்திரோதய மென்றது விவேகத்தை. (எஉ)

**வால்வெண்ணில வுலகாரச் சுரக்கும் வெண்திங்களென்னும் ***
**பால்விண் சுரவி சுரமுதிர் மாலை * பதிரிவட்டம்**
**போலுஞ் சுடரடலாழிப் பிரான் பொழிலேழளிக்கும்**
**சால்பின் தகைமைகொலாம்? * தமியாட்டி தளர்ந்ததுவே. (எங)**

| | |
|---|---|
| விண் | ஆகாயத்தில் நின்று |
| வால் வெண் நிலவு | மிகவும் வெளுத்த நிலாவாகிய |
| பால் | பாலை |
| உலகு ஆர சுரக்கும் | உலகமெங்கும் நிறையும்படி சுரந்து சொரிகிற |
| வெண் திங்கள் என்னும் | வெளுத்த சந்திரனாகிய |
| சுரவி | பசுவினது |
| சுர | சுரப்பு |
| முதிர் | மிகப்பெற்ற |
| மாலை | மாலைப்பொழுதிலே |
| தமியாட்டி தளர்ந்தது | (நாயகன் வாராமையாலே) தனிமையையுடைய இவள் தளர்ச்சியையடைந்த தன்மை |
| பரிதிவட்டம் போலும் சுடர் | இத்திங்களொளியை விழுங்கவல்ல ஸூர்யமண்டலம் போலும் ஒளியையுடைய |
| அடல் ஆழி | வலிய சக்கராயுதமுடைய |
| பிரான் | அத்தலைவன் |
| ஏழ் பொழில் | ஏழுவகைப்பட்ட லோகங்களையும் |
| அளிக்கும் சால்பின் தகைமை கொல் ஆம் | ரக்ஷிக்கிற அமைவின் பெருமையோ? |

* * *—பிறையுடை மாலைக்கு ஆற்றாத தலைவியின் தளர்ச்சி கண்டு தோழி இரங்கிக் கூறும் பாசுரம் இது. மாலைப்பொழுதுக்கும்

இளம்பிறைக்கும் வருந்தும்படி இவளைத் தனியேவிட்டிருத்தல் உலக முழுவதும் ரக்ஷிக்கும் அவனுடைய பெருந்தன்மைக்குச் சிறிதும் ஏலாது என்கிறாளாயிற்று. ஆகாசத்தில் நின்றும் மிகவும் வெளுத்த நிலவாகிய பாலை உலகமெங்கும் நிறையச் சுரந்து சொரிகிற சந்திரனாகிய காமதேநுவின் சுரப்பு அதிகரித்திருக்கின்ற மாலைப் பொழுதிலே இத்தலைவி தனிமைப்பட்டுத் தளர்ந்திருப்பதானது ஆழியங் கைபவன் அனைத்துலகங்களையும் காத்தருளுந் திறத்துக்குப் பொருந்துமோ? (பொருந்தாது) என்றவாறு. நிலாவினிடத்துப் பாலின் தன்மையையும், அதனை வெளியிடுகிற அம்ருத கிரணனை சந்திரனிடத்துப் பால்சுரக்கும் பசுவின் தன்மையையும் ஏற்றிக் கூறினது ரூபகாலங்காரம். 1. "அருந்தவன் சுரபியே ஆதிவானமா, விரிந்த பேருதயமே மடிவெண்டிங்களா, வருந்தலின் முலைகதிர் வழங்கு தாரையாச், சொரிந்த பாலொத்தது நிலவின் தோற்றமே" என இவ்வர்ணனை பிறவிடத்துஞ் சிறிது வேறுபடக் கூறப்பட்டிருக்குமாறு காண்க. உலகு ஆரச்சுரக்கும்—உலகமாகிய தாழி நிறையும்படி சுரக்குமென்க. விண்சுரவி—தெய்வப்பசு. 'ஸுரபி' என்னும் வடசொல் சுரவியெனத் திரிந்தது. சுர—சுரப்பு; முதனிலைத் தொழிற்பெயர். பரிதி—வடசொல். [பொழிலேழளிக்கும்] பொழில்—உலகம். இனி, பொழில்—சோலையுமாம்; உலகங்களை எம்பெருமானுடைய சிங்காரப் பூந்தோட்டமென்ப; "பிரான் பெய்த காவுகண்டீர் பெருந்தேவுடை மூவுலகே" (6-3-5) என்பர் திருவாய்மொழியிலும். இப்பாட்டுக்கு ஸ்வாபதேசப் பொருளாவது உரியகாலத்தில் பேறு கைபுகாமையாலே ஞானவிளக்கமும் பாதகமாக ஆழ்வார் அடைந்த தளர்ச்சியைக் கண்ட அன்பர்கள் நொந்து உரைத்த வார்த்தையாம். [பிரான் பொழிலேழளிக்குஞ் சால்பின் தகைமை கொலாம் தமியாட்டி தளர்ந்ததுவே] எம்பெருமானுக்கு இயல்பான ஸர்வரக்ஷகத்வமும் இவ்வாழ்வார் திறத்தில் நிகழாதொழிவதே! என்று சங்கித்தபடி. 'சால்வின்' என்றும் பாடமுண்டாம். வால் வெள்—ஒருபொருட் பன்மொழி.

"நிலவுலகார" என்றவிடத்து, 'நிலவு' என்னமல் 'நில' என்

---

1. கம்பராமாயணம் சுந்தரகாண்டம்–ஊர் தேடு படலம்–56.

றும் பிரிக்கலாம்; "குறியதன்கீழ் ஆக்குறுகலுமதனோடு, உகர மேற்றலுமியல்புமாந் தூக்கின்" என்றநன்னூல் அறிக. .... (எரு)

தளர்ந்தும் முறிந்தும் வருதிரைப்பாயல் * திருநெடுங்கண்
வளர்ந்து மறிவுற்றும் வையம் விழுங்கியும் * மால்வரையைக்
கிளர்ந்து மறிதரக் கீண்டெடுத்தான்முடிசூடு துழாய்
அளைந்துண்சிறு பசுந்தென்றல் * அந்தோ! வந்துலாகின்றதே.

| | |
|---|---|
| தளர்ந்தும் முறிந்தும்வரு திரை | (கொந்தளித்து விழுவதெழுவதாய்) கனத்தாலே தளர்ந்தும் காற்றாலே முறிந்தும் வருகிற அலைக்கிளர்ச்சியையுடைய திருப்பாற்கடலில் |
| பாயல் | (ஆதிசேஷனாகிய) சயனத்தில் |
| திரு நெடு கண் வளர்ந்தும் | அழகிய நீண்ட திருக்கண்களுறங்கியும் |
| அறிவுற்றும் | (அவ்வுறக்கத்தில் யாவும்) அறிந்தும் |
| வையம் விழுங்கியும் | பிரளயகாலத்திலே உலகங்களை வயிற்றினுட்கொண்டு காத்தும் |
| மால்வரையை கிளர்ந்து மறிதர கீண்டு எடுத்தான் | கோவர்த்தனகிரியை மேலெழுந்து குடையாகக் கவியும்படி பெயர்த்தெடுத்தும் உதவுகிற எம்பெருமானது |
| முடி சூடு துழாய் | திருமுடியிற் சூடியுள்ள திருத்துழாயை |
| அளைந்து உண் | அளாவியுண்ட |
| பசு சிறு தென்றல் | புதிய இளமையான தென்றற் காற்றானது |
| அந்தோ வந்து உலாகின்றது | மகிழ்ச்சியுண்டாம்படி (என்மேல்) வந்து வீசுகிறது. |

* * *—நாயகனது திருத்துழாயிற்பட்ட தென்றல் வர, நாயகி மகிழ்ந்துரைக்கும் பாசுரம் இது. நாயகனது மேனியோடு ஸம்பந்தப்பட்ட பொருள்தன் உடம்பின்மீது வந்து பட்டுத் தனது பிரிவாற்றாமைத் துயரைச் சிறிது தணிப்பித்தலாகிய ஸந்தோஷத்தைத் தலைவி தோழிக்கு உரைக்கிறாளென்க.

கொந்தளித்து வீசுகின்ற அலைக்கிளர்ச்சியையுடைய திருப்பாற்கடலில் சேஷசயனத்தில் உறங்குவான்போல் யோகுசெய்தும் பிரளயகாலத்தில் உலகங்களை வயிற்றினுட்கொண்டு காத்தும் கோ

வர்த்தநகிரியைக் குடையாகவெடுத்துப் பிடித்துப் பெருமழைத் துன்பத்தைப்போக்கியும் உபகரித்தருள்கின்ற எம்பெருமானுடைய திருமுடியில் அணிந்துள்ள திருத்துழாயை யளைந்த புதிய இளந் தென்றற் காற்றானது மகிழ்ச்சியுண்டாகும்படி என்மேல்வந்து வீசு கின்றது என்றாளாயிற்று.

இனி, இதனை, வழக்கம்போலத் தென்றல் வரவுகண்டு அதற்கு வருந்தத் தொடங்கிய நாயகியை நோக்கித் தோழி 'இதை நீ வெறுந்தென்ற லென்று கருதாதே; அவனுடம்பிற் பட்டு வரு கிறதுகாண் இது; இது அவன் வரவுக்கு அறிகுறி' என்று கூறிச் சோகந்தணிக்கிறதாகவுங் கொள்வர்.

**ஹந்த!** என்னும் வடசொல் (அவ்யயம்)—மகிழ்ச்சி இரக்கம் துன்பம் முதலிய பொருள்களில் வருமென்று வடமொழி நிகண்டி னால் தெரிகிறதனால் அதன் விகாரமாகிய அந்தோ வென்பது இங்கு மகிழ்ச்சிப் பொருளில் வந்த தென்க.

**திருநேடுங்கண் வளர்ந்துமறிவுற்றும்**— எம்பெருமானது தூக் கம் நமது தூக்கம் போலத் தமோகுண காரியமாய் உடம்பு தெரி யாது கொள்ளுந் தூக்கமன்றியே எல்லாப் பொருளையும் அறிந்து கொண்டே லோகரக்ஷண சிந்தனை பண்ணும் தூக்கமாதலால் 'கண் வளர்ந்தும் அறிவுற்றும்' எனப்பட்டது; இது பற்றியே அத் தூக்கம் — யோக நித்திரை, அறிதுயில், விழிதுயில், துயிலாத் துயில், பொய்யுறக்கம் எனப்படும். "மால்வரையை **மறிதர** எடுத் தான்" என்றதனால், பசுக்கள் எட்டிப் புல்மேயலாம்படி கோவர்த் தந மலையைத் தலைகீழாக எடுத்துப் பிடித்தமையுந் தோன்றும். சிறு தென்றல்—மந்தமாருதம்.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—பிரிந்த நிலையில் ஆழ்வார் தாம் எம்பெருமானது காருண்யம் ஐச்வர்யம் யோக்யதை என்னும் இக்குணங்களின் நடையாட்டத்தைக் கண்டு ஆறியிருக் குந் தன்மையை அருளிச் செய்தலாம். மற்றவை வெளிப்படை. இனி, தோழிவார்த்தை யென்னும் பக்ஷத்தில், அவன் ஆச்ரிதர் களை ரக்ஷித்தருளும் பொருட்டுக் கடலிலே யோகநித்திரை கொண் டருள்வதும் பிரளயகாலத்தில் உலகத்தை வயிற்றில்வைத்துநோக்கு

வதும் கோவர்த்தநோத்தாரணம் பண்ணினமையுமாகிய மஹா குணங்களைச் சொல்லி அன்பர்கள் ஆழ்வாரை ஆற்றுகின்றதாக ஸ்வாபதேசங் கொள்க. .... .... .... (எச)

உலாகின்ற கெண்டை யொளியம்பு * எம்மாவியை யூடுருவக்
குலாகின்ற வெஞ்சிலை வாள்முகத்தீர்! * குனிசங்கிடறிப்
புலாகின்ற வேலைப் புணரியம்பள்ளி யம்மான் அடியார்
நிலாகின்ற வைகுந்தமோ?* வையமோ? நும்நிலையிடமே. (எரு)

| | |
|---|---|
| உலாகின்ற | (காதளவுஞ் சென்று மீண்டு) உலாவுகிற |
| கெண்டை | கெண்டை மீன் வடிவமான |
| ஒளி அம்பு | ஒளியையுடைய (கண்களாகிய) அம்புகள் |
| எம் ஆவியை ஊடு உருவ | எமது உயிரை ஊடுருவித் துளைக்கும்படி |
| குலாகின்ற | (அவ்வம்புகளைப் பிரயோகிப்பதற்கு) வளைகிற |
| வெம் சிலை | (புருவமாகிய) கொடிய வில்லையுடைய |
| வாள் முகத்தீர் | ஒளியுள்ள முகமுடையவர்களே! |
| குனி சங்கு இடறி | வளைந்த வடிவமுள்ள சங்குகளைக் கொழித்து எழுந்து |
| புலாகின்ற | மீன் நாற்றம் வீசப்பெற்ற |
| வேலை | அலைக்கிளர்ச்சியையுடைய |
| புணரி | கடலை |
| அம் பள்ளி | அழகிய படுக்கையிடமாகவுடைய |
| அம்மான் | ஸர்வேச்வரனது |
| அடியார் நிலாகின்ற | பக்தர்களான நித்யமுக்தர் விளங்கிவாழப் பெற்ற |
| வைகுந்தமோ | ஸ்ரீவைகுண்டலோகமோ |
| வையமோ | இந்த நிலவுலகமோ |
| நும் நிலை இடம் | உங்களது இருப்பிடம்? |

* * *—மதியுடம்படுக்கலுற்ற நாயகன் நாயகியின் தோழியரைப் பதிவினுதல் இது. நாயகியும் தோழியும் ஒருங்கிருந்த ஸமயம் நோக்கி நாயகன் அங்குச்சென்று தன் கருத்தைக் குறிப்பிப்பதற்கு ஒரு வியாஜமாக ஊர் வினவுகிறுனென்க.

காதளவும் நீண்டு கெண்டை மீன் வடிவமான கண்களாகிய அம்புகள் எமது உயிரை ஊடுருவித் துளைக்கும்படியாக அவ்வம்பு

களைப் பிரயோகிப்பதற்கு வளைந்திருக்கின்ற புருவமாகிய கொடிய வில்லையுடைய அழகிய முகமுடையவர்களே! என்று நாயகியையும் அவளது தோழியரையும் விளித்தபடி. கண்களை அம்பாகவும் புருவத்தைச் சிலையாகவும் வருணித்தல் கவிமரபு. கையிற்கொள்ளும் வில்லம்புகளால் வருத்தும் உலகவியல்பு போலன்றி முகத்திற்கொண்ட வில்லம்புகளால் வருத்துஞ் சிறப்புத் தோன்ற 'வாண் முகத்தீர்' எனப்பட்டது.

பின்னடிகள் பதிவிஞைவன. இவ்வுலகத்தவரினும் இவர்களது வடிவழகு மிக வேறுபட்டுச் சிறந்திருத்தலால் 'நும் நிலையிடம் வைகுந்தமோ?' என்றது; இவர்களைக் கண்டது இவ்வுலகத்திலாததலால் 'வையமோ?' என்றது.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—ஆழ்வாரது ஸ்வரூபத்தைக் கண்டு ஈடுபட்ட பாகவதர் அவரையும் அவரோடொத்த அவரது அன்பரையும் நோக்கி 'நுமது இடம் அந்த நித்யவிபூதியோ?' என்று வியந்துரைத்தலாம். [உலாகின்ற + வாண்முகத்தீர் !] பரந்த குளிர்ந்த நுண்ணிய விளக்கமுடைய உமது ஞானத்தை எமது நெஞ்சிலே பதியும்படி செலுத்தும் முகமலர்ச்சியுடையவரே! என விளித்தபடி. எம்பெருமானுடைய நித்யமுக்தர் வஸிக்கும் நித்யவிபூதியோ இந்த லீலாவிபூதியோ உமது இருப்பிடம்? ஆழ்வார், ஞானம் முதலியவற்றின் மஹிமையால் முக்தரென்று சொல்லும்படியும் அங்கு நின்று இங்கு வந்தவரொருவரென்று சொல்லும்படியும் உள்ள தன்மை இப்படி விகற்பித்து வினவுதற்குக் காரணம். அன்றியும், பூர்ணாநுபவம் கிடைக்கப் பெறாமையால் இவர் இவ்வுலகத்தவரோவென்றும், ஸம்ஸார ஸம்பந்தம் இல்லாமையால் அவ்வுலகத்தவரோவென்றும் சங்கை நிகழ்ந்ததென்க. .... .... .... .... .... (எரு)

இடம்போய் விரிந்திவ் வுலகளந்தான் எழிலார்தண்டுழாய் *
வடம்போதினையும் மடநெஞ்சமே! * நங்கள் வெள்வளைக்கே
விடம்போல் விரிதலிது வியப்பே வியன்தாமரையின்
தடம்போதொடுங்க * மெல்லாம்பலலர்விக்கும் வெண்திங்களே.

| | |
|---|---|
| இடம் போய் விரிந்து | எல்லாவிடங்களிலும் போய்வளர்ந்து |
| இ உலகு அளந்தான் | இவ்வுலகத்தை அளந்து கொண்டவனுடைய |
| எழில் ஆர் | அழகு நிறைந்த |
| தண் | குளிர்ந்த |
| துழாய் போது வடம் | திருத்துழாய் மலர்மாலையைப் பெறும் பொருட்டு |
| இனையும் | வருந்துகிற |
| மட நெஞ்சமே | பேதைமையுடைய மனமே! |
| வியல் தாமரையின் தட போது | சிறந்த பெரிய தாமரைமலர் |
| ஒடுங்க | குவிய |
| மெல் ஆம்பல் | புல்லிய ஆம்பலை |
| அலர்விக்கும் | அலரச் செய்கிற |
| வெள் திங்கள் | வெள்ளிய சந்திரன் |
| நங்கள் வெள் வளைக்கே விடம் போல் விரிதல் இது | நமது வெளுத்த வளைகளைக் கழலச்செய்வதற்காகவே விஷம் போல ஒளி பாவுதலாகிய இது |
| வியப்பே | ஓர் ஆச்சரியமோ? |

* * *—நாயகனது மாலைபெறாமல் வருந்துகின்ற நாயகி மதிக்கு இரங்கி நெஞ்சொடு கூறல் இது. எல்லாவிடங்களிலுஞ் சென்று வளர்ந்து இந்த வுலகத்தை அளந்து கொண்டவனான ஸர்வேச்வரனுடைய திருத்துழாய்மாலையைப் பெறும்பொருட்டு வருந்திக் கிடக்கிற நெஞ்சமே! சந்திரன், சிறப்பில்லாத ஆம்பலினிடத்து அன்பு வைத்து அதற்கு மகிழ்ச்சி தந்து சிறந்த தாமரையை அழிக்கும் அற்பகுண முடையவனாதலால் அவன் நமது அழகிய கைவளைகளைக் கழலச் செய்தல் ஒரு வியப்பன்று என்கிறாள். இது சந்திரோபாலம்பம். தாமரைக்குத் தலைவனான ஸூர்யன் கண் மறைந்த விடத்து அத்தாமரையை வருத்துகிற இவனுக்கு, தலைவனைப் பிரிந்த எம்மை வருத்துதல் இயல்பே என்றவாறு.

வடம்போதினையும்=‘வடம்போது இனையும்’ என்று பிரிப்பதன்றி, வடம்போதில் நையும் எனவும் பிரிக்கலாம்; பொருள் ஒன்றே. மடநெஞ்சமே!=துர்லபமான பொருளில் பற்றுவைத்ததோடு அப்பற்றை என்றும் விடமாட்டாமல் வீணே வருந்துகின்ற நெஞ்சமே! என்றவாறு. ‘விடம்போல் விரிதல்’ என்றது—விஷம் கொலைசெய்வது போல நம்மைக் கொலை செய்வதற்காகவே வந்து தோன்றுதல் என்றபடி: ஆகவே இவ்வுவமை—வருத்துந் தன்மை

பற்றியதேயன்றி நிறம்பற்றியதன்று. வியப்பே=ஏ—எதிர்மறை; வியப்பன்று என்றவாறு.

இதற்கு உள்ளுறை பொருளாவது—பேறு பெறாத நிலையில் தமக்குண்டான விவேகமும் பிரதிகூலமாய் வருத்துந் தன்மையை ஆழ்வார் தமது திருவுள்ளத்தை நோக்கிக் கூறுதலாம். [இடம் போய்+மடநெஞ்சமே!] ஸர்வஸுலபனை ஸர்வேச்வரனுடைய போக்யதை முதலியவற்றில் ஈடுபட்டுப் பூர்ணாநுபவங் கிடையாமை பற்றி வருந்தும் இளமனமே!. [வியல் தாமரையின் தடம்போது ஒடுங்க மெல்ஆம்பல் அலர்விக்கும் வெண்திங்கள்] சிறந்த பொருள்களை வெளிக்காட்டாமல் இழிந்த பொருள்களை வெளிக்காட்டுகிற விவேகம். *[நங்கள் வெள்வளைக்கே விடம்போல் விரிதல் இது வியப்பே.] நமது சுத்தமான அடிமைத் தன்மையையும் குலைப்பதாகப் பரவுகிற விது ஆச்சரியமோ! என்று ஆழ்வார் திருவுள்ளத்தில் க்லேசத்தோடு அருளிச்செய்தாராயிற்று. .... (எசு)

திங்களம்பிள்ளை புலம்பத்தன் செங்கோ லரசுபட்ட *
செங்களம்பற்றிநின் றெள்குபுன்மாலை * தென்பாலிலங்கை
வெங்களஞ்செய்த நம் விண்ணோர்பிரானார் துழாய்துணையா
நங்களை மாமைகொள்வான்* வந்துதோன்றி நலிகின்றதே(எஎ)

| | | | |
|---|---|---|---|
| திங்கள் | பிறைச் சந்திரனாகிய | செம் களம் | செவ்வானமாகிய (ரக்தத்தால்) சிவந்த போர்க்களத்தை |
| அம் பிள்ளை | அழகிய தனது இளம்பிள்ளை | பற்றி | அடைந்து |
| புலம்ப | (தந்தையை இழந்து) தனிப்பட | நின்று | (நீங்கமாட்டாமல் அங்கு) நின்று |
| செங்கோல் தன் அரசு பட்ட | சிவந்த ஒளியை எங்குந்தடையறச் செலுத்துதலாகிய செங்கோன்மையையுடைய தனது தலைவனான ஸூர்யன் இறந்தொழிதற்கிடமான | எள்கு | வருந்துகிற |
| | | புல் மாலை | சிறுமைப்பட்ட மாலைப் பொழுதாகிய பெண்பால், |
| | | தென் பால் இலங்கை | தெற்குத் திக்கிலுள்ள லங்காபுரியை |

| | | | |
|---|---|---|---|
| வெம் களம் செய்த | கொடியபோர்க் களமாகச் செய்த | துணை ஆ | தனக்குத் துணையாகக் கொண்டு |
| நம் விண்ணோர் பிரானார் | நமது தேவாதி தேவனுன தலைவனது | நங்களை மாமை கொள்வான் | நமது மாமைநிறத்தைக் கவர்ந்து கொள்வதற்கு |
| துழாய் | திருத்துழாயை | வந்து தோன்றி நலிகின்றது | எதிரில் வந்து தோன்றி வருத்துகின்றது. |

* * *—மாலைப்பொழுதுக்கு ஆற்றாத நாயகி இரங்கி யுரைக்கும் பாசுரம் இது. கீழ், "பால்வாய்ப் பிறைப்பிள்ளை" என்ற முப்பத்தைந்தாம் பாட்டின் முன்னடிகளை இப்பாட்டின் முன்னடிகட்கு ஸ்மரிப்பது. இதில், மாலைப்பொழுதை ஒரு மகளாகவும், ஸூர்யனை அவளது கணவனுகவும், சந்திரனை அவர்களது பிள்ளையாகவும், ஸூர்யனது சிவந்த கிரணங்களை அவனது செங்கோலாகவும், அந்த ஸூர்யன் அஸ்தமிப்பதை அக்கணவன் இறந்துபோவதாகவும், அவன் அஸ்தமிக்கிற திக்கினிடத்தை அவனிறந்து விழுந்தொழிந்த போர்க்களமாகவும், ஸூர்யாஸ்தமந காலத்து மேற்குத்திக்கில் அவன் கிரணஸம்பந்தத்தால் தோன்றுகிற செவ்வானத்தை அவன் போரில் பட்டு இறக்கும்போது அவனது ரக்தம் தெறித்த இடமாகவும் உருவகப்படுத்தியவாறு. கணவனைப் பிரிந்த இவளுக்கு, கண்ணிற்காணும் பொருளெல்லாம் கணவனை யிழந்ததாகத் தோன்றுதலால் இக்கற்பனை கூறினளென்க. இப்படி கண்டாரிரங்கத்தக்க நிலைமையை யடைந்த மாலைப்பொழுது, ஞாபக முகத்தால் வருத்தப்படுகிற திருத்துழாயைத் துணையாகக்கொண்டு நாயகியை வருத்துதலை, தனது மக்கள் தனிமைப்படத் தன் கணவனை யிழந்து வருந்திய தாடகை அகஸ்திய சாபத்தை உதவியாகக் கொண்டு முனிவர்களை எதிர்த்து வருத்துதல்போலக் கொள்க.

'புலம்ப' என்பதற்கு—தனிப்பட என்றும், வாட என்றும், அழ என்றும் உரையிடலாம். புலம்புதலென்பது தனித்தலென்னும் பொருளதாதலை "புலம்பே தனிமை" [தொல்காப்பியம்—சொல்லதிகாரம்—உரிச்சொல்லியல்—33.] என்பதனுல் அறிக. மாலைப்பொழுதிற் காணப்படும் பிறையின் பிரகாசக் குறையை வாடு

**தலாகவும், அக்காலத்**தில் பறவைகள் மிகுதியாக ஒலித்தலையாவது **கடலொலியையாவது** அழுகைக் குரலாகவுங் கருதுக. **இலங்கை வெங்களஞ்செய்த**=லங்கையிலுள்ள ராக்ஷஸர்களை வேரறும்படி **போர் செய்தழித்த** என்றபடி. 'வெங்களஞ்செய்தல்—ச்மசாநமாக்குதல்' என்று முரைப்பர். 'ஒரு பிராட்டியைப் பிரிந்திருக்கமாட்டாமல் தாம் பெரு முயற்சி செய்து கடல்கடந்து கொடும் பகையொழித்துக் கூடியருளியவர், இப்பொழுது எம்மை இங்ஙனம் உபேக்ஷிப்பதே!' என்ற இரக்கந்தோன்ற 'தென்பாலிலங்கை வெங்களஞ் செய்த நம் விண்ணோர் பிரானார்' என்றது. தேவர்களுக்குக் கொடுமை தீர்த்தவர் எமக்குக் கொடுமை தீர்த்திலரே! என்று குறிப்பிட வேண்டி, 'விண்ணோர் பிரானார்' என்றது.

**துழாய்துணையா**=மாலைப் பொழுதுக்குத் திருத்துழாய் துணையானதாகச் சொல்வதன் கருத்து, திருத்துழாய் நமக்குக் கிடையாததாய்க் கொண்டு நம்மை எப்படி வருத்துகின்றதோ அப்படியே இந்த மாலைப்பொழுது வந்து வருத்துகின்றது என்பதாம். **நங்களை**-நங்களது; உருபுமயக்கம்.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிப்பதற்கு உரியகாலம் ஸமீபித்து அவனது போக்யதையை நினைப்பூட்டித் தம்மை வருத்தும் விதத்தை ஆழ்வார் அருளிச்செய்தலாம். [திங்களம்பிள்ளை + எள்குபுன்மாலை] தமக்கு உண்டான ஜ்ஞாநப்ரகாசம் துயரமடையும்படி செவ்விதான மஹாவிவேகமுங் குலைந்து பக்தியே விஞ்சி ஆற்றாமை விளைக்கிற கொடிய இக்காலமானது. [தென்பால் + துழாய் துணையா] துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன சீலரான எம்பெருமானது போக்யதையை நினைப்பூட்டிக்கொண்டு. [நங்களை மாமைகொள்வான் வந்து தோன்றி நலிகின்றதே] எமது ஸ்வரூபத்தை மாற்றும்படி வருத்துகிறது என்கை. .... .... ... ... .... (எள)

**நலியும் நாகனை வீட்டிற்றும் * வாணன்திண்டோள் துணித்த**
**வலியும் பெருமையும் யாம்சோல்லும்நீர்த்தல்ல * மைவரைபோற்**
**பொலியுமுருவிற்பிரானார் புனைபூந் துழாய்மலர்க்கே**
**மெலியு மடநெஞ்சினார் * தந்துபோயின வேதனையே.** (எஅ)

| | |
|---|---|
| (எமது நாயகனார்) | |
| நலியும் நரகனை வீட்டிற்றும் | (உலகத்தை) வருத்துகிற நரகாசுரனைக் கொன்றதும் |
| வாணன் திண் தோள் துணித்த வலியும் | பாணாஸுரனது வலிய தோள்களை அறுத்திட்ட தன்னிய வலிமையும் |
| பெருமையும் | (அப்போரில் வெளிக்காட்டிய) தலைமையும் |
| யாம் சொல்லும் நீர்த்து அல்ல | (எளியோமான) யாம் புகழ்ந்து சொல்லி முடிக்குந் தன்மையனவல்ல; |
| மை வரை போல் பொலியும் உருவின் பிரானார் | அஞ்சனகிரிபோல் விளங்குகிற வடிவத்தையுடைய அத்தலைவரது |
| புனை பூ துழாய் மலர்க்கே | சாத்திய அழகிய திருத்துழாய்ப் பூமாலையைப் பெறுதற் காகவே |
| மெலியும் | ஆசைப்பட்டு வருந்துகிற |
| மட நெஞ்சினார் | (எமது) பேதை நெஞ்சு |
| தந்து போயின | (தான் எம்மை விட்டுப் போம் பொழுது எமக்குக்) கொடுத்துவிட்டுப் போனவை |
| வேதனை | இத்துன்பங்கள். |

* * *—பிரிவாற்றாத தலைவி தலைவனது ஆற்றலைக் கருதி நெஞ்சழிந்து இரங்கும் பாசுரம் இது. நானோவென்னில் எனது நாயகருடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களையும் ப்ரபுத்வத்தையும் நோக்கி 'நமக்கு அவர் துர்லபர்' என்று கருதி ஒருவாறு காதலையடக்கி ஆறியிருக்குந் தன்மையுடையேன்; எனது மனமோ அங்ஙனம் ஆறியிராமல் அவனது மாலையைப் பெறுதற்கு ஆசைப்பட்டு அது கிடையாமையால் எனக்கு இப்படிப்பட்ட வருத்தத்தை விளைத்துத் தான் அவனிடம் போய்விட்டது என்று இரக்கத்தோடு உரைத்தாளாயிற்று. நரகாஸுரனைக் கொண்டு பதினாறாயிரத்தொருநூறு கன்னிகைகளை மணஞ்செய்துகொண்டவரும், பாணாஸுரனது தோள்களைத் துணித்து அவன் மகளான உஷை தமது பேரனான அநிருத்தனை வெளிப்படையாக மணஞ் செய்துகொண்டு கூடி வாழும்படி செய்தவருமான தலைவர் அவர்பக்கற் காதலியாகிய என்னைவந்து அடைந்து இன்பமடைவிக்கவேண்டாவோ வென்பாள் அவ்விரண்டு வரலாறுகளையும் எடுத்துக் கூறினாள். தாமே தேவாதி

தேவரென்று தோன்றும்படி வெளியிட்ட வீர்யசக்தியை 'பெருமை' என்றது.

**நாகாசுரனைக் கொன்ற** வரலாறு வருமாறு:—எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக்கோட்டாற் குத்தியெடுத்த பொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்திற் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகலப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம்புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வதத்தையும் தேவர் தாயான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான **ஸத்யபாமை** யுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தை யடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான **முரன்** முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளி, அழித்து, அவன் பல திசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு அந்த நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதி தேவியின்) குண்டலங்களை அவ்வதிதி தேவிக்குக் கொடுக்கும் பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள் மேலேறிக்கொண்டு தேவலோகத்துச் செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத்தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லை, யாதலின், அதனைக்கண்டு பாமைவிருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'பிராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவி சார்த்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்

த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப்போர்செய்த இந்திரனை ஸகல தேவ ஸைந்யங்களுடன் சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமை வீட்டுப்புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன்.

**வாணன் திண்டோள் துணித்த** வரலாறு வருமாறு:—பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளங்கொட்ட, சிவபெருமான் அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங்கைகளையும் நெருப்பு மதிலையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல்செய்திருத்தல் முதலிய வரங்களையும் தந்தருளினன்; அந்தப் பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள் ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய், தனது உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய **அநிருத்தன்** என்றறிந்துகொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்யை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தாழ்வானைத் தூக்கிக்கொண்டு வந்து, அந்தஃபுரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த பாணாஸுரன் தன் ஸேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாரும் கலங்கியிருந்தபோது, நாரதமஹாமுனிவனால் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் பெரிய திருவடியை நினைத்தருளி உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோளின்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூடப்பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் சமீபத்திற் காவல்செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமத

கணங்கள் எதிர்த்துவர, அவர்களை யெல்லாம் அழித்து, பின்பு சிவனால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக்காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை உண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு, சிவனுடைய அநுசரராகையால் பாணாசுரனுடைய கோட்டையைச் சூழ்ந்து காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவனும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தை ப்ரயோகித்துச் சிவனை ஒன்றுஞ்செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான ஸுதர்சநமென்கிற தனது திருவாழியாழ்வானை யெடுத்து ப்ரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுகஅறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதற்க விருக்கையில் பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்குகைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம் புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன் கண்ணபிரான்.

வீட்டிற்று = உயிர் விடுவிடுத்தது; இறந்தகாலத் தொழிற்பெயர். விடு என்பதன் விகாரமாகிய வீடு என்பதன் பிறவினையான 'வீட்டு'—பகுதி; று—விகுதி. இனி, வீழ்த்திற்று என்பது வீட்டிற்று என மரூஉ வாயிற்றென்பாருமுளர். நீர்த்து = நீர்மை என்னும் பண்பின் அடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று. மை வரை = மேகம் படிந்த மலை என்னவுமாம். பாட்டின்முடிவில் 'வேதநா' என்னும் வடசொல் ஐயிருகந்திரிந்தது. வலியின் பெருமையும், என்றும் பாடமுண்டாம்.

ஆச்ரித விரோதிகளை அழிக்குங்குணம் எம்பெருமானுக்கு இயல்பாயிருக்கவும் தாம் அவனருளால் தமது பிரதிபந்தங்கள் ஒழிய அவனது போக்யதையை அநுபவிக்கப் பெறாமல் மனங்

கல்கி அதனால் வருந்துகிறபடியை ஆழ்வார் அருளிச் செய்தல் இதற்கு உள்ளுறை பொருள். எம்பெருமானது விரோதி நிரஸந சக்தியும் பாரத்வ மஹிமையும் எம்போலியர்க்கு வரையறுத்துச் சொல்லக்கூடியவையல்ல; வேதங்களுக்கும் எட்டாதவை; அப்படிப்பட்ட ஸர்வேச்வரனைக்கிட்டி அநுபவிக்கப்பெறாதவளவில் அவனது போக்கையில் மனஞ்செலுத்துதலும் ஆற்றாமைத்துயரையே மூட்டுகின்றதென்றவாறு. .... .... .... .... (எ௰)

வேதனை வெண்புரிநூலனை * விண்ணோர் பரவநின்ற
நாதனை ஞாலம் விழுங்கு மநாதனை * ஞாலந்தத்தும்
பாதனைப் பாற்கடற் பாம்பணைமேற் பள்ளிகொண்டருளும்
சீதனையே தொழுவார் * விண்ணுளாரிலுஞ் சீரியரே. (எக)

| | |
|---|---|
| வேதனை | வேதம் வல்லவனும் |
| வெண் புரி நூலனை | சுத்தமான யஜ்ஞோபவீத முடையவனும் |
| விண்ணோர் பரவ நின்ற நாதனை | மேலுலகத்தார் துதிக்க அவர்களுக்குத் தலைவனாய் நின்றவனும் |
| ஞாலம் விழுங்கும் அநாதனை | (பிரளயகாலத்திலே) உலகத்தை வயிற்றினுள் வைத்து நோக்கி (அங்ஙனம் தன்னை நோக்குதற்கு) ஒரு தலைவனை யுடையனாகாதவனும் |
| ஞாலம் தத்தும் பாதனை | உலகத்தை யளந்த திருவடியை யுடையவனும் |
| பால் கடல் பாம்பு அணை மேல் | திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வானாகிய படுக்கையின் மேல் |
| பள்ளி கொண்டு அருளும் | யோகநித்திரை கொண்டருளுகிற |
| சீதனையே | குளிர்ந்த தன்மையுடையவனுமான எம்பெருமானையே |
| தொழுவார் | இடைவிடாதவனை யநுபவிக்கப் பெற்றவர் |
| விண் உளாரிலும் சீரியர் | பரமபதத்திலுள்ளவர்களிலுஞ் சிறப்புடையராவர். |

* * *—நாயகனைப் பிரியாத பாக்கியம் பெற்ற மகளிர்களின் சிறப்பைக் கூறித் தலைவி இரங்கும் பாசுரம் இது. வேதம் வல்லவனைப் சுத்தமான யஜ்ஞோபவீத மணிந்தவனைப் மேலுலகத்தார் துதிக்குமாறு அவர்கட்குத் தலைவனாக நிற்பவனைப் பிரளய காலத்தில் உலகங்களை வயிற்றினுள் வைத்து நோக்குபவனைத் தனக்

கொரு தலைவனையுடையனாகவும் உலகத்தையளந்த திருவடியை யுடையவனும் திருப்பாற் கடலில் சேஷசாயியாகி யோகத்துயில் கொண்டருள்பவனுங் குளிர்ந்த தன்மையை யுடையவனுமான எம் பெருமானையே இடைவிடாது வணங்கி யநுபவிப்பவர் யாரோ, அவர்கள் பரமபதத்தில் வாழும் நித்ய முக்தர்களிற் காட்டிலும் சிறப்புடையாராவர் என்கிறது. நாயகனுடைய பிரிவிலே தனித்து மிக வருந்துகிற நாயகி, தன்னை யாற்றுவிக்கிற தோழியை நோக்கி 'நாயகனைப் பிரியாமல் அவனுடன் என்றுங் கூடி வாழ்பவர் முத்தி யுலகத்துப் பேரின்பம் நுகர்வாரினுஞ் சிறப்புடையாராவர்' என்ற இதனால் 'அப்படிப்பட்ட பாக்ய விசேஷத்தை யான் பெற்றிலனே!' என்று தன் ஆற்றாமை மிகுதியை வெளியிட்டாளாயிற்று.

ஸ்ரீதேவியும் பூதேவியும் ஒருகாலும் விட்டுப் பிரியாது திருவடி வருடிக் கூடிக் குலவி யின்புற அவர்களுடன் அறிதுயிலமருந் தன்மையை 'பாற்கடல் பாம்பணைமேற் பள்ளிகொண்டருளுஞ் சீதனை' என்றதனால் குறிப்பிட்டு, அப்படிப்பட்ட இடையீடில்லாப் போகம் தனக்குக் கிடையாமையைப்பற்றிப் பொறாமையும் வருத்தமுங் கொண்டமை கொள்க.

'வேதன்' என்பதற்கு—வேதம் வல்லவன் என்றும், வேதங்களாலே பிரதிபாதிக்கப்படுபவன் என்றும் பொருள் கொள்ளலாம். வெண்புரிநூல்—வெண்ணிறமான முப்புரிநூல். வைதிக புருஷனென்கைக்கு அடையாளமான சுத்த யஜ்ஞோபவீதத்தையுடையவன் என்றவாறு. "வேதமுதல்வன் விளங்கு புரிநூலன்" [8-4-2.] என்ற பெரிய திருமொழியுங் காண்க. "ஞாலத்தும் பாதன்" என்பதற்கு—'உலகத்தை யளந்த திருவடியையுடையவன்' என்று பொருள் கொள்வதன்றியே, பூமிக்கு உற்பத்திஸ்தானமான திருவடியை யுடையவன் என்றும் பொருள் கொள்வர்; திருமாலின் திருவடியினின்று பூலோகமுண்டாயிற்றென்று வேதங் கூறும்; 'பத்ப்யாம் பூமி:' என்பது புருஷஸூக்தம். சீலன்—அருளுடையானென்றபடி.

இடைவிடாது பகவதநுபவம் செய்வதற்கென்றே வாய்த்த இடமான பரமபதத்தில் பகவதநுபவத்திற்கு எவ்வகையான

இடையூறுமில்லையாதலால் அங்கிருந்து கொண்டு பகவானை யநுபவித்தல் வியப்பன்று ; உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலம் பகவதநுபவத்திற்கு நேர்விரோதியாதலால் அப்படிப்பட்ட இந்த இருள் தருமா ஞாலத்திலிருந்து கொண்டே அங்ஙனம் நித்யாநுபவஞ் செய்தலில் மிக அருமை யுண்டாதலால் அவ்வருமையைப் போக்கி எம்பெருமானை இடைவிடாது அநுபவிக்குமவர்களை நித்ய முக்தர்களினும் மேம்பட்டவராகக் கூறத்தடையுண்டோ? ஒரு சிறந்த காரியத்தைப் பிரதிபந்தகமில்லாத விடத்தில் தலைக்கட்டுதலிற் காட்டிலும் பிரதிபந்தகம் மலிந்த விடத்தே தலைக்கட்டுதல் வியக்கத்தக்கதன்றோ? எம்பெருமான் பக்கல் ஈடுபாடு கொண்ட ஆழ்வார் மற்றொன்றிற் சிந்தை செலுத்தாது அப்பெருமானையே மனமொழி மெய்களால் பூர்ணாநுபவஞ் செய்யப் பெற்றவர் இவ்வுலகத்திலிருந்து கொண்டே நித்யஸூரிகளினும் மேம்பட்டவராவர் என்று அருளிச் செய்தாராயிற்று. அப்படிப்பட்ட அநுபவம் தமக்குக் கிடைக்கவில்லையே! என்று வருந்துகின்றமையும் இதில் தோன்றும். .... ... .... (௭௯)

சீரரசாண்டு தன்செங்கோல் சிலநாள் செலீஇக்கழிந்த *
பாரரசொத்து மறைந்தது நாயிறு * பாரளந்த
பேரரசே! எம் விசும்பரசே! எம்மை நீத்துவஞ்சித்
தோரரசே! யருளாய் * இருளாய்வந் துறுகின்றதே. (௮௰)

| | |
|---|---|
| சீர் அரசு ஆண்டு | சிறப்பாக ராஜ்ய பரிபாலனம் பண்ணி |
| தன் செங்கோல் சிலநாள் செலீஇ | தனது நீதி தவறாத ஆஜ்ஞையைச்சில காலம் (உலகத்திற்) செலுத்தி |
| கழிந்த | பின்பு இறந்தொழிந்த |
| பார் அரசு | ஸார்வபௌமனான ஒரு சக்ரவர்த்தியை |
| ஒத்து | போன்று |
| ஞாயிறு | ஸூர்யன் |
| மறைந்தது | அஸ்தமித்தான் ; |

| | |
|---|---|
| பார் அளந்த | உலகத்தை அளந்து கொண்ட |
| பேர் அரசே | சிறந்த தலைவனே ! |
| எம் விசும்பு அரசே | பரமபதத்துக்கு நாயகனான எம்கோமானே ! |
| எம்மை நீத்து வஞ்சித்த | எம்மைத் தனியே பிரித்து வஞ்சனை செய்த |
| ஓர் அரசே | ஒப்பற்ற நாதனே ! |

| | | | |
|---|---|---|---|
| அருளாய் | (இங்ஙனம் நீங்கியிராதபடி எமக்கு வந்து) அருள்புரிவாய்; (அங்ஙனம் அருள் புரியாமையினால்) | இருள் ஆய் வந்து உறுகின்றது | இருள் மிக்கதாய் வளர்ந்து கொண்டு வந்து சூழ்ந்து (எம்மை) வருத்துகிறது. |

* * *—பிரிவாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கியுரைக்கும் பாசுரம் இது. இப்பாட்டில் நாயகனை நோக்கின விளியுள்ளதனால், உருவெளிப்பாட்டில் கண்ணெதிரில் நாயகன் காணப்பட்டானென்றும் அன்னவனை நோக்கி இது கூறுகின்றதென்றுங் கொள்க. ஸூர்யன் உலகமுழுவதும் பகலெல்லாம் தடையறத் தனது செய்ய கிரணத்தைச் செலுத்திப் பின் அப்பாற்சென்றபடியை "சீரரசாண்டு தன் செங்கோல் சில நாள் செலீஇக் கழிந்த பாரரசொத்து மறைந்தது ஞாயிறு" என்றார். ஓரரசன் சிறப்பாக ராஜ்யத்தை அரசாட்சி செய்து தனது நீதி தவறாத ஆஜ்ஞையைச் சிலகாலம் உலகத்திற் செலுத்திப் பிறகு இறந்தொழியுமாபோலே யிருக்கிறதாயிற்று ஸூர்யாஸ்தமனம். நாயகனே! இப்பொழுது நீ என்னை வந்து சேர்ந்திடாயாயின் அரசனில்லாத ராஜ்யத்தில் கணவனையிழந்த பெண்மகள் கொடியரால் படும்பாட்டை யான் இருளினால் படுவேன் என்பது தோன்ற இது சொல்லப்பட்டதென்க. இருளின் கையிலே யகப்பட்ட ஸூர்யனையும் தன்னையும் மீட்கைக்கு மஹாபலிகையிலே யகப்பட்ட உலகத்தை மீட்டவன் வேண்டுமென்பாள் பாரளந்த பேரரசை விளித்தாள். எம் விசும்பரசே!—பரமபதத்தைப் போலவே எம்மையும் அநந்யார்ஹ சேஷமாக்கிக்கொள்ளத்தக்கவனே! என்றபடி. முதலில் 'உன்னை விட்டுப் பிரியவே மாட்டேன்' என்று சொன்னதும், பின்பு 'இன்னகாலத்தில் வருவேன்' என்று காலங்குறித்துக் கூறினதும் இரண்டும் பொய்யாம்படி தன்னைப் பிரிந்து சென்று நெடுநாள் வாராது விளம்பித்தது பற்றி "எம்மைநீத்து வஞ்சித்த ஓரரசே" என்றாள். இவ்விடத்து 'ஓரரசே!' என்றது இப்படியும் ஒரு தலைவனுண்டோ வென்று குறை கூறியவாறு. "எம்மை நீத்து வஞ்சித்த ஓரரசே!" என்பதற்கு—"என்னை உபேக்ஷித்து உன்னைக் காட்டாதிருக்கிற இந்த ஸ்வபாவத்திலே முடிசூடி யிருக்கிறவனே!" என்று விசேஷார்த்தம் உரைப்பர். 'வஞ்சித்த' என்னும் பெயு

ரெச்சத்தின் ஈறு தொக்கியிருப்பதால் 'வஞ்சித்தோராசே'; சொல்லிசை யளபெடை! என்றாயிற்று. செலீஇ=செலுத்தி; இங்கு அளபெடை அலகுபெறவில்லை.

எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கப் பெறாமையாலே தமது விவேகப்ரகாசங்குலைந்து மோஹாந்தகாரம் மேலிடுகிறபடியை எம்பெருமானைக் குறித்து இதனால் ஆழ்வார் விண்ணப்பஞ் செய்தாராயிற்று. இங்கே நம்பிள்ளையீடுகாண்மின்;—"இத்தால் ஸம்ஸாரத்தில் விருப்பு அஜ்ஞாநம் வந்து மேலிடும்படியிருக்கையாலே கடுக இவ் விருப்பைக் கழித்துத் தரவேணுமென்று அருளிச்செய்கிறார்." ....

**உறுகின்ற கன்மங்கள் மேலன வோர்ப்பிலராய் * இவளைப்**
**பெறுகின்றதாயர் மெய்ந்நொந்து பெறார்கொல் * துழாய் குழல்வாய்த்**
**துறுகின்றிலர் தொல்லை வேங்கடமாட்டவுஞ் சூழ்கின்றிலர் ***
**இறுகின்றதா லிவளாகம் மெல்லாவி யெரிகொள்ளவே. (அக)**

ஓர்ப்பு இலர் ஆய் — (இவளுக்கு நேர்ந்துள்ள நோயின் தன்மையையும் அதன் காரணத்தையும் அதனைத் தீர்க்கும் உபாயத்தையும்) ஆராய்ந்து தெளிதலில் லாதவர்களாய்

உறுகின்ற — (இவள் தாய்மார் விடாமல்) பொருந்தி நடத்துகிற

கன்மங்கள் — (வெறியாட்டு முதலிய) காரியங்கள்

மேலன — மேன்மேலும் உண்டாகாநின்றன;

இவளை பெறுகின்ற தாயர் — இவளைப் பெற்று வளர்க்கிற தாய்மார்

மெய் நொந்து பெறார் கொல் — உடம்பு வருந்திப் பெற்றாரில்லையோ?

குழல் வாய் — (இவளது) கூந்தலிலே

துழாய் — (எம்பெருமானது) திருத்துழாயை

துறுகின்றிலர் — சூட்டுகின்றாரில்லை;

தொல்லை வேங்கடம் — பழமையான திருவேங்கடமலையிலே

ஆட்டவும் — இவளைக் கொண்டுபோய்ச் சேர்க்கவும்

சூழ்கின்றிலர் — ஆலோசிக்கின்றாரில்லை;

இவள் ஆகம் — இவளது உடம்பு

மெல் ஆவி எரி கொள்ள — மென்மையான உயிரை விரஹத்தீக் கவர்ந்து கொள்ளும்படி

இறுகின்றது — முடிகிறதுவாகாநின்றது.

* * *—வெறிவிலக்கத் தொடங்கிய தோழி இரங்கிக்கூறும் பாசுரம் இது. தலைமகள், திருமாலாகிய தலைமகன் விஷயமான வேட்கைநோய் கொண்டு மேனி மெலிந்து வடிவுவேறுபட, அது நோக்கிய தாய்மார் 'இது முருகக்கடவுள் ஆவேசித்ததனாலானது' என்று மாறாகத் துணிந்து அதற்குப் பரிஹாரமாக வேலனைக் கொண்டு வெறியாடுவித்தல், ஆடு பலிகொடுத்தல், கள்ளிறைத்தல், இறைச்சிதூவல், கருஞ்சோறு செஞ்சோறுவைத்தல் முதலிய காரியங்களை இடைவிடாது ஒன்றன்மேலொன்றாகச் செய்யத் தொடங்க, நோயொன்றும் மருந்தொன்றுமாதலால், தான் காதலித்த நாயகனுடைய தகுதிக்கு ஏற்றிராத அக்காரியங்களை நோக்கி நாயகி மேன்மேலும் மிக வருந்த, அது நோக்கித் தலைவி நினைவறிந்து வெறிவிலக்கவந்த தோழி, அத்தாய்மார் செவிப்பட முன்னிலைப் படர்க்கையாகக் கூறியதாமிது. இப்போது இவளுக்கு நேர்ந்துள்ள நோயின் ஸ்வரூபத்தையும் அதன் காரண மின்னதென்பதையும் அதனைத் தீர்க்குமுபாயம் இன்னதென்பதையும் ஆராய்ந்து தெளிய கில்லாத இவள்தாய்மார் ஓயாது நடத்துகிற வெறியாட்டு முதலிய காரியங்கள் மேன்மேலும் உண்டாகாநின்றன; அந்தோ!, இவளைப் பெற்றதாய் பெறுகின்ற பொழுது மெய்ந்நொந்து பெற்றவளாயும், வளர்க்கிற செவிலித்தாயர் தாம் தாம் வருந்திப் பிள்ளை பெற்றவராயுமிருந்தால் இவள் பிழைக்கும்வழியிலே முயலாது இங்ஙனம் இவளை இறக்கைக் குறுப்பான வழியல்லாவழியிலே தலையிடுவார்களோ? விபரீதமான காரியங்களையே இவர்கள் செய்யக் காண்கை யாலே இவளை மெய்ந்நொந்து பெறாதே எங்கேனும் விலைகொடுத்து வாங்கினர்போலும். எம்பெருமானது திருத்துழாயை முடியிற் சூட்டுதலும் அவனது ஹாஸஸ்தாநமான திருவேங்கடமலைக்கு அழைத்துக் கொண்டு போதலுமே இந்நோய்க்கு ஏற்ற பரிஹாரமாயிருக்க அவையொன்றுஞ் செய்யக் காண்கிறிலோமே!. ஸுகுமாரமான இவளது உயிரை விரஹாக்நி கவர்ந்து கொள்ளும்படி இவட்குத் தளர்ச்சி மேன்மேல் மிகுகின்றதே! என்ன பரிதாபம்!! என்றாளாயிற்று.

"ஓர்ப்பு இலராய்" என்பதற்கு—'இவளுக்கு இனி ஆகக் கடவனவான நிலைமைகளை ஆராயாதவர்களாய்' என்று முரைப்ப.

எம்பெருமானுகந்தருளின திவ்யதேசத்தை இவள்தாபந் தீர்ப்பதற்கு உரியதொரு பொய்கையாக நினைத்தனளாதலால் 'வேங்கடம் ஆட்டவும்' என்றது. அன்றி 'வேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்' என்பதற்கு—திருவேங்கடமலைக்கு இவளை யழைத்துக் கொண்டு வருகிறேனென்று பிரார்த்தனை பண்ணிக்கொண்டு அதற்கு உரிய ஆவேசத்தை ஆடுவிக்க ஆலோசிக்கின்றாரில்லை என்றாவது, திருவேங்கடத்திலே இவளை நடையாடச் செய்தற்கு எண்ணுகின்றிலர் என்றாவது உரையிடலாம். 'இம்மகளுக்கு இந்த நோய்தீர்ந்தால் இவளைத் திருவேங்கடமலைக்கு அழைத்துக் கொண்டுவந்து ஸேவை பண்ணுவிக்கிறோம்' என்று ஒரு பிரார்த்தனை செய்து கொள்ளலாமே, அது செய்யக் காணோமே; வீண் செயல்களையே செய்து நோயை வளர்த்துக் காலங்கழிக்கின்றனரே! என்று இரங்கிக் கூறியவாறு.

* இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—ஆழ்வாரை ஆற்றுவிக்கவேணுமென்று ஞானிகள் தங்கள் பரிவால் வேறுசிலவிதமான பரிஹாரங்களைச் செய்யப்புக, இவரது தன்மையையறிந்த அன்பர்கள் இவராற்றாமையைத் தணிக்கும் வழிகளில் இழியாமல் வேறு வழிகளில் இழிந்து என்னபயனென்று வெறுத்து உரைக்கும் வார்த்தையாம். பகவத்ப்ரஸாதமும் திவ்யதேச வாஸமுமே இவராற்றாமைக்குப் பரிஹாரம்; அவைசெய்யாமையால் இவர்க்குத் தளர்ச்சி மேன்மேல் மிகுகின்றது என்கை. .... (அக)

எரிகொள் செஞ்ஞாயி றிரண்டுடனே யுதயம்மலைவாய் *
விரிகின்ற வண்ணத்த வெம்பெருமான்கண்கள் * மீண்டவற்றுள்
எரிகொள்செந்தீ வீழசுரரைப்போல வெம்போலியர்க்கும்
விரிவ சொல்லீரிதுவோ? * வையமுற்றும் விளரியதே. (அஉ)

| | | | |
|---|---|---|---|
| எரி கொள் | வெப்பத்தைக் கொண்ட | விரிகின்ற | தோன்றிவிளங்குகிற |
| செம் ஞாயிறு இரண்டு | சிவந்த இரண்டு ஸூர்யமண்டலம் | வண்ணத்த | தன்மை போன்ற தன்மையை யுடைய |
| உடனே | ஒருங்கே | எம்பெருமான் கண்கள் | எம்பெருமானது திருக்கண்கள்,— |
| உதயமலைவாய் | உதய பர்வதத்திலே | அவற்றுள் | அந்த ஸூர்ய வடிவங்களிலே |

| | |
|---|---|
| எரி கொள் | ஜ்வலித்துக்கொண்டு தோன்றுகிற |
| செம் தீ | சிவந்த நெருப்பிலே |
| மீண்டு வீழ் | (வேறு புகலிடமில்லாமையால்) மீண்டும் வந்து விழுந்து இறக்கிற |
| அசுரரை போல | (பகைவரான கொடிய மந்தேஹரென்னும்) அஸுரர்களுக்குப் போல |
| எம் போலியர்க்கும் | (அநுகூலரான மெல்லிய) எம்போன்றவர்களுக்கும் |
| விரிவ | தாபஞ் செய்வனவாய்ப் பரவுகின்றன; |
| வையம் முற்றும் விளரியது | (எம்பெருமான்) உலகம்முழுவதையும் விருப்பத்தோடு செழிக்கச் செய்யும் விதம் |
| இதுவோ | இதுதானோ? |
| சொல்லீர் | சொல்லுங்கள். |

* * *—உருவெளிப்பாடுகண்ட நாயகி நாயகனது கண்ணழகுக்கு இரங்கியுரைக்கும் பாசுரம் இது. உருவெளிப்பாடாவது- பிரிந்து சென்ற நாயகனிடத்தில் இடைவிடாது கருத்தை ஊன்ற வைத்த மனத்தின் நினைப்புமிகுதியால் அவனது வடிவம் வெளிப்பாடாய்க் கண்ணுக் கெதிரே காணப்படுதல். அங்ஙனம் காணப்பட, அவ்வடிவத்தின் கண்ணழகிலே யீடுபட்ட நாயகி, அவ்வடிவம் கைக்கு எட்டாது மறைந்த பின்பு, அக்கண்ணழகு தன் காதல் நோயை மிக வளர்த்துத் தன்னை மிக வருத்துகின்றமையைத் தோழியரை நோக்கிச் சொன்னது இது. வெவ்விய இரண்டு ஸூர்ய மண்டலங்கள் உதயகிரியில் ஏக காலத்தில் தோன்றி விளங்குகிற தன்மை போன்ற தன்மையையுடையனவான எம்பெருமானது திருக்கண்களானவை எமக்குத் தாபஹேதுவாயிரா நின்றன. அந்த ஸூர்ய வடிவங்களிலே ஜ்வலித்துக்கொண்டு தோன்றுகிற சிவந்த நெருப்பிலே வேறு கதியற்று விழுந்து சாகின்ற மந்தேஹரென்னும் அசுரர்களுக்கு அவை எப்படி தாபகரங்களாயிருக்கின்றனவோ அப்படியே அநுகூலரான எம்போன்றவர்களுக்கும் தாபஞ் செய்வனவாய்ப் பரவுகின்றன; எம்பெருமான் உலகமுழுவதையும் விரும்பிக் காத்தருள்கிறானென்று புகழ்பெற்றிருக்குந் தன்மைக்கு இதுவோ ஏற்றது! என்றாளாயிற்று.

தைத்திரீய ஆரண்யகம் என்னும் வேத பாகத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் இரண்டாவது அநுவாகத்தில் ஓதப்பட்டுள்ள

ஒரு வரலாறு இப்பாட்டின் மூன்றாமடியில் கொள்ளப்பட்டுள்ளது;- மந்தேஹாருண மென்னும் த்வீபத்தில் வாழும் மந்தேஹ ரென்னும் அசுரர்கள் உக்ரமான தவத்தைச் செய்து பிரமனிடத்து வரம் பெற்று அதனாற் செருக்கடைந்து எப்பொழுதும் ஸூர்யனைவளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர்செய்கின்றன ரென்றும், அந்தணர் முதலியோர் ஸந்த்யா காலங்களில் மந்த்ரபூர்வகமாகக் கையி லெடுத்துவிடும். அர்க்க்ய தீர்த்தங்கள் வஜ்ராயுதம் போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால் தள்ளி ஸூர்யனுடைய ஸஞ்சாரத்துக்குத் தடையில்லாதபடி செய்கின்றன வென்றும், அந்தணர் முதலியோர் செலுத்தும் அர்க்யத்தின் ஆற்றலால் ஸூர்யமண்டலத்தினிடையே ஒரு செந்தீ எழுந்து ஜ்வலிக்க, (விளக்கில் விட்டில்போல்) அத்தீயில் அசுரர்கள் விழுந்து மாண்டு போகின்றன ரென்றும் ஓதப்பட்டுள்ளது.

இரண்டு ஸூர்யமண்டலம் ஏககாலத்திலே ஒருதயகிரியில் உதித்தெழுந்து விளங்கினாற் போன்ற எம்பெருமான் கண்கள், வலியராரான அவ்வசுரர்க்குப்போல, மெல்லியலாரான எமக்கும் தாபஞ் செய்கின்றனவே; வலியாரையழித்து மெலியாரைக் காத்தலன்றோ முறைமை; எம்பெருமான் உலகமுழுவதையும் அன்போடு செழிப்படையும்படி காத்தருள்கின்றன னென்பது இவ்வண்ணமேயோ? என்று பராங்குச நாயகி வருந்திக் கூறுகின்றாள்.

'ஏககாலத்திலே இரண்டு ஸூர்யமண்டலம் உதித்தாற் போல்' என்றது இல்பொருளுவமை (அபூதோபமை). அரக்கராகிய மந்தேஹரை அசுரரென்றது—கொடுமையில் ஒற்றுமையால். அசுரரை- உருபுமயக்கம்; அசுரர்க்கு எனப்பொருள்படுதலால். 'உதயம்மலை'= மகரவொற்று தளைபற்றிய விரித்தல் விகாரம்.

மந்தேஹர்கள் எரிகொள் செந்தீயில் வீழ்ந்து அழிதல் எப்பொழுதும் நிகழ்தலால் அத்தன்மையை 'மீண்டு' என்பதனாற் குறித்த தென்னலாம்; மீண்டும்மீண்டும் என்றவாறு. அன்றியே, மீண்டு=(ஸூர்யனை வருத்துதலாகிய தம்தொழிலில் நின்றும்) நீங்கி என்னவுமாம். 'விரிவ' என்பது வினைமுற்று. 'விளரியது' என்பதை 'விளரி' என்பதன்மேற்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்றென்று

கொண்டால் அகரம் சாரியையாம்; 'விளர்' என்பதன்மேற் பிறந்த தென்று கொண்டால் இகர அகரம் இரண்டும் சாரியையாம்; விளரி யென்றசொல்—மிக்க விருப்பமென்னும் பொருளதாதலை "$ விள ரியே யிளமை யாழிலோர் நரம்பு யாழ் நீள் வேட்கை" என்றதனு லும், விளர் என்பது செழிப்பென்னும் பொருளதாதலை "† விள ரென்ப திளமைதானே வெளுப்பொடு கொழுப்பு மாகும்" என்ற தனுலும் உணர்க.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—எம்பெருமான் முதலில் அகக்கண்ணுக்கு இலக்கான பொழுது தம்பக்கல் வைத்த கடாக்ஷந்தானே பின்பு பூர்ணாநுபவம் பெருமையால் வருந்துமள வில் தமக்குப் பரிதாப ஹேதுவாகத் தோன்றும்விதத்தை ஆழ்வார் அன்பரோடு கூறுதலாம். எம்பெருமானது மைம்மலை போல விளங்குந் திருமேனியிற்சோதிவடிவமாய்க்காணப்படுகிற கண்களின் நோக்கம் அநுபவத்தைக் கொடாமையால் பிரதிகூலர்க்குத் துயர் விளைத்தல்போல அடியவரான எமக்கும் வருத்தம் விளைவிக் கின்றன; இப்படிப்பட்ட எம்பெருமான் லோகத்துக்கு ரக்ஷக னாகுந் தன்மை எங்ஙனே? என்கிறார். தம்மை விரைவிற் சேர்த் துக்கொள்ளாமையா லுண்டான ஆற்றாமை அவனுடைய ரக்ஷகத் வத்திலும் சங்கை செய்யும்படியாயிற்று என்க. .... (அஉ)

விளரிக்குரலன்றில் மென்பேடை மேகின்ற மூன்றிற்பெண்ணை *
முளரிக்குரம்பை யிதுவிதுவாக * முகில்வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப் பிதற்று மெல்லாவியும் நைவுமெல்லாம்
தளரிற்கோலோவறியேன் * உய்யலாவதித் தையலுக்கே. (அங)

| | | | |
|---|---|---|---|
| விளரி | விளரியென்னும் இசையையுடைய | மேகின்ற | விரும்பித் தழுவுதற் கிடமான |
| குரல் | குரலையுடைய | மூன்றில் பெண்ணை முளரி குரம்பை | முன்வாசலிலுள்ள பனைமரத்தி லுள்ளதும் முட்களையரிந்து செய்யப்பட்டது மான கூடு |
| அன்றில் | அன்றிற்பறவை | | |
| மெல் பேடை | மெல்லிய (தனது) பேடையை | | |

$ சூடாமணி நிகண்டு—ளகரவெதுகை—15.

| | | | |
|---|---|---|---|
| இனி இங்ஙனம் ஆக | இப்படி என்றும் எதிரில் அருகில் இருக்க, | மெல் ஆவியும் | (இவளது) மெலிவடைந்த உயிரும் |
| (இவ்வன்றிலைக் காணுதலாலும் இதன் குரலைக் கேட்டலாலும் ஆற்றாமைத் துயரம் மிக்கு) | | நைவும் | (உடம்பின்) இளைப்பும் |
| | | எல்லாம் | என்னும் இவையாவும் |
| முகில் வண்ணன் பேர் கிளரி கிளரி பிதற்றும் | காளமேக நிறத்தனான தம்தலைவனது திருநாமங்களை (வலியின்மையால்) வருந்தி யெடுத்தெடுத்துக் கூறி வாய்பிதற்றும் படியான | தளரின் கொலோ | முழுவதும் தளர்ந்தொழிந்தாலோ |
| | | இ நையலுக்கு | இம்மகளுக்கு |
| | | * உய்யல் ஆவது | (அவன் வந்துசேர) உஜ்ஜீவநமுண்டாவது? |
| | | அறியேன் | அறிகிறேனில்லை. |

* * *—பிரிவாற்றாத தலைவியின் தளர்ச்சி கண்டு தோழி இரங்கிக் கூறும் பாசுரம் இது. காமவிரஹத்தாலுண்டாகும் வேதனைகளுள், சிந்தனை பசலை மேனிமெலிவு அழுங்கல் மொழிபல பிதற்றல் முதலிய பலவும் இவளுக்கு நிகழ்ந்தாய் விட்டன; இதுவரையிலும் இவளுடைய தலைவன் இவளை வந்துகூடி உய்யச் செய்யக்காணவில்லை; இனி மரணமொன்றே நிகழாது நிற்பது; அதுவும் நிகழ்ந்த பின்புதான் இவளை வந்து கூடி உய்யச் செய்வதாக விருக்கிறானோ? என்று தோழி இரங்குகின்றாள். இதனால், இனி இவளுக்கு ஜீவித்திருத்தல் அரிதாம் என்றவாறு.

வடநூலார் க்ரௌஞ்ச மென்றுகூறுவதே அன்றிற்பறவையாவது; இது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் கூடியேநிற்கும்; கணநேரம் ஒன்றை ஒன்றுவிட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றையொன்று இரண்டு மூன்றுதரம் கத்திக்கூவி அதன்பின்பும் தன் துணையைக் கூடாவிட்டால் உடனே இறந்துபடும். (பகல்முழுவதும் புணர்ந்திருந்து இரவிற்பிரிந்து வருந்துவதாகிய சக்கரவாகப் பறவையும் அன்றிலெனப்படுவது உண்டு.) அன்றிலும் அதன்குரலும் காமோத்தீபகமாய்ப் பிரிந்தார்க்கு விரஹவேதனையை வளரச் செய்யு மென்க. இப்பறவையைப் பனைமரத்தில் வாழ்வதாகவே பலரும் பலவிடத்துங் கூறுவர்; "காவார் மடற் பெண்ணையன்றிலரிகுரலும்" "பெண்ணைமேற் பின்னுமவ்

வன்றிற் பெடைவாய்ச் சிறுகுரல்" என்பன திருமங்கையாழ்வார் பாசுரங்கள்.

ஸம்ஸ்க்ருதத்தில், ஷட்ஜம் ரிஷபம் காந்தாரம் மத்தியமம் பஞ்சமம் தைவதம் நிஷாதம் என்னும் ஸப்தஸ்வரங்கள் தமிழில் முறையே குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்னும் ஏழிசையெனப்படுதலால் விளரியென்றது தைவதமென்னும் ஸ்வரமென்னலாம்; அன்றி, வடமொழிநிகண்டில் "க்ரௌஞ்சஃ க்வணதி மத்யமம்" என்றதனால் அன்றில் மத்யமமென்னும் ஸ்வரத்தை யொலிக்கிறதென்று தெரிதலால், விளரியென்பதற்கு மத்யமஸ்வரமென்று பொருள் கொள்ளுதலும் ஒன்று. விளரியென ஓர் பண்ணுமுண்டு.

மென்பேடை = பிரிவுபொறாத ஸௌகுமார்யத்தையுடைய பேடை. '**முளரிக்குரம்பை**' என்பதற்கு—தாமரையிலைகளையும் பூக்களையுங் கொண்டுவந்து செய்தகூடு என்று உரைப்பாருமுளர். '**இதுவிது**' என்றது—கட்புலனாகும் பலவற்றைச் சுட்டியது. *மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த வீறுடைய திருமங்கையாழ்வார், இங்கு, "அன்றில் மென்பெடைமேகின்ற முன்றில் பெண்ணை முளரிக் குரம்பையிது" என்றதையடியொற்றி 1. "முன்றிற் பெண்ணைமேல் முளரிக் கூட்டகத்து, அன்றிலின் குரல் அடருமென்னையே" என அருளிச்செய்திருத்தல் காண்க.

மேகின்ற—மேவுகின்ற. **குரம்பை**—குடம்பை. முன்றில்—இல்முன் என்பது முன்பின்னாகமாறித் தொக்க மரூஉமுடிபு; தொல்காப்பியம் எழுத்ததிகாரம் புள்ளிமயங்கியலில் [60] "முன்னென்கிளவி முன்னர்த்தோன்றும், இல்லென்கிளவி மிசை றகர மொற்றல், தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே" என்றது காண்க: இதனை இலக்கணப் போலியில் அடக்குவர் இக்காலத்தார். **தையல்**—அழகு; அதனையுடையவளுக்கு ஆகுபெயர். '**பிதற்றும்**' என்பதற்கு முதனிலைத் தொழிற்பெயராக, பிதற்றுதலும் என்றுரைக்கவுமாம். '**ஆவியும் சைவும்,**' '**ஆவியின் சைவும்**' என்பன பாடபேதங்கள்.

---

1. பெரிய திருமொழி 11-1-6.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—பகவதநுபவம் பெருமையால் ஆழ்வார் தளர்தலைக்கண்ட அன்பர் 'பாதகமான லௌகிக பதார்த்தங்கள் அருகிலிருத்தலால் இவர் ஆறியிருப்பது அரிதாயிருந்தது' என்று கூறுதலாம். இவர்தாம் இருக்கிற விடத்திலே அருகிலுள்ளார் சிலர் எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கப் பெறுதலைக்கண்டு தமக்கு அத்தன்மை கிடைத்திடாமையாலே ஆற்றாமைமிக்கு எம்பெருமான் திருநாமங்களை வாய்மாறாமல் எடுத்துக்கூறிப் புலம்பி நெஞ்சந்தளர்ந்து நைகிற தன்மையைக் கண்டு 'இங்ஙனம் மெலிகிற இவர்க்கு தேஹவியோகம் ஆனபின்போ எம்பெருமான் வந்து இவரைச் சேர்த்துக் கொள்வது!' என்றுவெறுத்துக் கூறினரென்க. .... .... .... .... .... (அங)

தையனல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும் *
ஐயநல்லார்கள் குழிய விழவினும் * அங்கங்கெல்லாம்
கையபொன்னாழி வெண் சங்கொடும் காண்பா னவாவுவனான்
மையவண்ணா! மணியே * முத்தமே! யென்றன் மாணிக்கமே!(அச)

| | |
|---|---|
| மைய வண்ணா | மையுடைய நிறம் போன்ற கரிய திருநிறமுடையவனே!, |
| மணியே முத்தமே என்தன் மாணிக்கமே | நீலமணியும் முத்தும் மாணிக்கமும் * போல நிறத்தையும் அழகையும் ஒளியையும் உடைய எம்பெருமானே! |
| தையல் நல்லார்கள் | அழகிய ஸ்த்ரீகள் |
| குழாங்கள் குழிய குழுவினுள்ளும் | கூட்டமாய்க் கூடின திரளினுள்ளேயாயினும் |
| ஐய நல்லார்கள் | சிறந்தவர்களான நல்லபுருஷர்கள் |
| குழிய விழவினும் | திரண்ட திருவிழாக் களிலாயினும் |
| அங்கு அங்கு எல்லாம் | இன்னும் அப்படிப் பட்ட இடங்க ளெல்லாவற்றினு மாயினும் |
| கைய பொன் ஆழி வெண் சங்கொடும் | கைகளிலுள்ள பொன்னிறமான சக்கரத்துடனும் வெண்ணிறமான சங்கத்துடனும் |
| நான் காண்பான் அவாவுவன் | நான் (உன்னைக்) காண ஆசைப் படாநின்றேன். |

* * *—நாயகி நாயகனைக் காண விரைந்து பேசும் பாசுரம் இது. நாயகனுடைய விரஹத்தை ஆற்றாத நாயகி, அவனை என் காதலின்படி தனியே ஏகாந்தத்திற் கண்டு கூடிக் குலவி இன்புறக்

கிடையாதாயினும் ஆண்களும் பெண்களும் பலர் கூடிய கூட்டத்திலிடையில் எங்கேனுங் காணக் கிடைக்குமாயினும் அது கொண்டு ஆறியிருப்பேனென்று கருதிச் சொல்லுகிறாளென்க. "மைய வண்ணா மணியே முத்தமே என்றன் மாணிக்கமே!" என்று முன்னிலையாகக் கூறியிருப்பது எங்ஙனே எனின்; நாயகனையே இடையறாது நினைத்துக் கொண்டிருந்து நினைப்புமிகுதியால் அவனை எதிரில் நிற்கிறாற் போலப் பாவித்து முன்னிலைப் படுத்திக் கூறினபடி. திருவாய்ப்பாடியிலுள்ள ஆயர் மங்கையர் கூடியாடுங் குரவைக் கூத்துப் போன்ற மகளிர்குழாத்திலும், தருமபுத்திரர் செய்த ராஜஸூய யாகம் போன்ற மஹாபுருஷர்களின் குழாத்திலும், எழுந்தருளியிருப்பதற்குத் தகுதியுடைமைபற்றி "தையனல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும் ஐயநல்லார்கள் குழிய விழவினுமங்கங்கெல்லாம்—காண்பானவாவுவன் நான்" என்றது. எம்பெருமான் பெண்களின் திரளிலும் மஹாபுருஷர்களின் கோஷ்டிகளிலும் ஸேவிக்கத் தகுந்தவனென்பதை "பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை, எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தேயிருந்தானைக் கண்டாருளர்" "காந்தள் முகிழ்விரல் சீதைக்காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க வேந்தர் தலைவன் சனகராசன்றன் வேள்வியிற் கண்டாருளர்" என்ற பெரியாழ்வார் பாசுரங்களாலு முணர்க. தையல் நல்லார்கள்—ஸ்திரீகளுட் சிறந்தவர் என்றும், ஐயநல்லார்கள்—ஆர்ய ச்ரேஷ்டர் என்றுங் கொள்க. தையல் நல்லார்கள்—நல் தையலார்கள் என மாறுதலுமாம். 'குழிய' என்றது குழுவிய என்றவாறு. (தழுவிய என்பது தழிய என்றும், கெழுவிய என்பது கெழிய என்றும் வருதல்போல. 1. "தமிழ் தழிய சாயலவர்" 2. "தனது மாடே, தழிய காவலரை நோக்கி" 3. "கெழிய ராகுவுங் கேதுவும்" என்ற இடங்களில் 'தழிய' 'கெழிய' என்ற பிரயோகங்கள் காண்க.)

'தைய' என்பதும் 'மைய' என்பதும் குறிப்புப் பெயரெச்சங்கள். மணியே முத்தமே மாணிக்கமே யென உபமானத்தை உப

1. சீவகசிந்தாமணி—சுரமஞ்சரியாரிலம்பகம் 32.

2. கந்தபுராணம்—அசுரகாண்டம்.

3. ஷை.

மேயமாகவே சொன்னது உபசாரவழக்கு. "மூத்திஜன மணியை மணி மாணிக்க வித்திஜனச், சென்று விண்ணகர்க் காண்டுமே" எனத் திருமங்கையாழ்வார் பாசுரத்திலும் இம்மூன்று உவமைகள் ஒருங்கே கூறப்படுதல் காண்க.

நெஞ்சென்னும் உட்கண்ணால்எம்பெருமானை ஸேவிக்கப்பெற்ற ஆழ்வார் அப்பெருமானை மீண்டும் எங்கேனும் காண ஆசைப்பட்டு அவனை நோக்கித் தன்னிலேயுரைத்த வார்த்தை இதற்கு உள்ளுறை பொருள். 'தையனல்லர்கள் குழாங்கள் குழிய குழு' என்பதற்கு ஸ்வாபதேசம்—பாதந்திராயிருக்குந் தன்மையையே ப்ரதான்மாக வுடைய ப்ரபந்நர்களின் கோஷ்டி எனவும், 'ஐயநல்லார்கள் குழு' என்பதற்கு ஸ்வாபதேசம்—யாகம் முதலிய தொழில்களை நடத்து மியல்புடைய கைங்கர்ய ப்ரவ்ருத்தி சிலர்களின் கோஷ்டி எனவுங் கொள்வர். இப்பாட்டின் அழகிய மணவாள சிபருரையில்—நாயகியானவள் நாயகனுன ஸர்வேச்வரனைப் புறம்பே திரளிடையாகிலுங் காண ஆசைப்பட்டுப் புலம்பின பாசுரம்' என்றதும், 'குழாங்கள் குழிய குழு என்கையாலே அந்த ஸமூஹந்தான் பலவாய்ச்சேர்ந்த ஸமுதாயத்தைச் சொல்லுகிறது' என்றதும், 'இந்தக்கிளவி, "மள்ளர் குழீஇய விழவினானும், மகளிர் தழீஇய துணங்கையானும், யாண்டுங்காணேன் மாண்டக் கோனை" என்று அகத்தமிழிலுஞ் சொல்லப்பட்டது' என்றதும் இங்கு அறியத்தக்கன. [மேலெடுத்துக் காட்டிய மேற்கோள் குறுந்தொகை—நூக. இது நச்சினார்க்கினியாராலும் "உயிரினுஞ் சிறந்தன்று" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. 'மள்ளர் குழீஇய விழவினானும், மகளிர் தழீஇய துணங்கையானும் யாண்டுங்காணேன் மாண்டாக்கோனை, யானுமோராடுகள மகளே யென்கைக், கோடீரிலங்குவளை நெகிழ்த்த, பீடுகெழுகுரிசிலு மாடுகள மகனே' என்பது கொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது; ஆதிமந்தி.] .... .... (அச)

மாணிக்கங் கொண்டு குரங்கெறிவோத் திருளோடுமுட்டி *
ஆணிப்பொன்னன்ன சுடர்படு மாலை * உலகளந்த
மாணிக்கமே! யென் மரதகமே! மற்றொப்பாரை யில்லா
ஆணிப்பொன்னே! * அடியேனடியாவி யடைக்கலமே. (அரு)

| | |
|---|---|
| உலகு அளந்த | உலகங்களை அளந்து கொண்ட |
| மாணிக்கமே | மாணிக்கம்போலச் சிறந்தவனே ! |
| என் மரதகமே | மரதகப்பச்சை போல் எனக்கு இனிய னவனே ! |
| மற்று ஒப்பாரை இல்லா | தன்னையொப்பவர் வேறு எவரையும் உடையனாகாத |
| ஆணி பொன்னே | மாற்றுயர்ந்தபொன் போல மதிப்பையும் ஒளியையுமுடையவனே ! |
| மாணிக்கம் கொண்டு குரங்கு எறிவு ஒத்து | மாணிக்கத்தால் கருங்குரங்கு வீசியெறியப்பட்டால் அம்மாணிக்கம் அக்குரங்கின் கையிலே அகப்பட்டு அழிதல் போன்று |
| ஆணி பொன் அன்ன சுடர் இருளோடு முட்டி படும் | மாற்றுயர்ந்த பொன் போன்ற ஒளியையுடைய ஸூர்ய மண்டலம் இருளோடு சென்று கிட்டித் தான் மறையப் பெற்ற |
| மாலை | மாலைப்பொழுதிலே |
| அடியேன் அடி ஆவி அடைக்கலமே | இயல்பில் உனக்கு அடியவளான எனது சொந்தமான உயிர் உனக்கே அடைக்கலப் பொருளாக ஒப்பிக்கப் பட்டது. |

* * *—மாலைப்பொழுது கண்டு வருந்திய நாயகி இரங்கியுரைத்த பாசுரம் இது. 1. "காலைஅரும்பிப் பகலெல்லாம்போதாகி, மாலை மலருமிந்நோய்" என்கிறபடியே காமநோய் மிகவும் முதிர்வதற்கு உரிய காலமான மாலைப்பொழுதில் ஆற்றாமை மிகுதியால் தன் உயிரைப் பாதுகாத்துக்கொள்ள வேறு கதியற்றவளாய்த் தலைமகள் தலைமகனைக் கருதி 'உனக்கே என் உயிர் தஞ்சம்; ஆதலால் நீயே என்னை வந்து காத்தருளவேண்டும்' என்று முறையிடுகிறாள். இப்பாட்டைத் தாய்வார்த்தை யென்பார்க்கு, 'அடியேனடியாவி' என்பதற்கு, எனது அடிமையான மகள் என்று பொருள் கொள்ள வேணும். ஆவி-உயிர்போல் அருமையான பெண் என்றபடி. ஆகுபெயர். 'அடியேனுடையாவி' என்பதும் பாடமாம்.

1. திருக்குறள்—பொழுது கண்டிரங்கல்-7.

ஒருவரால் எறியப்பட்டுக்குரங்கின்மீது சென்றுவிழுந்த மாணிக்கமானது அதன்கையில் அகப்பட்டுத் திரும்பமாட்டாது அழிவது போல, இருளை அழித்தற் பொருட்டு அதன் மீது சென்று விழ்ந்த ஸூர்யன் அவ்விருளிற்பட்டு மீளாது மறைந்திட்டானெனக் கற்பனை கூறப்பட்டது. ஸூர்ய மண்டலத்திற்கு மாணிக்கம் உவமை; இருளுக்குக் குரங்கு உவமை; மாணிக்கம் மீளக்காணாமற் போதற்கு ஸூர்யாஸ்தமநம் உவமை. மாணிக்கம் நவரத்நங்களுள் ஒன்று; இது செந்நிறமுடையது. நூல்களிற் **கருமாணிக்க**மென வருதல் அபூதோபமை யென்க. இங்கு உபமேயமாகிய இருளின் தன்மையைக் கருதி, குரங்கு, கருங்குரங்கு எனக்கொள்ளப்பட்டது.

இனி, மிகச் சிறந்த மாணிக்கத்தை அதன் சீர்மையை யறியாத குரங்கு எடுத்து எங்கேனும் மங்கிப்போம்படி எறிந்து மாய்த்துப் போக்கிவிட்டாற்போல, ஸூர்யனை இருளிலே யெறிந்து போக்கின மாலைப்பொழுது என்றும் உரைக்கலாம்; இவ்வுரையில், மாலைக்குக் குரங்கும், ஸூர்யனுக்கு மாணிக்கமும், அவன் வீழ்தற்கு அது எறியப்படுதலும், இருளுக்கு எறியப்படுமிடமும் உவமையாம்.

அழகியமணவாள சீயருரை காண்மின்;—"அன்றியே, மாணிக்கத்தைக் கொண்டு குரங்க எறிந்தாற்போலே யென்றுமாம். குரங்குதலாவது வளைதலாய், உதித்த ஆதித்யன் உயர எழுந்து விழுந்து அஸ்தமித்த கடுமையைச் சொன்னபடி." என்று. இவ்வுரைக்கு, 'குரங்க' என்னும் செயவெனெச்சம் ஈறு தொக்கதென்க.

**ஆணிப்பொன்**—மாற்றறிதற்குக் கொள்ளும் உயர்தரப்பொன்; இதுக்குமேலே மாற்றில்லை யென்னும்படியான சிறந்த பொன் என்றும் உரைப்பர். மற்று ஒப்பாரையில்லா—தனக்குத் தானே உவமையாவதன்றி ஒருபடியாலும் வேறு நிகரில்லாத என்றபடி. "தனக்குவமை யில்லாதான்" என்ற திருக்குறளும் அறிக. இதனால், தன்னை யொழிந்தார் யாவரினும் தான் மேம்பட்டவனென்பது விளங்கும். "ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயா" என்றார் திருவாய்மொழியிலும்.

இப்பாட்டுக்கு உள்ளுறை பொருளாவது—எம்பெருமானை யநுபவிப்பதற்கு உரியகாலம் வந்திருக்க, அவ்வநுபவம் கிடையாமையாலாகிய ஆற்றாமையின் மிகுதியால் வருந்திய ஆழ்வார், அவ்வருத்தம் தீரும்பொருட்டு ஸ்வாமியான எம்பெருமான் பக்கலிலே ஸொத்தாகிய தன் உயிரை அடைக்கலமாக ஸமர்ப்பித்தலாம். மிக்க விளக்கமுடையவிவேகம் மோஹாந்தகாரத்திலே விழுந்து அகப்படும்படியான இந்நிலையில் உன்னைச் சரணமடைந்த இவ்வுயிருக்கு நீயேயன்றோ ரக்ஷகனென்று உரைத்தனரென்க. (அ௫)

அடைக்கலத்தோங்கு கமலத்தலரயன் சென்னியென்னும் *
மூடைக்கலத் தூண்முன் னரனுக்கு நீக்கியை * ஆழிசங்கம்
படைக்கல மேந்தியை வெண்ணெய்க்கன்றாய்ச்சி வன்தாம்புகளால்
புடைக்கலந்தானை யெம்மானை * என்சொல்லிப் புலம்புவனே? ()

| | |
|---|---|
| அடை | இலையாகிய |
| கலத்து | இடத்திலே |
| ஓங்கு | உயர்ந்துதோன்றின |
| கமலத்து | (திருமாலின் நாபித்) தாமரைமலரிலே |
| அலர் | வெளிப்பட்டுத் தோன்றின |
| அயன் | ப்ரஹ்மாவினுடைய |
| சென்னி என்னும் | தலையாகிய |
| மூடை கலத்து | மூடைநாற்றமுடைய பிக்ஷா பாத்திரத்திலே |
| ஊண் | உணவு இரத்தலை |
| முன் | முன் ஒருகாலத்தில் |
| அரனுக்கு | சிவனுக்கு |
| நீக்கியை | போக்கியருளினவனும் |
| ஆழி சங்கம் படைக்கலம் ஏந்தியை | ஸுதர்சநபாஞ்சஜந்யங்களை ஆயுதங்களாகத் திருக்கைகளிற் கொண்டுள்ளவனும் |
| வெண்ணெய்க்கு | வெண்ணெய்க்காக |
| அன்று | களவுங்கையுமாக அகப்பட்ட அந்நாளில் |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி |
| வல் தாம்புகளால் | வலியகயிறுகளால் |
| புடைக்க | அடிக்க |
| அலந்தானை | வருந்தினார்போலத் தோற்றினவனும் |
| எம்மானை | எமது தலைவனுமான திருமாலைக் குறித்து |
| என் சொல்லி புலம்புவன் | நான் என்னவென்று சொல்லிப் புலம்புவேன்?. |

* * *—நாயகனைப் பிரிந்த நாயகி இரங்கியுரைக்கும் பாசுரம் இது. ஆபத்துக்கு உதவுந்தன்மையும் அடியார்களுடைய விரோதிகளை நிக்ரஹித்தற்கு ஏற்ற கருவிகளையுடையனாயிருக்குந்தன்மையும் அடியார்க்கு எளியனாயிருக்குந் தன்மையும் எம்பெருமானுக்கு இயற்கையாகவுள்ளன; இத்தன்மைகள் தன் பக்கலில் உதவாமையைக் குறித்துப் பராங்குச நாயகி இரங்குகிறாளென்க. "அடைக்கலத்தோங்கு கமலத்தலரயன் சென்னியென்னும் மூடைக்கலத்தூண் முன்னானுக்கு நீக்கியை" என்றதனால் ஆபத்துக்கு உதவுந்தன்மையும், "ஆழிசங்கம் படைக்கலமேந்தியை" என்றதனால் ஆச்ரித விரோதிகளை நிக்ரஹிப்பதற்கு ஏற்ற கருவியுடைமையும், "வெண்ணெய்க்கன்றாய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தானை" என்றதனால் அடியார்க்கெளிமையும் தெரிவிக்கப்பட்டனவாம். [என் சொல்லிப் புலம்புவனே.] சிவனுக்குத் துயர் நீக்கினவனை நோக்கி எனக்குத் துயர்நீக்கவேணு மென்று சொல்வேனோ? அடியார் துயரந் தீர்க்க ஆயுதமேந்தியுள்ளவனை நோக்கி என் துயரந்தீர்க்கக் கையில் கருவி கொள்ளவேணு மென்று சொல்வேனோ? ஆய்ச்சியர்க்குக் கட்டவு மடிக்கவும் எளியனானவனை நோக்கி எனக்கெளியனாக வேணுமென்று சொல்வேனோ? யாது சொல்லிக் கூப்பிடுவே னென்கிறாள். அந்தோ! இத்தன்மைகள் பாவியேன் பக்கலில் உதவக் காணவில்லையே! என இரங்கியவாறு.

ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து சிரமுடையனாயிருப்பது பலரும்பார்த்து மயங்குதற்குஇடமாயிருக்கின்றதெனக் கருதி, அவனது சிரமொன்றைக் கொய்து விட, அக்கபாலம் அப்படியே அவன் கையில் ஒட்டிக்கொள்ள 'இதற்கு என்னசெய்வது?' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்,' என்று சொல்ல; சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று பிச்சை யேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி ஏற்றபோது அப்பெருமான் அக்ஷய மென்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையை விட்

டகன்றது என்பது, அயன் சென்னிக்கலத்து ஊண் அரனுக்கு நீக்கிய கதை.

தாமரைப்பூப் பசிய இலையின் மீது உயர்ந்து விகஸிப்பது போலத் திருநாபித்தாமரைமலர் எம்பெருமானது பசிய திருமேனியின் மீது எழுந்து தோன்றினமை "அடைக்கலத் தோங்கு கமலம்" என்றதனால் விளங்கும். இனி, அடைக்கலமென்பதை அரனுக்கு விசேஷணமாக்கி, அடைக்கலமாகப் புகுந்த சிவனுக்கு என்றும், நீக்கி என்பதற்கு விசேஷணமாக்கி, ரக்ஷகமாக இருந்து நீக்கினவனென்றும் பொருள் கொள்ளலாம். அன்றி, 'அடைக்கலத்தோங்கு அயன்' என அந்வயித்து (தன் பக்கலிலே) அடைக்கலமாக வளர்கிற பிரமன் என்றுரைப்பாருமுளர். அடைக்கலமென்பது ரக்ஷிப்பதற்கு உரிய பொருளையும் ரக்ஷகனையுங் குறிக்கும். 'கமலத்து அலர்' என்பதற்குத் தாமரைப்பூ எனப்பொருள் கொண்டால், 'தோன்றின' என்று வருவித்துக் கொள்ளவேணும். கூடை—கெட்டநாற்றம்.

படைக்கலம் — போர்க்கருவி; எம்பெருமானுக்குச் சங்கு சக்கரங்கள் ஆபரண கோடியிலும் ஆயுத கோடியிலும் அமையும். படை கலம் ஏந்தி = படையும் கலமுமாக [ஆயுதஆபரணங்களாக]த் தரித்தவன் என்றலும் பொருந்தும். திருவாழியாழ்வான் ஆயுதமாகலாம்; திருச்சங்காழ்வான் எங்ஙனே ஆயுதமாகும் வகையென்னில்; ஸ்ரீபாஞ்சஜந்யம் தனது பெருமுழக்கத்தால் பகைவரை அஞ்சுவித்து அழித்தலால் ஆயுதவர்க்கத்தின் பாற்படும்.

அன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்க அலந்தானை = வெண்ணெய் திருடின குற்றத்திற்காக யசோதைப்பிராட்டி உரலோடு பிணைத்துத் தாம்பினால் கட்டியடிக்க வருந்தியிருந்தவனை என்றபடி; வருந்தி நின்றது அடிப்பதனாலுண்டான துன்பம் பொறுக்கமாட்டாமையாலன்று; திருவாய்ப்பாடி யெங்கும் துருதுருக்கையாய்த் திரிந்து பெண்களையும் தயிர் பால் நெய் வெண்ணெய் முதலியவற்றையும் கொள்ளை கொள்ளப் பெறுதபடி இங்ஙனே கட்டிப்போட்டு வைத்திருக்கிறாளே யென வருந்தியவாறு. பெரிய திருவிழாக்களில் கள்ளப்பயல்களை அரசாங்கச் சேவகர்கள் சிறைப்படுத்திவைத்தால், 'வேண்டினபடி திரிந்து

களவு முதலியன செய்யப் பெறுமே நம்மையிப்படி சிறைப்படுத்தி வைப்பதே!' என்று அப்பயல்கள் வருந்துவது போல.

பட்டர் திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கும்போது ஒரு ஸ்வாமி வந்து 'அடியேனுக்கு ஒருரு திருவிருத்தம் பொருளருளிச் செய்யவேணும்' என்று பிரார்த்திக்க, 'நம்பெருமாளைப் பிரிந்த துயரத்தினால் எனக்கொன்றும் சொல்லப் போகிறதில்லை; நஞ்சீயர் பக்கலிலே கேட்டுக்கொள்ளும்' என்று சொல்லி, நஞ்சீயர்க்கு நியமிக்க, சீயரும் பொருளருளிச் செய்து வருகையில் இப்பாட்டளவிலே வந்தவாறே "புடைக்க அலந்தானை" என்கிற பாடப் படியே நஞ்சீயர் பொருளுரைக்க, பட்டர் அதுகேட்டு 'ஜீயா! "அலந்தானை" என்றபாடத்திற்காட்டிலும் "அலர்ந்தானை" என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு மிகப் பொருந்தும் போலே இன்று தோன்றுகின்றது' என்றருளிச் செய்தாராம். ஆய்ச்சி அடிக்க அடிக்க முகமலர்ந்தானும் கண்ணபிரான். (இதனை விவரிப் போம்.) கண்ணபிரான், வெண்ணெய் களவு செய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றா ளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டு துண்டாக அறுத்து வைத்திடுவான்; அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறுவடிவமாக்கி அதுகொண்டு கண்ணபிரானைக் கட்டுவள்; அப்படி கட்டும்போது தன் உடம்புக்கு எட்டம் போராதபடி யான அக்கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்ட முடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற் கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டு அடியுண்டிருக்கை முதலான இவ்வகைகளால்தான் அக் குணங்களை விளங்கச் செய்துகொள்ள வேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக் கும் போராததாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் § சுருக்கி அமைத்துக் கொண்டு 'கண்ணிநுண் சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்' என்னும்படி

§ "ஆநீதஹேர நிஜஸங்கநாயம் தாஸவிஸம் ஸம்ஹிதஸ வ்யவலிணம். நிரீக்ஷ்ய நீவிர்ணயிலோ ஜநந்யா: ஸம்கோச ஶக்த்யா ஸ பஹலிவ பத்யு:." என்பது யாதவாப்யுதயம்.

**ஆவன்**; 'இங்ஙனே நம்முடைய ஸௌசில்ய ஸௌலப்ய குணங்**கள் விளக்கப்** பெற்றோமே; அவதார ப்ரயோஜநம் நன்கு நிறை**வேறப்** பெற்றதன்றோ' என்று முகமலர்ச்சியடைந்திடுவன் என்க.

எம்பெருமான் பக்கல் ஈடுபட்டு ஆற்றாமை கொண்ட ஆழ்வார் **அவனது** திருக்கல்யாண குணங்களையும் திருநாமங்களையுஞ்சொல்லி **முறையிடுதல்** இப்பாட்டுக்கு உள்ளுறை பொருள். [என்சொல்லிப் **புலம்புவனோ** ?] அவனது குணசேஷ்டிதங்களில் குறையொன்றுங் **காணாமையால்** எனது குறையையே நான் சொல்லக்கடவேனென்பதாம். .... .... .... .... (அ௬)

**புலம்புங் கனகுரற் போழ்வாயவன்றிலும் * பூங்கழிபாய்ந்**
**தலம்புங் கனகுரற் சூழ்திரையாழியும் * ஆங்கவைநின்**
**வலம்புள்ளது நலம் பாடு மிதுகுற்றமாக வையம்**
**சிலம்பும்படி செய்வதே? * திருமால்! இத்திருவினையே.** (அஎ)

| | |
|---|---|
| திருமால் | பிராட்டியினிடத்து மோஹமுள்ளவனே! |
| புலம்பும் | (விரஹவேதனையால்) கத்துகிற |
| **கன** குரல் | கனத்த குரலையுடைய |
| **போழ்** வாய அன்றிலும் | பிளந்த வாயையுடைய அன்றிற் பறவையும் |
| **பூ** கழி பாய்ந்து அலம்பும் | அழகியகழியினுள்ளே புகும்படி பாய்ந்து அலைகிற |
| **கன** குரல் | கம்பீரமான தொனியையுடைய |
| **சூழ் திரை ஆழியும்** | சூழ்ந்த அலைகளையுடைய கடலுமாகிய |
| ஆங்கு அவை | அவ்வவ்விடத்திலுள்ள அந்தந்த வஸ்துக்களானவை, |
| நின் வலம் புள்ளது நலம் பாடும் இது குற்றம் ஆக | உனது வலிமையையுடைய கருடப்பறவையினது நன்மையை (இவன்) எடுத்துப் பாடுகிற இதுவே குற்றமாகக் கொண்டு |
| வையம் சிலம்பும்படி | உலகத்தார் முறையிடும்படி |
| இ திருவினை | திருமகள் போன்ற இப்பெண்ணை |
| செய்வதே | துன்பப்படுத்துவதே! |

[இது தகுதியோ ?.]

*** * *—**அன்றிற் குரலுக்கும் கடலோசைக்கும் ஆற்றாத **தலைவியின் நிலைமை கண்டு** தோழி இரங்கிக் கூறும் பாசுரம் இது.

அதாவது — நாயகியின் தளர்ச்சியைக்கண்ட தோழி தானும் தளர்ச்சியடைந்து, ஸாவநாப்ரகர்ஷத்தாலே நாயகனை எதிரிற் கொண்டு முன்னிலைப்படுத்தித் தன்னிலே யுரைத்த பாசுரம். அன்றி, தோழி தலைமகனை எதிர்ப்பட்டுத் தலைமகளின் ஆற்றாமையை அவனுக்குக் கூறியுணர்த்துவது என்னவுமாம். உன்னிடத்தில் அன்பு கொண்ட தலைவி, உன்னைப்பிரிந்த நிலையில் அத்துயரம் ஒருவாறு தணியும் பொருட்டு, உனக்கு வாஹனமாய் உனது நித்ய ஸம்பந்தம் பெற்றுள்ள பெரிய திருவடியின் சிறப்பைப் பாராட்டிக் கூறிநிற்க, அதனைக்கண்டு. அதனால், இவள் பிரிவாற்றாத மெல்லியளென்று உணர்ந்து அன்றிற் குரலும் கடலொலியும் அவ்வாற்றாமையின் மேலும் தாமும் ஹிம்ஸை பண்ணக் கடவனவோ வென்கிறாள். ஆணும் பெண்ணுமான அன்றில் இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கும் பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில் நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப் பொறாமல் மெலிந்து பெருந்தொனியாகக் கத்துகிற மிக இரங்கத்தக்க சிறுகுரல் விரஹ வேதனையை வளரச் செய்வதால் "புலம்புங் கன குரற் போழ்வாயவன்றிலும்" எனப்பட்டது. "பெண்ணைமேல், பின்னுமவ்வன்றிற் பெடைவாய்ச் சிறுகுரலும், என்னுடைய நெஞ்சுக்கு ஓர் ஈர்வாளாமென் செய்கேன்" என்று திருமங்கையாழ்வாரும் பெரிய திருமடலில் அருளிச்செய்தார்.

பூங்கழிபாய்ந்து அலம்புங் கனகுரல் சூழ்திரையாழியும் = நதிபதியாகிய கடல் அழகிய கழியினுள்ளே புகப்பாய்ந்து அலைமறிந்து பெருமுழக்கஞ் செய்வதை நோக்குமிடத்து, அது, தன் மனைவியைக் கைகளால் தழுவிக் களிப்பினால் ஆரவாரஞ் செய்வது போன்றிருத்தலால் விரஹ வேதனை மிகுகிறபடி. அஃறிணைப் பொருள்களிலும் சேதநமாகிய சிறுபறவையோடு அசேதநமாகிய பெருங்கடலோடு வாசியறப் பிரிவுக்கு வேதனைப் படுவதையும் கலவிக்கு மகிழ்ச்சிகொள்வதையும் கண்ணெதிரிற் காணுதல் கலக்கத்துக்குக் காரணமாம். [புள்ளது நலம்.] பக்தர்களை ரக்ஷிக்கும் பொருட்டு எம்பெருமானை எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவந்து உதவுதல் கருடனுடைய நலமென்க. வையம் சிலம்புதலாவது —

இவளுடைய தளர்ச்சிக்காகத் தாயர் தோழியர் உற்றார் உறவினர் ஊரார் அனைவரும் முறையிடல். திருமால்! என் விளித்தது, ஒருத்திக்கு நல்லவனாயிருக்கின்ற நீ இவள் இங்ஙனம் வருந்தப் பார்த்திருத்தல் பக்ஷபாத மன்றோ? என்றவாறு. 'இத்திருவினை' என்று இவளையுந் திருமகளாகவே சொன்னது, இவள் அவளுக்கு நிழல் போலிருப்பவள் என்றாகினும் இவளைப் பார்க்க வேண்டாவோ?' என வெறுத்துரைத்தவாறு. திரு—ஸ்த்ரீகளுட் சிறந்தவள்.

கனகுரல்—பண்புத்தொகை; நிலைமொழி வடமொழியாதலின் இயல்பாயிற்று. 'கனைகுரல்' என்ற பாடத்தில் 'கனைக்கிற குரல்' எனப்பொருள் காண்க; வினைத்தொகை. போழ்வாய அன்றிலும்—தன் குரலால் விரஹிகளை இரு துண்டமாகப் பிளந்திடுகிற வாயையுடைய அன்றில் என்றும் உரைப்ப. 'போழ்' என்பது தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது. பூங்கழி—பூக்களையுடைய கழி என்னவுமாம். வலம்—வெற்றியுமாம்.

"[ஆங்கவை] பிரிந்திருப்பார்க்கு மற்றும் பாதகமான சேக்கள் கழுத்திலே மணியோசை யென்ன, சந்திரோதய மென்ன, தென்றலென்ன இப்படிப்பட்ட பாதகங்களைச் சொல்லிற்றாதல்" என்ற நம்பிள்ளையீடு காண்க. [நின் வலம்புள்ளது நலம்பாடுமிது குற்றமாக வைபபம் சிலம்பும்படி செய்வதே!] கருடன் உனக்கு அடிமை செய்து தழும்பு சுமந்தாற்போலே ஸம்ச்லேஷ அடையாளங்களைத் தரிக்கவேணுமென்று ஆசைப்பட்டு அக்கருடனைப் பாடினவிது குற்றமாக அன்றில் கடலோசை முதலானவை இவளை நலிய அத்தாலே இவள் நோவுபடா நின்றாளென்று நாட்டார் பழி சொல்லும்படி நீர் விட்டு வைப்பதே!, உம்முடைய மஹிஷி நோவுபடப் பார்த்திருத்தல் உமக்குக் குறையன்றோ என்றபடி. திருமால்—அண்மை விளி; "திருமால் நான்முகன்" (8-3-9) என்ற திருவாய்மாழிப் பாசுரத்திற்போல.

எம்பெருமானைச் சேராமையாலாகுந் துன்பத்தையும் சேர்வதனாலாகும் இன்பத்தையும் உலக நடத்தைகள் நினைப்பூட்டுதலால் வருந்தாநின்ற ஆழ்வாரது தன்மையைக் கண்ட அன்பர்கள், எம்பெருமானை நோக்கி 'இப்படி உலகம் முறையிடும்படி இவரை இங்ஙன் நலியக் கடவனவோ?' என்று வெறுத்துரைத்தல் இதற்கு உள்

ஞறை பொருள். அன்றிற்குரல் பிரிவுத் துன்பத்துக்கு ஸ்மாரகம்; ஆழி முழக்கம் சேர்க்கையின் பத்துக்கு ஸ்மாரகம். [நின் வலம் புள்ளது நலம்பாடுமிது குற்றமாக] எம்பெருமான் நம்மிடத்து விரைந்து வந்து சேர்வதற் குறுப்பான வேக கதியையுடைய வாஹனம் அவனுக்குச் சொந்தமாயிருக்கையில் நாம் இழக்கவேண்டுவதில்லையே யென்று மகிழ்ச்சி பாராட்டுதலே குற்றமாக என்கை. அடிமைச் செல்வமுடைமை பற்றி ஆழ்வாரைத் திரு என்றது; எம்பெருமானோடு நித்யாநுபவஞ் செய்யத்தக்கவ ரென்க. .... (அஎ)

திருமாலுருவொக்கும் மேரு * அம்மேருவிற் செஞ்சுடரோன்
திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும் * அன்னகண்டும்
திருமாலுருவோ டவன்சின்னமே பிதற்றுநிற்பதோர்
திருமால் தலைக்கொண்ட நங்கட்கு * எங்கேவருந் தீவினையே. (அஅ)

| | |
|---|---|
| மேரு | மஹாமேருமலை யானது |
| திருமால் உரு ஒக்கும் | திருமகள் கேள்வனான தலைவனது திருமேனியை யொத்திருக்கும்; |
| அ மேருவில் செம் சுடரோன் | அந்த மஹாமேருவின் அருகிலே விளங்குகிற சிவந்த ஒளியையுடைய ஸூர்யன் |
| திருமால் திரு கை திரு சக்கரம் ஒக்கும் | அத்தலைவனது அழகிய கையிலுள்ள திருவாழியை யொத்திருப்பன்; |
| அன்ன கண்டும் | (அவனுருவத்தையும் சக்கரத்தையும் நேரில் காணுமல்) அவற்றிற்குப் போலியாயுள்ளவற்றையே கண்டும். |
| திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்றுநிற்பது | அவனுருவத்தையும் அவனது அடையாளத்தையுமே (நேரிற் கண்டாற்போல அன்பு மிகுதியாற்பரவசமடைந்து) பேரிட்டுக் கூவும்படியான |
| ஓர் திருமால் | ஒப்பற்ற செல்வமான வேட்கையை |
| தலைக்கொண்ட | ஏற்றுக்கொண்டுள்ள |
| நங்கட்கு | எமக்கு |
| தீ வினை | (பிரிவுக்குக்காரணமான) பாவம் |
| எங்கே வரும் | எப்படிவரக்கடவது? [வாமாட்டாது.] |

* * * *—போலிகண்டு அழிகிறதலைவி ஆற்றாமைக்கு இரங்கி யுரைக்கும் பாசுரம். எம்பெருமானை நேராக ஸேவிக்கப் பெறுமளவில் மாத்திரமேயல்லாமல் அவனது போலியைக் காணுமளவிலும் அவனாகவே பாவித்து இடைவிடாது நாமோச்சாரணம் பண்ணி வருகிற நல்லோழான நமக்கு இங்ஙனே விரஹவேதனைக்குரிய தீவினை எங்கிருந்து வந்ததென்று தலைவி வெறுத்துரைக்கின்றாள்.

திருமாலுரு வொக்கும் மேரு=ஸ்ரீமஹாலக்ஷ்மியின் பொன்னிறமான திருமேனியினொளி கலப்பதனால் தானும் பொன்னிறம் பொலியப்பெற்ற எம்பெருமானது பெரிய திருமேனி பொன்மயமான பெரிய மேருபர்வதம் போன்றிருக்குமென்க.

அம்மேருவில் செஞ்சுடரோன் திருமால் திருக்கைத் திருச்சக்கரமொக்கும்=அந்த மஹா மேருபர்வதத்தின் ஸமீபத்திலே விளங்காநின்ற சிவந்த வொளியையுடைய ஸூர்யன் அவ்வெம்பெருமானுடைய அழகிய திருக்கையிலுள்ள திருவாழியாழ்வான் போன்றிருப்பான். [அன்ன கண்டேம் இத்யாதி.] அப்பெருமானுடைய திவ்யரூபத்தையும் திவ்யாயுதத்தையும் நேரில் காணப் பெறாமல் அவற்றிற்குப் போலியாயுள்ளவற்றையே கண்டிருக்கச்செய்தேயும் அவனுருவத்தையும் அவனது அடையாளத்தையுமே நேரிற்கண்டாற் போல அன்பு மிகுதியாற் பரவசமடைந்து இத்தனை பேரிட்டுக் கூவும்படியான வ்யாமோஹம் பெற்றிருக்கிற எமக்கு, பிரிவுக்கு அடியான பாவம் எங்ஙனே உண்டாயிற்றோ தெரியவில்லையே! என்கிறாள். மால் தலைக்கொண்ட—ஆசையின் மேலெல்லையிலே நிற்கிற என்னவுமாம். நாயகனைப் பிரிந்த நாயகி நாயகன் போலிகளை அவனாகவே பாவித்து வாய்பிதற்றுவதை 1. "நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே! வா வென்று கூவும்" 2 "செய்ய தோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தியீதென்னும்" என்பவற்றிலும் காண்க.

" ஜநாகௌஸஹஸ்ரேஷு தவொஜ்ஜநவஸதாயிஷீ: ।
நாராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே=
ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:—நாநாஹம் க்ஷீண

1. திருவாய்மொழி 4—4—4.
2. ஷை 4—4—2.

பாபாநாம் க்ருஷ்ணே பக்திః ப்ரஜாயதே."-பாபங்கழியப் பெற்றவர்களுக்கே பகவத் பக்தி பிறக்குமென்றும், பகவத் பக்தியுடையாரைப் பாவம் அணுகாதென்றும் சாஸ்த்ரமிருக்க, அந்தபக்தியின் மேலெல்லையிலே நிற்கிற நமக்குப் பேறுபெறுமைக்குக் காரணமான பாவம் வருவதற்கு வழியுண்டோ? என்று ஆழ்வார் வருந்தியுரைத்தாராயிற்று. எம்பெருமான் பக்கலில் மாத்திரமேயன்றி எம்பெருமான் வடிவத்தை யொத்திருக்கும் பொருளினும் ஈடுபடுதலே பக்தியின் மேலெல்லையாம்.

மூன்றாமடியில், ஹிந்நம் என்னும் வடசொல் சின்னமெனத் திரிந்தது. ... ..... .... (அஅ)

**தீவினைக் காருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினைப் *
பூவினைமேய தேவி மணாளனைப் * புன்மையெள்கா
தாவினை மேய்க்கும் வல்லாயனை * அன்றுலகீரடியால்
தாவின வேற்றையெம்மானையெஞ்ஞான்று தலைப்பெய்வனே? (அகூ)**

| | |
|---|---|
| தீ வினைக்கு ஆரு நஞ்சை | (அடியார்களுடைய) பாவத்துக்கு ப்ரபலமான விஷம்போன் றிருப்பவனும் |
| நல் வினைக்கு இன் அமுதத்தினை | (அவர்களுடைய கைங்கரியமாகிய) நல்ல தொழிலுக்கு இனிய அமிருதம் போல இனிப்பாக வுள்ளவனும் |
| பூவினை மேவிய தேவி மணாளனை | தாமரைமலரைத் தனக்கு இடமாகக் கொண்டு பொருந்திய திருமகளுக்குக் கணவனும் |
| புன்மை என்காது ஆவினை மேய்க்கும் வல் ஆயனை | சிறுமைகருதி இகழாமல் பசுக்களை மேய்க்கும் வலிமையை யுடைய இடையனானவனும் |
| அன்று | முன்பொரு காலத்திலே |
| உலகு | உலகங்களை |
| ஈர் அடியால் | இரண்டு அடியாலே |
| தாவின ஏற்றை | அளந்துகொண்ட மேன்மையுடைய வனுமான |
| எம்மானை | எம்பெருமானை |
| எஞ்ஞான்று தலைப் பெய்வன் | எப்பொழுது சேர்வேன்? |

* * *—நாயகனுடைய ஸம்ச்லேஷத்துக்கு விரைகின்ற நாயகி இரைங்கியுரைக்கும் பாசுரம் இது. கொடிய துன்பத்தை விளைக்கிற தீக்கருமங்களை எளிதில் ஒழிப்பவனும், தன்பக்கல் அடிமை செய்வார்க்கு நிகரற்ற இன்பமூர்த்தியாயிருப்பவனும், தாமரையைத் தனது சிறப்புக்கும் ஸௌகுமார்யத்துக்கும் அழகுக்கும் தக்க இடமாகக் கருதி அதில் வீற்றிருப்பவளாய்ப் புருஷகாரபூதையான பிராட்டிக்கு நாயகனும், திருவுள்ளத்தில் சிறிதும் வெறுப்பின்றியே உகப்புடனே பசுக்களை மேய்க்கப்பிறந்து, வேஷங் கொண்டவன் போலன்றிச் சாதி குணங் தொழில்களில் உறைந்து நிலைநின்ற இடையனும், இரண்டடிகளாலே ஸகல லோகங்களையும் அளந்து கொண்ட மேம்பாடுடையனுமான எமது தலைவனை எப்பொழுது சேரப்பெறுவேன் என்கிறாள். அடியார்கட்குப் பகை தீர்ப்பவனும் அடிமைக்கு இனியனும் புருஷகாரமான திருமகளுக்குக் கணவனும் அன்பர்க்கு எளியனும் எல்லாவுலகையுங் கீழ்ப்படுத்தியவனுமான எம்பெருமானை எப்பொழுது சேர்ந்து அநுபவிக்கப் பெறுவேனென்று ஆழ்வார் பேற்றுக்கு விரைந்து பேசுகிறபடி.

இப்பாட்டில் முதலடி "தீவினைக்கருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினை" என்பதாகவே நாடெங்கும் பாடம் வழங்கிவருமாயினும், தளை தவறுமையை நோக்கி "தீவினைக் காருநஞ் சைநல் வினைக்கின் னமுதத்தினை" என்றபாடங் கொள்ளப்பட்டது. இது வியாக்கியானப் போக்குக்கு மாறுபட்டதன்று; ஒற்றுமையுடையதே. அரு என்பது ஆரு என நீட்டல்என்னுஞ் செய்யுள் விகாரத்தை வேண்டுழிப் பெற்றதென்றாவது, அருமை என்னும் பண்புப் பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு ஆரு என நின்றதென்றாவது கொள்க. அன்றியும், தொல்காப்பியத்தில் பண்புச்சொல் விகாரம் மரூஉவின்பாற் படுத்துக் கூறப்பட்டுள்ளதனால் அதற்கு ஒரு வரையறையில்லையென்றும் அறிக. தீவினைக்கு ஆரும் நஞ்சு எனப்பிரித்து, தீவினையை யழிப்பதற்குப் பூர்ணமான விஷமென்று பொருள் கொள்ளவுங் கூடுமாயினும் அது பூருவாசார்ய வியாக்கியானங்களில் 'ஆற்றவொண்ணாத', 'ஆற்றவரிய' என்று காணப்படுகிற உரையோடு மாறுபடும். 'நஞ்சைந் நல்வினை' என்னுமிடத்து, நகரமெய் இரட்டினது விரித்தல் விகாரம். இனி "தீவினைக் கருநஞ்சை"

என்றே பாடங்கொண்டு, வேதப்பிரயோகம் மற்றையிலக்கண விலக்கியப் பிரயோகங்களுக்கு மாறுபடுதலு முண்டென்றுவது 'ஆஷீஸ்வாநுஜொஷ:' என்கிற நியாயத்தினலாவது, மஹாகவி ப்ரயோக மென்னுங் காரணத்தினலாவது ஆன்றோர் பாடத்துக்கே ஸமாதாநங் கூறி யமைத்திடுதலும் அங்கீகரிக்கவுரியதாம். இலக்கண வரம்புக்கு அடங்காமல் வரும் ஆர்ஷப் பிரயோகம் அமைக்கப்படுதலைத் தண்டியலங்காரத்திலுங் காண்க

'தீவினைக்கு அரு நஞ்சு' என்றது—கொடிய துன்பத்தை விளைக்கிற தீயகருமங்களை எம்பெருமான் எளிதில் ஒழிப்பவன் என்றவாறு. 'நல்வினைக்கு இன்ன முதம்' என்றது—தன் விஷயத்தில் கைங்கரியம் செய்பவர்கட்கு இன்பமயமாயிருப்பவன் எம்பெருமான் என்றவாறு; அவர்கள் பக்தியை அழியாது வளரச் செய்பவன் என்க. முக்திக்கு வ்யாஜகாரணமான ப்ரபத்தியை இங்கு நல்வினை என்றது.

புன்மை யேள்காது ஆவினை மேய்க்கும்=‘மிகவும் நீச ஜாதியாகிய பசுக்களையோ நாம் மேய்ப்பது' என்று ஜுகுப்ஸை கொள்ளாமல் "1 திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி செங்கனிவா யெங்களாயர் தேவே!" என்கிறபடியே 'பசுமேய்க்கும் பாக்கியம் பெற்றோமே!' என உவந்து மேய்ப்பவ னென்றவாறு.

'தாவின வேற்றை' என்றவிடத்து 'ஏறு' என்றது மேம்பாடு விளக்கவந்த உபசாரவழக்கு; ஏறு காளை சிங்கம் இச்சொற்கள் ஆண்பாற்கு வருகையில் சிறப்புப் பொருளுணர்த்துவனவாம்; இது வடமொழி மரியாதை; புருஷஸிம்ஹ:, நரவ்யாக்ர:, ராஜஸிம்ஹ: என்பன காண்க. .... .... (அகூ)

தலைப்பெய்தி யானுன் திருவடிசூடுந் தகைமையினல் *
நிலைப்பெய்தவாக்கைக்கு நோற்றவிம் மாயமும் * மாயஞ்செவ்வே
நிலைப்பெய்திலாத நிலைமையுங் காண்டோறசுரர்குழாம்
தொலைப்பெய்த நேமியெந்தாய்! * தொல்லையூழி சுருங்கலதே. (கூ௦)

1. திருவாய்மொழி 10.3.10.

| | |
|---|---|
| **அகார் குழாம்** | அசுரர் கூட்டத்துக்கு |
| **தொலை பெய்த** | அழிவைப் பண்ணின |
| **நேமி** | சக்ராயுதத்தை யுடைய |
| **எந்தாய்** | எம்பெருமானே!, |
| **யான்** | நான் |
| **உன் திருஅடி** | உனது திருவடித் தாமரைமலர்களை |
| **சூடும்** | (எனது) தலைமேற் கொள்ளும்படி யான |
| **தகைமையினால்** | அடிமைக்குணமாகிய தகுதியினால் |
| **தலைப் பெய்து** | (யான் உன்னைச்) சேர்ந்து |
| நிலைப்பு எய்த | நிலைபெற்றிருக்கும்படியாக |
| ஆக்கைக்கு | இவ்வுடம்பைப்பெறுதற்கு |
| நோற்ற | தவஞ்செய்த |
| இ மாயமும் | இந்த ஆச்சரியத்தையும் |
| மாயம் செவ்வே நிலைப்பு எய்திலாத நிலைமையும் | இந்த ஆச்சரியம் ஒருபடியாக நிலை நின்று முடிவு பெறமாட்டாத நிலைமையையும் |
| காண்தோறு | நோக்கும்போதெல்லாம் |
| தொல்லை ஊழி சுருங்கலது | பழமையான [அநாதியான] காலம் சுருங்குகிறதில்லை. |

* * *—நாயகனைப் பிரிந்த நாயகி பிரிவுக்கு ஆற்றாது உரைக்கும் பாசுரம் இது. நான் உன்னை யணுகி உனது திருவடிகளைத் தலைமேற்கொண்டு வழிபடும்படியான இவ்வுடம்பைப் பெறுதற்கு நல்ல தவஞ் செய்து வைத்திருந்தும் அப்பேறு முட்ட முடியக் கைகூடாமல் இடையில் நீங்குதலை ஆலோசிக்குமிடத்து ஆற்றாமையாற் காலம் மிக நெடுகித் தோன்றுகிறது என்பது இப்பாட்டின் தேர்ந்த கருத்து. **'சுருங்கலது'** என்பதற்கு, சுருங்குகிறதில்லை என்று எதிர்மறையாகப் பொருள் கொள்வதன்றியே 'சுருங்குதலையுடையது' என உடன்பாடாகப் பொருள்கொள்வதாயின், இப்படியே என் காலங் கழிந்து விடுகிறதேயென்று இரங்கியபடியாம். பூர்வஜந்மங்களில் மிக்க பெருந்தவஞ் செய்திருந்தாலன்றி, இப்படிப்பட்ட அரிய பெரிய நாயகனைப் பெறுதல் இயலாதாதலால் **'நோற்ற இம்மாயம்'** என்றது. "உன் திருவடிகளில் அடிமையாலல்லது செல்லாதபடியான சரீரத்தைப் பெற்றபடியையும், அப்படியிருக்கச் செய்தே அவ்வடிமையை இழந்திருக்கிற இருப்பையும் அநுஸந்திக்கக் காலம் போருகிறதில்லையென்கிறார்" என்பது அப்பின்னையுரை.

ஸர்வேச்வரனைச் சரணமடைந்து அவன் திருவடிகளையே வணங்கி அத்திருவடிகளே பேற்றுக்கு உபாயமென்று அத்யவஸாயங் கொள்வதற் குறுப்பான இவ்விலக்ஷண சரீரத்தைப் பெற்றிருப்பதையும் அப்படி பெற்றிருந்தும் பூர்ணாநுபவம் கிடைத்திடாமலிருப்பதையும் நோக்குமிடத்துக் காலதா[illegible]ம் பொறுக்க முடியவில்லை யென்று ஆழ்வார் கலங்கியுரைத்ததாம்[illegible]ற்று.

'மாயம் செவ்வே நிலைப்பெய்திலாத நிலைமை' என்பதற்கு— இவ்வுடம்பு நிலையில்லாததாயிருக்குந் தன்மை யென்றும், ப்ரக்ருதி ஸம்பந்தத்தோடிருக்கையில் உண்டான அடிமைக்குணம் ரஜோகுண தமோகுண ஸம்பந்தத்தால் நிலைப்படாது சலிக்கக்கூடிய தன்மை என்றும் உரைப்பர்.

'திருவடி' என்றதற்கு 'திருவடித் தாமரை மலர்' எனப் பொருளுரைத்தது 'சூடும்' என்றதற்கேற்ப. "கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்ற திருவாய்மொழி காண்க. ஆயிரம் ஜந்மங்களிற் செய்த நோன்பின் பயனாகவே ஒரு ஸ்ரீ வைஷ்ணவ ஜன்மம் கிடைப்பதாக நூற்கொள்கை யாதலால் 'ஆக்கைக்கு நோற்ற இம்மாயம்' எனப்பட்டது. என்னுடைய ப்ராப்திப்ரதிபந்தகங்களைப் பாற்றுதல் உனக்கொரு பெருங்காரியமோ? என்பதற்காக 'அசுரர்குழாந் தொலைப்பெய்த நேமி யெந்தாய்!' என விளிக்கப்பட்டது.

தலைப்பெய்து + யான், தலைப்பெய்தியான்; "யவ்வரினிய் யாம்" என்பது நன்னூல். தலைப்பெய்தலென்பது ஒரு முழுச்சொல்.

சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வனை * வையமுற்றும்
ஒருங்குற வுண்ட பெருவயிற் றாளனை * மாவலிமாட்
டிருங்குறளாகி யிசையவோர் மூவடி வேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லால் * அடியேனெஞ்சம் பேணலதே. (கூக)

| | | | |
|---|---|---|---|
| சுருங்கு உறி வெண்ணெய் | சுருங்கக் கட்டப் பட்டுள்ள உறியிலே சேர்த்து வைக்கப்பட்ட வெண்ணெயை | தொடு உண்ட | வஞ்சனையால் எடுத்து அமுது செய்த |
| | | கள்வனை | கள்ளத்தன முடைய வனும் |

| | |
|---|---|
| வையம் முற்றும் | உலகமுழுவதையும் |
| ஒருங்கு உற உண்ட | ஒருசேர விடாமல் உட்கொண்ட |
| பெரு வயிற்றாளனை | பெரியதிருவயிற்றை யுடையவனும் |
| மாவலி மாட்டு | மஹாபலி சக்ரவர்த்தியினிடத்தில் |
| இரு குறள் ஆகி | மிக்க வாமனவடிவமுடையனாகி, |
| இசைய | (அவன்தானே தானம்பண்ணுவதற்கு) இசையும்படி |
| ஓர் மூ அடி வேண்டி | ஒரு மூன்றடி நிலத்தையாசித்துக் கொண்டு |
| சென்ற | எழுந்தருளின |
| பெரு கிறியானை அல்லால் | மிக்க தந்திரமுடையவனுமான திருமாலையல்லாமல் (வேறொருத்தனை) |
| அடியேன் நெஞ்சம் பேணலது | (அவனுக்கே) அடிமையான எனது மனம் விரும்பாது. |

* * *—தோழிக்குத் தலைவி தன் கற்பு உணர்த்தி அறத்தொடு நிற்றல் இது. பராங்குச நாயகியாகிய தலைமகள் களவொழுக்கத்தால் ஸர்வேச்வரனாகிய தலைமகனைக் கூடி நிற்க, அந்நிலையை யறியாத பெற்றோர் அவளைப் பிறர்க்கு விவாஹஞ் செய்விக்க முயற்சி கொள்ள, அதனை யறிந்த நாயகி தனது களவைத் தோழி மூலமாகச் செவிலிக்கும் அவள் மூலமாகத் தந்தைக்கும் மற்றும் பெரியோர்க்குந் தெரிவித்துத் தன்னை அத்திருமாலுக்கே விவாஹஞ் செய்து வைக்கும்படி செய்துகொள்ள விரும்பி அத்தலைமகள் தன் கருத்தைத் தோழிக்கு வெளிப்படுத்தியது இது. இங்ஙனம் களவை வெளிப்படுத்தல் 'அறத்தொடு நிற்றல்' எனப்படும்.

'சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வன்' என்பதனால் ஸௌலப்ய குணமும், 'வையம் முற்றும் ஒருங்குறவுண்ட பெருவயிற்றாளன்' என்றதனால் பரத்வ குணமும், 'மாவலிமாட்டிருங்குறளாகி யிசையவோர் மூவடி வேண்டிச்சென்ற பெருங்கிறியான்' என்றதனால் பரத்வ ஸௌலப்யங்களிரண்டுங் கூடின கூட்டரவும் குறிப்பிடப்பட்டன.

சுருங்குறி=கள்ளக் கயிற்றை உருவி விரல் நுழைக்கவொண்ணாதபடி நெருக்கப்பட்ட உறி. இருங்குறள்=மிகக் குறுகிய வடிவம். பெரிய வடிவத்தை யுட்கொண்ட சிறு வடிவமுமாம்; மஹிமை யுடைய வடிவமுமாம்; கரிய குறள் வடிவமுமாம். வடிவழகாலும்

பேச்சின் இனிமையாலும் மாவலியை மயக்கி, சுக்கிரன்போல்வார் தடை செய்தாலும் உடன்படாதே மூவடி நிலம் கொடுக்க அவன் இசைந்தது வாமநனுடைய ஸாமர்த்தியத்தினாலாதலால், 'இசைய வோர் மூவடி வேண்டிச் சென்ற பெருங்கிழியான்' எனப்பட்டது.

'சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வன்' என்றதனால் இவ்வுடம்பாகிய சிக்கத்திலே கட்டுப்பட்டுள்ள வெண்ணெயின் தன்மையதான முமுக்ஷுவாகிய ஆத்மாவை எவரும் அறியாதபடி விரும்பிக் கைக்கொண்டு அநுபவிப்பவன் எம்பெருமான் என்பது தோன்றுமென்ப.

மாவலிமாடு = "மாடு பொன் பக்கம் செல்வம்" என்பது நிகண்டு. .... .... .... .... (கூக)

பேணலமில்லா வரக்கர் முந்நீர பெரும்பதிவாய் *
நீணகர் நீளெரிவைத் தருளாயென்று * நின்னைவிண்ணோர்
தாணிலந் தோய்ந்து தொழுவர் நின்மூர்த்தி பல்கூற்றிலொன்று
காணலுமாங்கொலென்றே * வைகல் மாலையும் காலையுமே. (கூஉ)

| | |
|---|---|
| பேண் நலம் இல்லா | (உன்னை) விரும்பிப் பக்தி செய்த லாகிய நற்குண மில்லாத |
| அரக்கர் | ராக்ஷஸர்களுடைய |
| முந்நீர பெரு பதி வாய் | கடலாகிய பெரு நீரானையுடைய பெரிய மலையிடத் திலுள்ள |
| நீள் நகர் | பெரியலங்காபுரியில் |
| நீள் எரி வைத்தருளாய் | பெரிய நெருப்பை வைத்து அழித் தருளவேணும் |
| என்று | என்று சொல்லிப் பிரார்த்தித்து |
| நின்னை | உன்னை |
| விண்ணோர் | தேவர்கள் |
| வைகல் | நாள்தோறும் |
| மாலையும் காலையும் | இரண்டு சந்திகளிலும் |
| தாள் நிலம் தோய்ந்து தொழுவர் | தங்கள் கால்கள் தரையிலே படும்படி வந்து வணங்குவர்; (அவர்கள் அங்ஙனம் வணங்குதல் தங்கள் பகையைப் போக்கு விக்கும்பொருட்டே யன்றி) |
| நின் மூர்த்தி | உனது வடிவத்தின் |
| பல் கூற்றில் | பல அம்சங்களுள் |
| ஒன்று | ஒன்றையேனும் |
| காணலும் ஆம் கொல் என்றே | பார்க்கவேண்டு மென்றோ? |

[அன்று என்றபடி.]

* * *—வேந்தற்குற்றுழிப் பிரிவில் நாயகனைக் குறித்து நாயகி யிரங்கல். வேந்தற்குற்றுழிப் பிரிவாவது — ஒரு வேந்தனுக்கு ஒரு வேந்தன் தோற்றுவந்து சரணமடைந்தால் அவனுக்கு உதவி செய்வதற்காகப் பிரிந்து போதல். பராங்குச நாயகியாகிய தலைவி ஸர்வேச்வரனாகிய தலைவன் தன்னைப்பிரிந்து போனதற்குக் காரணம், ராக்ஷஸர்கட்குத் தோற்றுவந்து சரணமடைந்து வேண்டிய தேவர்களின் பிரார்த்தனையாம் என்று கருதி அவர்களைப் பழிக்கிறாள். 1. "தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன தாள் கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாரு மஃதே" என்றபடி உனது அழகிய திருவடிவத்தில் ஓர் அம்சத்தைக் கண்குளிரக்கண்டு அநுபவிப்பதும் அதிக ஆநந்தகரமாயிருக்க, தேவர்கள் அதனை ஆசைப்பட்டு வேண்டாமல் உன்காலில் விழுந்து எப்பொழுதும் தங்கள் பகையை அழித்துத் தரவேண்டுமென்று வேண்டுவதே! என்று அவர்களைப் பழித்து இரங்கினாள். அநந்ய ப்ரயோஜநரான எமக்கு ஒரு பிரயாஸமும் படவேண்டாமல் ஸேவை ஸாதிப்பது மாத்திரமே அருள் செய்யப் போதுமா யிருக்க, எம்மை உபேக்ஷித்து, பிரயோஜநாந்தர பரர்க்காக உடம்புநோவக் காரியஞ்செய்வதே! என்று எம்பெருமானது தன்மைக்கு நொந்துரைத்தபடியுமாம். 'நின்னை விண்ணோர் காணலுமாங் கொலென்றே நாள் நிலந்தோய்ந்து தொழுவர்?' என்றதனால், தான் நாயகனது மூர்த்தியின் பல கூறுகளையுங்காண ஆசைப்பட்டிருக்கின்றமை வெளியிடப்பட்டதாம்.

பேண்நலமில்லாவரக்கர் — தன்னுயிரைப்போலவே பிறவுயிரையுங் கருதி எல்லாப் பிராணிகளும் உய்ந்து வாழவேண்டுமென்ற எண்ணமில்லாத ராக்ஷஸர் [பிறரை ஹிம்ஸிப்பதே தொழிலாயிருப்பவர்] என்னவுமாம். பதி என்றது இலங்காபுரிக்கு இடமானத்வீபத்தை. பெரும்பதி என்றும், நீணகர் என்றும் கூறியவற்றால், வரபலத்தால் எவராலும் அழித்திடவொண்ணாமை தோன்றும். நீளெரி வைத்தருளாய் — இராவணனுக்கு அஞ்சி அகலச் செல்லுந் தன்மையனான அக்நியை அவ்வச்சம் தணிந்து அங்கே அழியாது வளரச் செய்தருளாய் என்று பிரார்த்திக்கிறார்களாம்

1. கம்பராமாயணம். உலாவியற்படலம்.

தேவர்கள்: இலங்கையை நீறுபடுத்த வேணுமென்கை. இலங்கையிலுள்ள ராக்ஷஸர்களை வேரோடு அறுத் தொழிக்க வேணுமென்று பிரார்த்தித்தவாறு.

தாள் நிலந் தோய்ந்து தொழுவர்=பூலோகத்தில் வந்து திருப்பாற்கடலைச் சார்ந்து பரமனைப் பணிந்து வேண்டுவர். பூமியில் மநுஷ்ய நாற்றம் நாறுகிறதென்று மூக்கைப் புதைத்துக் கொண்டு மேலே நெடுந்தூரத்தில் நின்றுகொண்டு ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுப் போகுமியல்வினரான தேவர்கள் தங்களுலகத்தில் இருப்புக் குலைந்ததனால் தெய்வத்தன்மை குலைந்து பூமியிலே கால் தோய வந்து நின்று தொழுவர் என்கிறது. 'நிலந்தோய்ந்து தாள் தொழுவர்' என மாற்றி, தரையிலே ஸாஷ்டாங்கமாகப் பணிந்து உன் திருவடிகளைச் சேவிப்பர் என்னவுமாம்.

இப்படி அவர்கள் வைகல் மாலையும் காலையும் தொழுவது நின் மூர்த்தி பல் கூற்றிலொன்று காணலுமாங்கொலென்றே?=உன்னுடைய திருமேனியை நோவுபடுத்திக் காரியங் கொண்டு ஒழிந்து போகப் பார்க்கிறார்களே யன்றி "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே" "சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி" என்று வாயினால் தானும் சொல்லுவர்களோ அப்பாவிகள். அமுத மெடுத்துக் கொடுக்கக் கடல் கடைந்தருளின காலத்து 'அமுதம்கிளர்வது எப்போதோ' என்று கீழ்ப்புறமே நோக்கிக் கொண்டிருந்தார்களே யன்றி 1. "மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்" என்னப்பட்ட அப்பெருமானுடைய தோளுந் தோள்மாலையுமான அழகை ஒரு நொடிப்பொழுதாகிலுங் கண்ணெடுத்துப் பார்த்திலரே பாவிகள்; அன்னவர்க்கேயோ நீ காரியஞ் செய்தருள்வது? "நின் பல் மூர்த்தியில் ஒரு கூறும்" என மாற்றியுமுரைக்கலாம்.

மூன்றீர=குறிப்புப் பெயரெச்சம். 'என்றே' என்றவிடத்து ஏகாரம் வினாப்பொருளதாய் எதிர்மறை குறிக்கும். 'என்று அல்ல' என்றபடி. (௬௨)

---

1. நாச்சியார் திருமொழி 9—1.

காலைவெய்யோற்குமுன் னோட்டுக்கொடுத்த கங்குற்குறும்பர் *
மாலைவெய்யோன்பட வையகம் பரவுவர் * அன்னகண்டும்
காலைநன் ஞானத்துறைபடிந்தாடிக் கண்போதுசெய்து
மாலைநன் னாவிற் கொள்ளார் * நினையாரவன் மைப்படியே. (கூ௬)

காலை — உதயகாலத்தில்

வெய்யோற்கு முன் — ஸூர்யனாகிய சக்ரவர்த்திக்கு எதிரிலே

ஓட்டு கொடுத்த — (நிற்கமாட்டாமல்) புறங்கொடுத் தோடுதலைச் செய்த

கங்குல் குறும்பர் — இருளாகிய சிற்றரசர்கள்

மாலை — ஸாயங்காலத்திலே

வெய்யோன் — அந்த ஸூர்யனாகிய பேரரசன்

பட — அழிய

வையகம் பரவுவர் — (தாங்கள்) உலகமுழுவதும் பரவுவார்கள்;

அன்ன கண்டும் — அப்படிப்பட்ட தன்மையைப் பார்த்திருக்கும் (பலர்)

காலை — காலத்துக்கு ஏற்றபடி

நல் ஞானம் துறை படிந்து ஆடி — நல்ல ஞானமாகிய துறையிலே இறங்கி மூழ்கி [பகவத் பக்தியாகிய வெள்ளத்தில் ஆழ்ந்து ஈடுபட்டு]

கண் போது செய்து — (பக்தி பாரவச்யத் தாலே) கண்களை மூடிக்கொண்டு

மாலை — எம்பெருமானை

நல் நாவில் கொள்ளார் — (தங்களுடைய) நல்ல நாவினால் பெயர்கூறித் துதியார்;

அவன் மை படி — அவனது கரிய திருமேனியை

நினையார் — நினைப்பதுஞ் செய்யார்.

* * *—உலகத்தில் அனேகர் 1. "வைகலும் வைகல் வரக் கண்டு மஃதுணரார்" என்றபடி காலைப்பொழுதும் மாலைப்பொழுதும் மாறிமாறி வந்துகொண்டு காலங்கழிந்துகொண்டே செல்லுகிறபடியை ப்ரத்யக்ஷமாகவே பார்த்துக்கொண்டிருக்கச் செய்தேயும் தங்களுடைய இளமைப் பிராயம் விரைவாகக் கழிந்து போவதில் கருத்தூன்றுதலின்றி எம்பெருமான் பக்கல் ஈடுபாடு கொள்

1. நாலடியார்—அறன்வலியுறுத்தல்—9.

ளாமல் வீணேயிழந்து பழுதே பலபகலும் போக்குகிறார்களே யென்று ஆழ்வார் வெறுத்து அருளிச் செய்கிறார். உலகர்கள் தினப்படி ஸூர்யன் உதிக்கும்போது, வேண்டியபடி பொருள்களைத் திரட்டலாமென்று களிக்கிறார்கள்; பின்னை ஸூர்யன் அஸ்தமிக்கும்போது வேண்டியபடி விஷய போகங்களைச் செய்யலாமென்று குதூஹலிக்கிறார்கள்; இப்படி ஸூர்யனுடைய உதயத்தோடு அஸ்தமனத்தோடு வாசியற ஸம்ஸாரிகள் களிப்பதே கருமமாயிருக்கிறார்களே யன்றி, 'இங்ஙனம் வாள்களாகி நாள்கள் செல்லுகின்றனவே, பழுதே பலபகலும் போகின்றனவே, ஊமனார் கண்ட கனவிலும் பழுதா யொழிகின்றனவே நாள்கள்' என்று கவலைப்படுவாராருமில்லையே!, ஒரு கணப்பொழுதையும் பகவதநுஸந்தாநத்திற் செலுத்துவாரில்லையே! என்று ஸம்ஸாரிகளுக்காக ஆழ்வார் தாம் கவலைப்படுகிறார்.

இவ்வாழ்வார் உலகத்தாரைச் சீர்திருத்தி உஜ்ஜீவிக்கச் செய்யும் பொருட்டுத் திருவவதரித்தவராதலாலும் மிக்க ஜீவகாருண்யமுடையவராதலாலும் பிறரிழவுக்குப் பரிவுகொள்ளக் கடவராவர்.

முதலிரண்டடிகளால் பகலும் இரவுமாக மாறிமாறி வந்து ஆயுள்நாளைக் கழியச்செய்தலை எடுத்துக்காட்டியபடி. இதுசெல்வ நிலையாமைக்கும் ஒரு திருஷ்டாந்தமாம். "நஜ்ஷ்ய ாதிக சூதிசெ்ர நஜஷ்யூதிசெ ஈவெள" என்றது இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

பின்னடிகளிரண்டும் நாட்டாரைப் பழிப்பன; **காலை**—ஸத்வகுண ப்ரதாநமான விடியற்காலத்தில், **நல்ஞானத் துறைபடிந்து**—சிறந்த ஆத்மஜ்ஞாநத்துக்கு இறங்கு துறையாகிய ஆசார்யனை வணங்கி, **ஆடி**—அவ்வாசார்யோபதேசத்திலே ஆழ்ந்து, **கண்போது செய்து**—விஷயாந்தரங்களில் அறிவு செல்லாதபடி அதனை உள்ளடக்கி, **மாலை நல்நாவில் கொள்ளார்**—தங்கள் பக்கல் அன்புடைய ஸர்வேச்வரனை நல்ல நாவினால் துதியார்; **அவன் மைப்படி நினையார்**—அவனுடைய கரிய திருமேனியை த்யானிப்பதுஞ் செய்யார் என்று லௌகிகரைப் பழித்தபடி. **நல்ஞானம்**—எம்பெருமானை இலக்காகக்கொண்ட ஞானமே நல்ல ஞானம்; மற்றை விஷயமான ஞானமெல்லாம் அஜ்ஞானமும் விபரீத ஞானமுமா

மென்க 1. "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" என்ற பொய்கையார் பாசுரமறிக.

ஸ்நாநத்துக்கு உரிய காலம் வைகறையாதலால் 'துறைபடிந் தாடி' என்பதற்கு ஏற்ப 'காலை' எனப்பட்டது. "கண்போது செய்து" என்பதற்கு—இரட்டுற மொழிதல் என்னும் உத்தியால் 'எம்பெருமான் பக்கலிலே ஞானமென்னும் உட்கண்மலர்ந்து' என்ற பொருளும் கொள்ளத்தகும். இங்கே நம்பிள்ளை யீடு காண்க;—"போதுசெய்து என்று மொட்டிக்கைக்கும் பேர், அலருகைக்கும் பேர்; புறம்புற்ற விஷயங்களில் கண்செம்பிளித்து என்னுதல்; பகவத் விஷயத்திலே விழித்து என்னுதல்." என்று. 1. "பெயரினையே புந்தியாற் சிந்தியாது ஓதியுருவெண்ணுமந் தியாலாம் பயனங்கென்" என்றபடி மனப்பூர்வமாக த்யானித்த லின்றிச் சொல்மாத்திரத்தால் ஓதி யுருவிடுதல் சிறப்பன்றாதலால் "மாலை நண்ணித் தொழுதெழுமினோ வினை கெடக் காலை மாலை கமல மலரிட்டு நீர்" "மாலை நண்ணிற் கொள்ளார்" என்ற மாத்திரத்தோடு நில்லாமல் "நினையாரவன் மைப்படியே" என்றும் அருளிச்செய்தது.

போது—மலரும் பருவத்து அரும்பு; பேரரும்பு. நல்நா—எம்பெருமானைத் துதிப்பதற்கென்றே அமைந்த நா: 2. "நாராயணா வென்னாநா என்னநாவே" என்றார் பிறரும்.

இப்பாட்டுக்குக் கிளவித்துறை கூறவேணு மென்னும் நிர்பந்தமில்லை; அங்ஙனே நிர்ப்பந்தங் கொள்ளில், 'இருள்கண்டு அஞ்சுகிறதலைவி, தோழியையும் தாயையும்வெறுத்தல் இது' என்று கொள்ளலாம். நாயகி எம்பெருமானாகிய நாயகனைப் பிரிந்து அப் பிரிவை ஆற்றாது நிற்கிற நிலையில் ஸூர்யன் அஸ்தமித்துக் காமோத்தீபகமான இராப்பொழுது வந்து எங்கும் இருள் பாவி அவ்விருள் எம்பெருமானது கரிய திருமேனியை ஞாபகப்படுத்தி வருத்த, அதற்கு ஆற்றாத அந்த நாயகி 3. "உலகேழு முண்டான் சொன்மொழிமாலை அந்தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமின்" என்று சொல்லும்படி தன் நோய்க்குப் பகவந்நாமோச்சாரணமாகிய மந்த்ர பரிஹாரத்தையே உடையவளாதலால், நோய்நிலையை

1. முதல் திருவந்தாதி. 2. சிலப்பதிகாரம்—ஆய்ச்சியர் குரவை.
3. திருவிருத்தம் 20.

யும் அதன் பரிஹாரத்தையும் ஆராய்ந்து நடத்தாததோழியர் செவிலியர் என்பவரைக் குறித்து வெறுத்துக் கூறியது இது என்று கொள்க. முந்தின வாக்கியத்தால் இருளின் கொடுமையை வெளியிட்டாள்; பிந்தின வாக்கியத்தால், அவ்விருள் அவனது திருமேனிக்கு ஸ்மாரகமாய்த் தன்னை வருத்துகிறபடியைத் தோழி முதலியோர் சிந்தியாமையையும், சிந்தித்து அந்நோய் தணிக்கும் உபாயத்தைச் செய்யாமையையும் பழித்தவாறு.

வெய்யோன் — உஷ்ணகிரணமுடையவன்; பகைவர்க்குக் கொடிய பராக்ரமசாலி. **குறும்பர்**—குறுநிலமன்னர். **அன்னகண்டும்**= அழியாது பாதுகாக்கிற நீதிமானான செங்கோலரசன் அழிந்ததையும், சமயம் நோக்கி எளியாரை வருத்தும் அநீதியையுடைய கொடுங்கோலரசர் பரவினதையும் ப்ரத்யக்ஷமாகப் பார்த்திருந்தும் என்றபடி.

ஓட்டு—ஓடுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (௯௩)

**மைப்படி மேனியும் செந்தாமரைக்கண்ணும் வைதிகரே ***
**மெய்ப்படியாலுன் திருவடிசூடுந் தகைமையினூர் ***
**எப்படி யூராமிலைக்கக் குருட்டாமிலைக்குமென்னும்**
**அப்படி யானும் சொன்னேன் * அடியேன்மற்றியாதென்பனே?** (௯௪)

| | | | |
|---|---|---|---|
| மை படி மேனியும் | நீலநிறம் செறிந்த திருமேனியையும் | எப்படி ஊர் ஆ மிலைக்க குருடு ஆ மிலைக்கும் என்னும் அப்படி | எப்படி (வெளியில் மேய்ந்து மீண்டு) ஊர்வந்து சேர்ந்த (கண்தெரிந்த) பசுக்கள் (இடமறிந்து) கனைக்கக் குருட்டுப்பசுவும் கூடக் கனைக்குமென்று (உலகம்) சொல்லுமோ, அப்படியே |
| செம் தாமரை கண்ணும் | செந்தாமரைமலர் போன்ற திருக்கண்களையுமுடைய | | |
| உன் | உனது | | |
| திரு அடி | திருவடித்தாமரை மலர்களை | | |
| வைதிகரே | வைதிகர்கள்தாமே | | |
| மெய் படியால் | உண்மையான நெறியால் | யானும் சொன்னேன் | நானும் உன்னைத் துதித்தேன்; |
| சூடும் | தம் தலைமேற்கொண்டு வணங்கும்படியான | அடியேன் மற்று யாது என்பன் | அடியவனான நான் வேறு என்னவென்று சொல்லுவேன்? |
| தகைமையினூர் | தன்மையுடையவர்கள்; | | |

* * *—கீழ்ப்பாட்டில் 'மாலை நன்குவிற்கொள்ளார் நினையா ரவன்மைப்படியே' என்று உலகத்தாரைப் பழித்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'நீர்தாம் நம்மை உள்ளபடியறிந்து சொல்ல வல்லீரோ?' என்று திருவுள்ளம்பற்றினதாக ஆழ்வார்கருதி, 'பிரானே! விலக்ஷணரான வைதிகர்களே உன்னை உள்ளபடியறிந்து சொல்லவல்லார்; நான் அவர்கள் போனவழியே போவதற்கு மாத்திரமே உரியன்' என்று இப்பாட்டால் விண்ணப்பஞ் செய்கிறார்.

கண்டார் கண்குளிரும்படியான உனது திருமேனியையும் சிவந்த தாமரைமலர்போலே யிருக்கிற திருக்கண்களையு முடையனான உன்னுடைய திருவடித் தாமரைமலர்களை, கேட்டார்வாய்க் கேட்கையன்றியே மெய்யாகக் கண்டு தலைமேற்கொண்டு அநுபவிக்குந் தன்மையுடையவர்கள் யாரென்னில், வேதவேதாந்த ஞானத்திற் சிறந்த மஹான்களேயாவர்; அறிவிலியான நானும் அவர்களைப் போலே ஏதோசில சொல்லுகிறேனே, இஃது என்னென்னில்; நன்றாகக் கண்தெரிந்த பசுக்கள் ஊர்புகுந்து சேர்ந்தவாறே நிலை கண்டு மகிழ்ந்து, அந்த மகிழ்ச்சிக்குப் போக்குவீடாகக் கனைத்தல் செய்ய, கண்ணில்லாத குருட்டுப் பசுவும் அதுகேட்டுத் தான் இன்னதென்றறியாமலே ஒக்கக் கனைக்குமென்று உலகம் சொல்லுகிற விதமாகவே, வேதவைதிகபுருஷர்கள் சொன்ன பாசுரத்தைக் கேட்டுவைத்து நானுஞ்சொன்னேனத்தனை; சொல்லுதற்கு அடியான ஸம்பந்தமுடையவனும் பக்திபரவசப்பட்டவனுமான நான் அப்படியல்லாமல் என்ஞானத்தாலே கண்டு என் சக்தியாலே சொன்னேனென்னவல்லேனோ? என்றாராயிற்று. இப்பாசுரத்தை ஒருபுடை திருவுள்ளம்பற்றி ஸ்ரீகுணரத்நகோசத்தில் பட்டர் அருளிச்செய்த "உத்யுக்திகைதவமிதம் விடம்பயாமி தாநம்ப! ஸத்யவசஸ: புருஷாந் புராணாந்। யத்வா ந மே ஹுஜ ஸமம் தவ பாதபத்மலாபே = இத்யுக்திகைதவசதேந விடம்பயாமி தாநம்ப! ஸத்யவசஸ: புருஷாந் புராணாந்—யத்வா ந மே புஜபலம் தவ பாதபத்மலாபே" என்ற ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

இப்பாட்டுக்கும் கிளவித்துறை வகையில் பொருள் சொல்ல வேண்டில், 'தலைவியைக் கண்ட பாங்கன் மீண்டு தலைவனையடுத்து

வியந்து கூறல் இது' என்று கொள்க. அதாவது—இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து பிரிந்த தலைமகன் தான் அத்தலைமகளை மீண்டுஞ் சேரவிரும்பி அவளது அழகு முதலியவற்றைத் தன் உயிர்த் தோழனிடம் பாராட்டிக் கூற, அது கேட்டு 'ஒரு மங்கைகாரணமாக நீ இங்ஙனம் மெலிதல் தகாது' என்று அவனை இடித்துரைத்த தோழன், அவனால் மீண்டும் அவ்வடிவின் சிறப்பை மிக எடுத்துக் கூறிக் கழற்றெதிர் மறுக்கப்பட்டபின் அவனைச்சமாதானப்படுத்தி, அவன் சொன்ன குறிப்பின்படியே தான் சென்று பூஞ்சோலையில் அவளைக் கண்டு அவளது ரூபலாவண்ய ஸௌந்தர்யாதிகளை நேரில் நோக்கி வியந்து 'இத்தன்மையுடையவளைக் கண்ட பின் காமவேதனையால் மிக வருந்தாது சிறிதும் ஆறியிருத்தல் எத்துணைப் பெரியோர்க்கும் ஆகாதே; இப்படிப்பட்டவளைக் கண்டு பிரிந்தும் ஒருவாறு ஆறியிருக்கிறவனை நான் முன்பு ஆராய்ச்சியின்றி இடித்துரைத்தேனே!' என்று நொந்து இகழ்ந்ததற்கு இரங்கி, விரைந்து மீண்டு வந்து தலைவனை நோக்கிக் கூறியது இது. "மைப்படி மேனியும் செந்தாமரைக்கண்ணும்" என்ற அடைமொழிகளால், அவ்வழகியாளைச் சேர்தற்கு ஏற்ற வடிவழகுடையாய் நீ யென்றும், 'வைதிகரே மெய்ப்படியாலுன் திருவடிசூடுந் தகைமையினர்' என்றதனால், அவ்வழகியாளைக் கண்டும் ஒருவாறு ஆறியிருந்த நீ ஞானனுட்டானமுடைய வைதிகர்களாலுந் தலைமேற்கொண்டு நன்கு மதித்துக் கொண்டாடத் தக்கவனென்றும், 'எப்படி யூராமிலைக்கக் குருட்டாமிலைக்குமென்னுமப்படி யானுஞ் சொன்னேன்' என்றதனால், அவ்வடிவத்தின் சிறப்பையும் உனது மனத்திண்மையையும் நோக்காதுஉலகத்திற் சாதாரணமாக ஒரு தீயொழுக்கத்திழிவாரை அவர்நண்பர் கட்டுரைத்து மறுக்கிற வழக்கின்படியே நான் உன்னைமுன்பு இடித்துரைத்தது கண்தெரிகிற பசுக்கள் கனைத்தவாறே குருட்டுப் பசுவுங் கனைத்தல்போல அறியாமையாற் செய்ததென்றும், 'அடியேன்' என்றதனால், அப்பிழையை நீ க்ஷமிப்பதற்கேற்ற நிலையுடையேன் யானென்றும், 'மற்று யாதென்பனே?' என்றதனால், அவ்வடிவழகைக் கண்டும் முழுக்கலக்கமடையாது சிறிது துணிவுற்றிருந்த உனது திண்மையை இங்ஙனம் பாராட்டிக் கூறும் விதத்தாலன்றி அவ்வடிவத்தின் சிறப்பை யான் எங்ஙனம் வருணித்துக் கூறவல்லேனென்றுங் கூறினனாயிற்று. .... (கூச)

யாதானு மோராக்கையிற்புக்கு * அங்காப்புண்டு மாப்பவிழ்ந்தும்
மூதாவியிற் றடுமாறு முயிர்முன்னமே * அதனால்
யாதானும்பற்றி நீங்கும்விரதத்தை நல்வீடுசெய்யும்
மாதாவினைப் பிதுவை * திருமாலை வணங்குவனே. (௧௫)

| | | | |
|---|---|---|---|
| உயிர் | உயிரானது, | அதனால் | ஆதலால் |
| முன்னமே | நெடுகாலமாகவே, | யாது ஆனும் பற்றி | எந்த விதத்தினாலாவது |
| மூது ஆவியில் | பழமையான (பலவகைப்) பிறப்புக்களுள் | நீங்கும் விரதத்தை நல் வீடு செய்யும் | (எம்பெருமானை விட்டு) விலகும் படியான கோட்பாட்டை நன்றாக விடுவிக்கக் கடவனான |
| யாது ஆனும் ஓர் ஆக்கையில் | யாதாயினும் ஒரு சரீரத்தில் | | |
| புக்கு | பிரவேசித்து | | |
| அங்கு | அவ்வுடம்பில் | | |
| ஆப்புண்டும் | கட்டுப்பட்டு நின்றும் | மாதாவினை | தாய் போன்றவனும் |
| ஆப்பு அவிழ்ந்தும் | (அங்கு நின்று) தொடர்ச்சி நீங்கியும் | பிதுவை | தந்தை போன்றவனுமான |
| | | திருமாலை | ஸ்ரீமந்நாராயணனை |
| தடுமாறும் | நிலைமாறி அலையுந் தன்மையுடையது; | வணங்குவன் | சரணமடைந்திருப்பேன். |

* * *—ஒன்றின்பின் ஒன்றாக அநாதியாய் வருகிற சரீர ஸம்பந்தம் காரணமாகக் கழித்திடாமல் என்னை அங்கீகரித்தருள வேணுமென்று அடியேன் ஸகலவித பந்துவும் ஆபத்பந்துவும் ஆப்தபந்துவுமான எம்பெருமானைச்சரணமடைந்திருப்பேனென்று தமது ப்ரபத்திமார்க்காநுஷ்டான வுறுதிநிலையை ஆழ்வார் இப்பாட்டால் வெளியிடுகிறார்.

ஆத்மாவானது அநாதிகாலமாகவே ஊழ்வினைக்கு ஏற்ப யாதாயினும் ஒருடம்பினுட் புகுந்து அதில் வினைவிலங்காற் கட்டுப்பட்டிருந்தும் அவ்வுடம்பின் தொடர்ச்சி நீங்கியும் ஸூக்ஷ்ம சரீரத்தில் நின்று ஸ்வர்க்க நரகங்களிற்புக்கு மீண்டு தடுமாறி நிற்கும்; இப்படி ஆத்மாவுக்குச் சரீர ஸம்பந்தம் அநாதியாயிருந்தலால் ப்ராசீந கர்மவாஸநா வசத்தால் ஏதேனுமொரு பொருளினிடத்துப்

பற்றுச் செய்து எம்பெருமானை விட்டு விலகும்படியான கோட்பாட்டை முற்றும் வேரோடு அற நன்றாக விடுவித்துத் தன்னையேபற்றி யிருக்குமாறு செய்விக்கவல்லவனும், ப்ரியங்களை நடத்துவதில் தாய்போன்றவனும், ஹிதங்களை நடத்துவதில் தந்தை போன்றவனுமாகிய திருமகள்கணவனை ஸ்ரீமந்நாராயணனைச் சரணமடைந்திருப்பேனென்கிறார். அநாதியாய் வருகிற ஸம்ஸாரத்திலே பற்றில்லையாம்படி சரணமடைந்தாருடைய வினைகளைப்போக்குவிக்க வல்ல எம்பிரானை யான் வணங்குவேனென்றதாயிற்று.

ஆத்மாவுக்கு தேஹஸம்பந்தமானது கரும வசத்தினாலாகிய செயற்கையேயன்றி இயற்கையன்று என்பது தோன்ற 'யாதானுமோராக்கையில் புக்கு' எனப்பட்டது. அங்கு ஆப்புண்ணுதலாவது—ஒவ்வொரு பிறப்பிலும் அஹங்கார மமகாரங்களாகிற அபிமானங்களை விடாமலிருப்பதாம். [முதாவியில் தடுமாறுமுயிர் முன்னமே.] ஆத்மாவுக்கு ஸம்ஸார ஸம்பந்தமும் அநாதி, எம்பெருமானோடுண்டான ஸம்பந்தமும் அநாதி என்பது நூற்கொள்கை; இருந்தாலும் ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தத்தைவிட நாராயண ஸம்பந்தமே மிகப் பழைய தென்னுமிடம் ஆழ்வாரருளிச் செயலில் தெளியக்கிடக்கிறது; இங்கு 'முதாவியில் தடுமாறுமுயிர் முன்னமே' என்றருளிச் செய்த ஆழ்வார்தாமே, திருவாய்மொழியில் 'சோர்ந்தே புகல்கொடாச் சுடரை யரக்கியை மூக்கீர்ந்தாயை, அடியேனடைந்தேன் முதல் முன்னமே' என்றருளிச் செய்கிறார்; அசித் ஸம்பந்தத்தின் அநாதித்வத்தைச் சொல்லுகிற இப்பாசுரத்தில் 'முன்னமே' என்றதையும், பகவத் ஸம்பந்தத்தின் அநாதித்வத்தைத் தெரிவிக்கிற அப்பாசுரத்தில் 'முதல் முன்னமே' என்றதையும் குறிக்கொள்க. "ஏதந்நிமித்தம் முன்னமே முதல்முன்னமேயான அசித்யநாதி ஸம்பந்தங்கள்" என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தியும் ஸ்மரிப்பது.

'யாக்கை' 'யாப்பு' என்னுஞ் சொற்கள் 'ஆக்கை' 'ஆப்பு' என மருவி வந்துள்ளன. யாக்கை யென்பதற்கு—(உயிரைக்) கட்டுப்படுத்துவதென்று காரணப்பொருள். முதுமை + ஆவி, முதாவி. ஆவியென்பது தானியாகு பெயராய் உடம்பைபுணர்த்திற்று. உயிர் ஒரு ஸ்தூல சரீரத்தை விட்டு மற்றொரு ஸ்தூல

சரீரத்திற் சாரும் பொழுதும் ஸ்வர்க்க நரகங்களுக்குச் செல்லும் பொழுதும் ஸூக்ஷ்ம சரீரத்தைப்பற்றியே செல்லுமென்கிற நூற் கொள்கை குறிக்கொள்ளத்தக்கது. இந்த ஸூக்ஷ்ம சரீரம் முக்தி நிலையிலே உயிரை விட்டகலும். ஆத்மாவின் ஸ்தானத்தில் அரிசியையும், ஸ்தூல சரீரத்தின் ஸ்தானத்தில் உமியையும் ஸூக்ஷ்ம சரீரத்தின் ஸ்தானத்தில் தவிட்டையும் கொள்க. அரிசியை விட்டு உமி நீங்குவது இரண்டு உலக்கைகளினால் குத்தப்பட்டாதலால், அதுபோல ஜ்ஞாநாநுஷ்டாநங்களால் ஸ்தூல சரீரம் நீங்கும்; தவிடு நீங்குவது தண்ணீரில் கழுவப்பட்டாதலால், அதுபோல விரஜாநதீஸ்நாநத்தால் ஸூக்ஷ்மவொட்டு நீங்குமென்று விவேகித்துக் கொள்க.

இப்பாட்டுக்கும் களவியற்றுறைவகையிற் பொருள் சொல்ல வேண்டில், தலைவி அறத்தொடு நிற்கத்துணிதல் இது. திருமாலாகிய தலைமகனைக் களவொழுக்கத்தாற் புணர்ந்து பிரிந்து வருந்துகிற [பராங்குச நாயகியாகிய] தலைமகள் 'இனி என்னுயிர் தரித்து நில்லாதாதலால் யான் விரைவில் இறந்து படுவேன்; அங்ஙனம் இறந்தொழிந்தேனாயினும் மறுபிறப்பில் இத்தலைவனையே கூடக் கருதுகிறேன்; என்றாலும், ஒவ்வோருயிர்க்கும் கருமகதிக்கு ஏற்ப நேரக்கூடிய நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பின் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்கள் உள்ளனவாதலால் அவற்றில் யான் மானிடமகளாகவே மீண்டும் பிறக்கிறேனென்பது என்ன நிச்சயம்? ஆதலின் இப்பிறப்பிலேயே இத்தலைவனைப் பிரியாது கூடுமாறு என்னுயிர் இவ்வுடம்பை விட்டு நீங்கு முன்னமே யான் விரைந்து முயல்வேனாவேன்; அதாவது நான் நாணத்தை விட்டு உடனே என் கருத்தைத் தோழிக்கு வெளிப்படையாகச் சொல்லி அவள் மூலமாக நற்றாய்க்கும் அவள் மூலமாகத் தந்தைக்கும் அதனை வெளிப்படுத்தி அவர்கள் எவ்வாறாயினும் இவனையே எனக்கு விவாஹஞ் செய்து வைக்கும்படி செய்து கொள்ளுவேன்; அன்றியும், தோழிமூலமாகத் தலைமகனுக்கு எனது வருத்த மிகுதியைக் கூறி அவன் விரைவில் என்னை வரைந்து கொள்ளுமாறுஞ் செய்வேன் என்று பலவாறு ஆய்ந்து தோழிக்குத் தான் அறத்தொடு நிற்கத் துணிந்தது இது எனக்கொள்க.

உயிரானது பழமையான பலவகைப் பிறப்புக்களுள் யாதாயினும் ஒரு சரீரத்தில் பிரவேசித்து அவ்வுடம்பில் கட்டுப்பட்டு நின்றும் அங்கு நின்று தொடர்ச்சி நீங்கியும் நிலைமாறி அலையுந்தன்மையுடையது; ஆதலால் எனது உயிர் இவ்வுடலை விட்டு நீங்குதற்கு முன்பாகவே எந்த விதத்தினாலாவது தலைமகன் என்னைப் பிரிதலாகிய தவறு வொழுக்கத்தை நன்கு விடுவித்தற்கு [நாயகனை என்னோடு கூட்டுதற்கு] ஏற்ற தாயையும் தந்தையையும் திருமாலாகிய எனது அத்தலைவனையும் வணங்கி வேண்டிக் கொள்வேன் என்று பதப்பொருள் காண்க.

**நீங்கும் விரதத்தை நல்வீடு செய்தலாவது**—பிரிவு இல்லாமல் வெளிப்படையாகக் கூடியிருக்கும்படி மணஞ்செய்வித்தல். களவு வழியான புணர்ச்சியில் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், இடந்தலைப்பாடு, பாங்கியிற் கூட்டம், பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித் தணத்தல், வரைபொருட் பிரிதல் என்ற ஒவ்வொரு வகையிலும் தவறுமற் பிரிவு நேர்தலால் அதனை '**விரதம்**' என்றது. 'வ்ரதம்' என்னும் வடசொல் விரதமென்று கிடக்கிறது. தவறுமல் ஏற்றுக்கொண்டு ஒழுகும் ஒழுக்கம் விரதமெனப்படும்.

'யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்யும்' என்றதில் 'யாதானும் பற்றி' என்பது 'வீடு செய்யும்' என்பதில் அந்வயிக்கும்; ஏதாவதொரு காரணத்தைக்கொண்டு என்னை நாயகனோடு மணம்புரிவிக்கவல்ல மாதாபிதாவை என்றவாறு. ஒருவனைத் தம்மகளுக்கு மணஞ்செய்விப்பதற்கு அவனது கல்வி, செல்வம், குலம், ஒழுக்கம், அன்பு, வேண்டுகோள், ஆபரணங் கொடுத்தல் முதலாகப் பல காரணங்களுள்ளனவாதலால் அவற்றுள் பொருத்தமான ஏதேனுமொரு காரணத்தைக் கொண்டு விவாஹஞ் செய்துவைக்கவேண்டுமென விரும்பியவாறு.

இனி 'யாதானும்பற்றி' என்பதை 'நீங்கும்' என்பதிலும் அந்வயிக்கலாம். தலைவன் தலைவியை விட்டு நீங்குவதற்குப் பல காரணங்களுண்டு; பிறர் அறிந்துவிடுவார்களே யென்கிற பயம், ஊரவர் பழி தூற்றல், விவாஹத்துக்கு வேண்டிய பொருளீட்டி வருதல் முதலிய விச்லேஷகாரணங்கள் பலவற்றுள் ஏதேனுமொரு காரணம்பற்றி நீங்குகிற என்றவாறு.

'பித்ரு' என்னும் வடசொல் 'பிது' எனத்திரிந்தது. (கரு)

**வணங்குந் துறைகள் பலபலவாக்கி * மதிவிகற்பால்**
**பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி * அவையவைதோ**
**றணங்கும் பலபலவாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்**
**இணங்கு நின்னோரையில்லாய் * நின்கண்வேட்கை யெழுவிப்பனே.**

| | |
|---|---|
| வணங்கும் | (தெய்வத்தை) வணங்குகிற |
| துறைகள் பல பல | வகைகள் பற்பல வற்றை |
| ஆக்கி | உண்டாக்கி |
| மதி விகற்பால் | அறிவின் வேறுபாட்டால் |
| பிணங்கும் | (ஒன்றோடொன்று) மாறுபடுகிற |
| சமயம் பல பல | மதங்கள் பலவற்றையும் |
| ஆக்கி | உண்டாக்கி |
| அவை அவை தோறு | அந்தந்த மதங்கள் தோறும் |
| அணங்கும் பல பல | தெய்வங்கள் பற்பலவற்றையும் |
| ஆக்கி | உண்டாக்கி |
| நின் மூர்த்தி பரப்பி வைத்தாய் | (இங்ஙனம்) உனது வடிவத்தைப் பரவச்செய்து வைத்துள்ளாய்; |
| இணங்கும் நின்னோரை இல்லாய் | உன்னோடு இணைத்துச் சொல்லத்தக்க உன்போல்வார் எவரையுமில்லாதவனே! |
| நின் கண் | உன்னிடத்திலேயே |
| வேட்கை | பக்தியை |
| எழுவிப்பன் | வளரச்செய்வேன். |

* * *—ஆழ்வார் எம்பெருமானை நோக்கி 'ஒப்பற்ற பெருமானே! ஸர்வேச்வரனாகிய நீ ரஜோகுண தமோகுணங்களால் மிக்கவர் கருமகதியால் உன் பக்கல் வாராதொழியும்படி பல பல தெய்வங்களையும் பலபல மதக்கோட்பாடுகளையும் பலபல உபாசனைவிதங்களையும் ஏற்படுத்தி அமைத்து வைத்தாய்; உன்னை நேராக அடைந்து உஜ்ஜீவிப்பதற்கு இடையூறான அவ்வெளி வழிகளிலே யான் இறங்கி விலகாதபடி, அவற்றிற்கெல்லாம் மூலமான உனது ஸ்வரூபத்தை யறிந்து உன்னிடத்திலே அன்பை விருத்தியாகச் செய்வதோடு பிறரும் அங்ஙனஞ் செய்யத் தூண்டுவேன்' என்று இப்பாட்டால் விண்ணப்பஞ் செய்கிறார். ஆழ்வார் எம்பெருமானது திருவுள்ளத்தின்படி உலகத்தைச் சீர்திருத்தி நல்வழிப்படுத்த அவதரித்தவராதலால் இங்ஙனம் தமது செய்கையைக் கூறுதல் தகும்.

**வணங்குந் துறைகள் பல பல வாக்கி**=கர்மயோக மென்றும் ஜ்ஞானயோகமென்றும் பக்தியோகமென்றும் இப்படி பலவகைப் பட்ட உபாயங்களைக் காட்டிவைத்து என்றபடி. **மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பல பல வாக்கி**=1. "ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின் அன்றென்ப ஆறுசமயத்தார்" என்றாற் போல, ஆம் என்பதை அல்ல என்பதும், அல்ல என்பதை ஆம் என்பதுமான சமயச் சண்டைகள் மதிவிகற்பால் பிணங்குதலாம்; இப்படி பிணங்குகின்ற மதங்கள் பலவற்றையும் உண்டாக்கி வைத்தவன் எம்பெருமானேயிறே. **அவையவைதோறு அணங்கும் பல பலவாக்கி**=ஒவ்வொரு மதத்திலும் அம்மனென்றும் பிடாரி என்றும் சாத்தனென்றும் கூற்றனென்றும் பலவகைப்பட்ட தெய்வங்களை ஆராதனைக்கு உரியனவாக காட்டி என்றபடி. **நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்**="ஸகூதா। ஸம்மாநந்யந்ய ஷெவதா:" என்ற உபநிஷத்தின்படியே அனைத்துக்கும் எம்பெருமானே அந்தராத்மாவாய் அவையெல்லாம் எம்பெருமானுடைய சரீரங்களாயுள்ளன வாதலால் இங்ஙனஞ் சொல்லப்பட்டது.

**இணங்கு நின்னோரையில்லாய்**=இங்ஙனே ஜகத்துக்களை நிர்வஹிக்க உன்னையல்லது வேறொருவரால் முடியுமோ? சக்தியில் ஒப்பற்றவனன்றோ நீ என்றவாறு [**நின்கண்வேட்கை யெழுவிப்பனே.**] வணங்குந் துறைகள் பலபல ஆக்கியிருந்தாலும் ப்ரபத்தி மார்க்க மொன்றையே பரவச் செய்வேன்; மதிவிகற்பாற் பிணங்குஞ்சமயம் பலபல ஆக்கியிருந்தாலும் ஸ்ரீவைஷ்ணவ சமய மொன்றையே பரவச் செய்வேன்; அணங்கும் பலபல ஆக்கியிருந்தாலும் ஸ்ரீமந் நாராயண ரூபியான நின் வடிவத்திலேயே பக்தியை நிகழ்த்துவேன் என்பதாகக் கொள்க.

இப்பாட்டுக்கும் களவித்துறை வகையில் பொருள் கொள்ள வேண்டில், தலைவி வெறிவிலக்குவிக்க நினைத்தல் இதற்குத் துறையாம். எம்பெருமானாகிற நாயகனைக் களவொழுக்கத்தாற் கூடி அவனது விரஹத்தில் வருந்தி மெலிகிற (பராங்குச)நாயகி, தன் மெலிவைக்கண்டு கவலைப்பட்ட செவிலித்தாய் கட்டுவிச்சிக்குக் கூறி அவளைக் கொண்டு அவள் மரபின்படி கட்டுவைப்பித்து நோக்குங்கை

1. திருவள்ளுவமாலை 9.

யில் முருகக்கடவுள் தோன்றக்கண்டு அதற்குப் பரிஹாரமாக வேலனையழைத்து வெறியாடுவிக்கத் தொடங்குதலை யறிந்து, பெருந்தெய்வமாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் நிமித்தமாகக் கொண்டதன் நோய் சிறுதெய்வம் பாராட்டலாகிய இவ் வெறியாட்டினால் திருமாயின் தனது கற்புக்குக் குறைவாதலையும் நீராதாயின் ஊரலர் மிகுதலையுங் கருதி, தான் நாணந்துறந்தாயினும் ரஹஸ்யத்தை வெளியிட்டு வெறிவிலக்குவிக்கத் துணிந்து ஊவநாப்ரகர்ஷத்தாலே தலைவனை முன்னிலையாகக் கொண்டு தன்னிலே தான் உரைத்தது இது. 1. "குலமகட்குத் தெய்வம் கொழுநனே" என்றபடி கற்புச்சிறந்த இத்தலைவி தன் தலைவனையே சிறந்த தெய்வமாக வுடையவளாதலால் மற்றைய தெய்வங்களை யெல்லாம் அத் தெய்வத்தின் வடிவங்களாகவே கருதிக் கூறுகின்றாள். வணங்குந்துறைகள் பலபல=கட்டுவைத்தல், வெறியாடுதல், ஆடுபலிகொடுத்தல், கள்ளும் இறைச்சியும் தூவுதல் முதலியன. அயலார்க்கு இக்களவொழுக்கம் தெரிய வொண்ணாதபடி கட்டுவிச்சியின் நெற்குறியில் முருகக் கடவுளைக் காட்டியவனும், வேலன் வழிபாட்டுக்கு வழிமுறையால் உரியனாகிறவனும் முதற்பெருந் தெய்வமாகிய நீயேயாயினும் அத் தெய்வத்தினால் என் நோய் சிதைக்கப்படுதல் முழுமுதற் கடவுளாகிய ஒப்பற்ற உன்னை நேரில் தலைவனாகக் கொண்ட எனது கற்பிற்குக் குறைவாதலின், யான் அதனை உடன்படேன் என்றவாறு. .... .... .... .... (கூகூ)

**எழுவதும் மீண்டே படுவதும்பட்டு * எனை யூழிகள்போய்க்**
**கழிவதுங் கண்டுகேண் டேள்கலல்லால் * இமையோர்கள்குழாம்**
**தொழுவதுஞ் சூழ்வதுஞ்செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு**
**கழிவதோர் காதலுற்றார்க்கும் * உண்டோகண்கள் துஞ்சுதலே ?**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எழுவதும் | ஸூர்யன் உதிப்பதையும் | | எனை ஊழிகள் | | எத்தனையோ காலங்கள் |
| மீண்டே படுவதும் | மறுபடி அஸ்தமிப்பதையும் | | போய் கழிவதும் | | சென்று கழிவதையும் |
| பட்டு | இங்ஙனம் நிகழ்ந்து | | கண்டு கண்டு | | பார்த்துப் பார்த்து |

1. நீதி நெறிவிளக்கம் 26.

| | |
|---|---|
| எள்கல் அல்லால் | வருந்துதலை யல்லாமல், |
| இமையோர்கள் குழாம் | தேவர்கள் கூட்டம் |
| தொழுவதும் | வணங்குவதையும் |
| சூழ்வதும் | (பரிவாரமாகச்) சூழ்ந்து கொள்வதையும் |
| செய் | செய்யப்பெற்ற |
| தொல்லை மாலை | ஆதியந்த மில்லாதவனான திருமாலை |
| கண் ஆரக் கண்டு | கண்கள் த்ருப்தி யடையஸேவித்து |
| கழிவது ஓர் காதல் உற்றார்க்கும் | (அவன் பக்கல்) மிக்கதொரு வேட்கையைப் பொருந்தினவர்க்கும் |
| கண்கள் துஞ்சுதல் | கண்ணுறக்கங் கொள்ளுதல் |
| உண்டோ | உள்ளதோ? [இல்லை என்றபடி.] |

* * *—பகவத் ஸ்வரூபத்தை முழுவதும் ஸாக்ஷாத்கரிக்க விரும்பித் தொடங்கினார்க்குக் காலம் முடிந்துபோவதேயன்றி அவ்வநுபவம் முடிந்து கண்வாங்குந் தன்மையில்லையென்று ஆழ்வார் அன்பர்க்கு அருளிச்செய்கிறார். ஸூர்யன் உதிப்பதும் மீண்டு அஸ்தமிப்பதுமாய் இப்படியே நாள் திங்கள் ஆண்டு ஊழிகளாய் மிகப் பலகாலம் கழிந்து போவதைக்கண்டு காலம் போதாமையை நோக்கி இரங்குதலே யன்றி, நித்யஸூரிகள் எப்பொழுதும் கைகூப்பிக்கொண்டு, கைங்கர்யம் பண்ணும் பொருட்டுச் சூழப்பெற்ற அநாதியான எம்பெருமானைக் கண்களிப்பக் கண்டு முடிக்கவேணுமென்பதோர் ஒப்பற்ற அன்பைக்கொண்டு நிற்பவர்களுக்கு, அவன் பக்கல் வைத்தகண் வாங்கி இமைக்க இடமுண்டோ வென்கிறார்.

இப்பாட்டுக்கு மற்றொருபடியாகவும் பொருளுரைப்பர் ;—எழுவதும்—பிறப்பதும், மீண்டேபடுவதும்—பிறந்தவளவிலே இறப்பதும், பட்டு—பிறந்து, எனை ஊழிகள் போய்க்கழிவதும்—பலகாலங் கழித்து இறப்பதுமான உலகத்துப் பொருள்களை, கண்டு கண்டு—பார்த்துப் பார்த்து, எள்கல் அல்லால்—அவற்றை இகழ்வதல்லாமல்,........எம்பெருமானைச் சேவித்துக் காலங்கழியும்படியானதோர் ஆசையில் நின்றார்க்கு அவனை உபேக்ஷிக்கக் காரணமில்லை—என்று. எம்பெருமானைப் பூர்ணாநுபவஞ் செய்யக் கருதி ஆழ்ந்தவர்கட்கு ஞானம் குவியாது என்பதும் தோன்றும்.

வாள்களாகி நாள்கள் செல்லும்படியைக் கண்டு 'ஐயோ! காலமெல்லாம் வீணுய்க்கழிந்து போகிறதே, பகவத்ஸாக்ஷாத்காரம் நமக்குக் கிடைக்கவில்லையே!' என்று மனம் நொந்துகொண்டிருக்கலாமேயொழிய, 'எம்பெருமானைக் கண்ணாரக் கண்டாயிற்று, நமது காதல் தீர்ந்துவிட்டது' என்று க்ருதக்ருத்யராகப் பெறும் நாள் உண்டாவதரிது என்றதாயிற்று.

**கண் ஆர**—கண்படைத்த பயன்பெற. 1. "கரியவனைக்காணுத கண்ணென்ன கண்ணே கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்னகண்ணே" என்றார்பிறரும். 'காதலுற்றார்க்கு எள்கலல்லால் கண் துஞ்சுதலுண்டோ' என்று அந்வயிப்பது. பகவத்விஷயத்தில் ஆசைவைத்திட்டால் உள்ளதனையும் உருகிக் கிடக்கவேணு மத்தனையன்றி நிர்வ்ருதியாய்க் கண்ணுறங்கப் பெறுவதில்லை காணும். இங்கே நம்பிள்ளை யீடுகாண்மின் ;—"ஸ்வதந்த்ரரான பெருமாள் உறங்கிறரென்று கேட்டுமித்தனை போக்கி அவரை அநுவர்த்தித்துப்போன இளையபெருமாளுக்குக் கண்ணுறங்கிற்றோ? பகவத்விஷயத்திலே கைவைத்தாரில் இதுக்கு முன் கண்ணுறங்கினருண்டென்று கேட்டறிவாருண்டோ?."

கிளவித்துறைவகையில் இப்பாசுரத்தை, நாயகனைப் பிரிந்து துயில் கொள்ளாத நாயகி இரங்கியுரைக்கும் பாசுரமாகக் கொள்க. திருமாலாகிய நாயகனைக் கண்டு கூடிப்பிரிந்து அந்த விரஹகாலத்தில் "கங்குலும் பகலுங் கண்துயிலறியாள்" என்றபடி அல்லும் பகலும் சிறிதும் தூக்கங்கொள்ளாது வருந்துகிற (பராங்குச) நாயகி தன்னைத் தேற்ற முயல்கிற தோழிக்குக் கூறியது இது என்று கொள்ளலாம். தோழி தேற்றுகிற விதம் யாதெனில், 'நாயகனைப் பிரிந்தநிலைமையில் இப்படியும் அலற்றுவாருண்டோ? பலவகைப்பட்ட உலகப் பொருள்களைக் கண்டு கொண்டு பொழுதுபோக்கி ஒருவாறு ஆறித் துயில்கொள்ளும் நாயகிகள் உலகத்திலில்லையோ? அவர்களைப்போலே துயில் கொண்டிருக்கலாமே' என உலகியல் கூறி ஆற்றலுற்றாள் தோழி; அன்னவளை நோக்கி இத் தேவாதி தேவனை புருஷோத்தமன்பக்கல் அன்புவைத்தவர்களும் துயில் கொள்ளக்கூடுமோ வென்றுகூறி மறுத்தவாறு. இன்பநுகர்ச்சிக்கு

1. சிலப்பதிகாரம்—ஆய்ச்சியர்குரவை.

உரியகாலம் வீணே கழிதலைச் சிந்தித்துச் சிந்தித்து மனந்தளர்வதல்லாமல் கண்துயில்கொள்ள அவகாசமுண்டோ வென்றவாறு. 'இமையோர்கள் குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ்செய்' என்ற விசேஷணத்தினால்—தன்னால் காதலிக்கப்பட்ட நாயகனுடைய சிறப்பு விளக்கப்பட்டதாம். 'தொல்லைமால்' என்றதனால் தனக்கும் அந்த நாயகனுக்கும் சேர்ந்தபழக்கம் நெடுநாளையது என்று குறிப்பிடப்பட்டதாம். 'தொல்லைமால்' என்றதற்கு—ஜீவாத்மாக்களிடத்தில் அநாதியாகவுள்ள வ்யாமோஹ முடையானென்றும், எல்லாவற்றுக்கும் பழமையான பெரியோனென்றும் பொருள் கொள்வர். .... .... .... .... (கூஎ)

**துஞ்சாமுனிவரு மல்லாதவருந் தொடரநின்ற***
**எஞ்சாப்பிறவி யிடர்கடிவான் * இமையோர் தமக்கும்**
**தன்சார்விலாத தனிப்பெருமூர்த்தி தன்மாயம் செவ்வே**
**நெஞ்சால் நினைப்பரிதால் * வெண்ணெயூணென்னு மீனச்சொல்லே.**

| | |
|---|---|
| துஞ்சா முனிவரும் | கண்ணுறங்குதலில்லாதரிஷிகளும் |
| அல்லாதவரும் | தேவர்கள் முதலிய மற்றையோரும் |
| தொடர நின்ற | பின்பற்றி வழிபட நிற்பவனும், |
| எஞ்சா பிறவி இடர் கடிவான் | (அடியார்களுடைய) குறைவற்ற பிறப்புத்துன்பங்களைப் போக்கியருள்பவனும், |
| தன் சார்வு இலாத | தன்னோடு இணைத்துச் சொல்லலாம்படி ஓர் உவமை பெறாத |
| தனி பெரு மூர்த்தி தன் | ஒப்பற்ற சிறந்த ஸ்வரூபத்தையுடையவனுமான எம்பெருமானது |
| வெண்ணெய் ஊண் என்னும் ஈனம் சொல் | வெண்ணெய் உணவாயிற்றென்று சொல்லப்படுகிற இழிசொல்லுக்கு இடமான |
| மாயம் | ஆச்சரியம் |
| இமையோர் தமக்கும் | மேலுலகத்தாருக்கும் |
| செவ்வே நெஞ்சால் நினைப்பு அரிது | நன்றாய் மனத்தால் நினைப்பதற்கும் அருமையானதாம். |

* * *—ஸர்வேச்வரனுடைய பரத்வத்திலும் ஸௌலப்யத்திலுமுண்டான போக்யதை எவர்க்கும் அளவிட்டு நினைப்பதற்கு முடியாதென் றருளிச்செய்கிறார். 'வெண்ணெயூணென்னு மீனச்

சொல்லே' என்றதனால் ஸௌலப்ய குணமும், மற்றவற்றால் பரத்வ குணமும் குறிக்கப்பட்டனவென்க. 'பரத்வத்தை ஒருவாறு எல்லை கண்டாலும் காணலாகும், ஸௌலப்யம் யார்க்கும் எல்லைகாண்பரிது' என்பது தோன்ற 'நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச்சொல்லே' என்று நவநீத சௌர்யவ்ருத்தாந்தம் ப்ரதாந விசேஷ்யமாகத் தலைக்கட்டப்பட்டுள்ளதென்க.

வெண்ணெயூணென்னு மீனச்சொல்—நெஞ்சால் நினைப்பரிதால்' என்றவிடத்திற்கு நம்பிள்ளையீடு காண்மின்:-"ஸர்வேச்வரனைப் ப்ரஹ்மாதிகளுக்குங் கூட ஆச்ரயணீயனாய் அவாப்த ஸமஸ்தகாமனாயிருக்கிறவன், ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யமே தனக்கு யாராகமாய் அதுதான் நேர்கொடுநேர் கிட்டப்பெறாதே இப்படி களவு கண்டாகிலும் புஜிக்கவேண்டி அதுதான் தலைக்கட்டப் பெறாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு ப்ரதிக்ரியையற்று உடம்பு வெளுத்துப் பேகணித்து நின்றநிலை சிலர்க்கு நிலமோ?" என்று.

'இமையோர்தமக்கும் செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால்' என்றதனால், எப்போதும் அவனுடன் ஒக்க இருப்பவரும் வரம்பிலா ஞானமுடையவரும் நிரந்தர பகவதநுபவ சீலருமான நித்ய ஸூரிகளுக்கே இக்குணம் வரையறுத்து நினைக்கமுடியாமை கூறினமுகத்தால், மற்றையோர்க்கு எட்டாத தன்மையைக் கைமுதிக ந்யாய ஸித்தமாக்கினபடி.

"துஞ்சா முனிவருமல்லாதவரும் எஞ்சாப்பிறவி யிடர்கடிவான் தொடரநின்ற தன் சார்விலாத தனிப்பெருமூர்த்திதன்" என்று இங்ஙனே அந்வயக்ரமமாக்கி யுரைக்கவுமாம்; துஞ்சா முனிவரும்--ஆத்மவிஷயத்திலும் ஈச்வர விஷயத்திலும் உணர்ச்சி நீங்காத ஸநகாதியோகிகளும், அல்லாதவரும்—அவர்கள் போலன்றி ப்ரஹ்ம பாவனையோடு கர்மபாவனையையுமுடைய ப்ரஹ்மாமுதலிய தேவர்களும், எஞ்சாப் பிறவி இடர்கடிவான்—தம்தம் மாளாத பிறப்புத் துன்பத்தை ஒழிக்கும்பொருட்டு, தொடர—வழிபடும்படி, நின்ற—தலைவனாய் நின்றவனும், தன்சார்வு இலாத—எல்லார்க்கும் தான் சார்பாக [சரண்யனாகி] இருப்பது போலத் தான் ஒரு சார்பைத்

தேடுதலில்லாதவனுமாகிய, முழுமுதற்கடவுள் என்று பொருளையும் சிறிது வேறுபடவுரைத்துக்கொள்ளலாம்.

இப்பாட்டைக் கிளவித்துறை வகையில், நாயகனுடைய அருமையை நோக்கிக் கவலைப்படுகிற நாயகிக்குத் தோழிகூறலாகக் கொள்ளலாம். நாயகனது பெருமேன்மையையே பாராட்டி 1. 'நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்?' என்றாற்போலே 'அத்தனை பெருமேன்மை வாய்ந்தவன் எளியளான என்னைக் கைப்பற்றிக் கொண்டருள்வனோ?' என்று மிகக் கவலைப்பட்ட தலைமகளை நோக்கித் தோழி 'அங்ஙனம் பெருமை படைத்தவனாயுள்ளவனுக்கு அன்பர் திறத்தில் எளியனாந்தன்மையும் ஒன்று இயல்பில் உள்ளதாதலால் அவன் உன்னை உரிமையாக்கிக் கொள்ளாதொழியான்' என்று கூறி ஆற்றுவிக்கிறபடிபோலும். 'வெண்ணெயூணென்னும் ஈனச்சொல்' என்றது—தோழி தான் பற்றாசாகச் சொன்ன ஸௌலப்ய குணத்திற்கு ஒரு த்ருஷ்டாந்த மெடுத்துக்காட்டியபடி. 'துஞ்சாமுனிவரும மல்லாதவருந் தொடரநின்ற எஞ்சாப் பிறவியிடர்கடிவான் தன் சார்விலாத தனிப்பெருமூர்த்தி' என்ற வளவும் தலைவி தன்னுடைய அச்சத்திற்கு உறுப்பாக அநுஸந்தித்த பரத்வகுணத்தைத் தோழி அநுவாதம் செய்தபடி யென்க.

**ஊண்**—இது முதனிலை திரிந்த தொழிற் பெயர் அன்று; 'உண்ணப்படும் பொருள்' என்கிற அர்த்தத்தில் செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்ட பெயர்ச்சொல் என்க. ஹீநமென்னும் வடசொல் ஈனமெனத்திரிந்தது. .... .... (கூஅ)

ஈனச்சொல்லாயினுமாக * எறிதிரை வையமுற்றும்
ஏனத்துருவா யிடந்தபிரான் * இருங்கற்பகஞ்சேர்
வானத்தவர்க்கு மல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானை யல்லாலில்லை * நான்கண்ட நல்லதுவே. (கூகூ)

---

1. நாச்சியார் திருமொழி 10–10.

| | |
|---|---|
| ஈனம் சொல் ஆயினும் ஆக | (என்னுடைய ஸித்தாந்தம்) சிலர்க்கு இழி சொல்லாயினும் ஆகுக; |
| எறி திரை வையம் முற்றும் | வீசுகிற அலைகளையுடைய பிரளய வெள்ளத்திலாழ்ந்த பூமி முழுவதையும் |
| ஏனத்து உரு ஆய் இடந்த | வாராஹமூர்த்தியாய்க் கோட்டாற் குத்தியெடுத்துவந்த |
| பிரான் | தலைவனும். |
| இரு கற்பகம் சேர் வானத்தவர்க்கும் | பெரிய கல்பவ்ருக்ஷங்கள் பொருந்திய ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேவர்கட்கும் |
| அல்லாதவர்க்கும் | அவர்களல்லாத மனிதர்கட்கும் |
| மற்று எல்லாயவர்க்கும் | மற்றுமுள்ள நாகர் முதலியோரெல்லோர்க்கும் |
| ஞானம் | அறிவைக்கொடுக்கிற |
| பிரானை அல்லால் | தலைவனுமாகிய எம்பெருமானையன்றி |
| நான் கண்ட நல்லது இல்லை | நான் அறிந்த நற்பொருள் வேறு இல்லை. |

* * *—முன்பு பிரளய வெள்ளத்தில் மூழ்கிப்போன பூமியை உத்தாரணஞ் செய்து நிலைநிறுத்திய மஹோபகாரகனையே நான் ஸம்ஸாரப் பெருங்கடலினின்று என்னை யீடேற்றுதற்குத் தஞ்சமாக நினைத்திருப்பேனென்று ஆழ்வார் தம்முடைய திருவுள்ளவுறுதியை அன்பர்க்கு வெளியிடுகிறார்.

'இப்போது நான் வெளியிடுகிற என்னுடைய ஸித்தாந்தம் அறம்பொருளின்பங்களையே தஞ்சமாக நினைத்து தேஹாத்மாபிமானங்கொண்டு பகவத் விஷயத்தில் விமுகராயிருக்கிற ஸம்ஸாரிகள் ஏற்றுக்கொள்ளாமல் இகழும்படியான இழிந்த சொல்லாயினும் ஆகுக; என்னுடைய உறுதியை வெளியிட்டே தீருவேனென்கிறார் முந்துற முன்னம் ஈனச்சொல்லாயினுமாக என்றதனால். குழந்தை கிணற்றில் விழுந்தவாறே உடன் குதித்து அதனையெடுக்குந் தாய் போலப் பூமியைப் பிரளயங்கொண்டவாறே முழுகியெடுத்த மஹோபகாரகனையன்றி மற்றொருவனையும் அடைக்கலம் புகமாட்டேனென்றாராயிற்று.

ஒரு காலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டியெடுத்துக் கொண்டு கடலில் மூழ்கிப்போன ஹிரண்யாக்ஷனை எம்பெருமான் மஹாவராஹ ரூபியாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக்

கோட்டாற் குத்தி யெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பது எனத்துருவான கதை. இப்பொழுது நடக்கிற ச்வேதவாராஹ கல்பத்துக்கு முந்தின பாத்ம கல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் பிரளயப் பெருங்கடலில் மூழ்கியிருந்த பூமியைத் திருமால் மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவாராஹ ரூபங்கொண்டருளிக் கோட்டு நுனியாலே பூமியை எடுத்து வந்தனனென்றும், அதுபற்றி இக்கல்பத்துக்கு வாராஹகல்பமென்று பெயராயிற்றென்றும் புராணவரலாறு உண்டு.

'எல்லாயவர்க்கும்' என்றதில் விலங்கு பறவை முதலிய பல வகைப் பிறப்புக்களையும் அடக்குவர். அன்றியே, 'அல்லாதவர்க்கும்' என்பதற்கு—எம்பெருமானை விட்டுப் பிரிந்து தரியாதபடியாகவுள்ள நித்யஸூரிகளுக்கும் என்றும், 'மற்று எல்லாயவர்க்கும்' என்பதற்கு—நிஹீநர்களான மநுஷ்யர்களெல்லோர்க்கும் என்றும் உரைத்தலு முண்டு.

கிளவித்துறை வகையில் இப்பாட்டைத் தலைவன் பக்கலில் தனக்குள்ள அன்புறுதியைத் தலைவி தோழிக்குக் கூறுதலாகக் கொள்ளலாம். ஸர்வேச்வரனாகிய நாயகனைக் கலந்து பிரிந்த (பராங்குச) நாயகி, தான் அவன் விஷயத்திற்கொண்டகாதலின் துணிவை நாணந்துறந்து தோழிக்கு எடுத்துக்கூறிய தென்க. இதுவும் தலைவி தோழிக்கு அறத்தொடுநிற்றலின்பாற்படும். தனது களவொழுக்கத்தைப் புலப்படுத்துதலால் உண்டாகும் பழிதூற்றுக்குத் தான் பயப்படாமை தோன்ற 'எனச்சொல்லாயினுமாக' என்றாள் என்று கொள்க.

'எல்லாயவர்' என்பதில், 'எல்லாம்'—பகுதி; மகரம் கெட்டது; ய்—எழுத்துப் பேறு; அ—சாரியை; வ்—சந்தி; அர்—விகுதி.

ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீவாராஹப்பெருமானுக்கு ஞானப்பிரானென்று திருநாமம் வழங்கும். .... .... (கூக)

நல்லார் நவில்குருகூர்நகரான் * திருமால் திருப்பேர்
வல்லா ரடிக்கண்ணி சூடிய * மாறன் விண்ணப்பஞ்செய்த
சொல்லார் தொடையலிந்நூறும்வல்லார் அழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினை * மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலத்தே. (க००)

| | | | |
|---|---|---|---|
| நல்லார் | நல்ல குணங்களையும் நல்ல காரியங்களையுமுடையரான மஹான்கள் | சொல் ஆர் தொடையல் | சொற்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட மாலை வடிவமான |
| நவில் | புகழ்ந்து கூறப் பெற்ற | இ நூறும் | இந்த நூறுபாசுரங்களையும் |
| குருகூர் நகரான் | திருக்குருகூரென்னும் திருப்பதியில் திருவவதரித்தவரும், | வல்லார் | கற்றுவல்லவர்கள், |
| திருமால் | லக்ஷ்மீபதியான எம்பெருமானது | பிறப்பு ஆம் | ஸம்ஸாரத்திற்குக் காரணமும் காரியமுமாகிய |
| திருபேர் | திருநாமங்களை | பொல்லா அரு வினை | கொடியவையாய்ப் போக்கமுடியாதவையான ஊழ்வினைகளாகிற |
| வல்லார் | பயின்றவரான அடியார்களுடைய | மாயம் | ஆச்சரியகரமான |
| அடி | திருவடிகளாகிற | வல் சேறு அள்ளல் | கொடிய சேற்றின் அடர்த்தியையுடைய |
| கண்ணி | பூமாலையை | | |
| சூடிய | தமது முடிக்கு அணியாகக் கொண்டவருமான | பொய் நிலத்து | பொய்யாகிய பிரகிருதி மண்டலத்தில் |
| மாறன் | நம்மாழ்வார் | | |
| விண்ணப்பம் செய்த | (பகவத்ஸந்நிதாநத்திலே) விஜ்ஞாபநஞ்செய்த | அழுந்தார் | அழுந்தமாட்டார்கள். [முக்தராகப் பெறுவர்கள் என்றவாறு.] |

* * *—மேற்பாட்டும் இப்பாட்டும் இத்திவ்யப்ரபந்தத்திற்குச் சாற்றுப் பாசுரங்களாம். இப்பிரபந்தம் கற்றார் பெறும் பயனையுரைத்துத் தலைக்கட்டுகிறது இப்பாசுரம்; ஆகவே இது நூற்பயன். ஞானமனுஷ்டானமிவை நன்றாகவேயுடையரான ஆசார்யரைச் சரணமாக வடைந்து அவரது ஸம்பந்தமூலமாக எம்பெருமானை யநுபவிக்கிற மதுரகவிகள் போல்வாரான நல்லவர்களால் புகழ்ந்து கூறப்பெற்ற திருக்குருகூரென்று ப்ரஸித்தமான திருநகரியில் திருவவதரித்தவரும் பகவத்பாகவத விஷயத்தில் பக்தியிருந்தவருமான ஆழ்வாராலே விண்ணப்பஞ் செய்யப்பட்டதாய், எம்பெருமானும் பிறரும் தலைமேற்கொண்டு ஆதரிக்கத் தக்க இனியபாமாலை

யாகிய இத்திவ்யப்ரபந்தத்தைக் கற்று வல்லவர்கள் கருமமொழியப் பிறப்பற்று முக்திபெறுவரென்று பயனுரைக்கப்பட்டதாயிற்று.

குருகூர்க்கு 'நல்லார்நவில்' என்ற விசேஷணமிட்டதனால், அப்படிப்பட்ட திவ்யதேசத்தில் பிறந்ததனால்தான் தமக்கு இப்படிப் பட்ட பக்திப் பெருங்காதல் உண்டாயிற்று என்பதாகத் தொனிக்கும். இப்படி லோக விலக்ஷணரான ஆழ்வார் திருவவதரிக்கப் பெற்ற திருநகரியை நல்லார் நவிலச் சொல்லவேணுமோ? குருகூர்- 'குருகாநகரீ' என்பது வடமொழி வ்யவஹாரம்.

திருவாய்மொழியில் * பயிலுஞ்சுடரொளி * நெடுமாற்கடிமை முதலிய திருப்பதிகங்களில் ஆழ்வாருடைய பாகவத பக்தி நிஷ்டை மிக விளங்குதலால் 'திருமால் திருப்பேர் வல்லாரடிக்கண்ணி சூடிய' என்று தமக்கு இட்டுக்கொண்ட விசேஷணம் மிகப்பொருந்தும். முதற் பாசுரத்தில் 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று உபக்ரமித்ததற்கு ஏற்ப இங்கு 'மாறன் விண்ணப்பஞ்செய்த' என்று உபஸம்ஹரிக்கப்பட்டமை காண்க.

**இந்நூறும்** என்ற விடத்து நம்பிள்ளையிடு காண்மின்;—"மஹாபாரதம்போலே பரந்திருத்தல், ப்ரணவம்போலே சுருங்கியிருத்தல் செய்யாதே நூறுபாட்டாய் ஜ்ஞாதவ்யாம்சமடைய உண்டாயிருக்கை." மஹாவிவேகிகளும், ஆழ்ந்தால் கால்வாங்கவொண்ணாதபடி முழுகுவிக்குந் தன்மையுடையதான ஸம்ஸாரத்தை 'மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலம்' என்றது மிகப்பொருந்தும். பராத்பரனான எம்பெருமானும் இதிலே வந்து பிறந்தால் அவனையும் மயக்கி யிழுக்கும் வன்சேறிறே.

'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனியா முறாமை அடியேன் செய்யும்விண்ணப்பம்' என்று தொடங்கி 'விண்ணப்பஞ் செய்த இந்நூறும் வல்லார் அழுந்தார் பொய்ந்நிலத்து' என்று முடித்ததனால் இப்பிரபந்தம் முழுவதும், விரோதியைப் போக்கித்தரவேணுமென்று ஆழ்வார் தமது வ்ருத்தத்தை [ஸம்ஸாரநிவ்ருத்தியபேக்ஷையை] விண்ணப்பஞ்செய்தவாறும்.

நம்பிள்ளையும் பெரிய வாச்சான் பிள்ளையும் இட்டருளின வியாக்கியானங்களில் 'நல்லார் நவில்' என்றதற்கு—'லோகத்தில் ஸத்துக்களுடைய ஆழ்வாராழ்வார் என்னுமத்தனை' என்றருளிச்செய்திருக்கக் காண்கையாலே 'நல்லார் நவில்' என்பது குருகூர்க்கு விசேஷணமன்றியே குருகூர்நகரானுன ஆழ்வார்க்குவிசேஷணமாய்க்கொள்ளப் பட்டதாகத் தெரிகின்றது; நல்லவர்களாலே புகழப்பட்ட நம்மாழ்வார் என்கை. 'திருமால் திருப்பேர்வல்லா ரடிக் கண்ணி சூடிய மாறன்' என்று நைச்சியந்தோற்றப் பேசிக்கொள்ளுகிற ஆழ்வார் தம்மைப்பற்றி'நல்லார் நவில்' என்று சிறப்பாக விசேஷண மிட்டுக் கொள்வராவென்று சங்கிக்க இடமுண்டெனினும் ஆழ்வாருடைய ஒப்புயர்வற்ற பிரபாவத்தை [ஸத்துக்களால் அநவரதம் புகழ்ந்து கூறப்படுந்தன்மையை]க் கண்டறியும் ஆசார்யர்கள் இங்ஙனே வியாக்கியானித்தல் பொருந்தத் தட்டில்லை. "எற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்" என்று ஆழ்வார்தாமும் மெய்மறந்து அருளிச்செய்யும்படியாகவிறே ப்ரபாவந்தானிருப்பது.

மாறன் = உண்டியே உடையே உகந்தோடு முலகத்தாருடைய இயற்கைக்கு மாறுபட்டு "உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்றிருந்ததனுல் ஆழ்வார் மாறனென்று திருநாமம்பெற்றன ரென்க. .... (கoo)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாசியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
திருவிருத்தவுரை
முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

# திருவிருத்தத்தின் அடிவரவு.

1. பொய்ச்செழு குழல் தனி பனித் தடா ஞாலம்,
காண்கின்ற திண் பூம் மாயோன் அரியன.

2, அரியன பேர்கின் தனிவள ரீர்வன,
கயலோ பல விருள் கடல் காரி சின் சூட்டு.

3. சூட்டுக் கொம்பார் புனமோ இயல்வாய்,
எங்கோல் நானிலம் சேமம் தண் இன் அன்னம்.

4. அன்ன மிசை மேகம் அருளார் சிதைப் பால்,
துழா கொடும் கடமா நீலக் கோல மென்றும்.

5. என்றும் வன்காற் கண்ணும் நிறம் பெரும்,
மடம் திரி மெல்லியல் பண்டு மொண்ணுதல் மலை.

6. மலை யழை வாராய் வீசும் வண் வியல்
புலக்குண் கழறல மளப்பரும் முலையோ.

7. முலையோ வாசக மிறையோ வண்ணம்
இருக்கார் கற்றுப்பிணை யுண்ணுது.

8. உண்ணுக் காவி மலர்ந்தே காரே,
வளைவா பூழிகள் சூழ்கின்ற வால்வெண்.

9. வால்வெண் தளர்ந்து முலாகின் றிடம்போய்,
திங்களம் நலியும் வேதனை சீரரசு.

10. சீரர சுறுகின் றெரிகொள் விளரி,
தையல் மாணிக் கடைக்கலம் புலம்பும்.

11. புலம்பும் திருமால் தீவினை தலைப்பெய்
சுருங்குறி பேணலம் காலைவெய்யோன் மை.

12. மைப்படி யாதான் வணங்கு மெழுவதும்,
துஞ்சா வினை நல்லார் செக்கர்.



ஸ்ரீ:

## திருவிருத்தத்தின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.



திருவிருத்தச் செய்யுளகராதி முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வா ரருளிச்செய்தவையும் இயற்பாவிற் சேர்ந்தவையுமான திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என்னும் திவ்யப்பிரபந்தங்களில் அமைந்துள்ள

# இதிஹாஸ புராண கதைகளின் அடைவும், அக்கதைகள் அமைந்த பாசுரங்களின் தலைப்பும்..

| [கதைகள்.] | [பாசுரக்குறிப்பு.] |
|---|---|
| 1. திருமால் கடல் கடைந்தது. | மலைகொண்டு மத்தா. குறிப்பில் கொண்டு நெறிப்பட. |
| 2. வராஹாவதார மெடுத்தது. | வண்டுகளோ வம்மின். ஈனச்சொல்லாயினுமாக. |
| 3. இரணியன்மார்வை இடந்தது. | மடநெஞ்ச மென்றும். நின்று மிருந்தும். வழித்தங்குவல்வினையை. |
| 4. உலகமளந்தது. | கடமாயினகள் கழித்து. வன்காற்றறைய. கழறலமொன்றே. வாசகஞ் செய்வது. தீவினைக்கருநஞ்சை. சுருங்குறி வெண்ணெய். மாமுதலடிப்போதொன்று. அடியால் படிகடந்த முத்தோ. மீனென்னுங் கம்பின். |
| 5. சூர்ப்பணகையின் செவியையும் மூக்கையும் அரிந்தது. | பின்தூக்குங் காற்றிழந்த. |
| 6. மாயமானைப் பின்தொடர்ந்தது. | தெரிந்துணர்வொன்றின்மையால். |
| 7. மராமரமேழெய்தது. | பாருமவனுதல். |
| 8. இலங்கை பாழ்படுத்தது. | அழாநெடுஞ் சூழிருள். |

| | |
|---|---|
| 9. பேய்ச்சிமுலை யுண்டது. | தனிநெஞ்சம் முன்னவர். பெற்றதாய் நீயே. வாய்ப்போவிதுவொப்ப. |
| 10. தாம்பினால் கட்டுண்டது. | அடைக்கலத்தோங்கு. |
| 11. கொக்கின்வாயைக் கீண்டது. | பாருமவனுதல். |
| 12. குடக்கூத்தாடினது. | கடமாயினகள் கழித்து. அழகுமறிவோமாய். |
| 13. கேசியைக் கொன்றது. | பிரிந்தொன்று நோக்காது. |
| 14. கன்றெறிந்து விளங்கனி வீழ்த்தது. | வ[illegible]மறிகடலோ. |
| 15. ஏழ்விடை செற்றது. | சூட்டு நன்மாலைகள். எமக்கியாம் விண்ணாட்டுக்கு. |
| 16. குன்றெடுத்துக் கோநிரைகாத்தது. | இயல்வாயின. தளர்ந்தும் முறிந்தும். என்று மொருநாளொழியாமை. |
| 17. மல்லர்களை மடித்தது. | வலியமெனநினைந்து. அயர்ப்பாயயாப்பாய். |
| 18. நரகாசுரவதஞ் செய்தது. | கலியும் நரகனை வீட்டிற்றும். |
| 19. வாணன் தோள்களைத் துணித்தது. | கலியும் நரகனை. |
| 20. அரனது சாபத்தை அகற்றினது. | அடைக்கலத்தோங்கு. |
| 21. உலகமுண்டு ஆலிலைத்துயின்றது. | நளிர்மதிச்சடையனும். |
| 22. (மந்தேஹ ரென்னும் அசுரர்மாய்வது.) | எரிகொள் செஞ்ஞாயிறு. |

கதைக்குறிப்பு முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாசிரியம் பெரிய திருவந்தாதிச் செய்யுள்களின் முதற்குறிப்பகராதி.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



PRINTED AT THE MADEL PRESS, RATTAN BAZAAR ROW, P. T. MADRAS.